ஸ்ரீ

# கம்ப ராமாயண வசனம்



(முதற்பகுதி)

[ பால, அயோத்தியா, ஆரணிய காண்டங்கள் ]

அன்புடன் அளித்தது
திரு. ரா. கணேசன் அவர்களுக்கு
28.4.58

பதிப்பாசிரியர் :

*மகா வித்துவான், சிந்தாமணிச் செல்வர்*

**மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை**

புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

**135, பவழக்காரத் தெரு, :: சென்னை - 1**

# பதிப்புரை

இந்திய நாட்டு இணையிலா இதிகாசங்கள் இரண்டு: ஒன்று இராமாயணம்; மற்றொன்று பாரதம். இவ்விரு நூல்களும் இன்று உலகப் புகழ் பெற்று விளங்குகின்றன; பற்பல உலகப் பெருமொழிகளில் மொழி பெயர்க்கப்படும் பெருமைக் குரியனவாயும் திகழ்கின்றன.

வடமொழியில் 'ஆதி காவியம்' எனும் பாராட்டுக்குரிய தாய்த் திகழும் இராமாயணத்தை இயற்றியவர் வான்மீகி முனிவர். அவரைப் பின்பற்றித் தமிழ் மொழியில் 'தன்னிக ரில்லாத் தனிப்பெருங்காப்பியம்' எனப் பலரும் போற்றத் தக்க முறையில் இராம காதையைத் தமிழர் பண்பாட்டிற் கியைய இன்கவிக் கருவூலமாக்கித் தந்தவர் கம்ப நாடர் என இம்பர் போற்றும் கவிவாணர்.

பன்மொழிப் புலமை பழுத்த நல்லறிஞர் பலரும் 'எம் மொழியிலும் இக்காவியத்திற்கு ஈடு காணோம்!' என இறு மாந்து பேசுகின்ற இக்காவியத்தை எளிதிற்பயின்று இன் புறுவதற்கு நல்ல வழி காட்டியாய் விளங்கும் மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைமைப் புலமைத் திருச்சிற்றம்பல தேசிகரவர்களது பதிப்பைத் தழுவிய இந்தக் கம்ப ராமாயண வசனத்தை எல்லோரும் படித்து இன்புற வேண்டும் என்னும் கருத்தால், குறைந்த விலையில் வெளியிட்டு மகிழ்கின்றோம். தமிழுலகம் பெற்றுப் பயனடைக!

இதனைச் சீரிய முறையிற் பதிப்பித்துதவிய மகா வித்து வான் சிந்தாமணிச் செல்வர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்களுக்கும், முகப்பில் வந்துள்ள கண்ணைக்கவரும் வண்ணப் படத்தை எழுதித்தந்த சாந்தி ஆர்ட்ஸ் ஸ்ரீ. வி. மாதவன் அவர்களுக்கும் எங்கள் நன்றி!

சென்னை,
29-3-'58.

சித. இராமநாதன்

# அஞ்சலி

'ஆதவன் புதல்வன் முத்தி
அறிவினை அளிக்கும் அண்ணல்
போதவன் ராம காதை
புகன்றருள் புனிதன் மண்மேல்
கோதவம் சிறிதும் இல்லான்
கொண்டல்மால் தன்னை ஒப்பான்
மாதவன் கம்பன் செம்பொன்
மலரடி தொழுது வாழ்வாம்!'

—செந்தமிழ்

# பொருளடக்கம்

பொருள் பக்கம்

## க. பால காண்டம்

ஸ்ரீ:

# கம்ப ராமாயண வசனம்

## அறிஞர் செய்தருளிய தனியன்கள்

### நூற்பயன்

நாடிய பொருள்கை கூடும்; ஞானமும் புகழும் உண்டாம்;
வீடியல் வழிய தாக்கும்; வேரியங் கமலை நோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் தோள்வலி கூறு வோர்க்கே.

### இராமநாமப் பெருமை

நன்மையுஞ் செல்வமும் நாளும் நல்குமே;
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே;
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே ராமவென் இரண்டெ ழுத்தினல்.

### இராம காதை கேட்பதன் பயன்

வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாடையா தொன்றி னுயினும்
திடமுள ரகுகுலத் திராமன் தன்கதை
அடைவுடன் கேட்பவர் அமரர் ஆவரே.

வென்றிசேர் இலங்கை யானை வென்றமால் வீரம் ஓத
நின்றரா மாய ணத்தில் நிகழ்ந்திடு கதைகள் தம்முள்
ஒன்றினைப் படித்தோர் தாமும் உரைத்திடக் கேட்டோர் தாமும்
'நன்றிது!' என்றோர் தாமும் நரகம தெய்தி டாரே.

இராகவன் கதையில் ஒருகவி தன்னில்
ஏகபா தத்தினை உரைப்போர்
பராவரு மலரோன் உலகினில் அவனும்
பன்முறை வழுத்தவீற் றிருந்து
புராதன மறையும் அண்டர்பொற் பதமும்
பொன்றுநா ளதனினும் பொன்று
அராவணை அமலன் உலகெனும் பரம
பதத்தினை அணுகுவ ரன்றே.

இறுவ ரம்பின்இ ராமவென் றோர்உம்பர்
நிறுவர் என்பது நிச்சயம் ஆதலால்,
மறுவில் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவர் என்பது பேசவும் வேண்டுமோ?

அன்ன தானம் அகிலநல் தானங்கள்
கன்னி தானம் கபிலையின் தானமே
சொன்ன தானப் பலமெனச் சொல்லுவர்
மன்னி ராம கதைமற வார்க்கரோ.

ஆதியரி ஓம்நமநா ராயணர்தி ருக்கதைஅ
றிந்தனுதி னம்பரவுவோர்
நீதியனு போகநெறி நின்றுநெடு நாளதினி
றைந்துசெக தண்டமுழுதுக்
காதிபர்க ளாயரசு செய்துளம்நி னைத்ததுகி
டைத்தருள்பொ றுத்துமுடிவில்
சோதிவடி வாயழிவில் முத்திபெறு வாரெனவு
ரைத்தசுரு தித்தொகைகளே.

இனையநற் காதை முற்றும்
எழுதினோர் வியந்தோர் கற்றோர்
அனையது தன்னைச் சொல்வோர்க்
கரும்பொருள் கொடுத்துக் கேட்டோர்
கனைகடற் புடவி மீதே
காவலர்க் கரசாய் வாழ்ந்து,
வினையம தறுத்து, மேலாம்
விண்ணவன் பதத்திற் சேர்வார்.

# சிறப்புப் பாயிரம்

## கடவுள் வாழ்த்து

### நம்மாழ்வார் வணக்கம்

தருகை நீண்ட தயரதன் தான்தரும்
இருகை வேழத் திராகவன் தன்கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே.

### அநுமன் வணக்கம்

அஞ்சிலே ஒன்று பெற்றான்
    அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்று ஆக
    ஆரியர்க் காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற
    அணங்கைக்கண் டயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான்
    அவன்எம்மை அளித்துக் காப்பான்.

### கலைமகள் வணக்கம்

புத்தகம் படிக மாலை
    குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகம் தரித்த செங்கை
    விமலையை அமலை தன்னை
மொய்த்தகொந் தளக பாரம்
    முகிழ்முலைத் தவள மேனி
மைத்தகு கருங்கண் செவ்வாய்
    அணங்கினை வணங்கல் செய்வாம்.

### பரம்பொருள் வணக்கம்

உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர்; அன்னவர்க் கேசரண் நாங்களே.

சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
எற்கு ணர்த்தரிது; எண்ணிய மூன்றனுள்
முற்கு ணத்தவ ரேமுத லோர்; அவர்
நற்கு ணக்கடல் ஆடுதல் நன்றரோ.

ஆதி அந்தம் அரியென யாவையும்
ஓதி னூர்அல கில்லன உள்ளன
வேதம் என்பன மெய்ந்நெறி நன்மையன்
பாதம் அல்லது பற்றிலர் பற்றிலார்.

### அவையடக்கம்

ஓசை பெற்றுயர் பாற்கடல் உற்றொரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென
ஆசை பற்றி அறையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ.

நொய்தின் நொய்யசொல் நூற்கலுற் றேன்எனை
வைத வைவின்ம ராமரம் ஏழ்தொளை
எய்த எய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொல்நின்ற தேயத்தே.

வையம் என்னை இகழவும் மாசெனக்
கெய்த வும்மிஃ தியம்புவ தியாதெனில்,
பொய்யில் கேள்விப் புலமையி னோர்புகல்
தெய்வ மாக்கவி மாட்சிதெ ரிக்கவே.

தேவ பாடையின் இக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளும் முந்திய
நாவி ஞர்உரை யின்படி நான்தமிழ்ப்
பாவி னல்இஃது ணர்த்திய பண்பரோ.

துறைய டுத்த விருத்தத் தொகைக்கவிக்
குறைய டுத்த செவிகளுக் கோதில்யாழ்
நறைய டுத்த அசுணநன் மாச்செவி
பறைய டுத்தது போலுமென் பாவரோ.

முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
உத்த மக்கவி கட்கொன் றுணர்த்துவென் :
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ ?

அறையும் ஆடரங் கும்மடப் பிள்ளைகள்
தரையிற் கீறிடின் தச்சரும் காய்வரோ ?
இறையும் ஞானம்இ லாதஎன் புன்கவி
முறையில் நூலுணர்ந் தாரும் முனிவரோ ?

## காவியம் செய்த இடம்

நடையில் நின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடைநி கழ்ந்தஇ ராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயின் தந்ததே.

—கம்பநாடர்

பாயிரம் முற்றிற்று.

# க. பால காண்டம்

## 1. ஆற்றுப் படலம்

திருவயோத்தியாபுரியில் தசரத சக்கரவர்த்தியார் இராச்சியபாரம் செய்கிற காலத்தில், மேகமானது, விபூதி தரராகிய சிவபெருமானைப்போல வெளுத்த நிறமாய் ஆகாயத்தின்கண் பரவி, சமுத்திரத்தில் இறங்கி, நீரைப் பருகி, திருமகள் நாதராகிய திருமாலைப்போலக் கறுத்த நிறமாய்த் திரும்பியது. அம்மேகம், 'சிவபெருமானுடைய மாமனாகிய இமயபர்வதராஜன் சூரியனால் வெப்பத்தை அடைந்தனன்; குளிர்ந்த நீரினால் அபிஷேகஞ்செய்து வைப்போம்!' என்று எழும்பினது போல எழுந்து, விசாலம் பொருந்திய அப்பருவதத்தின்மேல் மழையைப் பெய்தது. அது தியாகிகள் தங்களிடத்திலிருக்கிற திரவியங்களெல்லாம் நாளைக்கு வேண்டுமென்று வைத்துக்கொள்ளாமல் எப்படிப் பிறர்க்குக் கொடுப்பார்களோ, அப்படித் தாரைகளை வருஷித்தது.

அந்த மழையின் பிரவாகமானது, மானாபிமானமறிந்து தருமத்தை நோக்கி மனுநீதி வழுவாது செங்கோல் செலுத்திய அரசனுடைய கீர்த்தியைப்போலவும், ஞானத்தையுடைய பெரியோர்கள் கரத்தில் வழங்கும் தானம் போலவும் தழைத்து, அப்பருவதத்திலுள்ள பொருள்களையெல்லாம் வாரி இழுத்துக்கொண்டு வருவதைப் பார்த்தால், விலைமாதரை ஒத்திருந்தது.

அவ்வெள்ளமானது இரத்தினமும், முத்தும், பொன்னும், மயிலிறகும், யானைத் தந்தமும், அகிற்கட்டையும், சந்தனமும் இன்னம் பல பொருள்களும் ஏந்திக்கொண்டு வருவதனல் வர்த்தகரைப்போலவும்; பூவும், மகரந்தமும், தேனும், யானையின் மதமும், பொற்சுண்ணங்களும் பொருந்தி வருவதை யோசிக்கில், வானவில்லைப் போலவும்; மலைகளையும் மரங்களையும் பறித்துக்கொண்டு, இலை முதற் பொருள் பல ஏந்தி வருவதைப் பார்த்தால், கடற்கு அணை கட்டுதற்குப் புறப்பட்ட உறுதி பொருந்திய வானரக் கூட்டம் போலவும்; ஈக்கள் வண்டுகள் மொய்க்க, எல்லை கடந்து, வலி மிகுந்து, தெளிவு இல்லாமல், கலங்கலாய், தேக்கலிட்டுக் கொண்டு வருவதால், கட்குடியர்களைப்போலவும்; யானையையும் பலவித மரங்களையும் கொடிகளையும் இழுத்து ஆர்ப்பரித்துக்கொண்டு வருவதால் சமுத்திரத்தின்மேல் சண்டை செய்யப்போகிறது போலவுமிருந்தது. இவ்வித வெள்ளமானது, சூரிய குலத்தில் பிறந்த அளவில்லாத வேந்தர்களுடைய நல்ல ஒழுக்கத்தினை மேற்கொண்டு, சகல சீவராசிகளுக்கும் தாயின் தனபாரத்தை ஒத்திருக்கும் சரயு நதியில் பேரொலியுடன் வந்து கலந்து, குறிஞ்சி நிலப் பெண்கள் இடித்த குங்குமம், வாசனைப்பண்டம், ஏலம், சந்தனம்,கஸ்தூரி முதலிய பொடிகளின் பரிமளத்தோடு வேடர்கள் வாழும் பாலை நிலத்தில் பரவி, அந்நிலத்துப் பெண்கள் ஓடும்படி அவ்வேடர்களுடைய வில் அம்பு முதலியவற்றை இழுத்துக்கொண்டு வருகிற தன்மையினல், குறுநில மன்னர் போலவும்; பின்பு முல்லை நிலத்தில் பரவி, அவ்விடத்திலுள்ள பால், வெண்ணெய், நெய் உறி முதலியவற்றையும் ஆயர் மாதருடைய வஸ்திரங்களையும் வாரிக்கொண்டு வருதலால், காளிங்க நடனஞ்செய்த கண்ணனைப்போலவும், மத மழையையுடைய யானையைப்போலவும் மருத நிலத்தில் வந்து சேர்ந்தது.

இப்படிக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு நிலங்களிலும் உற்பத்தியாகிய எண்ணிறந்த

பொருள்களெல்லாம் இடம்விட்டு இடத்திலிருப்பதால், கதிக்குச் செல்லவொட்டாத வினை போலவும், ஒரு கால்வாயிலிருந்து பிரிந்த கூட்டம்போலவும், மலையினிடத்திற் பிறந்து கடலினிடத்தில் சேர்ந்த வெள்ளமானது, வரம்பற்ற வேதங்களால் சொல்லுதற்கரிதாகிய பரம்பொருள் இன்னதென்று பூர்வத்தில் ஒன்ருயிருந்து, பல சமயங்கள் சொல்லும் கடவுளராய்து போல, எங்கும் வியாபித்து, மகரந்தங்களைச் சிந்தும் சோலைகள் சண்பகக் காடுகள் தடாகங்கள் வயல்கள் முதலிய இடங்களில் தேகந்தோறும் பொருந்திய உயிர் போலப் பரவியிருந்தது.

## 2. நாட்டுப் படலம்

அச்சரயு நதி சூழ்ந்த கோசல நாட்டிலுள்ள பள்ளர்கள் பலவாறு அந்த நதியின் நீரைக் கட்டிக்கொண்டு, கழனிதோறும் உழுது விதையை விதைத்து, நாற்று நட்டு, பலன் உண்டாவதற்கு முன்னமே, மஞ்சள், இஞ்சி முதலிய சில கந்தாயப் பயிர்களைச் செய்து தங்கள் தங்கள் வீட்டில் சேர்த்துக்கொண்டதல்லாமல், நவதானியப் பலனையும் போர் கட்டி வண்டியிலேற்றிக்கொண்டு போய்க் களஞ்சியங்களில் சேகரப்படுத்தி வைத்துக்கொண்டு, தேவாலயம், பிராமணர்கள், அதிதிகள், வித்துவான்கள், யாசகர்கள் முதலிய பலருக்கும் உபயோகமான கைங்கரியங்களைச் செய்து கொண்டும், விருந்து முதலிய உபசாரங்களைச் செய்து கொண்டும், தங்கள் தங்கள் பந்து ஜனங்களோடு வாழ்ந்திருப்பார்கள். ஆதலால், அந்நாட்டிலுள்ள குடிகள் வறுமை, பகை, பொய்யுரை இவைகளுக்கிடமில்லாத பல கேள்விகளையுடையவர்களாயிருந்தார்கள். அந்நாட்டின் மாதர்களுடைய கற்பினுலும் அன்பினுலும் தருமமும் கால மழையும் குறைவில்லாமல் நடந்து வந்தன.

# 3. நகரப் படலம்

இவ்வளவு சிறப்போடுங்கூடிய கோசல நாட்டிலுள்ள அயோத்தியாபுரியானது, பூமிதேவிக்குத் திருமுக மண்டலம் போலவும், திலகம் போலவும், கண் போலவும், திருமங்கலம் போலவும், மார்பில் அசைகின்ற முத்தாரம் போலவும், உயிரிருக்கிற இருதயம் போலவும், மகாலட்சுமி வாசமாயிருக்கும் பொற்றாமரைபோலவும், மகா விஷ்ணுவினுடைய கவுஸ்துவாபரணம் வைத்திருக்கும் பொற்பெட்டி போலவும், ஊழிக் காலப் பிரளயத்தில் சகல ஜீவ கோடிகளும் வந்து சேர்ந்திருக்கிறதற்கு ஒரு வீடு போலவும் விளங்கிக்கொண்டிருந்தது. அன்றியும், மிகுந்த உயர்ச்சியும் விசாலமும் பொருந்திய கோட்டையும், பாதாளமட்டும் ஆழ்ந்திருக்கிற அகழும், அனேக மாடமாளிகை கூடகோபுரங்களுடனே கோடி சூரியப் பிரகாசம் போல விளங்கிக்கொண்டு பலபல விதமான பொருள்களும் நிறைந்திருக்கிற கடை வீதிகளும், சகல வேதசாஸ்திர பண்டிதரான பிராமணர்கள் வீதிகளும், வீராதி வீரர் வாழும் ராஜ வீதிகளும், குபேரனுக்குச் சமமான வைசியர் வீதிகளும், பல நலம் வாய்ந்த வேளாளர் வீதிகளும், வித்தியாரம்ப ஸ்தாபனங்களும், ஆனைகளிருக்கிற கூடங்களும், குதிரைத் திரள்கள் கட்டியிருக்கிற பந்திகளும், நாடகசாலைகளும் நிறைந்து, நாலு வேதங்கள் போல நாலு வாயிலை உடையதாய் விளங்கியது. தேவேந்திரனுடைய அமராவதியும் குபேரனுடைய அளகாபுரியும் அயோத்தி மாநகரத்துக்குச் சமானமாக மாட்டா என்றால், அந்தப் பட்டணத்துக்கு நிகரான பட்டணம் வேறு எங்கே இருக்கின்றது? உப்பரிகை தோறும் பல வண்ணக் கொடிகளும், பூரணகும்பங்களும், மகர தோரணங்களும் நிறைந்திருக்கும். வீடுதோறும் மங்கல கீதங்களும், பேரிகை முதலான வாத்தியங்களும் முழங்கிக்கொண்டிருக்கும். பராபரப் பொருளான ஸ்ரீராம பிரானே மகா லட்சுமியுடனே நெடுங்காலங் கூடியிருந்து

அரசு புரிந்த இடம் அதுவானால், அப்பட்டணத்தினுடைய சிங்காரத்தை அடியேன் எவ்வாறு சொல்லப்போகிறேன்! அது சுவர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் மூன்று உலகத்திலும் தனக்குச் சமானமில்லாத சுந்தரத்தையுடைய நகரமாயிருந்தது.

## 4. அரசியற்படலம்

அந்த நகரத்துக்கு அரசரானவர் ராஜாதிராஜர். அவர் தம் செங்கோலின் கீர்த்தி ஏழுலோகமுஞ் செல்லும்படியான கீர்த்தியையுடையவர்; இக்காவியத்திற்குத் தலைவராகிய இராமபிரானைப் பிள்ளையாகப் பெற்ற தருமமூர்த்தி; அறிவு, கிருபை, தருமம், பொறுமை, பலம், சவுரியம், உதாரத்துவம் முதலிய உத்தம குணங்கள் யாவற்றையும் அடைந்தவர்; யாகாதி கிரியையெல்லாம் செய்து முடித்தவர். அவர் உலகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் அன்பில் தாயைப் போலவும், நன்மையில் தவத்தைப் போலவும், நற்கதிக்குச் செலுத்துவதில் பிள்ளை போலவும், வியாதிகட்கு மருந்து போலவும், நுட்பமாகிய கேள்விகளைக் கேட்குங்கால் அவரவர்கள் அறிவு போலவும் இருந்தார்.

அவர் தரித்திரர்களென்னும் சமுத்திரத்தைத் திரவியங் கொடுத்தே கடந்தார்; ஞான சமுத்திரத்தை நூல்களை அறிந்தே கடந்தார்; பகை என்னும் சமுத்திரத்தை வாளினால் கோபித்தே கடந்தார்; சம்பத்தென்கிற சமுத்திரத்தை அனுபவித்தே கடந்தார்; வெள்ளமும், பட்சியும், மிருகமும், வேசியருடைய மனமும் ஒரு வழியிற்செல்லும்படி ஆட்சிச் சக்கரஞ் செலுத்தினார்; உயிர்களுக்கெல்லாம் தாம் ஒரு சரீரம் போல இருந்து இரட்சித்துக்கொண்டு நிகரில் சிரோமணியாயிருந்தார். பரராஜர்கள் திறை கொண்டு காண வருகிற போது அவரவர்கள் சாஷ்டாங்கமாக வணங்குவதால், அவர்

கள் கிரீட சிகரங்கள் பட, அதனுலே துலங்கியிருக்கிற வீர கண்டையைத் தரித்திருக்கிற பாதாரவிந்தரான அம்மகானு பாவருடைய பெயர் **தசரதர்** என்பது. அவர் இவ்வளவு புக ழுடனே உலகத்தை வறிஞன் தன் நிலத்தைப் பாதுகாப்பது போலக் காத்து இராச்சியபாரம் செய்து வந்தார்.

## 5. திருவவதாரப் படலம்

தசரதர் ஒரு நாள் தம் குலகுருவான வசிஷ்டரைச் சேவித்து, "சுவாமி, அடியேன் ஒரு விண்ணப்பஞ் செய் கிறேன். அதைக் கேட்டருள வேண்டும்: என் குலத்துக்குத் தாயும், தந்தையும், தனமும், தெய்வமும், சகலமும் நீரே! எங்களுடைய பெரியோர்கள் சூரியனுடைய பிரகாசத்துக்குச் சமானமான கீர்த்தியொடு இராச்சியபாரம் பண்ணிக் கொண்டு வந்தார்கள். அடியேனும் உமது கிருபையினுல் இது வரைக்கும் அப்படியே நடந்து வருகிறேன். அறுபதி ஞயிர வருஷம் இராச்சியபாரம் செய்து வந்தேன். முனிவர் களும் பிராமணர்களும் வருத்தமில்லாமல் சுகமாய் வாழ்ந்து வந்தார்கள். எனக்குப் பின்பு என் ஆட்சியை மேற்கொள்ளப் புதல்வர்கள் இல்லாமையால், இவர்கள் வருத்தப்படுவார்களே என்கிற கிலேசம் என் மனத்திலே மிகவும் உண்டாயிருக் கின்றது!" என்று சொன்னுர்.

பிரமபுத்திரராகிய வசிஷ்டர் முன்னடந்த ஒரு தேவ இரக சியத்தை நினைத்தார்: ஆதி காலத்தில் தேவேந்திரன் முத லான தேவர்கள் இராட்சதராலே பெருந்துன்பமடைந்து, அந்தத் துன்பம் தாளமாட்டாமல், காளகண்டரான சிவ பெருமானிடம் முறையிட்டுக்கொண்டார்கள். அதைச் சிவ பிரான் கேட்டு, 'அந்த இராட்சதரை நாம் சங்கரிக்கிறதில்லை,' என்று சொல்லி, தம்மிடத்திற்கு வந்த தேவர்களை அழைத் துக்கொண்டு, பிரமதேவரிடத்திற்குப் போய்த் தண்டஞ்

செய்து, இராட்சதரால் தேவர்களுக்கு நேரிட்டிருக்கும் வருத்தத்தைச் சொல்லினர். பிரமதேவரும் அவருக்கு உபசாரஞ் செய்து, தாமும் கூடப்புறப்பட்டு, மகாமேரு பருவதத்தின் உச்சியிலிருக்கிற நவரத்தினலங்கிருத சுவர்ண மண்டபத்திற் போய்ச்சேர்ந்தார். அப்போது தேவேந்திரன் தன்னை முன்னொரு காலத்தில் இந்திரசித்து என்பவன் பாசத்தினற்கட்டி இலங்காபுரிக்குக் கொண்டுபோனபோது பிரமதேவர் தன்னை மீட்டுக்கொண்டுவந்த சங்கதியைச் சொல்லி, "இருபது கரங்களையும் பத்துத் தலைகளையுமுடைய இராவணன் பலத்தை ஒடுக்குகிறதற்கு நம்மால் ஆகமாட்டாது! திருப்பாற்கடலில் நீலமேக சாமள ரூபத்தோடு திருக்கண் வளர்ந்தருளும் கிருபா சமுத்திரமான ஸ்ரீமந்நாராயணரே அந்த இராட்சதர்களைச் சங்கரித்து நம் இடர்களைத் தீர்க்க வேண்டும். வேறே உபாயம் இல்லை," என்று சொல்ல, அப்படியே அனைவரும் திருப்பாற் கடலிலே யோகநித்திரை செய்கிற மரகத சொரூபரான தேவாதிதேவரை மனத்தில் நினைத்து, தோத்திரஞ் செய்தனர்.

அப்போது பரகதியை இச்சித்தவர்கட்கு அருளும் ஸ்ரீமந் நாராயணர் அதை அறிந்து, எழுந்திருந்து, பொன் மலை போலப் பிரகாசிக்கும் கருடவாகனரூடராய், நீலமேக சாமள ரூபமான திருமேனியராய், மார்பிலே மின்னற்கொடி போல மகாலட்சுமியும், செந்தாமரைக்காடு பூத்தாற்போலக் கர சரணதிகளும் விளங்கச் சூரிய சந்திரர்களுக்குச் சமான மான சங்கு சக்கரங்களைக் கைகளிலேந்திக்கொண்டு, கர கமலங் குவித்துக்கொண்டிருக்கிற சிவ பிரமேந்திராதிகளுக்குப் பிரசன்னமானர்.

தேவர்கள் எழுந்திருந்து, எதிரே போய்த் திருவடிகளிற் சேவித்து, சந்தோஷ சாகரத்தில் மூழ்கினவர்களாய், அந்தப் பகவானுடைய மகிமைகளைப் பல விதமாகச் சொல்லித் துதி செய்து, ஆனந்தமென்கிற தேனைப்புசித்து, இராட்சதர்கள் இறந்தார்களென்கிற சந்தோஷப் பெருக்கினல் திருத்துழாய்

பொருந்திய திருவடிகளைக் கிரமப்படி தங்கள் தங்கள் சிரசில் தரித்துக்கொண்டார்கள். அப்பொழுது மகாமேரு பருவ தத்து உச்சியினின்று கறுத்த மேகம் இழிந்து வருவதுபோல அப்பரம மூர்த்தி கருடபகவான் தோளைவிட்டிறங்கி, சுவர்ண லங்கிருத மண்டபத்தின் மத்தியில் நவரத்தின கசிதமான சிங்காதனத்தில் எழுந்தருளினர்.

பின்பு, பிரமரும் முனிவர்களும் தேவேந்திரன் முதலிய தேவரும் சேர்ந்து, அதிசயத்தோடு இரு புறத்திலுமிருந்து, பகவானைப்பார்த்து, கொடிய பாவிகளாகிய இராட்சதர்கள் செய்கிற துன்பத்தைப் பலவாறு சொல்லி, பின்னும், "இலட்சுமிபதியே, பத்துத் தலைகளையுடைய இராவணன், அவன் தம்பி கும்பகருணன் முதலான இராட்சதர்களால் பூமியிலும் ஆகாயத்திலும் நடந்து வந்த யாகாதிகள் அழிக்கப்பட்டன! இனிப் பிழைக்குந்திறமில்லை! நாங்கள் கொடுத்த பல வரங்களினுல் அவ்விராட்சதர்கள் சுவர்க்கமத்திய பாதாளமாகிய திரிலோகங்களையும் விஞசப்படுத்திவிட்டார்கள்! இப்போது உங்களுடைய கிருபானுக்கிரகம் இல்லாவிடில், ஒரு கணப்போழ்தில் இவ்வுலகத்தை அழித்துவிடுவார்கள்! எங்களால் அக்கொடிய பாவிகளை அழிக்க இயலவில்லை!" என்று கூறிச் சிந்தாகுலராயிருந்தார்கள்.

அப்போது மிகுந்த பரிமளம் கமழும் துளபமாலையைத் தரித்த ஸ்ரீமந்நாராயணமூர்த்தி, சிவபிரமாதி தேவர்களை நோக்கி, "நீங்கள் பயப்பட வேண்டா! அந்த வஞ்சகராகிய இராட்சதரைச் சங்கரித்து, உங்களுடைய துன்பங்களைக் களைந்து இரட்சிக்கிறேம்! நீங்கள் போய், வனங்களிலும் மலைகளிலும் தடாகங்களிலும் வானரங்களாய்ப் பிறந்து சஞ்சரித்துக்கொண்டிருங்கள். கொசுகையொத்த அரக்கர்களுடைய வரத்தையும், அவ்வரத்தினுல் செருக்கடைந்த அவர்கள் வாழ்வையும் படுசூரணஞ்செய்ய, நாமும், நமக்கு உரிய சங்கு, சக்கரம், ஆதிசேஷன் இவர்கள் தம்பியர்களாகவும், அயோத்தியாபுரியையாளும் தசரத சக்கரவர்த்திக்குப்

புத்திரராகத் திருவவதாரம் செய்வோம்,'' என்று திருவாய் மலர்ந்தருளினுர்.

சிவ பிரமாதி தேவர்கள் அது கேட்டு, சந்தோஷ சாகரத்தில் மூழ்கியவர்களாய், ஆனந்த நிர்த்தனஞ் செய்தார்கள் ; மங்கள கீதங்கள் பாடினுர்கள். சுராதிபனுகிய தேவேந்திரன், "எனது மனக்கிலேசம் தீர்ந்தது!" என்ருன். இருடிகளும் தேவர்களும், "எங்களுடைய சிரமம் இன்றே ஒழிந்தது!" என்ருர்கள். அப்பால் திருமால் கருடபகவான் தோளிலெழுந்தருளிப் போனபின்பு, பிரமதேவர் தேவர்களைப் பார்த்து, "பூலோகத்தில் நான் முன்னமே சாம்பவானுய்ப் பிறந்திருக்கின்றேன். ஆதலால், நீங்களும் போய்ப் பரமர் கட்டளையிட்டவாறு உதித்திருங்கள்,'' என்று சொன்ன மாத்திரத்தில், தேவேந்திரன், "நான் சத்துருக்களுக்குப் பேரிடி போன்ற வாலியாகவும் அவன் மகன் அங்கதனுகவும் பிறக்கிறேன்,'' என்ருன். சூரியன், "அந்த வாலியினுடைய தம்பி சுக்கிரீவனுக நான் பிறக்கிறேன்,'' என்ருன். அக்கினி, "எனது அமிசம் நீலன்,'' என்ருன். வாயு, "நான் மாருதியாய் ஜனிக்கிறேன்,'' என்ருன். மற்றத் தேவர்களெல்லாம், "நாங்கள் வானரங்களாய்ப் பிறந்திடத் தீர்மானித்தோம்,'' என்ருர்கள். திரிபுராந்தகரான பரமசிவனுர், "நான் வாயுவின் மைந்தன் அனுமன்,'' என்ருர். இவ்வாறு இவர்களே அவதரிப்பார்களாகில், மற்றைத் திக்கிலுள்ளோர்க்கு நாசமுண்டோ? இராது. கிருபா நிதியான ஸ்ரீமந்நாராயணர் நியமனப்படி பிரமதேவரும், காளகண்டராகிய சிவபெருமானும், தேவர்களும் பூமியில் இருண்ட வனத்தில் வானரராய் அவதரித்தார்கள். இக்காரியங்களுக்குக் கர்த்தாவாயிருந்தவர்கள் அவரவரிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

இந்தத் தேவ ரகசியத்தைச் சீர்தூக்கியறிந்த வசிஷ்டர், தசரத சக்கரவர்த்தியாரை நோக்கி, "ராஜாதிராஜரே, நீர் வருத்தப்பட வேண்டா. நீர் இவ்வீரேழு பதினுன்கு லோகங்களிலும் செங்கோல் செலுத்தி அரசு செய்யும் புதல்வரைப்

பெறுவீர். புத்திரகாமேஷ்டி யாகம் செய்வீராகில், உமது மனநோய் தீரும்,'' என்று சொன்னார்.

அதைக்கேட்ட ராஜாதிராஜராகியதசரதமகாராஜர்அதிக ஆனந்தத்தை அடைந்து, வசிஷ்டரை நோக்கி, "சுவாமி, உம்மையடைந்த எனக்குத் துன்பம் வருமா? ஒருபோதும் வரமாட்டாது. ஆதலால், அந்த யாகத்தை நிறைவேற்றுவதற்குச் செய்யவேண்டிய காரியங்களை அடியேனுக்கு அனுக்கிரகஞ்செய்தால், அப்படியே நடந்துகொள்ளுகிறேன்,'' என்றனர்.

வசிஷ்டர், "குற்றமற்ற தேவர்களோடு மற்றவர்களையும் பெற்ற **காசியப மகரிஷி**யினுடைய புத்திரர் **விபாண்டகர்**. அவருடைய புதல்வர், கங்காதரராகிய ஈசரும் புகழ்தற்கேற்ற **கலைக்கோட்டு மகரிஷி** என்பவர். அவர் வேத்சாஸ்திர பாண்டித்தியத்தில் தம் பிதாவுக்கு நிகரானவர்; மனுநீதி நெறி வாய்மை இவைகளில் பிரமதேவருக்குச் சமமானவர்; இவ்வுலக வாழ்க்கையின் தன்மையறியாத உத்தமர்; கலைமான் முகமாய் ஒரு கொம்புடனே விளங்கும் தலையையுடைய மகானுபாவர்; இவ்வுலகத்திலுள்ள மாந்தர்களை மிருகங்களென்று தீர்மானித்தவர்; பெருந்தவத்தையுடையவர். ஆதலால், அவரால் இவ்வேள்வி முற்றுப்பெறுமாகில் புதல்வருண்டாவர்,'' என்றனர்.

இதைக்கேட்ட தசரத சக்கரவர்த்தியார், முனிசிரேஷ்டராகிய வசிஷ்டருடைய திருவடிகளில் வணங்கி, "சுவாமி, அந்தத் தவசிரேஷ்டர் எங்கேயிருக்கின்றனர்? அவரிங்கு வருவதற்கு யான் செய்யவேண்டிய காரியம் யாது? தேவரீர் தெரிவித்தருளவேண்டும்,'' என்று கேட்க, வசிஷ்டர் கூறுவாராயினர்:

"கொடிய துன்பம் எதுவும் தலைகாட்டாதொளிக்கும்படி இந்த உலகத்தையாண்டவனும் மனுவின் குலத்தில் உதித்தவனுமான **உத்தானபாதன்** என்னும் ராஜனுடைய குமாரன் **உரோமபதன்** என்பவன். அவன் தன் நாட்டில் நெடுங்காலம்

மேகம் மழை சொரியாமையால், சகல ஜீவராசிகளும் வருத்த முறுவதை அறிந்து, வேதசாஸ்திர பாண்டித்தியத்தையுடைய முனிவருக்கும் பிராமணோத்தமருக்கும் அபரிமிதமான சகல விதத் தானங்களைக் கொடுத்தும், மழை பெய்யாமையைக் கண்டான். அதனால், மனத்தில் மிக்க கிலேசத்தைக் கொண்டு, திரிகாலங்களையும் உணர்ந்த மகாத்துமாக்களான பெரியோர்களைச் சேவித்து, "மழை பெய்வதற்கு யாது செய்யலாம் ?" என்று வருந்திக் கேட்டான். இப்போது நாம் உமக்குச் சொன்ன கலைக்கோட்டு முனிவர் வருவாராகில், வேண்டும் மழை பெய்யும் என்று அப்பெரியோர்கள் சொன்னார்கள். அதைக்கேட்டு உரோமபத மகாராசன், "சகலரையும் மிருகமென்றெண்ணியிருக்கின்ற அந்த மகானுபாவரை எவ்விதம் இவ்விடம் கொண்டு வருவது !" என்ற கவலையோடிருக்கிற சமயத்தில், அச்சபையிலிருந்த நாடகப் பெண்களுள் இருவரெழுந்து, சேவித்து, "சுவாமி, அந்த மகரிஷியை நாங்களிங்குக் கொண்டு வருகிறோம்," என்று சொல்லினர். உரோமபத மகாராஜன் சந்தோஷித்து, அந்தப் பெண்களுக்குத் திவ்விய வஸ்திராபரணங்கள் முதலியவைகளை வெகுமானஞ் செய்து, "மூன்றாம் பிறையைப் பழிக்கும் நெற்றியையும், பருத்த மூங்கில் போன்ற தோளையும், உண்டோ இல்லையோவென்று ஐயுற இலங்கும் இடையையும், பருத்த தனத்தையும், இருண்ட அளகபாரத்தையும், மருட்சியையுடைய நேத்திரத்தையும், இலவம்பூப் போன்ற சிவந்த வாயையுமுடைய பெண்களே, அந்த மகரிஷியை உடனே அழைத்து வாருங்கள்," என்று உபசரித்து அனுப்பினன். அவர்களும் அந்த மகாராஜாவைச் சேவித்து இரதத்தின்மீதிலேறிப் போனார்கள்.

"அவர்கள் அனேக யோசனைத்தூரஞ் சென்று, இன்னமொரு யோசனைத்தூரத்தில் இருக்கும் கலைக்கோட்டு மகரிஷியினுடைய ஆச்சிரமத்தை அறிந்து, தங்கள் இரதத்தை விட்டிறங்கி, அவ்விடத்தில் திவ்வியமான ஒரு பன்னசாலை

செய்துகொண்டு, மகரிஷிகளைப் போல வேடம் பூண்டு, அவர் தந்தையாராகிய விபாண்டகரில்லாத தருணம்பார்த்து, கலைக்கோட்டு மகரிஷியின் சமீபத்திற்போய் அவரை வணங்கினார்கள். அவர்களை அந்த மகரிஷி பார்த்து, பெரியோர்களென்றெண்ணி, உபசாரஞ்செய்து, அர்க்கியத்தோடு ஆசனங்கொடுத்து இருக்கச்சொல்லி, சில நாழிகைவரை பேசிக்கொண்டிருந்தார். பின்பு அப்பெண்கள் திடுக்கென்றெழுந்திருந்து, அந்த மாமுனிவரைத் தொழுது, தங்களுடைய பன்னசாலையில் வந்து சேர்ந்தார்கள். சில நாள் இப்படிச் செய்து கழிந்த பின்பு, ஒரு நாள் அவர்கள் மா, பலா, வாழை முதலிய கனிகளை அவருக்குக் கொடுத்துப் புசிக்கச் சொன்னார்கள்; இப்படிச் சிலநாள் கழிந்த பின்பு அந்த மகரிஷிக்குத் தங்களிடத்தில் அன்பும் விசுவாசமும் அதிகமானதை அறிந்து, அவர்கள் குற்றமற்ற அந்த மகரிஷியை நோக்கி, "நீங்கள் தயைசெய்து அடியேங்களுடைய குடிலுக்கு எழுந்தருள வேண்டும்," என்று பலவாறு வேண்டினார்கள். உடனே முனிவர் பெண்கள் பின்னே வந்தார். அந்தப் பெண்களும் மிகுந்த சந்தோஷ சாகரத்தில் மூழ்கினவர்களாய்த் தாங்களெண்ணிய எண்ணம் இன்று ஈடேறிற்றென்று உளங்களித்து, அந்தக் கலைக்கோட்டு முனிவரைத் தங்களோடு அழைத்துக்கொண்டு வருகையில், அவர், 'உங்கள் பன்னசாலை எவ்வளவு தூரம்?' என்று வினவ, 'இதோ இருக்கின்றது!' என்று தாங்கள் முன்னும் அவர் பின்னுமாக நெடுந்தூரங் கால் நடையாகவே அவரை அழைத்து வரும்போது, அந்நகரம் வந்து சேருதற்கு முன்னமே ஆகாயத்தின்கண் மேகமானது சிவபெருமானுடைய கண்டத்தைப்போலக் கறுகறுத்து, மின்னலோடு குமுறி, சளசளவென்று மழை பெய்தது. அதனால், நதிகள், குளங்கள், ஏரிகள், மடுக்கள் முதலியவை முன்னம் அடைந்திருந்த குறை தீர்ந்தன. செந்நெல், கரும்பு முதலிய பயிர்களும் மழை நீர் பாய்ந்து செழுமையோடு வளர்ந்தன.

"ஆகாயத்தின்கண் இடைவிடாமல் மேகமானதெழும்பி மழை பெய்து வருவதை அறிந்த உரோமபத மகாராஜன், ஆச்சரியத்தையுடையவனாய், 'காமம் வெகுளி மயக்கமென்கிற மூன்றையுங் கைவிட்ட அம்முனிசிரேஷ்டர், கொவ்வைக் கனிக்குச் சமமான வாயையும், தாமரை மலர்போன்ற முகத்தையும், முத்துப்போன்ற பளபளப்பையுடைய பற்களையும், அகில் சந்தனம் முதலிய வாசனைத் திரவியங்களின் புகையோடமைந்த அளகபாரத்தையுமுடைய பெண்களின் தந்திரத்தால் இவ்விடம் வந்துவிட்டாரோ! இவ்வித மழைபெய்து நமது தேசமுழுமையும் செழித்திருக்கக் காரணம் என்ன?' என்று ஆலோசித்தவனாய், மிகுந்த சந்தோஷத்தோடு, தன் சபையில் வீற்றிருந்த வேதபாராயண முனீஸ்வரரும், பிராமணோத்தமரும், மந்திரிகளும், சாமந்தரும், பிரதானியரும், ரத கஜ துரகபதாதிகளாகிய நால்வகைச் சேனையும் தன்னைச் சூழ, பட்டணத்தை விட்டு இரண்டு யோசனைத் தூரம் வரை எதிர் கொண்டு போய், அந்தப் பெண்களுடன் வருகின்ற மகரிஷியைக் கண்களாரத் தரிசித்து, அவருடைய சரணாரவிந்தங்களில் தீர்க்க தண்டஞ் சமர்ப்பித்து, ஆனந்தக் கண்ணீர் பெருக்கி நின்றான். அந்தப் பெண்கள் பத்தி வினயத்துடனே அரசனை வணங்கி நின்றார்கள்.

"அப்படித் தொழுது நின்ற பெண்களை அரசன் நோக்கி, 'நீங்கள் போய் இந்த மகானுபாவராகிய முனிசிரேஷ்டரை இவ்விடம் கொண்டுவந்தது யான்படும் துன்பத்தினாலல்லவா?' என்று உபசார வார்த்தைகள் கூறித் திருத்திசெய்து நிற்கின்றதையும், ரிஷிகள் முதலானவர்கள் சூழ்ந்திருப்பதையும் கலைக்கோட்டு மகரிஷி பார்த்து, 'இவர்கள் நம்மை வஞ்சனையால் இவ்விடத்திற்கு அழைத்து வந்தார்கள்!' என்றெண்ணிய மாத்திரத்தில், சுவர்க்கவாசிகளாகிய தேவேந்திரன் முதலிய தேவர்கள் மிகுந்த பயமடைந்து, 'இனி உலகங்கள் என்ன கதியாகுமோ! நாமென்ன செய்வோம்! நமக்கார் கதி! இதென்ன விப

ரீதம்!'' என்று நடுநடுங்கி இருக்கும் போது உரோமபத மகாராஜன், அந்த மகரிஷியை வணங்கி, 'சுவாமி, அடியேனை இரட்சிக்க வேண்டும்!' என வேண்ட, முனிவர் தாம் கொண்ட கோபத்தை ஒருவாறு கரையை மோதாத அலையையுடைய கடல்போல அடக்கிக்கொண்டு, 'இவ்வரசன் யாவரையும் இரட்சிக்கும்பொருட்டு இம்முயற்சி செய்தனன்,. என்றறிந்து, பயந்திருந்த அரசனை ஆசீர்வதித்து மகிழ்ந்தார்' அப்போது அரசன் கலைக்கோட்டு முனிவரை இரத்தின மயமான இரதத்திலேற்றிக்கொண்டு, தனது பட்டணத்தை அலங்கரித்து, முனீஸ்வரரும் பிராமணோத்தமரும் சூழ்ந்துவர, நகரத்திற் பிரவேசித்துத் தனது அரண்மனைக்குள் அழைத்துப்போய், நவரத்தின கசிதமான பொற்சிங்காதனத்தில் முனிவரை எழுந்தருளச் செய்து, அர்க்கியம் முதலிய கடமைகள் யாவும் செய்து, 'அடியேன் இனி முறையிட்டுக் கொள்ள வேண்டுவதொன்றுமில்லை,' என்று கூறி, பேரழகும் சாந்தமும் பொருந்திய பொற்பதுமையைப் போன்ற தன் புத்திரியாகிய ***சாந்தை*** என்பவளை அவருக்கு வேதவிதிப்படி பாணிக்கிரகணம் செய்துகொடுத்தான்.

"மேகமானது காலந்தப்பாமல் மழை பெய்துகொண்டு வருவதால், அந்நாட்டிலுள்ள க்ஷாமம் முதலிய துன்பங்கள் யாவும் நீங்கி, சகல சீவராசிகளும் சௌக்கியத்தோடு வாழ்ந்து வருகின்றன. அந்தப் பட்டணத்தில் கற்பின் மிக்காளாகிய சாந்தையுடன் அந்த மாமுனிவராகிய கலைக்கோட்டு மகரிஷி எழுந்தருளியிருக்கிறார்.''

வசிஷ்டர் இவ்வாறு கூறியதைக் கேட்ட தசரத சக்கரவர்த்தியார் வணங்கி, "சுவாமி, இப்பொழுது அந்த மகாத்துமாவாகிய கலைக்கோட்டு மகரிஷியை இவ்விடத்திற்கு அழைத்துக்கொண்டு வருகிறேன்,'' என்று கூறித் தம் பிரதான மந்திரியாகிய ***சுமந்திரர்*** முதலிய அமைச்சரோடு அழகுபொருந்திய தேரின்மீதிலேறின மாத்திரத்தில், தேவர் முதலிய யாவரும், "இப்பொழுதே எங்களுடைய துன்பந் தீர்ங்

தது!'' என்று மலர் மாரி சொரிந்தனர். பலபல வாத்தியங்கள் முழங்க, கடல் ஒலிபோல வேதகீதங்கள் பாட, வேதோத்தமர்கள் வாழ்த்த, மதுரமான மொழி பகரும் பெண்கள் பல்லாண்டு கூற, தசரதர், உரோமபத மன்னனது திருநகரத்தை அணுகினர். அதையறிந்த வேவுகாரர்கள் ராஜாதிராஜராகிய தசரத சக்கரவர்த்தியாரது வரவை உரோமபத மகாராஜனுக்குச் சொல்ல, அவன் மிகுந்த களிப்போடு ராஜாதிராஜரை எதிர்கொண்டு காணும்பொருட்டு ஒரு யோசனைத் தூரம் கடந்து வர, அவனைக்கண்ட தசரத சக்கரவர்த்தியார் தேரிலிருந்திழிய, அவ்வரசன் மிகுந்த அன்புடனே அவரை மார்புற ஆலிங்கனம் செய்துகொண்டு, ''நீங்கள் இவ்வளவு தூரம் விஜயம் செய்தது யான் செய்த தவமோ! அல்லது இந்நாடு செய்த தவமோ!'' எனச் சந்தோஷ வார்த்தை கூறி, அழகு பொருந்திய இரதத்தின்மீதேற்றித் தனது திருநகருக்கு அழைத்துக்கொண்டுபோய், தனது சிங்காரத் திருமாளிகையில் இரத்தின மண்டபத்திலிருத்தி, அழகுபொருந்திய பெண்கள் பல்லாண்டுபாட, செய்யவேண்டிய கடமைகள் யாவுஞ்செய்து, விருந்துசெய்து வைத்து, தாம்பூலம், புஷ்பம், சந்தனம், ஜவ்வாது, அத்தர், புனுகு முதலியவை கொடுத்து, தேவேந்திரனுக்கு அவன் நாட்டை மீட்டளித்த தசரதரை நோக்கி, ''நீங்கள் இவ்விடம் வந்த காரியத்தை அடியேனுக்குச் சொல்ல வேண்டும்,'' என்று கேட்டான். அப்போது தசரத சக்கரவர்த்தியார் தம் கருத்தை அவனுக்குச் சொல்ல, அவன், ''அப்படியே அந்த மகாமுனிவரை அவ்விடத்திற்கு யான் அழைத்துவந்து விடுகிறேன்,'' என்று சொல்ல, தசரத மகாராஜர் செலவுபெற்றுக்கொண்டு அயோத்தியில் வந்து சேர்ந்தார்.

பின்பு உரோமபத மகாராஜன் கலைக்கோட்டு மகரிஷியினுடைய திருமாளிகைக்குள் பிரவேசித்து, அவருடைய சரணாரவிந்தங்களைத் தன்னுடைய திருமுடியிலணிந்துகொள்ள, அவர், ''நீரிவ்விடத்திற்கு வரவேண்டியதென்ன?''

என்று கேட்க, "அடியேனுக்குத் தேவரீர் ஒரு வரம் கொடுக்க வேண்டும்," என, அவர், "அதென்ன ?" என்று கேட்க, அரசன், "சுவாமி, தசரதர் ஒரு புருவுக்காகத் தனது சதையைக் கழித்துத் தராசில் வைத்துக்கொடுத்த பெருங்கீர்த்தியையுடைய சிபிச்சக்கரவர்த்தி வமிசத்தில் பிறந்தவர்; தருமசிந்தையுடையவர்; அவருடைய நகராகிய அயோத்திக்கு நீங்கள் விஜயஞ்செய்து, இவ்விடம் எழுந்தருளவேண்டும்," என்று சொன்ஞன். அவர், "அப்படியே அவ்வரங் கொடுத்தோம்; இரதங் கொண்டுவாரும்," என்று சொன்ன மாத்திரத்தில், அரசன் இரதத்தைக் கொண்டு வந்து அதில் முனிவரையும் அவர் பத்தினியையும் எழுந்தருளச் செய்தனன். முனிவர்களும் பிராமஞேத்தமரும் சூழ வேத சொரூபியாகிய கலைக்கோட்டு மகரிஷியும் பத்தினியும் புறப்பட, தரும தேவதையும் தேவர்களும், "பொல்லாங்காகிய வினையைத் தொலைக்கச் சத்திய சீலர் வந்து பிறக்க இவர் அருள் செய்வார்," என்று எண்ணி, ஆகாயத்தின்கண் துந்துமி முழங்கி, பரிசுத்தமாகிய புஷ்பமாரியைப் பொழிந்து, மிகவும் களித்தார்கள். தூதுவர் அயோத்திக்குப் போய், தசரத சக்கரவர்த்தியாரைக் கண்டு கலைக்கோட்டு மகரிஷி எழுந்தருளி வருவதைச் சொன்ன போது, தசரதர், எதிர்கொண்டு சென்று, "என் மனக்கிலேசம் நீங்கிற்று!" என்று மூன்று யோசனைத் தூரத்தில் அந்த மகாமுனிவரைக் கண்களாரத் தரிசித்து, இரதத்தை விட்டிழிந்து, அவர் சரணூரவிந்தங்களில் சேவிக்க, அவரை முனிவர் ஆசீர்வதித்தார்; பக்கத்திலிருந்த முனிவரும் ஆசி கூறினர். உரோமபத மகாராசன் தசரதரைத் தொழுது, "முனிவரையும் அவர் பத்தினியையும் கொணர்ந்தேன்," என்று சொல்ல, தசரத சக்கரவர்த்தியார் அந்தக் கலைக்கோட்டு மகரிஷியோடு கமலம் போன்ற முகத்தினையுடைய பெண்கள் பல்லாண்டிசைக்க அயோத்திமா நகரத்தில் வந்து சேர, பஞ்சேந்திரியங்களை வென்ற வசிஷ்டரும் தேவரூபியாகிய கலைக்கோட்டு மகரிஷியும் அந்த

மகாராசாவினுடைய சபை விளங்க எழுந்தருளியிருந்தார்கள்.

அப்போது, தசரத சக்கரவர்த்தியார், வசிஷ்டரை நோக்கி, "சுவாமி, உங்களுடைய கிருபானுக்கிரகத்தால் மகரிஷி வந்து சேர்ந்தார். உங்களுடைய திருவடியை அர்ச்சித்த எனக்கு யாது குறை? அடியேன் தவமுடையவனுனேன் என்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை," என்று சொல்லிக் கைகூப்பினர். அவரைக் கலைக்கோட்டு முனிவர் நோக்கி, "இந்த வசிஷ்டர் உம்மிடத்தில் எப்போதும் இருக்கையில் உமக்கு என்ன குறை? அரசருள் உமக்குச் சமானமானவர் யாரிருக்கிருர்?" என்று மிகுந்த அன்புடனே சொன்னுர். தசரதர், "சுவாமி, சகலமும் உங்களுடைய ஆசீர்வாத மகிமை! நான் நெடுங்காலம் யாதொரு துன்பமுமில்லாமல், இராச்சியபாரஞ் செய்துகொண்டு வந்தேன். இது வரைக்கும் புத்திர சந்தானமில்லாதபடியால், எனக்குப் பின் இந்த இராச்சிய பாரஞ் செய்கிறதற்குத் தகுதியான புத்திரர் உண்டாகக் கிருபை செய்ய வேண்டும்!" என்று சொல்ல, முனிவர், "அரசரே, நீர் வருத்தப்படவேண்டா. இவ்வுலகை மட்டுமன்றிப் பதினுலு உலகங்களையும் ஆளத்தக்க பிள்ளைகள் உமக்கு உண்டாவார்கள். இத்தினமே நீர் யாகத்துக்கு யத்தனம் செய்யும்," என்று சொன்னுர்.

உடனே அரசர், யாகத்துக்கு வேண்டிய பொருள்கள் யாவுஞ் சேகரித்துக்கொண்டு, யாகசாலையுங் கட்டி, யாகத்துக்கு ஆரம்பித்தனர். ரிஷிகளும் பிராமணுேத்தமரும் சூழ்ந்திருக்க, கலைக்கோட்டு முனிவரும் வசிஷ்டரும் இருந்து வேத நெறியின்படி காருகபத்தியம், தக்ஷிணுக்கினி, ஆகவனீயம் என்னும் மூன்று அக்கினியும் வளர்த்து, ஆகுதி கொடுத்து, பன்னிரண்டு மாதம் யாகஞ்செய்து வந்தார்கள். தேவதுந்துமி முழங்கிற்று. ஆகாயத்திலே தேவர்களெல்லோருங் கூடி நிறைந்து, புஷ்பமாரி பொழிந்தார்கள். அந்தச் சமயத்திலே, புத்திரர் உண்டாகிற மந்திரத்தைச் சொல்லி, மாமுனி

வர் ஆகுதி கொடுத்தார். அப்பொழுது அந்த ஓமகுண்டத்திலிருந்து சிவந்த மயிரும் அக்கினிக் கண்ணுமாகக் கையிலே ஒரு பொற்றும்பாளத்தில் அமிர்தத்துக்குச் சமானமான திவ்வியான்னத்தை ஏந்தி, ஒரு பூதம் புறப்பட்டு, அந்த அன்னத்தைப் பூமியில் வைத்து, மறுபடியும் அந்த ஓமகுண்டத்திற் புகுந்து மறைந்தது.

அப்போது கலேக்கோட்டு முனிவர் அந்த அன்னத்தை எடுத்து, தசரதர் கையில் கொடுத்து, "இதை உம்முடைய பட்டமகிஷிகளுக்குக் கிரமமாமக் கொடும்," என்று ஆக்கியாபித்தார். அரசர், அதிக சந்தோஷத்துடனே அதை வாங்கிக் கொண்டு, சங்கம் ஒலிக்க, முதல் மனேவியாகிய கௌசலே தேவிக்கு ஒரு பாகமும், கைகேசிக்கு ஒரு பாகமும், இளேய தேவியாகிய சுமித்திரைக்கு ஒரு பாகமுங் கொடுத்தார்; பின்னும் அந்தத் தட்டிலிருந்ததை எல்லாஞ் சேர்த்து, சுமித்திரைக்கே கொடுத்தார். அவர்களும் அதிக சந்தோஷத்தோடு வாங்கிப் புசித்தார்கள். அப்பால், பூரணுகுதி கொடுத்த பின், அரசர் சரயுநதியில் அபிவிரத தீர்த்தமாடி, பிராமணுேத்தமருக்குச் சோடச மகாதானங் கொடுத்து, சபைக்கு வந்து, அரசர்களுக்கு வஸ்திரம், ஆபரணம், இரதகஜதுரகங்கள் முதலிய வெகுமதிகளேச் செய்தார். பின்பு, அரசர் சபையில் எழுந்தருளியிருக்கும் வசிஷ்ட முனிவருடைய திருவடிகளிற் சேவித்து, அப்படியே கலேக்கோட்டு முனிவரையுஞ் சேவித்து, "சுவாமி, அடியேன் பிழைத்தேன்! இனி யான் பெறுவது யாது? உமது கிருபானுக்கிரகத்தால் யானடைந்த துன்பத்தை ஒழித்தேன்!" என்று சொல்ல, அந்த மாமுனிவர் சந்தோஷித்து, அன்புடனே ஆசீர்வாதஞ்செய்து, தம் பத்தினியுடன் தேரேறி, உடன்வந்த மாதவர்களோடு ஆச்சிரமம் போய்ச் சேர்ந்தார்.

தசரதர் சிங்காசனத்திலிருந்து இராச்சியபாரஞ் செய்து கொண்டு வந்தார். கௌசலே, கைகேசி, சுமித்திரை என்னும் மூன்று பேரும் கருக்கொண்டு, கர்ப்பச் சின்னங்க

ளோடு இருந்தார்கள். பத்து மாதமும் ஆனவுடனே, சித்திரை மாதம், நவமிதிதி, புனர்பூச நக்ஷத்திரம், கர்க்கடகராசி இவற்ருேடு கூடிய சுபலக்கினத்தில், தேவர் சித்தர் இயக்கர் விஞ்சையர் முதலியவர் பெரிதும் மகிழ, பூர்வத்தில் அகிலாண்ட கோடி பிரமாண்டங்களையெல்லாம் தமது நாபிக்கமலத்தில் பெற்றருளிய நீலமேக சாமள ரூபரைக் கௌசலை பெற்ருள். பூச நக்ஷத்திரம் மீன ராசியில் தேவர்கள் சந்தோஷிக்கக் கைகேசி ஒரு புத்திரரைப் பெற்ருள். ஆயிலிய நக்ஷத்திரம் கர்க்கடக ராசியில் தேவேந்திரன் முதலான தேவர்கள் சந்தோஷிக்க, சுமித்திரை ஒரு புதல்வரைப் பெற்ருள். பின்னும், சுமித்திரை மக நக்ஷத்திரத்தில் சிங்க ராசியில் சகல சீவராசிகளும் சந்தோஷிக்க ஒரு புத்திரரைப் பெற்ருள். இப்படி நாலு புத்திரரும் பிறக்கவே, தேவலோகத்திலுள்ள அரம்பையர்களாடினுர்கள்; கின்னரர்கள் பற்பல வாத்தியங்களை வாசித்தார்கள்; தேவர்களெல்லாம், "இராட்சதர்கள் இறந்தார்கள்!" என்று சந்தோஷப் பெருக்கினுல் ஆடினுர்கள்.

தாதிகள் தசரதர் சமுகத்திற்குப் போய், புத்திரர்கள் பிறந்த சந்தோஷச் செய்தியைச் சொல்லி, ஆனந்தக் கூத்தாடினுர்கள். பிராமணர் கூடி ஜாதகம் பார்த்து, கிரகங்களிருக்கிற கிரமங்களறிந்து, மஹாலோகோத்தமமான சாதகங்களென்று சொன்னுர்கள். சக்கரவர்த்தியாரும் அதிக சந்தோஷத்துடனே, மேளவாத்தியங்கள் முழங்க, வசிஷ்ட மாமுனிவரோடு சரயுநதிக்குப் போய் நீராடி, பல தான தருமங்கள் செய்து, புத்திரர்களுடைய திருமுகங்களைத் தரிசித்துச் சபைக்கு வந்து, பொக்கிஷ சாலையின் கதவைத் திறந்து விட்டு, "யாசகர் முதலிய அனைவரும் அவரவர்க்கு வேண்டு மட்டும் விரும்பியவற்றைக் கொண்டு போங்கள்," என்று யானையின்மேல் பேரிகை அடிக்கச்சொல்லி ஆக்கியாபித்தார். வள்ளுவர்கள் பேரிகை முழக்கினுர்கள். அந்த முழக்கங் கேட்ட பட்டணத்திலுள்ள ஜனங்கள் தங்கள் தங்கள் வீட்டிலே கொண்டாடும் புத்திரோற்சவ சந்தோஷத்தைப் பார்க்

கிலும் பதின்மடங்கு மகிழ்ந்து, புத்திரர்கள் பிறந்த சேதி சொன்னவருக்கெல்லாம் ஆபரணம் வஸ்திரம் முதலானவை கொடுத்தார்கள். தேவாலயங்களுக்குத் திருவிழாச் செய்வித்துச் சோடச உபசாரங்களும் நடப்பித்தார்கள். தரிசனத்துக்கு வந்திருந்த ராசாக்களுக்குத் தசரதர் யானை, குதிரை, வஸ்திரம், பூஷணம் முதலான வெகுமதிகள் கொடுத்து, அவரவர்கள் தேசத்துக்கு அனுப்பிவைத்தார். வேத சாஸ்திர சம்பன்னராயிருக்கிற பிராமணோத்தமருக்கு அனேக அக்கிரகாரங்களோடு, சுவர்ணதானம், கோதான்ம், பூதானங்கள் செய்தார். இவ்வாறு பன்னிரண்டுநாள் சகல ஜனங்களும் மகிழ்ந்திருந்தார்கள்.

பன்னிரண்டாம் நாள், வசிஷ்டர், பிள்ளைகளுக்கு நாமகரணம் செய்கிறதற்கு ஆரம்பித்து, வேத சாஸ்திர விதிப்படி செய்ய வேண்டிய கிரியைகளெல்லாஞ்செய்து, பூர்வத்தில் முதலையானது கஜேந்திரனென்கிற யானையின் காலைக் கவ்விப் பிடிக்க, யானை அதனால் மெலிந்து, நெடுங்காலம் பிரயாசைப்பட்டு, கடைசியில் வேறு திக்கில்லையென்றறிந்து, "ஆதி மூலமே!" என்று கூப்பிட, அந்த க்ஷணமே வந்து முதலையைச் சங்காரஞ் செய்து அந்த யானையினுடைய ஆபத்தைத் தீர்த்து இரட்சித்த மெய்ப்பொருளாகிய கௌசல்யா தேவியின் புத்திரருக்கு *'இராமன்'* என்று பெயரிட்டார்; பின்பு சகல வேத சாஸ்திரங்களையும் உள்ளங்கை நெல்லிக் கனி போலத் தெரிந்திருக்கிற அப்பரம்பொருளின் சக்கராயுதாமிசமாய் வந்து அவதரித்திருக்கிற கைகேசியின் பிள்ளைக்குப் *'பரதன்'* என்று பெயரிட்டார்; வஞ்சகராகிய இராட்சதர்களைச் சங்கரித்துத் தேவர்களை இரட்சித்துப் பூமி பாரத்தைத் தீர்க்க அப்பரம்பொருளின் ஆதிசேஷ அமிசமாய் வந்து அவதரித்திருக்கிற சுமித்திரையின் முதற்புத்திரருக்கு *'இலட்சுமணன்'* என்று பெயரிட்டார்; உலக விரோதிகளைச் சங்கரித்துத் தருமத்தை நிலைநாட்டும்பொருட்டு வெண்டாமரை போன்ற திருமேனியையுடையவராய், பாஞ்சசன்னிய

அமிசமாய் வந்து பிறந்திருக்கிற சுமித்திரையினுடைய இரண்டாம் பிள்ளைக்குச் '**சத்துருக்கன்**' என்று பெயரிட்டார்.

இந்நான்கு புத்திரர்களுள் செந்தாமரைபோலும் அங்கங்களும் நீலோற்பல புஷ்பம் போலும் திருமேனியுமுடைய ஒப்பற்ற ஸ்ரீ ராமரைத் தசரத சக்கரவர்த்தியார் தம்முடைய பிராணனும் அறிவும் அவரேயல்லது வேறில்லையென்று தம் மனத்திலே எண்ணிக்கொண்டு அதிக சந்தோஷத்துடன் இருந்தார்; புத்திரருடைய மழலை வார்த்தை, தளர்நடை முதலிய யாவற்றையும் கண்களிக்கப்பார்த்து, அன்னப் பிராசனம், சவுளம், உபநயனம் முதலாயினவுஞ் செய்து வைத்தார். நால்வரும் நான்கு வேதம்போல வளர்ந்து வந்தனர்; வசிஷ்டமாமுனிவரிடத்தில் சகல கலைகளும் கற்றுத் தேர்ந்தனர்.

இருடிகளும் தேவர்களும் அந்தப் பட்டணத்திலுள்ள மகா ஜனங்களும், "நம்முடைய வினைகளெல்லாந் தீர்த்து மோட்ச சாம்ராஜயத்தைக் கொடுக்கிற பரம்பொருளே'இவர்," என்று இராமபிரானை ஒரு கணப்போதும் பிரியாமல், தரிசனம் செய்துகொண்டிருப்பார்கள். ஸ்ரீ ராமபிரானும், இலட்சுமணரும் பிரியாமல், சிங்காரத் தோட்டங்களிலே போய் விளையாடி வருவார்கள். பரதரும் சத்துருக்கரும் பிரியாமல் விளையாடிக் கொண்டிருப்பார்கள். அந்தப் பட்டணத்திலிருக்கிற ஜனங்களெல்லாம் கௌசலையும் தசரத சக்கரவர்த்தியாரும் போலவே ஸ்ரீ ராமபிரானிடத்தில் மிகுந்த அன்பாயிருந்தார்கள். அரசிளங்குமரர்கள் சிங்காரச் சோலைகளுக்குப் போய் வரும் போது காண்கின்ற அவ்வூர் ஜனங்களைப் பார்த்து, "நீங்களும் உங்களுடைய புத்திரர்களும் சுகமே இருக்கிறீர்களா?" என்று கேட்பார்கள். அவர்களும், "உங்களை மகாராஜாக்களாகப் பெற்றிருக்கின்ற எங்களுக்கு என்ன குறை இருக்கின்றது? சகலரும் உங்கள் கிருபையினாலே சுகமாயிருக்கிறோம்!" என்று சொல்லுவார்கள். இப்படிப் பட்டணத்து ஜனங்களெல்லாம் சந்தோஷிக்க, தம்பிமார் மூவரும் நிழல்

போலச் சூழ்ந்திருக்க, மும்மூர்த்திகளுள் முதல்வரான ஸ்ரீ ராமரிருந்தார். ராஜாதிராஜராகிய தசரத மகாராஜா இனிது செங்கோல் செலுத்தி, சந்தோஷமென்கிற சாகரத்தில் மூழ்கி யிருந்தார்.

## 6. கையடைப் படலம்

ஒருநாள் நவரத்தின கசிதமான சிங்காதனத்தையுடைய சபையில் அனேக அலங்காரத்தோடு மகாராஜா கொலுவீற்றிருந்தார். அப்போது ஆகாயத்தில் திரிகின்ற தேவலோகத்துச் சாரணர், 'இது தெய்வலோகம்,' என்றெண்ணி, சமீபத்தில் நெருங்கிப் பார்த்து, ராஜாவுக்கு ஆயிரங்கண்ணில்லாதனால், தேவேந்திரனல்லனென்று ஐயந்தீர்ந்து போய்விட்டார்கள். இவ்வளவு இந்திரபோக பாக்கியத்துடனேயிருக்கின்ற தசரத மகாராஜாவின் சபைக்குச் 'சகல சீவராசிகளையும், உலகங்களையும், பிரமதேவன் முதலிய தேவர்களையும் இதோ சிருஷ்டிக்கிறேன்!' என்று தொடங்கிய கௌசிகராகிய விசுவாமித்திரர் எழுந்தருளினர். அப்போது ராஜாதிராஜராகிய தசரத மகாராசர் தம் மார்பில் அணிந்திருக்கின்ற இரத்தினாபரணங்கள் சூரியனுடைய பிரகாசம் போல ஜொலிக்க, பிரமதேவர் வரக்கண்ட தேவேந்திரனைப்போல எழுந்திருந்து, அவருடைய உபய சரணாரவிந்தங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, இரத்தின சிங்காசனத்தில் ஏறச்செய்து, அர்க்கியம் முதலியகடமைகளனைத்தும் மிகுந்த உபசாரத்தோடு செய்து, "சுவாமி, இன்றைய தினம் என் வினை தீர்ந்தது! தேவரீர் எழுந்தருளினது இப்பூமி செய்த புண்ணியமோ! அல்லது அடியேன் செய்த தவமோ! அல்லது இந்நகரில் யான் சேவிக்கத்தக்கதாய் என் முன்னோர்கள் பூர்வத்தில் செய்த தவமோ!" என்று பலவாறு சந்தோஷத்துடனே சொல்ல, அதற்கு விசுவாமித்திர மகரிஷி, "ராஜாதிராஜராகிய தசரத சக்கரவர்த்தியே, என்னைப்

போன்ற ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் ஒரு துன்பம் நேரிடுமாஞல், கைலாயமும் திருப்பாற்கடலும் சத்தியலோகமும் அமராபதியும் இந்த அயோத்தி மாநகரமும் அல்லாமல், அதைச்சொல்லிக்கொள்ளுகிறதற்கு வேருேர் இடமுண்டோ? பூர்வத்தில், தேவேந்திரன் அசுரருக்குத் தோற்றுத் தன் ஆட்சியை இழந்து உம்மிடத்தில் சொல்லிக்கொள்ள, அப்போது நீர் அந்த அசுரரையும் அவர்களுக்குத் தலைவனுகிய சம்பரனையும் சங்கரித்து, அத்தேவேந்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து வைத்த அரசல்லவா இப்போது தேவேந்திரன் ஆண்டு வருகின்றது? அப்படிப்பட்ட சாமர்த்தியத்தையுடைய உமக்குச் சமானமான ராசாக்கள் இந்தப் பதினுன்கு உலகத்திலேயும் உண்டோ?'' என்று மிகுந்த சந்தோஷத்துடன் சொல்ல, அது கேட்டு ராஜாதிராஜர் மிகவும் களிப்படைந்து, "இது வரையில் யான் இராச்சியபாரஞ் செய்துகொண்டு வந்தபலன் இன்றைக்குச் சித்தியாயிற்று! இனி நான் நடந்துகொள்ள வேண்டுவதைத் தேவரீர் ஆக்கியாபித்தால், அந்தப்படி நடந்துகொள்ளுகிறேன்,'' என்று சொன்னுன். அதற்கு மகரிஷியானவர், "கேளும் மகாராஜாவே, தருக்கள் சூழ்ந்த ஆரணியத்தில் யான் செய்யும் தவமாகிய யாகத்துக்கும் மற்றேர் தவத்துக்கும் இடையூறு செய்யும் காமக்குரோதாதிகள் இடையில் வந்து துன்பஞ் செய்வது போல, இராட்சதர் துன்பஞ்செய்துகொண்டு வருகிருர்கள். அப்படி நேரிடாமல் என் யாகத்தைக் காத்து நிறைவேற்றுகிறதற்கு உம்முடைய நான்கு பிள்ளைகளுள் முதல்வனுகிய நீலமேக சொரூபனை எனக்குக் கொடுக்க வேண்டும்,'' என்று உயிரைக் கேட்கின்ற பொல்லாத யமனைப்போலக் கேட்டார்.

அக்கேள்வியானது மார்பில் வேல் பட்ட இரணக்குழியில் அக்கினி நுழைந்தாலெப்படியோ, அப்படிச் சக்கரவர்த்தியின் இரு செவியிலும் நுழைந்த மாத்திரத்தில், சஞ்சலமானது பிடித்திழுக்கவும், பிராணனனது ஊசலாடவும், கண்ணில்லாதவன் சில நாள் கண்ணுண்டாயிருந்து பின்பு அதையிழந்து

எப்படித் துன்பப்படுவானே அப்படித் துன்பப்பட்டு, அத் துன்பத்தை ஒருவாறு தேற்றிக்கொண்டு, "சுவாமி, அவன் அறியாதவன்; இன்னம் ஆயுதப் பரீட்சைகளில் நன்ருய்ப் பழகாதவன். காரியம் எதுவானாலும் யான் வருகிறேன். அந்த இராட்சதருக்குத் துணையாய்ச் சிவபிரமாதிகள் வந்தாலும் அவர்களையெல்லாம் துமிசப்படுத்தி, உம்முடைய யாகத்துக்கு யாதொரு விக்கினமும் வாராமல் காக்கிறேன். சுவாமி, எழுந்தருளும்," என்று தசரத சக்கரவர்த்தியார் சொல்ல, அது கேட்டவுடன் விசுவாமித்திர மகரிஷி அதிக கோபத்தோடு எழுந்தார். அது கண்டு தேவர்கள் பயந்து, "இன்றைக்கு ஊழிக்காலமோ!" என்று சந்தேகித்து நடுங்கினர்கள். சூரியனும் ஒளித்துக்கொண்டான். சராசரங்களுக்கெல்லாம் அதிக பயமுண்டாயிற்று. விசுவாமித்திரருக்குக் கோபாக்கினியினலே புருவங்கள் நெற்றியிலேறின! நகைப்பும் வந்தது! கண்கள் சிவந்தன! திசைகளெல்லாம் இருளடைந்தன! இவ்வளவு கோபங்கொண்ட விசுவாமித்திரருடைய எண்ணங்தெரிந்த வசிஷ்ட மாமுனிவர், அவருக்குப் "பொறுத்துக்கொள்ளும்!" என்று தணிவு சொல்லி, ராஜாவைப் பார்த்து, "மகாராஜா, உம் புத்திரனுக்கு உறுத்தலாகிய உறுதி வருங்காலத்தை மறுக்கின்றீரோ? மழையினல் பெருகும் வெள்ளங்கள் யாவும் ஒழுங்காகச் சமுத்திரத்தினிடம் போய்ச் சேர்வது போல, உம் பிள்ளை அளவில்லாத வித்தையை அடைகிறதற்குச் சம்பவித்த காலத்தை மறுக்காதீர்," என்று சொல்ல, குருவினுடைய வாக்கியத்தை மகாராஜா சிரமேல் தாங்கினவராய், "இலட்சுமிபதியாகிய ஸ்ரீராமனை அழைத்து வாருங்கள்," என்று ஆக்கியாபித்தார். உடனே அறிவில் மிகுந்த ஸ்ரீ ராமரும் அருகில் வந்து சேர்ந்தார். வந்த ஸ்ரீ ராமரையும், இலட்சுமணரையும் அரசர் விசுவாமித்திரருக்குக் காட்டி, "சுவாமி, இவர்கட்குத் தாயுந் தந்தையும் நீரே; தந்தேன்; உமது விருப்பப்படி செய்து கொள்ளும்," என்று சொன்னர். அப்போது விசுவாமித்

திரர் கோபந்தணிந்து, அதிக சந்தோஷத்தோடு ஆசீர்வாதஞ் செய்து, ஸ்ரீ ராம லட்சுமணர்களை அழைத்துக்கொண்டு, "இனி யாகத்தை நிறைவேற்றுவோம்!" என்று சபையை விட்டுப் புறப்பட்டார்.

உலகத்தைத் தாங்கின ஸ்ரீ ராமர் அரையில் வாளினைக் கட்டி, அம்பருத்தூணி தரித்து, தோளில் ஒரு வில்லையும் தாங்கிக்கொண்டார். தம்பியாரும் அதேரீதியாக ஆயுதபாணியாகிப் பின் வர, விசுவாமித்திர மகரிஷியின் பின் நடந்து அயோத்தியா புரியை விட்டு நீங்கி, மிகுந்த சிறப்போடோங்கிய சரயுநதி என்கிற ஆற்றிலிறங்கி நடக்கும் போது, சிங்காரத்தோடு நெருங்கியிருக்கும் சாலைகள், நந்தவனங்கள், கழனிகள் முதலானவைகளைப் பார்த்துக்கொண்டே அவ்வாற்றின் கரையேறினார்கள். சூரியனும் அஸ்தமனகிரியென்கிற கரையேறினான். அப்பால், வேதகோஷமும் யாகாதிகள் செய்யும் புகைகளும் சூழ்ந்திருக்கிற திவ்வியமான ஒரு சோலையைக்கண்டு, யாவர்க்கும் மேலான ஸ்ரீராமர், விசுவாமித்திரரைப் பார்த்து, "சுவாமி, இந்தச் சோலையினுடைய விருத்தாந்தமென்ன? அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்ய வேண்டும்," என்று கேட்க, விசுவாமித்திரர் சொல்லத் தொடங்கினார்:

## 7. தாடகை வதைப் படலம்

"கேள் ஸ்ரீராமா, பூர்வத்திலே சந்திரசேகரரான பரமசிவனார் இவ்விடத்தில் யோகஞ்செய்துகொண்டிருந்தார். அப்போது தேவேந்திரனால் மன்மதன் இவ்விடத்தினின்று அந்தப் பரமசிவனார்மேல் தன் கருப்பு வில்லில் பஞ்சபாணங்களைத் தொடுத்துப் பிரயோகஞ்செய்தான். அப்பாணங்கள் அவர் மேல் பட்ட மாத்திரத்தில் அவர் கோபாதீதராய்த் தம் நெற்றிக் கண்ணினால் எரிக்க, மன்மதன் பூளைப்புஷ்பம் போலாயினான். ஆதலால், மன்மதனுக்கு அன்றுமுதல் 'அனங்கன்' என்று

ஒரு நாமமும் கிடைத்தது. அவன் அங்கம் இவ்விடத்தில் அழிந்தபடியால், இதற்கு அங்கதேசம் என்றொரு பேரும் உண்டாயிற்று. அக்காரணத்தினாலேயே இதற்குக் 'காமன் ஆச்சிரமம்' என்பதும் பெயர். வேதசொரூபியே, ஆன்மாக்களுக்கு மனத்தின்கண் பொருந்திய ஆசை முதலியவற்றினால் விளையும் பிறவியின் வேரைப் பசையறப் போக்கி மோட்ச சாம்பிராச்சியத்தையடையப் பரிசுத்தமான பேரறிவினைச் செலுத்துதற்குரிய கடவுளாகிய பரமசிவனாரே இங்கிருந்து யோகஞ்செய்தாரென்றால், இதன் பரிசுத்தத்தை அளவிட்டுச் சொல்லக்கூடுமா ?" என்று சொன்ன மாத்திரத்தில், ஸ்ரீராமர் அதிசயித்துச் சந்தோஷித்தனர். பின்பு அவர்கள் அவ்விடத்தில் இருந்த தவசிகளோடு அன்றைக்கங்கிருந்து, மறு நாள் சூரியோதயத்தில் எழுந்து கடூரமான ஒரு பாலை நிலத்திற்கு வந்தார்கள்.

அந்நிலம் எப்படிப்பட்டதெனில், சூரியன் அந்நிலத்திலுண்டாகிய ஈரப்பசையைக் கிரகிக்கும்பொருட்டு விருது கொண்டிருக்கிறாற்போல எப்போதும் வேனிலேயல்லாமல் வேறொரு பருவமில்லாமையால், சூரியனும் அந்நிலப்பசையை நினைப்பானாகில் உள்ளம் வேகும்; கண்ணினாற் பார்ப்பானாகில், கண்களும் வெந்து போகும். அந்நிலத்தின் கொடிய வெப்பத்தைப்பற்றிச் சொல்ல வேண்டுமானால், சொல்லும் நாவும் சுருளும். அண்டகடாகத்தின் முகடும், வெயிலும், மேகமும், மின்னலும், இடியும் வெந்துபோகுமானால், வேகாதது யாது ? பாவிகளுடைய வஞ்சனையில் ஒரு தருமபுருஷன் அகப்பட்டுக்கொண்டு அவமானப்பட்டால் அவனுடைய மனம் எப்படி ஆறாமல் வெந்துகொண்டிருக்குமோ, அப்படி ஆறாத வெப்பத்தையுடைத்தாயிருக்கும் அதில் பேய் போலத் தலையை விரித்துக்கொண்டிருக்கும் பெருங்கள்ளியின் வேர் பிளந்து சிந்திக் கிடக்கும்; அகில்களும், தழையில்லாத மூங்கிலும் வெடித்து உதிரும் முத்துக்களும் விஷத்தையுடைய பாம்பின்வாய் கிழிந்து கக்கிய இரத்தினமும் பொருந்தியிருக்-

கும். அந்த நிலத்தில் நீடித்திருக்கக் கூடாமையால் மற்றெரு நிலத்தின் வஸ்துவானது அங்கு வரமாட்டாது. அதில் வாசஞ் செய்யும் காளியும் ஓடிக்கொண்டேயிருக்க வேண்டும்; தப்பி நின்ருல், வெந்து போவாள். அந்நிலத்திற்குச் சரியாய் ஆகாயத்தில் சூரியன் தேரும் மேகமும் ஓடமாட்டா. அந்நிலத்தின் கொடியதாகிய தீட்சணிய வெப்பத்தைச் சகிக்காமல், நாகராசன் கண்கள் வெடித்துக் கக்குகின்ற விஷச் சுவாலையானது, மேக மண்டலத்தைக் கிழித்துக்கொண்டு பிரகாசிக்கும்; மின்னலையொத்த பல இரத்தினங்கள் அப்பூமி வெடிப்பில் பிரகாசிக்கிறது, பூமிதேவியினுடைய உடல் வெடித்து அப்புண்ணிலுண்டாகும் இரத்தம் போன்றிருக்கும். மிகுந்த பசியோடு புழுங்கிப் புரண்டுகொண்டு வாயை ஆவென்று திறந்துகொண்டிருக்கும் மலைப்பாம்பினுடைய வாயில் அந்நிலத்தின் வெப்பத்தைத் தாளமாட்டாமல் யானையானது நிழல் தேடிக்கொண்டு தானே வந்து புகுந்துகொள்ளும். இப்படி அக்கினியே அரசு செய்கின்ற அக்காட்டினில் காக்கைகளும், யானைகளும் கருகி, வடவாமுகாக்கினியால் தீய்ந்த மேகம் போல வீழ்ந்து கிடக்கும். இவ்விதக் காட்டில் சஞ்சரிக்கும் பேய்த் தேர்க்கூட்டமானது, தானிருக்கும் இடத்திலிருந்து எழும்பும் வெப்பமானது மீறி மேலோங்குமாகில் ஆகாயம் வெந்துபோகுமென்று தேவர்களுக்காகப் பரிந்து சூழ்ந்து கொண்டிருக்கிற நீர் போல இருக்கும். இவ்வளவு கொடிதாகிய நிலத்தைக் காக்கும் கோடையென்கிற அரசன் கொலுவிருக்கச் செய்த அக்காட்டினிடத்திலுதித்த கானல் தேர், பொன் கால்களையுடைய பளிங்கு பீடம் போல இருக்கும். மேலும், நல்வினை தீவினை என்கிற இரண்டையும் விட்டு மூவகைப் பகையாகிய பைசாசம் உலகு உடல் என்கிற காவலைக் கடந்து முத்திக்கு ஏதுவாகிய கிரியையைச் செய்கிறவருடைய மனம் போலவும், அந்நிலம் பசையற்றிருந்தது. அவ்வளவு கொடிதாகிய நிலத்திலுள்ள பருக்கைக் கற்கள் வெப்பத்தினுல் பொரிந்து விழ, அதனுல் அந்நிலம் வெடித்துப்

பெரிதாகிய வழி போலத் தோன்றுகிறபடியால், அவ்வழியில் சூரியன் பிரவேசித்து, நாகலோகத்திலும் சஞ்சரிக்கும்படி யாயிற்று.

ஸ்ரீராமலட்சுமணர்கள் அதிக வலிவுடையவர்களாயிருந் தாலும், புஷ்பத்தைப்பார்க்கிலும் மிருதுவாகிய பாதத்தை யுடையவர்களாகையால், வருத்தமுறுவார்களென்று விசுவா மித்திரர் மனத்தில் நினைத்து, அவர்கள் முகத்தைப் பார்த் தார். அப்பார்வை இன்னதென்றறிந்த சக்கரவர்த்தியாரின் புதல்வர்கள், விசுவாமித்திரருடைய திருவடியினிடத்தில் கிட்ட, விசுவாமித்திரர் பூர்வத்தில் பிரமாவினுலுண்டாக்கப் பட்ட மந்திரமாகிய **பலை அபலை** என்கிற இரண்டு திருமந்திரங் களையும் அவர்களுக்கு உபதேசித்தார். அவர்களும் அம் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு சென்ருர்கள். ஊழித் தீயேயாயினும், அவர்களை என்ன செய்யும்? அப்பாலையின் தீயானது குளிர்ச்சி பொருந்திய நீர் போல இருந்தது. அப் போது, சக்கரவர்த்தியாரின் திருமகனுர், விசுவாமித்திரரைச் சேவித்து, "சுவாமி, இந்தப் பூமி சிவபிரானுடைய நெற்றிக் கண்ணினுல் வெந்ததோ? அல்லது யாது காரணத்தால் இவ்வளவு வெப்பத்தை அடையும்படியாயிற்று? குற்றமற்ற சக்கரவர்த்தியாருடைய திருநாட்டில் இப்படியிருக்கக் கார ணம் என்ன? தேவரீர் அனுக்கிரகஞ் செய்ய வேண்டும்," என்று கேட்க, விசுவாமித்திரர், "ஸ்ரீராமா, ஓர் இராட்சசி இவ்விடத்தில் வாசஞ்செய்துகொண்டிருக்கிருள். அவள் எப் படிப்பட்டவளெனில், சகல ஜீவராசிகளையும் கொன்று புசிக் கத்தக்க தன்மையுடையவள்; யமனையொத்தவள்; மதம் பொருந்திய ஆயிரம் யானையினுடைய பலத்தையுடையவள்; இப்பூமியைப் பேர்க்க வேண்டுமென்ருலும், சமுத்திரத்தை வடிக்க வேண்டுமென்ருலும், செய்யத்தக்க வலிமையுடைய வள்; மேலும், உலகத்தில் உண்டாகிய பாவங்களெல்லாம் ஒருங்கு கூடி ஒரு பெண் உருவங்கொண்டது போன்றவள். அவளது தேகமோவெனில், இரண்டு பருவதமும், விஷமும்,

இடியும், ஊழித்தீயும், இரண்டு பிறையும் பொருந்தி, ஒரு சமுத்திரமுண்டாயிருக்குமாகில், அதற்குச் சமானமாய் இருக்கும். அவள் பாம்பை வளையலாகவுடைய சூலம் பொருந்திய கரத்தையுடையவள்; சுடுகாட்டில் சஞ்சரிக்குந் தன்மையை உடையவள்; புருஷரும் இச்சிக்குந் தோளையுடைய ஸ்ரீராமா, அவளைப் பார்த்தவர்கள் *தாடகை* என்று சொல்லுவார்கள். அவள் பிரமதேவர் சிருஷ்டிக்கும் சகல ஜீவகோடிகளையும் வாரி வாயிற்போட்டுக்கொண்டு, தன் இனிப்பாகிய உயிரை வளர்க்கும் கொடூரத்தையுடைய நமனையொத்தவள். அவள் யாரென்று கேட்பாயாகில், சொல்லுகிறேன்; கேள்,'' என்று பின்னும் சொல்லத் தொடங்கினர் :

## *தாடகை வரலாறு*

"கந்தருவ குலந்தில், ***சற்சரன்*** என்னும் ஓர் அரசனிருந்தான்; அவனுக்குச் ***சுகேது*** என்னும் ஒரு குமாரன் உண்டு. சுகேது புத்திரனில்லாமல் பிரமதேவரை நோக்கி நெடுங்காலம் தவஞ்செய்தான். பிரமதேவர் பிரசன்னமாய், 'உனக்கு என்ன வேண்டும்?' என்று அவனைக் கேட்க, 'சுவாமி, எனக்கு ஒரு புத்திரனை அனுக்கிரகஞ் செய்ய வேண்டும்,' என்று அவன் வேண்ட, பிரமர், 'உனக்குப் புத்திரர் கிடைப்பதரிது. ஆயிரம மதயானைப் பலத்தோடும் அழகோடும் ஒரு குமாரத்தியுண்டாவள்,' என்று சொல்லிப் போய்விட்டார். அப்படியே சுகேதுவுக்கு ஒரு பெண் பிறந்தாள். அப்பெண் மிகுந்த சௌந்தரியம் பொருந்தியவளாய் வளர்ந்து வர, தந்தை அது கண்டு, 'இப்பெண்ணுக்குத் தகுதியான புருஷன் யார்?' என்று தன்னுடைய பந்துவர்க்கத்தில் சோதித்து, ***சுந்தன்*** என்பவனுக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுத்தான். அவர்களிருவரும் மதனும் இரதியும் போலக் கூடிச் சந்தோஷ சாகரத்தில் மூழ்கியிருந்தார்கள்.

"இப்படி நெடுங்காலங் கழிந்த பின், அவள் வயிற்றிலே புவனங்களெல்லாம் நடுநடுங்கும்படி ***மாரீசன்***, ***சுவாகு*** என்னும் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்கள் மாயங்களிலும் வஞ்சனைகளிலும் மிதமில்லாத பலத்திலும் தாயைப் பார்க்கிலும் அதிக பலசாலிகளாகி, உலகத்திலே சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது சுந்தனென்பவன் தன்னுடைய பிள்ளைகளின் பலத்தைக் கண்டு கர்வித்துத் தானும் அதர்ம மார்க்கத்திலே திரிந்துகொண்டிருந்து, ஒரு நாள் அகஸ்திய முனிவர் ஆச்சிரமத்துக்கு வந்து, அவ்விடத்திலுள்ள விருட்சங்களையெல்லாம் பிடுங்கியெறிந்து, மான் கடம்பை முதலிய மிருகங்களையெல்லாம் கொன்று புசித்து, உபத்திரவப்படுத்தினன். அப்போது அகஸ்திய முனிவர் அதிக கோபத்துடனே பார்க்க, அவன் சாம்பரானன்.

"அவன் மடிந்தசெய்தியைப் பிள்ளைகளும் தாயும் கேட்டு, அதிக கோபத்துடனே புறப்பட்டு, 'அந்த மகரிஷியைக் கொல்லுகிறோம்!' என்று இடியும் சிங்கமும் சண்டமாருதமும் பயப்பட, தேவர்களும் சந்திர சூரியர்களும் மேகங்களும் நடுங்க, அண்டங்கள் அதிரக் கர்ஜித்துக்கொண்டு வந்தார்கள். அகஸ்திய முனிவர் அவர்களைப் பார்த்து, 'நீங்கள் இராட்சத கிருத்தியம் செய்கிறபடியினலே இராட்சதர்களாகக் கடவீர்கள்!' என்று சபித்தார். உடனே அவர்கள் கந்தருவ ரூபம் நீங்கி, கோர தந்தங்களும், செம்மயிரும், பருத்த உருவமுமுடைய ராக்ஷதர்களானர்கள். அகஸ்திய முனிவரைப் பதிலுக்குச் சபிக்க அவர்களாலாகாதபடியினலே, புதல்வர் இருவரும் ***சுமாலி*** என்பவனிடத்திற்குப் போய் அவனைக் கண்டு, 'உனக்கு நாங்கள் பிள்ளைகள்,' என்று உறவு கொண்டாடி, அவனுடனே நெடுங்காலம் பாதாளத்திலே இருந்து, இப்போது இராவணனுக்கு மாதுலர் இவர்களென்று சொல்லும்படி இலங்கையிலே திரிலோக கண்டகராய்ச் சலுகை கொண்டு, தாயும் பிள்ளைகளும் உலகங்களெல்லாம் சஞ்சரித்து, உபத்திரவஞ் செய்துகொண்டு வருகிறர்கள். அந்தத்

தாடகையானவள் தன் பிள்ளைகளை விட்டு அகஸ்தியருடைய கோபத்தைக் கருதி, இவ்வனத்தில் பிரவேசித்திருக்கின்றனள். சொல்லுதற்கரிதாகிய நல்ல குணத்தை உலோப குணம் அழிப்பது போல, கொடிய அவ்வரக்கி மருத நிலத்தை அழித்து இப்பாலை நிலமாக மாற்றினுள்; இலங்கைக்கு அதிபனுகிய இராவணனுடைய ஊழியத்திலமர்ந்து, மிருகத்தைப் போல வலி பெற்று, எனது யாகத்துக்கு விக்கினஞ்செய்து கொண்டு வருகிருள். ஸ்ரீராமா, அவளிங்குள்ள எல்லா ஜீவ ராசிகளையும் கொன்று தின்கிறதல்லாமல், தனக்கு ஆகாரம் என்று என்னையும் நினைத்திருக்கிருள்; இனிப் பல சொல்ல வேண்டுவதென்ன? சகல பிராணிகளையும் இன்னம் சில நாளையில் வாரி வயிற்றில் போட்டுக்கொள்வாள்!'' என்று விசுவாமித்திர மகரிஷி சொல்ல, ஸ்ரீராமர் கேட்டு, திருமுடியை அசைத்து, "இப்படிப் பாவியாய் அக்கிரமம் செய்கிறவள் எங்கேயிருக்கிருள்?'' என்று கேட்டார்.

அச்சமயத்தில் கறுத்த ஒரு பருவதம்போல, நெருப்புச் சுவாலையுடனே வாயை மடித்து, புருவங்கள் துடிக்க, நிறைந்த சமுத்திரத்தில் இரண்டு வடவாமுகாக்கினி பிரவேசித்தாற்போல இரண்டு கண்களிலேயும் நெருப்புப் பறக்க, கடூரமாய் விழித்துப் பார்த்துக்கொண்டு, வருகிற வேகத்தில் பருவதங்கள் விருட்சங்களெல்லாம் பின் தொடர்ந்து வர, கால்கள் பெயர்த்து வைக்கிற இடங்களெல்லாம் சமுத்திரம் போல ஜலம் ஊற்ருக, அவளுடைய கோரத்தைப் பார்த்துக் கூற்றுவனும் பயந்து பாதலத்திலே ஓடிப் பதுங்க, யானைகளைத் துதிக்கையோடு துதிக்கை சேர்த்து மார்பிலே மாலையாகத் தரித்திருக்கிற மகா பலத்தையுடையவளாய் வந்த தாடகையானவள், தேவர்கள் முதலாகப் பதினுலு உகத்தாரும் நடுங்க, இடியும் பயப்படக் கர்ஜித்து, இவர்களைப் பார்த்து நகைத்து, தன் கையிலிருக்கிற சூலத்தைப் பார்த்து, உதட்டைக் கடித்து, குகை போல இருக்கிற வாயைத் திறந்து, இடிக்கிற மேகம் போல, "ஒருவராலும் ஜயிக்கக்

கூடாத பலத்தையுடைய என் காவலிலிருக்கிறது இந்த ஆரணியம்! நான் இதிலே உள்ள ஜீவஜந்துக்களையெல்லாம் கறுவறுத்துப்போட்டேன்! உங்கள் சரீரத்திலிருக்கிற மாமிச ருசியை நான் அறியவேண்டுமென்று வந்தீர்களோ? உங்கள் விதியே உங்களைத் தள்ளிக்கொண்டு வந்ததோ? சீக்கிரம் வந்த காரியத்தைச் சொல்லுங்கள்!'' என்று சொல்லிச் சூலத்தை இவர்கள்மேல் திருப்பினள்.

ஸ்ரீராமர் அவள் வார்த்தையைகேட்டு, சூலத்தைத் தங்கள்மேல் செலுத்துவதற்குத் திரும்பியதையும் பார்த்து, விசுவாமித்திர முனிவர் அவளைக் கொல்லவேண்டும் என்று மனத்தில் கொண்டிருக்கிற எண்ணத்தை அறிந்திருந்தும், வில்லிலே அம்பைத் தொடுக்காமல், பெண் என்று தமது திருவுள்ளத்திலெண்ணிச் சும்மாவிருந்தார். அவர் அவள் மேல் அஸ்திரப் பிரயோகஞ் செய்யாமலிருப்பதை விசுவாமித்திர மகரிஷி அறிந்து, "ஸ்ரீ ராமா, இவளைப் பெண் என்று நினைக்க வேண்டா. இவள் எல்லாத் தீமைகளையுஞ் செய்தவள். எங்களைக் கோது என்று கருதிப் புசிக்கவில்லை. இதுதான் குறை. இந்தக் கொடிய பாவியை யாதென்றெண்ணுவது! இவளுடைய பேரைச் சொன்னால் சௌரிய வந்தரான ஆண் பிள்ளைகளெல்லாம் நடுநடுங்கிப் போவார்களாகில், அப்போது ஆண்பிள்ளைத்தனம் யாரிடத்திருக்கின்றது? மேலும், இவளுடன் எதிர்த்து நிற்க மாட்டாமல் தேவேந்திரன் ஓடிப்போய்விட்டான். தேவர், அசுரர் முதலியவரும் இவளுக்கு முன்னிற்க மாட்டாமல் இளைத்துப்போய்விட்டனர். இவளுடைய ஆண்மையை என்னவென்று சொல்லுவது! இவள் சக்கரவர்த்திகளாயிருக்கிற ராஜாக்கள் முதலிய பலரைக் கொன்று தருமத்தைக் கெடுத்தவள். பூர்வத்தில் மகாவிஷ்ணு பிருகு மகரிஷியின் பத்தினியிடத்தில் ஒரு குற்றங்கண்டு அவளைச் சங்கரித்துவிட்டார். மகா பாவியான இராட்சசியாகிய **குமதி** என்பவள் இவ்வுலகின்கண்ணுள்ள ஜீவராசிகளைத் தனக்கு ஆகாரமாக எண்ணியிருந்தாள். அவளை வச்சிர

தரனுகிய தேவேந்திரன் சங்கரித்தான். அதனுல், அவர்கட்கு யாவரும் புகழும்படியான கீர்த்தி வந்ததேயல்லாமல், அப கீர்த்தி வந்ததுண்டோ ? இல்லேயே ! ஜீவராசிகளேக் கொன்று தருமங்கெடச்செய்யும் இவள் விஷயத்தில் இரக்கம் கொள்ளக் கூடுமா ? கூடாது. உலகத்தில் மாந்தர்கள் தமக்கு நியமித்த காலத்தைக் கழித்து, பாவ புண்ணியங்களேயறிந்து, மோக்ஷ சாம்ராஜ்யத்திற்குச் செல்லுகிறதுண்டு. இவளேப்போல மானிட ஸ்பரிசம் பட்ட மாத்திரத்தில் புசிக்க இச்சிக்கும் ஒரு யமனுமுண்டோ! இவ்வளவு துர்க்கிருத்தியங்களேச் செய்துகொண்டிருக்கும் இவளேப் பெண்ணென்று நினேக்க லாமா ? தரும சாஸ்திரப்படி சொல்லுகின்றேனல்லது, இவள் கோபத்தோடிருப்பதைப் பார்த்துச் சொல்லவில்லே. ஆதலால், இவளேக் கொல்வதனுல் பாவமில்லே,'' என்று சொன்னுர்.

ஸ்ரீ ராமர் அது கேட்டு, "சுவாமி, நீங்கள் சொல்லுவது தருமமல்லாது போனுலும், அல்லது தருமமாகவேயிருந் தாலும், 'இது செய்' என்று நியமித்தால், அதையே வேத வாக்கியமாகக்கொண்டு செய்கிறதல்லவா தருமம்?'' என்று அங்கீகரித்தார்.

இச்சம்பாஷணேயை அந்த அரக்கியாகிய தாடகை கேட் டுத் தன்கையிலிருந்த சூலத்தை உக்கிரப்பார்வையோடு அக் கினி பறக்க ஸ்ரீ ராமர் திருமேனியைப் பார்த்து எறிந்தாள். புதிய யமனேப்போலக் கோபித்து எறிந்த சூலமானது அந்த மகரிஷியின் வாக்கியத்தை வேத விதியாகக் கொண்டு நிற் கின்ற ஸ்ரீராமர்மேல் சந்திரன்மேல் வருகிற இராகுவைப் போலச் சீறி வந்தது. ஸ்ரீராமர் அதைக்கண்டு தமது வாளேத் தொட்டதும், அழகு பொருந்திய வில்லே வளேத்ததும் பார்த்த வர்களில்லே; ஆனுல், அச்சூலமானது இரண்டு துண்டாய் முறிந்து விழுந்ததைக் கண்டார்கள். அஞ்ஞானம் போன்ற கரிய நிறத்தையுடைய அந்த அரக்கியானவள் அது கண்டு, மலேகளேயே மழை போல எறிந்தாள். அவைகளே ஸ்ரீராமர் தமது வில் மழையால் விலக்கிவிட்டு, சொல்லேப்பார்க்கிலும்

மிகுந்த வேகத்தையுடைய ஒரே அம்பை அந்தக் கரிய நிறத் தோடுங்கூடிய தாடகையின்மேல் பிரயோகம் செய்தார். அம்பானது அவளுடைய பருவதாகாரமான மார்பைத் துளைத் துக்கொண்டு ஊடுருவிப்போனது, கல்லாத மூடர்களாகிய பாமரர்களுக்குப் பெரியோர்கள் உபதேசிக்கும் மந்திரார்த் தம் எப்படி மனத்தில் தங்காது நீங்குமோ, அப்படியிருந் தது. ஸ்ரீராமபாணமாகிய பிரளயகாலச் சண்டமாருதம் அடிக் கவே, ஊழிக்காலத்தில் பெய்கின்ற மேகமானது மின்னல் இடி முழக்கத்தோடு ஆகாயத்திலிருந்து வீழ்ந்ததுபோல அந் தத் தாடகை பூமியின்மேல் விழுந்தாள். பூமியெல்லாம் இரத் தப்பிரவாகமாயிற்று. தாடகை விழுந்தது இராட்சத குலத் துக்கு அபஜயகாலம் உண்டாகப்போகிறதென்று தெரிந்து முன்னதாக அவர்களுடைய வெற்றிக் கொடி மளமள வென்று முறிந்து விழுந்தது போல இருந்தது. அவள் மார் பில் பட்ட அம்பின் வாய் வழியே ஒழுகி வருகிற இரத்த வெள்ளமானது அக்காடெல்லாம் பரவியது, அந்தி மாலை யாகிய செவ்வானம் அடியோடு அற்று விழுந்தது போல இருந்தது. விசுவாமித்திரருடைய வார்த்தையை மறுக்காமல் போர் செய்த காகுத்தராகிய ஸ்ரீராமரால் இராட்சதர்களு டைய சீவனை உண்கிறதற்குப் பயப்பட்டிருந்த கூற்றுவனும் சிறிது ருசியறிந்தான். பின்பு தேவர்கள், "நாங்களும் எங் களுடைய வாசஸ்தலத்தை அடைந்தோம்! உமக்கும் இனி ஒரு துன்பமுமில்லை! இனி இந்தச் சக்கரவர்த்தி திருமகனுக் குத் தெய்விகமாகிய அஸ்திரங்களைக் கொடும்," என்று விசுவாமித்திர மகரிஷிக்குச் சொல்லி, ஸ்ரீராமபிரான்மேல் புஷ்பவருஷம் வருஷித்துப் போனார்கள்.

## 8. வேள்விப் படலம்

### கோமதி கௌசிகை என்னும் ஆறுகளின் வரலாறு

பின் விசுவாமித்திரர் இவ்வுலகத்தில் வறுமை என்கிற நோய் கொண்டவர்களுக்கு அமிர்தம் போல இருந்த வெண்ணெய்நல்லூர்ச் சடையப்பமுதலியாருடைய சொல்லை யொத்த அஸ்திரங்களை ஸ்ரீராமருக்குக் கொடுத்தார். அந்த அஸ்திரங்களெல்லாம், ஒருவன் பூருவத்தில் செய்த நல்வினைக் குத் தக்க பிரயோஜனங்கள் மறு ஜன்மத்தில் அவனைத் தேடி வருவது போல, மிகுந்த சந்தோஷத்துடனே சக்கரவர்த்தி திருமகனுரிடத்தில் வந்து, "ஐயனே, உன்னை அடைந்தோம்; இனிப் பிரியமாட்டோம்; இளைய பெருமாளைப்போல நீ ஏவின தொழிலைச் செய்துகொண்டிருப்போம்," என்று சொல்ல, சக்கரவர்த்தி திருமகனுர் நல்லதென்று சம்மதித்தார்.

இவைகள் நிறைவேறிய பின்பு மும்மூர்த்திகளுக்குச் சமானமான இந்த மூன்று பேரும், இரு காதவழி நடந்தனர். அவ்விடத்தில் ஒரு நீரின் ஒலி தோன்ற, சக்கரவர்த்தி திருமகனுர் விசுவாமித்திர மகரிஷியை நோக்கி, "சுவாமி, இந்தச் சந்தடி யாது?" என்று வினவ, விசுவாமித்திரர், "ஸ்ரீ ராமா, இது மானசமடுவில் பிறந்து சரயுநதி என்னும் பேர் பெற்று, தேவர்களால் ஸ்மரிக்கத்தக்க மேலான தீர்த்தமாகி, கோமதி என்கிற தீர்த்தத்தில் வந்து விழுகிறதனுடைய கோஷம்," என்று சொல்லி அப்பால் நடக்கும் போது பாவத்தைப்போக்கும் ஒரு திவ்விய நதியைப் பார்த்து, "இதன் வரலாறு என்ன?" என்று சக்கரவர்த்தி திருமகனுர் வினவ, விசுவாமித்திர முனிவர், "தாமரைப்புஷ்பத்தில் பொருந்திய பிரமதேவருக்குக் **குசன்** என்னும் ஒரு புதல்வருண்டு. அவர் தமது செங்கோன்மைக்குப் பழுதுருமல் அரசு புரிந்து வந்தார். அவருக்குக் ***குசன், குசநாபன், அதூர்த்தன், வசு*** என்கிற

நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களுள் குசநாபன் என்பவனுக்குப் பேரழகிகளாகிய நூறு பெண்கள் பிறந்தார்கள். அவர்கள் பெருஞ்செல்வத்தோடு வளர்ந்து, எவ்வனத்தை அடைந்து, ஒரு நாள் தங்கள் பிதாவினுடைய சிங்கார வனத்திற்கு விளையாடும்பொருட்டுப் போனார்கள். அவ்விடத்தில் வாயு பகவான் வந்து அவர்களைப் பார்த்து இச்சை கொண்டு, அந்தப் பெண்களை நோக்கி, 'பெண்களே, மன்மதனால் யான் வருத்தமுறுகிறபடியால், என்னை விவாகஞ் செய்துகொள்ளுங்கள்,' என்று கேட்க, அவர்கள், 'எங்கள் பிதாவிடத்திற் சொல்லி விவாகம் செய்துகொள்ளும்,' என்று சொல்ல, அது கேட்டு அவன் தனது ஸ்பரிசத்தால் அவர்கள் முதுகைக் கூனாக்கிவிட்டு அப்பால் போயினான். அப்படிப் போனபிற்பாடு அவர்கள் தவழ்ந்துகொண்டே போய்த் தங்கள் பிதாவிடம் சொன்னார்கள். அது கேட்டு அவனுங் கிலேசித்து, பெண்களுக்குத் தைரியஞ் சொல்லித் தேற்றி, சூளி மகரிஷி புத்திரரான பிரமதத்தருக்கு அந்த நூறு பெண்களையுங் கலியாணஞ்செய்து கொடுத்தான். அந்த மகரிஷி கைகளால் தீண்டவே, அவர்கள் கூன் நீங்கி, எப்போதும் போல அழகிகளானார்கள்.

"அந்தக் குசநாபனுக்குப் புத்திரரில்லாதபடியால், அவன் ஓர் யாகஞ் செய்தான். அந்த யாகத்தில் ***காதி*** என்பவர் பிறந்தார். அந்தக் காதிக்கு இராச்சிய பட்டாபிஷேகஞ் செய்து, குசநாபன் தெய்வலோகமடைந்தான். பிற்பாடு அந்தக் காதி மகாராஜாவுக்குக் ***கௌசிகை*** என்கிற ஒரு பெண்ணும், நானும் பிறந்தோம். அரசர் அந்தப் பெண்ணைப் பிருகு மகரிஷியினுடைய புத்திரரான **இருசிகர்** என்பவருக்குக் கலியாணஞ் செய்து கொடுத்தார். அவரும் அவளும் நெடுங் காலம் தர்மார்த்த காமங்களை அனுபவித்தனர். பிறகு பிரம லோகத்துக்குப்போகவேண்டுமென்று இருசிக மகரிஷி ஆகாய மார்க்கமாய் நடந்தார். அப்போது கௌசிகை அவரைப் பிரிந்திருக்க மாட்டாமல், தன்னுடைய பதிவிரதா தர்ம மகிமை

யினுல் தானும் ஆகாயமார்க்கமாய்த் தொடர்ந்தாள். இப்படிப் பாதி வழி போய்க்கொண்டிருக்கையில், இருசிக மகரிஷி அவளைத் திரும்பிப் பார்த்து, ‘ நீ என் உத்தரவு இல்லாமல் ஏன் வந்தாய் ?’ என்று சொல்லி, ‘நீ போய்ப் பூலோகத்தில் நதியாய்ப் பிரவேசித்துச் சகலருக்கும் பாபவிமோசனம் செய்துகொண்டிருக்கக் கடவாய்,’ என்று ஆக்கியாபித்து, பிரமலோகம் போய்ச் சேர்ந்தார். அதனுல், என் தமக்கை யான கௌசிகை இப்படிக் கௌசிகை நதியாயினள்,” என்று விசுவாமித்திரர் சொல்லக்கேட்டு இராமலக்குவர்கள் மிகவும் அதிசயச் சித்தராகி அப்பால் நடந்தார்கள்.

### *மாவலி வரலாறு*

இப்படிச் சக்கரவர்த்தி திருமகனும் இளையபெருமாளும் சிறிது தூரங்கடந்த பின்னர், அவ்விடத்தில் ஒரு சிங்காரச் சோலையைக் கண்டு, “இதனுடைய விருத்தாந்தம் என்ன ?” என்று இராமர் கேட்க, விசுவாமித்திர மகரிஷி சொல்லுகிறுர்:

“ ஸ்ரீராமா, இந்தச் சோலை மிகத் தூய்மையானது; தங் களுடைய நாயகர் தவிர வேறே தெய்வமும், அவர்கட்கு ஏவல் உபசாரஞ் செய்கிறதைவிட வேறே தவமும் இல்லை யென்றிருக்கிற பதிவிரதைகளுடைய இருதயத்தைப் போல, மகத்துவமும் பெற்றது. அதற்கு யாது காரணம் எனில், எங்களுடைய நான்கு வேதத்திற்கும் தேவர்களுடைய அறி வுக்கும் சிவபிரமாதிகளுடைய ஞானத்திற்கும் எட்டுதற்கரிய ஸ்ரீமகாவிஷ்ணு பூருவத்தில் இவ்விடத்திலிருந்து செய்ய வேண் டிய தவங்களைச் செய்தது. அன்றி, பூமியிலும் ஆகாயத் திலும் ஆசை முதலிய பற்றற்று ஸ்மரிக்கப்படுகிறது அவரு டைய திருநாமம். அவர் செய்கிற மாயையாகிய பெரும் பிணக்கை ஒழுங்கு செய்கிறவர் யார்? அந்தப் பரிசுத்தராகிய கடவுளே என்றறியக்கடவாய். அவர் நினைப்பதை நாம் அறி கிறதற்குக் கூடாது. அக்கடவுள் இவ்விடத்தில் நூறு ஊழிக் காலம் தவத்தைச் செய்தார்.

"இப்படியிருக்கின்ற காலத்தில் ***மாவலி*** என்கிற அசுரன் பூமியையும் தேவலோகத்தையும் தன் வசப்படுத்திக் கொண்டு, சகல சம்பன்னனுயிருந்து, பிராமணருக்குச் சகல தானமுங் கொடுக்கிறதாகச் சங்கற்பித்து, அனேக தானதர்மஞ் செய்து வந்தான். அப்போது தேவர்கள் அசுரனுனவன் இப்படி அபரிமிதமான தருமத்தைச் செய்து வருவதால் தங்களுக்குத் துன்பம் வந்து சம்பவிக்குமென்று எண்ணிப் பயந்து, இவ்விடத்தில் வாசஞ் செய்துகொண் டிருந்த ஸ்ரீமகாவிஷ்ணுவின் சந்நிதிக்கு வந்து வணங்கி, 'சுவாமி, இவ்வசுரனுலுண்டாகிய பயத்தைத் தீர்க்கவேண் டும்!' என்று வேண்டிக்கொண்டார்கள். அவரும், 'அப் படியே செய்கிறேன்,' என்று அவர்களை அனுப்பிவிட்டு, திரிகாலநுட்பங்களையும் அறிந்திருக்கிற ***காசிப*** மகரிஷிக் கும் அவர் பத்தினியாகிய ***அதிதி***க்கும் ஒரு பிள்ளையாய்ப் பிறந்து, கறுத்த நிறத்தோடுங்கூடிய திருமேனியும் ஆல விதை போன்ற குறுகின வடிவமுமாய், அந்த மாவலியி னிடத்துக்கு வந்தார். மாவலி அவரை எதிர்கொண்டு தீர்க்க தண்டஞ்செய்து, 'பிராமணோத்தமருள் உமக்குச் சமான மானவர் உலகத்திலில்லை! உம்மைத் தரிசித்து என்னைப்போல் கிருதார்த்தரானவரும் வேறொருவருமில்லை!' என்று அதிக சந்தோஷத்துடனே சொன்னுன். அது கேட்ட ஸ்ரீமந் நாராயணமூர்த்தி, 'ராஜனே, யார் எதைக் கேட்கிறுர்களோ அவர்கட்கு அதைக் கொடுத்துவரும் நீண்ட கரத்தையுடைய வனே, உன்னிடத்திற்கு வருகிறவர்கள் பெரியவர்கள்,' என்று சொன்னுர். அது கேட்ட மாவலி மிகவுஞ் சந்தோஷ சித்தனுகி, 'உமக்கு என்ன வேண்டும்? சொல்லும். நான் கொடுக்கிறேன்,' என்று சொல்ல, 'எனக்கு மூன்றடி மண் கொடுத்தால் மனம் திருத்தியாகும்,' என்று அவ்வாமன ரூபர் சொல்ல, 'அப்படியே கொடுத்தேன்; வாங்கிக்கொள் ளும்,' என்று கெண்டிகையிலிருக்கிற ஜலத்தைத் தாரை வார்க்க ஆயத்தப்பட்டான். அப்போது அவனுடைய குரு

வாகிய **சுக்கிரபகவான்** தம் சீடனான மாவலியைப் பார்த்து, ‘இந்த உருவம் கபட நாடகமாய் வந்திருக்கின்றது. இது மேகநிறத்தோடுகூடிய வாமனரூபமென்று எண்ணாதே. இந்த அண்ட கடாகங்களையெல்லாம் பூருவத்தில் ஒரு கவளமாகப் புசித்த மகாவிஷ்ணுவே இவ்வடிவம். ஆகையால், இவருக்கு நீ பூதானங் கொடுக்க வேண்டா,’ என்று சொல்ல, மாவலி சக்கரவர்த்தி, ‘அப்படியானால் மெத்தவும் உத்தமமாயிற்று! ஸ்ரீயப்பதியாகிய அந்த மகாவிஷ்ணுவினுடைய கை கீழும், என் கை மேலுமாகக் கொடுக்கிறது உத்தமமல்லவா? அல்லது கொடுக்கிறவனுக்குப் பகைபாளியென்றுண்டா? இல்லையே! அதிலும் சற்பாத்திரமானவர் தாமே வலிய வந்து கேட்கக் கொடுக்கிறதற்குச் சந்தேகமென்ன? தன் பிராணனாலுங் கொடுக்கிறது நல்லது; வாங்குகிறது பொல்லாதது. தான் பிராணனோடிருந்து மற்றொருவன் கையில் வாங்கிக் கொள்ளுகிறவன் செத்தவனுக்குச் சமானம். கொடுக்கிறவன் செத்துப் போனாலும், சீவனோடிருக்கிறவனுக்குண்டான கீர்த்தியும் புகழும் அவனுக்குண்டாகும். பெரியோர்கள் சொல்லியிருக்கிற சாஸ்திரங்களில், ‘உலோபத்தை விடுங்கள்,’ என்று சொல்லியிருக்கிறது. அப்படியிருக்க, நீர் கொடுக்க வேண்டாவென்று சொல்லுகிற வயணம் யாது? ஒருவன் கொடுக்கிற பொழுது அதைக் கொடுக்க வேண்டா வென்று தடுத்து, அந்தக் கொடுக்கிற தாதாவை இகபரங்களுக்கு ஆளாகவொட்டாமல் செய்கிறவன், சகாயனாகமாட்டான். அதுவுமல்லாமல், கொடுக்கிறதை விலக்குகிறவன் எவனோ, அவனும் அவனுடைய சந்ததியாரும் உடுக்கிறதற்கு வஸ்திரமும் உண்கிறதற்கு அன்னமும் கிடையாமல் தரித்திரத்திலழுந்தி விநாசத்தையடைவார்களென்று தருமசாஸ்திரமிருக்கின்றதே! இப்படிக்கெல்லாம் செப்பியிருக்க, நீர் இவ்விதம் சொல்லித் தடுக்கலாமா?’ என்று சுக்கிரபகவானைப் பலவாறு வெறுத்துக் கண்டித்து, இந்த வாமன ரூபரைப் பார்த்து, ‘நீர் உம்முடைய காலினாலே மூன்றடி மண் அளந்து

கொள்ளும்,' என்று கையிலிருந்த கெண்டியைச் சாய்த்தான். அப்பொழுது சுக்கிரர் அந்தக் கெண்டிகையினுடைய துவாரத்தில் காமரூபியாய் நுழைந்து, ஜலத்தை விழவொட்டாமல் தடை செய்தார். அதையறிந்து, வாமனரூபராய் வந்திருக்கிறவர், ஒரு தர்ப்பைப் புல்லை எடுத்து, அந்தக் கெண்டிகைத் துவாரத்தில் குத்தினர். அப்பொழுது சுக்கிரருக்கு ஒரு கண் பழுதாகி, அவர் ஒதுங்கிப்போய்விட்டார். அப்போது ஜலம் கரத்தில் வந்து விழுந்தது. இப்படி விழுந்தவுடனே பகவானுடைய திருமேனி நல்லவர்கட்குச் செய்த உதவியைப்போல அண்ட கடாகமட்டும் உயர்ந்தது. பூமியில் நின்ற ஒரு பாதம் பூமியெல்லாம் நிறைந்தும் போதாமல், அதிகமாயிருந்தது. ஒரு பாதம் தேவலோகமெல்லாம் நிறைந்து, அதுவும் அப்படியே போதாமலிருந்தது. மற்றோரடிக்கு மாவலி சக்கரவர்த்தியின் சிரமே இடமாயிற்று. ஸ்ரீராமா, ஆலின் விதைபோலக் குறுகின ரூபராய் வந்த பகவான், இவ்விதம் அளந்து இந்த லோகங்களை வாங்கித் தேவேந்திரன் வசம் செய்து, திருப்பாற்கடலில் ஸ்ரீ மகாலட்சுமி திருவடிகளை வருடிக்கொண்டிருக்க யோக நித்திரை செய்துகொண்டிருந்தார். ஆகையினலே, இந்தச் சோலைக்குச் சமானமானது வேறே இல்லை. இந்த மகா ஸ்தலத்தைத் தரிசனஞ் செய்தவர்களுக்கு மறு ஜனனமில்லை. வேத சாஸ்திரப்படி யாகஞ்செய்ய வேண்டுமென்கிற எனக்கும் இது தவிர வேறே ஸ்தலமில்லை. நான் இவ்விடத்திலிருந்து யாகம் ஆரம்பித்துச் செய்கிறேன். இவ்விடத்தில் இராட்சதர்கள் வருவார்கள். அவர்களை வரவொட்டாமல் பார்த்துக் காத்துக் கொண்டிருங்கள்,'' என்று சொல்லித் திட்டப்படுத்தி, தாம் அந்தச் சோலை நடுவே இருந்து யாகஞ் செய்யத் தொடங்கினர்.

## விசுவாமித்திரர் வேள்வி

பூமியைக் காக்கும் சக்கரவர்த்தியாரின் பிள்ளைகள், விசுவாமித்திர மகரிஷியின் வேள்விக்கு யாதொரு துன்பமும் நேரிடாமல் கண்ணினைக் காக்கும் இமை போல ஆறு தினம் காத்திருந்தார்கள். ஒருவரும் வாராதபடியால், ஸ்ரீராமர் விசுவாமித்திர முனிவரின் சமீபத்தில் போய், "சுவாமி, மூர்க்கர்களாகிய இராட்சதர்கள் வருவார்களென்று செப்பியிருந்தீர்களே! அவர்கள் என்றைக்கு வருவார்கள்?" என்று கேட்க, அவர் நிஷ்டையிலிருந்தபடியால், யாதோர் உத்தரமும் கிடையாதது கண்டு திரும்பி வருங்காலையில் ஆகாயத்தைப் பார்த்தார். பார்த்த மாத்திரத்தில் இராட்சதர்கள் மாயை ரூபமாய் மேகம் போல ஆகாயமெல்லாம் நிறைந்து, இடியைப்போலக் கர்ஜித்துக்கொண்டு, பல பாணங்களும், வேல்களும், பர்வதங்களும், விருட்சங்களும், அக்கினி மழையும் பிரயோகஞ் செய்துகொண்டு, சமுத்திரமானது ஆகாயத்தில் பரவியது போலவும், ஊழிக்காலத்து மழை போலவும் திரண்டு வந்தார்கள். அதை ஸ்ரீராமர் பார்த்து, "தம்பி, இலட்சுமணா, இதோ அனேகம் பேர் கோர தந்தங்கள் சிவந்த மயிர் அக்கினி நேத்திரங்களோடு வருகிறார்கள். இவர்களைப் பற்றித்தான் விசுவாமித்திர முனிவர் சொன்னார்," என்று காட்டின போது, இலட்சுமணரும் அவர்களைப் பார்த்து, கடைக்கண்களில் அக்கினிப் பொறி பறக்க, தம் வில்லைப் பார்த்து, "இதோ வந்த இராட்சதர்களெல்லாம் துண்டம் துண்டமாக விழுந்து மடியப்போகிற வேடிக்கையை நீங்கள் பார்த்துக் கொண்டிருங்கள்!" என்று சொல்லி, வில்லை வளைத்தார். அப்போது ஸ்ரீராமர், "புகை போன்ற இந்த இராட்சதர்களுடைய நிணங்களும் இரத்தங்களும் விசுவாமித்திரருடைய வேள்வியின் ஓமாக்கினியில் விழுமென்று எண்ணி, பாணங்களினாலே ஒரு சரகூடம் கட்டினார். அவ்விடத்திலிருந்த ரிஷி கணங்களெல்லாம் வந்த இராட்சதக் கூட்டங்களைக் கண்டு

பயந்து, நடுநடுங்கி, முன்பு ஆலகாலவிஷம் பிறந்த போது தேவர்களெல்லாம் பயந்து சந்திரசேகரரான ருத்திர மூர்த்தியினிடத்தில் வந்தது போல, ஸ்ரீராமரிடத்தில் அபயமென்று ஓடி வந்தார்கள். அவர்களுக்கெல்லாம் ஸ்ரீராமர் அபயாஸ்தங் கொடுத்து, கோதண்டத்தை வளைத்துக் காதளவும் இழுத்து, அஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்தார். இராட்சதர்களுடைய சிரங்களெல்லாம் பருவதம் போல அற்று விழுந்தன. பூமியெல்லாம் இரத்த சமுத்திரமாயிற்று. அப்பால் ஒரு பாணத்தை எடுத்துத் தாடகையின் பிள்ளைகளாகிய இருவர் மேலும் விட்டார். அது ஒருவனை யமபுரத்தில் சேர்த்தது; மற்றொருவனாகிய மாரீசனைத் துரத்திக்கொண்டே போய், சமுத்திரத்தில் சேர்த்தது. மற்ற இராட்சதர்கள் ஸ்ரீராம பாணம் ஒரு கணப்பொழுதில் ஆகாயத்தை மறைத்துக்கொண்டு பிணக்காடாகச் செய்ததைப் பார்த்து, "இனி இவர்கள் பிணமலைமேலேறி வந்து நம்மையும் பிடித்துக்கொள்வார்கள்!" என்று பயந்து ஓடத் தலைப்பட்டார்கள். இப்படி ஓடிய இராட்சதர்களை ஸ்ரீ ராமபாணம் துரத்தித் தலைகளை அறுத்து வீழ்த்திற்று. அறுந்து விழுந்த கவந்தங்கள் எழுந்து நடனஞ் செய்தன. அனேக பூதபைசாசங்கள் இரத்தத்தைக் குடித்து மகிழ்ந்தன; ஸ்ரீராமருடைய சௌரியத்தைக் கொண்டாடிப் பாடி ஆடின. கழுகுகள், கூளிகள், பருந்துகள், காகங்கள் முதலான பறவைகள், ஆகாயத்திலே பந்தரிட்டாற்போல நெருங்கி நிறைந்திருந்தன. தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்.

விசுவாமித்திரர் யாகத்தை முடித்து எழுந்து, இரணக்களத்தையும் சரகூடத்தையும் பார்த்து மிகவும் மகிழ்ந்து, "ஸ்ரீராமா, இப்போது நீ செய்த காரியம் மிக நன்று! புவனங்களை உண்டாக்கி அவைகளை வயிற்றிலே அடக்கிக்காக்கிற நீ, ஒரு வேள்வியைக் காத்தாயென்று சொல்லுவது அதிசயமன்று!" என்று பாராட்டினர்.

மறு நாள் காலை ஸ்ரீராமர் விசுவாமித்திரரைச் சேவித்து, "சுவாமி, இன்றைக்கு நான் செய்ய வேண்டிய காரியம்

மென்ன?'' என்று கேட்டார். விசுவாமித்திரர், "ஸ்ரீராமா, எந்தக் காரியம் சொன்னாலும் அது உனக்கு அருமையாயிராது! இன்னம் சில பெரிய காரியங்களுண்டு. அவைகளைப் பின்பு முடித்துக்கொள்வோம். மிதிலாபுரிப் பட்டணத்தில் *ஜனகமகாராஜா* யாகம் செய்கிறார். அதைப் பார்த்து வருவோம்; வாருங்கள்,'' என்று ஸ்ரீராம லட்சுமணர்களை அழைத்துக்கொண்டு மிதிலையை நோக்கி நடந்தார்.

## 9. அகலிகைப் படலம்

### இந்திரன் செருக்கு

அவர்கள் வழியில் சோணை நதியை அடைந்தார்கள். சூரியன் ஸ்ரீராம லட்சுமணர்கள் குளிர்ச்சியடைந்திருக்கும்படி தன் வேகத்தைத் தணித்துக்கொள்ளும்பொருட்டுக் கடலில் மூழ்குகிறவன் போல மறைந்தான். பின்பு அவர்கள் ஒரு சோலையில் தங்கினார்கள். இராமர் அந்தச் சோலையைப் பார்த்து, "சுவாமி, இந்தச் சோலையின் விருத்தாந்தம் என்ன?'' என்று கேட்க, விசுவாமித்திரர் சொல்லுகிறார்:

"இராமா, முன்பு காசிப முனிவரின் மனைவியாகிய திதி என்பவள் புத்திர நிமித்தம் இவ்விடத்திலிருந்து தவஞ்செய்தாள். அண்ட கோளகைக்கு அப்புறத்திலிருக்கும் ஸ்ரீமந் நாராயணர் மார்பில் வாசமாயிருக்கிற மகாலட்சுமியை ஒரு விஞ்சைய ஸ்திரீயானவள் மிகுந்த அன்புடனே வணங்கிப் பாடினாள். அது கேட்டு மகாலட்சுமி மகிழ்ந்து ஒரு பூ மாலையைக் கொடுத்தாள். அம்மாது அந்த மாலையை அதிக மகிழ்வுடன் வாங்கித் தனது வீணையில் கட்டிக்கொண்டு பிரமலோகத்துக்குச் சென்றாள். அவ்விடத்தில் தூருவாச முனிவர் அந்த விஞ்சைய ஸ்திரீயைக் கண்டு, 'இவள் என் தாயாராகிய ஸ்ரீமகாலட்சுமியின் சந்நிதியில் வீணை வாசித்துப் பாடும் பாக்கியஞ்செய்தவள்!' என்று பத்தியுடனே அவளை வணங்கித் துதித்தார். அவள் சந்தோஷித்து,

அந்த மாலையை அவர் கையில் கொடுத்தாள். முனிவர் அந்த மாலையை வாங்கிக்கொண்டு, ‘உலகங்களையெல்லாம் உண்டாக்கி இரட்சிக்கிற ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய மார்பில் தங்கிச் சகல பிராணிகளையும் பெற்ற ஸ்ரீமகாலட்சுமியின் சிரசில் தரித்திருந்த மாலை எனக்குக் கிடைக்கிறதற்கு நான் என்ன தவம் செய்தேன்!’ என்று சந்தோஷித்து, அந்த மாலையைச் சிரசிலே தரித்துக்கொண்டு, தேவலோகத்துக்குச் சென்றார். அப்போது தேவேந்திரன் *ஐராவதம்* என்னும் யானையின்மேல் ஏறி, ஆயிரங் கண்களும் தாமரைப் பூக்கள் போல விளங்க, கிரீடம் சூரியனைப்போல ஜொலிக்க, நீல மேக சொரூபத்துடன், அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி என்னும் தேவமாதர் நடனம் செய்து வர, இரு பக்கங்களிலும் வெண்சாமரை வீச, பூரணசந்திரனைப் போல வெள்ளைக்குடை பிரகாசிக்க, பேரிகை முதலான வாத்தியங்கள் முழங்க, மங்களகீதங்கள் பாட, அதிக சம்பிரமத்துடனே உலா வருகிறதைக்கண்டு, தூருவாச முனிவர் அந்த மாலையை அவனுக்குக் கொடுத்தார். அந்த மாலையை அவன் அங்குசத்தினாலே வாங்கி, யானையின் கழுத்திலே இட்டான். அந்த யானை அந்த மாலையைத் துதிக்கையினால் இழுத்து, அறுத்து வீழ்த்திக் கால்களால் தேய்த்தது. அதைக்கண்ட தூருவாச முனிவருக்குக் கண்களில் கோபாக்கினி எழும்பிற்று. அது கண்ட தேவர்கள் பயந்து ஓடினார்கள். உலகங்களெல்லாம் சுழன்று இருள் மூடிக்கொண்டது. இப்படிக் கோபங்கொண்ட தூருவாசர், இந்திரனைப் பார்த்து, ‘இந்திரா, பஞ்சபூதத்திற்கும் பூமிதேவிக்கும் வேதத்திற்கும் நாயகரான ஸ்ரீமந்நாராயணருடைய திருமார்பில் வாசமாயிருக்கின்ற ஸ்ரீமகாலட்சுமியின் சிரசிலே தரித்திருந்த பூமாலையானது, நான் செய்த தவமகிமையினால் எனக்குக் கிடைத்தது! அந்த மாலையை உன்னுடைய வைபவத்தைக் கண்டு உனக்குக் கொடுத்தேன். அதை நீ இகழ்ச்சி செய்தது உனது கர்வத்தினால் அல்லவா? ஆதலால், உன்

பாக்கியமெல்லாம் சமுத்திரத்திலே போய் விழுந்துவிடக் கடவன! நீயும் வருத்தத்தையடையக் கடவாய்!' என்று சபித்தார்: உடனே கற்பக விருட்சம், சங்கநிதி, பதுமநிதி, காமதேனு, அமிர்தகலசம், அரம்பையர், ஐராவதம், உச்சைச் சிரவம் என்னும் குதிரை முதலான பாக்கியங்கள் யாவும், வள்ளலாகிய வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப முதலியாருடைய பகைவர்கள் எப்படிப் பயந்து ஓடிப்போவார்களோ, அப்படி ஓடிச் சமுத்திரத்தில் முழுகிவிட்டன.

### பாற்கடலைக் கடைதல்

"தூருவாச முனிவரின் கோபத்தினுல் தேவலோகத்திலும் இவ்வுலகத்திலும் வறுமை நோயினுல் வருத்தமுண்டாகவே, தேவர்களும் சிவபிரானும் பிரமதேவரும் ஸ்ரீயப்பதியாகிய மகாவிஷ்ணுவினிடத்திற்குப் போய்,விளைந்த காரியங்களைச்சொல்லி, 'உமதுதிருவடியன்றி வேறுகதியில்லை!' என்று சேவிக்க, அவர், 'பயப்படாதீர்கள்! தேவர்களே, மந்தரகிரியை மத்தாகவும், வாசுகியைக் கயிருகவும், சந்திரனைத் தூணுகவும் கொண்டு, அசுரர்களுடன் கூடி ஓஷதி கொடுத்துப் பால் சமுத்திரத்தைக் கடையுங்கள். நாமும் அவ்விடத்திற்கு வருகிறோம்,' என்று சொல்லி அனுப்பினுர். தேவர்கள் சந்தோஷித்து, மந்திரகிரியைப் பிடுங்கி, வாசுகியைத் தாம்பாகக்கொண்டு, சந்திரனைத் தூணுக நட்டு, அசுரர்களுடன் கூடி ஓஷதி கொடுத்துப் பால் சமுத்திரத்தைக் கடைந்தார்கள். அப்போது பூமி நெளிந்தது. அந்த வேளையில் ஸ்ரீமகாவிஷ்ணு கூர்மாவதாரமான ஆமையுருவெடுத்து, அந்த மந்தரகிரி பர்வதத்தைத் தம் முதுகில் சுழலும்படி தாங்கினுர். இப்படிக் கடைகிற போது முன்னே முழுகிப் போய்விட்ட பொருள்களெல்லாம் வெளிக்கிளம்பின. அமிர்தத்தின் நிமித்தம் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் விரோதமுண்டாயிற்று. அவர்கள் போர் செய்தார்கள். அப்போது பகவான் *ஜகன்மோகினி* வடிவமெடுத்து அசுரர்களை மயக்கி

ணர். அவர்கள் மயங்கி இறந்தார்கள். தேவர்கள் அமிர்தம் சாப்பிட்டார்கள். மகாவிஷ்ணு ஆலகால விஷத்தையும் இளம்பிறைச் சந்திரனையும் ரிஷபவாகனரான சிவபிரானுக்குக் கொடுத்து, மற்றவற்றை அவரவர் யோக்கியதைக்குத் தகுதியாகக் கொடுத்து, கற்பகவிருட்சம் முதலான பொருள்களை தேவேந்திரனுக்குக் கொடுத்து, அந்தச் சமுத்திரத்திலே பிறந்த இலட்சுமியையும் கௌஸ்துவாபரணத்தையும் தாம் தரித்துக்கொண்டார். அப்போது அந்த அசுரர்களுடைய தாயாகிய திதி என்பவள், தன் பிள்ளைகள் தேவர்களுடைய வஞ்சனையினலே அமிர்தங்கிடையாமல் போர் செய்து மடிந்து போனர்களென்று துக்கித்து, தன் நாயகரான காசிப முனிவரைச் சேவித்து, 'தேவர்களை ஜயிக்கிறதற்கு அதிக பலசாலியாக ஒரு புத்திரனை அனுக்கிரகம் செய்ய வேண்டும்!' என்று கேட்க, அவர், 'அப்படியே கொடுத்தோம். ஆனல், நீ அந்தக் கர்ப்பத்துடனே பூலோகத்தில் ஆயிரம் வருஷகாலம் தவம் செய்,' என்று கட்டளையிட்டார். அப்படியே திதி என்பவள் இந்தச் சோலையில் வந்து தவம் செய்துகொண்டிருந்தாள். அதைத் தேவேந்திரன் அறிந்து, தன் சிறிய தாயான திதியினிடம் வந்து, 'அம்மா, உனக்குக் கைங்கரியம் செய்துகொண்டிருக்கிறேன்,' என்று சொல்லியிருந்தான்; ஒரு நாள் நித்திரைச் சமயம் பார்த்து, அணுரூபமாய் அவள் வயிற்றில் புகுந்து, அங்கே வளருகிற கருவைத் தன் கை வச்சிராயுதத்தினலே ஏழு துண்டமாக்கி, அந்தக் கருக்களுக்கு ***மருத்துக்கள்*** என்று பேருமிட்டுப் போய்விட்டான். இப்படி நடந்த ஸ்தலம் இது. இதற்கருகிலுள்ள இடம் சந்திரசேகரரான சிவபிரானுக்குப் பிறந்து வாயுவும் கங்கையும் பொறுக்க மாட்டாத பலமுடையவராய்ச் ***சுப்பிரமணியர்*** வளர்ந்த சரவணப் பொய்கை,'' என்று விசுவாமித்திரர் சொன்னர்.

அது கேட்டு, ஸ்ரீராமர் மிக மகிழ்ந்தார். அப்போது சூரியன் உதயமானன். உடனே மும்மூர்த்திகளுக்குச்

சமானமான அந்த மூவரும் எழுந்திருந்து நடந்தனர்; அப்படி நடக்கும்போது காவிரி நதிக்குச் சமானமான கங்கா நதியைக் கண்டனர்.

### கங்கையின் வரலாறு

அப்போது ஸ்ரீராமர், "இந்த நதியினுடைய வரலாறும் மகிமையும் தெரியச் சொல்ல வேண்டும்," என்று கேட்க, விசுவாமித்திரர் சொல்லுகிறார்: "குழந்தாய், உம்முடைய வமிசத்தில் பிறந்தவனாகிய *சகரன்* என்கிற மன்னன் இந்த அயோத்தியிலிருந்து இராச்சிய பரிபாலனம் செய்தான். அவனுக்கு *விதர்ப்பை, சுமதி* என்னும் இரண்டு மனைவிய ருண்டு. விதர்ப்பை என்பவளுக்குப் ***போசணன்*** என்னும் ஒரு குமாரன் பிறந்தான். அவனுக்கு *அஞ்சுமான்* என்னும் ஒரு குமாரன் பிறந்தான். பட்சி ராசனுக்கு இளையவளாகிய சுமதி என்பவளுக்கு அறுபதினாயிரம் பிள்ளைகள் பிறந்தார் கள். அந்தச் சகர மகாராஜன் பிள்ளைகளுடைய சாமர்த்தி யங்களைக் கண்டு சந்தோஷித்து, அஸ்வமேத யாகம் செய்ய வேண்டுமென்று ஆரம்பித்து, ஒரு குதிரையைச் சிங்காரித்து, சாஸ்திரப்படி பூ சஞ்சாரத்துக்கு விட்டு, அதன் பின்னே அஞ்சுமான் என்னும் பேரப்பிள்ளையோடு ஒரு சேனையைக் கூட்டி அனுப்பினான். அந்தச் செய்தி கேட்ட தேவேந்திரன், காமரூபியாய் வந்து அந்தக் குதிரையைப் பிடித்து, பாதாள லோகத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த *கபிலமாமுனி* வருக் குப் பின்னே கட்டி வைத்துப் போனான். அஞ்சுமான் குதிரை யைக் காணாமல் பூமியெங்குந்தேடித் திகைத்து, திரும்பி வந்து, பாட்டனாகிய சகர ராஜனிடம் சொன்னான். அது கேட்டுச் சகரன் தன் பிள்ளைகளிடம் சொன்னான்.

"அந்தப் பிள்ளைகள் அறுபதினாயிரம் பேரும் கோபாக் கினியோடு பூமியெல்லாம் போய்த் தேடிக் காணாமல், பூமியை நூறு யோசனை அகலமும் ஆழமுமாகத் தோண்டிக் கொண்டே போய், பாதாள லோகத்தில் தவம் செய்கிற

கபில முனிவரின் பின்னே குதிரையைக் கண்டு, வெகு கோபத்துடனே அக்கினி போல அவரைச் சீறி வைது அடித்து உபத்திரவம் செய்தார்கள். கபிலர் மிகுந்த கோபத்துடன் பார்க்கவே, சிவபிரானுடைய நகைப்பினுலே திரிபுராதிகள் எப்படிச் சாம்பராஞர்களோ, அப்படி அறுபதினுயிரம் பேரும் சாம்பராய்ப் போஞர்கள்.

"அந்தச் செய்தியைத் தூதர் சொல்லக் கேட்ட சகரன், பேரனுகிய அஞ்சுமானை அழைத்து, 'குழந்தாய், அவர்கள் இறந்துபோஞர்களே! யாகத்தையும் இழந்துவிடுகிறதா?" என்று சொல்லினன். உடனே அஞ்சுமான் பாதாள லோகத்தை அடைந்து, தன் தந்தைமார் இறந்து சாம்பராய்ப் போனதைக் கண்டு திடுக்கிட்டு, கபில முனிவர் பாதாரவிந்தத்தில் சேவித்து நின்ருன். அவர் அவனிடத்தில் கிருபையுள்ளவராகி, சகரபுத்திரர்கள் மடிந்ததன் காரணத்தைச் சொல்லிக் குதிரையையும் கொடுத்துக் கொண்டு போகச் சொன்ஞர்.

"அஞ்சுமான் குதிரையைக் கொண்டு வந்து பாட்டன் முன்னே விட்டுச் சேவித்தான். சகரன் யாகத்தை முடித்து, அஞ்சுமானுக்கு இராச்சிய பட்டாபிஷேகம் செய்து வைத்து, தேவலோகஞ்சேர்ந்தான். சகரரால் தோண்டப்பட்டபடியால் சாகரமென்பது கடலுக்கு ஒரு பேராயிற்று.

"அஞ்சுமான் இராச்சியபாரம் செய்துகொண்டிருந்தான். அவன் வமிசத்தில் **பகீரதன்** என்கிறவன் பிறந்தான். அவன் மனு நெறியின்படி இராச்சியபாரம் செய்துகொண்டிருக்கிற காலத்தில், ஒரு நாள் குல குருவாகிய வசிஷ்டரைச் சேவித்துப் பூர்வ கதைகளைக் கேட்டுக்கொண்டு வருகிற போது சகரர்கள் சமாசாரங் கேட்டு, 'சுவாமி, என் மூதாதையர்களான சகரர்கள் கபில முனிவர் கோபாக்கினியினுலே மடிந்து போஞர்களே! அவர்களுக்கு நல்ல கதி கிடைக்க அடியேன் என்ன உபாயம் செய்யலாம்? ஓர் உபாயஞ் சொல்ல வேண்டும்,' என்று கேட்க, வசிஷ்டர் பகீரதனை

நோக்கி, 'நீ பிரமாவைக் கருதி நெடுங்காலம் தவம் செய்தால், அவர் அருளால் அவர்களுக்கு நல்ல கதியுண்டாகும்,' என்று சொல்லினர். அப்போதே பகீரதன் தன் இராச்சியத்தைச் சுமந்திரர் வசம் விட்டு, இமயகிரிச் சாரலிலே போய், பிரமாவை நோக்கிப் பதினுயிரம் வருஷம் தவம் செய்தான். அப்போது பிரமா பிரசன்னமாகி, 'உன் தவத்துக்கு மகிழ்ந்தோம்! உன்னுடைய மூதாதையர் கபில மகரிஷியினுடைய கோபாக்கினியினுலே சாம்பராய்ப் போனவர்களானபடியால், அந்தச் சரீரங்களினுடைய எலும்புகளின் மேலும் சாம்பல்களின் மேலும் ஆகாயகங்கை வந்து விழுமானுல், அவர்கள் நற்கதி பெறுவார்கள். அந்த ஆகாயகங்கை பூமிக்கு வருகிறபோது மிக்க வேகத்துடன் வரும். அந்த வேகத்தைச் சகிக்கிறதற்குத் திரிநேத்திரரான சிவபிரானுலே ஆகுமல்லாமல், மற்றெருருவராலும் ஆகாது. ஆகையால், பார்வதி சமேதரான சிவபிரானை நோக்கித் தவம் செய்,' என்று சொல்லிப் போனுர்.

"பகீரதன் அப்படியே சிவபிரானை நோக்கிப் பதினுயிரம் வருஷம் தவம் செய்தான். அப்போது சிவபிரான் பிரசன்னமாகி, 'உன் மனக்கருத்துத் தெரிந்தது. உன் மனத்தின்படி நடப்பிக்கிறேம்,' என்று சொல்லிப் போனுர். பின்பு பகீரதன் ஆகாய கங்கையை நோக்கி ஐயாயிரம் வருஷம் தவஞ்செய்தான். அப்போது கங்கை ஒரு பெண்ணுகி வந்து, பகீரதனைப் பார்த்து, 'பகீரதா, கங்கை வந்தால், அவளுடைய வேகத்தைப் பொறுக்கத் தக்கவர் யாரிருக்கிறுர்? உன்னிடம் சிவபிரான் விளையாட்டுக்குச் சொல்லிப் போனுர். இதை இன்னம் நன்றுய் அறிந்து பார்,' என்று சொல்லிப்போனுள்.

"அப்பால் பகீரதன் ஜடாதரரான சிவபிரானை நோக்கி மீண்டும் இரண்டாயிரத்தைந்நூறு வருஷம் தவம் செய்தான். அப்போது அந்த ருத்திரர் நேரில் வந்து, 'மீண்டும் நீ ஏன் தவம் செய்கிறுய்?' என்று கேட்டார். பகீரதன், 'சுவாமி, கங்கை இப்படிச் சொன்னுள்,' என்று நடந்ததைச் சொன்

னுன். சிவபிரான், 'நீ பயப்பட வேண்டா! அந்தக் கங்கை எவ்வளவு வேகமாய் வந்தாலும், ஒரு துளிகூடப் புறம் போகாமல் நான் காக்கிறேன்,' என்று சொல்லிப் போனுர். பகீரதன் மீண்டும் கங்கையை நோக்கி இரண்டாயிரத்தைந் நூறு வருஷம் தவம் செய்தான்; இப்படி ஏககாலத்தில் முப்பதினுயிரம் வருஷம் ஜலம், சருகு, வாயு, சூரியகிரணம் இவைகளேயே ஆகாரம் செய்துகொண்டு தவம் செய்தான். பிரமலோகமும் இந்திராதியருடைய லோகமும் பயந்து நடு நடுங்க இரைச்சலிட்டுக்கொண்டு பிரவாகமாய் ஆகாய கங்கை வந்தது. அப்போது பார்வதி சமேதரான சிவபிரான் தமது ஒரு ஜடையில் புல்லின் நுனியில் தங்கும் பனித்துளி போல அதை அடக்கினுர். இப்படி ஒரு ஜடையில் அடங்கின கங்கையைப் பகீரதன் கண்டு திகைத்து, சிவபிரான் முன்னே நின்ருன். சிவபிரான் அவனைப் பார்த்து, 'நீ பயப்பட வேண்டா! கங்கை என் ஜடையில் இருக்கிருள். இதோ விடு கிறேன்,' என்று கொஞ்சம் விட்டார். அந்தக் கங்கை பூமி யிலே பிரவாகமாகி வரும்போது அதன் முன்னே பகீரதன் நடந்தான். அப்படி நடக்கிற போது, கங்கை ஜாநவமகரிஷி யாகம் செய்துகொண்டிருக்கிற யாகசாலையின்மேல் விழுகிற தைக் கண்டு, அந்த ரிஷி கோபித்து, வருகிற கங்கையை உள்ளங்கையினுல் அடக்கிச் சாப்பிட்டார். அது கண்டு பகீரதன் அவரைச் சேவித்து, முன்பு நடந்த சங்கதிகளெல் லாஞ் சொன்னுன். அது கேட்டு ஜாநவமகரிஷி கிருபை செய்து, அந்தக் கங்கையைக் காது வழியாக விட்டார். அப் போது கங்கை வேகத்துடனே போய்ச் சகரர்கள் மடிந்த எலும்பின் தூள்களின்மேல் பாய்ந்தது. அதனுல் நெடுங் காலமாய் நரகத்தில் மூழ்கியிருந்த சகரர்களும் நற்கதி அடைந்தார்கள். தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். பின்பு பேரிகை முதலான வாத்தியங்கள் முழங்கப் பகீரதன் அயோத்தி மாநகரம் வந்து சேர்ந்தான்.

"ஸ்ரீ ராமா, அண்டகோளத்துக்கு அப்பாலும் அளந்த

ஸ்ரீமந்நாராயணருடைய பாதாரவிந்தத்தில் பிறந்து, பிரம தேவர் செய்த பூசைத் தீர்த்தமாய்ச் சிவபிரான் சிரசில் கொள்ள, பகீரதன் தவத்தினுல் பூலோகத்திற்கு வந்தது கங்கை. பகீரதன் கொண்டு வந்தபடியால் '*பாகீரதி*' என்றும், ஜானவ மகரிஷி சாப்பிட்டுக் காது வழியாய் விட்டபடியால் '*ஜாநவி*' என்றும் கங்கைக்குப் பெயர்கள் வழங்கின. இப்படிப்பட்ட மகத்துவம் பெற்ற கங்கா நதியாகும் இது," என்று விசுவாமித்திரர் சொல்ல, அது கேட்டு இராமர் அதிக சந்தோஷ சித்தரானுர். அவர்கள் அந்நதியை விட்டு அப்பால் நடந்தார்கள். அவ்விடத்தில் **விசாலைத்** தேசத்து ராஜன் வந்து கண்டு, அவர்களுக்குப் பல உபசாரம் செய்தான். அவர்கள் அவனுடன் இனிய வார்த்தைகள் பேசியிருந்து, அவ்விடம் விட்டு அப்பால் நடந்தார்கள்.

### *அகலிகை வரலாறு*

வழியில் உள்ள கழனிகளில் இருக்கும் தாமரைப்புஷ்பத்தில் நித்திரை செய்து எழுந்திருந்த அன்னங்கள் கழனிகளில் களை பறிக்கிற பள்ளப் பெண்களுடைய நீண்ட கண்ணிழல்களை நீருள் கண்டு, கயல் மீனென்று எண்ணி, மூக்கினுல் குத்திப் பார்த்து, வெட்கிப்போயின. ஏரி மதகுகளின் முழக்கங்கள் மத்தளமாகவும், அசோக மலர்கள் விளக்குகளாகவும், வண்டுகளின் நாதம் சுதியாகவும் கொண்டு, மயில்கள் நடனஞ் செய்தன. தாமரைத் தடாகங்களிலே பெண்கள் இறங்கித் தங்கள் கைவளை சத்திக்க மூழ்குவது, திருப்பாற்கடலில் இலட்சுமி இப்போதுதான் பிறந்தெழுந்திருக்கிறது போலக் காட்சியளித்தது. இன்னம் பலபல அதிசயக் காட்சிகளை உடைய மிதிலாபுரிப் பட்டணத்தின் சமீபத்தில் அவர்கள் வந்து சேர்ந்தார்கள்.

அவ்விடத்தில் ஒரு ரிஷி பத்தினி கருங்கல்லாய் வழியிலே கிடந்தாள். அந்தக் கல்லின்மேல் ஸ்ரீராமருடைய பாதாரவிந்தத்திலிருந்து எழும்பின தூள்கள் பட்டன. இப்

படிப்பட்ட மாத்திரத்தில் அந்தக் கல்லுருவம் மாறிப் பழைய படி ரிஷி பத்தினி நின்ருள். அது கண்டு விசுவாமித்திர மக ரிஷி ஸ்ரீராமரைப் பார்த்து, "ஆகாயத்திலேயிருந்த கங்கை யைப் பூலோகத்திற்குக் கொண்டுவந்த மகானுபாவனுடைய வமிசத்தில் பிறந்த புருஷோத்தமா, மின்னல் போல ஒதுங்கி நிற்கின்ற இந்தப் பெண், தேவேந்திரனுக்கு ஆயிரங்கண் களை உண்டாக்கின **கௌதம** மகரிஷியினுடைய பத்தினி. இவள் பெயர் **அகலிகை**," என்று சொன்னுர். அது கேட்ட ஸ்ரீராமர், வியப்புற்று, "சுவாமி, இந்த அம்மாளுக்குச் சாபம் வந்த வரலாறு யாது?" என்று கேட்க, விசுவாமித்திரர் சொல்லுகிருர் :

"ஸ்ரீராமா, ஒருநாள்தேவேந்திரன் இந்த அகலிகையைக் கண்டு காம விகாரங்கொண்டு, மன்மதபாண உபத்திரவத் தினுல் அடியுண்டு, கௌதமரில்லாத வேளை பார்த்து, அவ ரைப்போல உருவங் கொண்டு வந்து இவளைச் சேர்ந்திருந் தான். அப்போது கௌதம மகரிஷி வந்து பார்த்து, அதிக கோபங்கொண்டார். அப்போது தேவேந்திரன் பூனை ரூப மெடுத்து அப்பாலோடிப் போக, அந்த மகரிஷி, உன் பாணத்துக்குச் சமானமான தம் வாக்கினுலே, 'தேவேந்திரா, ஆயிரம் ஸ்திரீகளுக்குரிய குறிகள் உன் சரீரத்தில் உண்டா கக் கடவன!' என்று சபித்தார். உடனே, அவனுடைய சரீரமெல்லாம் அக்குறிகள் நிறைந்தன. அந்தக் குறிக ளோடு மிக்க நாணத்துடனே தேவேந்திரன் போன பின், கௌதமர் அகலிகையைப் பார்த்து, 'வேசிக்குச் சமான மான நீயும் கல்லாகக் கடவாய்!' என்று சபித் தார். அப்போது அவள் அவரைச் சேவித்து, 'சுவாமி, அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்து இரட்சிக்க வேண்டும்,' என்று கேட்டாள். அதற்கு மகரிஷி கிருபை செய்து, 'தசரதராமன் பாதாரவிந்தத்தின் தூள் உன்மேல் படுமாகில், இந்தச் சாபம் விமோசனமாகும்,' என்று சொன் னுர். பின்பு விகார ரூபத்தோடிருக்கிற தேவேந்திரனைக்

கண்ட பிரமன் முதலிய தேவர்கள், கௌதமரிடம் வந்து வேண்டிக்கொள்ள, அவர் கோபந்தீர்ந்து, அவை அவனுக்கு ஆயிரங் கண்களாயிருக்கும்படி அனுக்கிரகம் செய்தார். பின்பு அவர்கள் தங்கள் இடத்திற்போய்ச் சேர்ந்தார்கள். இவளும் கல்லாய்ச் சமைந்தாள். இது முன்பு நடந்தது. ஸ்ரீராமா, இனி இந்த உலகத்திற்கு யாதொரு விபத்துமிராது. அங்கு அந்தத் தாடகையினுல் உனது கரத்தினுடைய மகிமையையும், இங்கு அகலிகையினுல் உனது காலினுடைய மகிமையையுங் கண்டேன் !'' என்ருர்.

இப்படிக் குற்றமில்லாத உதவி செய்த திருவடியையுடைய ஸ்ரீராமர் விசுவாமித்திரர் சொன்ன யாவுங் கேட்டு, அகலிகையை நோக்கி, "அம்மா, அந்த முனீஸ்வரருடைய அனுக்கிரகமிருக்கும்போது உன்னை யாதொரு துன்பமும் அணுகாது,'' என்று அவள் திருவடியில் வணங்க, அவளும் போயினள். அவர்களும் அந்தக் கௌதமருடைய ஆச்சிரமத்துக்குப் போக, அவர் எதிர் வந்து கண்டு அழைத்துக்கொண்டு போய், செய்ய வேண்டிய கடன்முறை யாவும் செய்தார். அவரை விசுவாமித்திர முனிவர் நோக்கி, "இந்த நீலமேக சொரூபனுடைய திருவடிகளின் தூள் படுவதற்கு முன்னமே இவள் பழைய சொரூபங்கொண்டு நின்ருள். ஆதலால், நீர் இவளை அழைத்துக்கொள்ளும்,'' என்று சொல்ல, பிரமனுக்கு நிகராகிய அந்தக் கௌதமரும் அவளை அங்கீகரித்துக்கொண்டார். ஸ்ரீராமரும் அவரைச் சேவித்தனர். அவரும் இவர்களுக்கு ஆசிகள் கூற, அகலிகையை அவர் கையில் ஒப்புவித்து, விசுவாமித்திர முனிவருடன் இராம லட்சுமணர்கள் மிதிலையை நோக்கி நடந்தார்கள்.

## 10. மிதிலைக் காட்சிப் படலம்

அந்த மிதிலை நகரமானது ஸ்ரீராமர் வருகிறதைப் பார்த்து, "சுவாமி, தாமரைக் கமலத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ மகாலட்சுமி நான் செய்த தவத்தினுல் என்னிடத்தில் பிறந்து வளர்ந்திருக்கிருள். நீர் கலியாணம் செய்துகொள்ளு கிறதற்குச் சீக்கிரமாய் வாரும்! வாரும்!" என்று தனது கைகளைக் காட்டி அழைக்கிறதுபோலக் கொடிச் சீலைகள் அசைந்துகொண்டு, சூரியன் மறைய ஆகாயம் பால் சமுத்திரம்போலத் தோன்றும்படி மேகத்தில் படுந்தோறும் நனைய வும், ஸ்திரீகளினுடைய அளகபாரத்திற்கு ஊட்டும் அகிற் புகைகளால் உலரவும் இடமாயிருக்கின்ற நகரத்தில் சீதை வாசமாயிருக்கிறபடியால், ஸ்ரீ மகாலட்சுமி வாசஞ் செய்கிற பொற்ருமரைக் கமலம் போலவும் தோன்றுகின்ற அந்த மிதிலாபுரிப் பட்டணத்துள் ஸ்ரீராம லட்சுமணரும் விசுவாமித்திரரும் பிரவேசித்தார்கள்.

அப்பட்டணத்திலுள்ள ஸ்திரீ புருஷர்கள் சம்பிரம மாய் இருக்கிற போது ஒருவரோடொருவர் ஊடல் நேரிட்டு, அதனுல் அந்த ஸ்திரீகள் அணிந்திருந்த ஆபரணங்கள் வீதி களில் வீசப்பட்டுப் பிரகாசித்துக்கொண்டிருந்தன. ராஜ வீதி களில் பந்தி பந்தியாய்ப் போகிற யானைகளினுடைய மதசலம் ஓர் ஆருகவும், குதிரைகளினுடைய வாயிலிருந்து ஒழுகா நின்ற நுரைகளால் அந்த ஆறு அழிந்து சேருகவும், தேர்க் கூட்டங்கள் மேலும் மேலும் ஓடுகிறதனுல் அந்தச் சேறு தூளாகவும் இப்படி வேறு வேறு விநோதமாய் இருந் தன. அந்நகரத்து மாதர்கள் இராப்போசனம் புசித்த பின்பு கலவிப்போரால் மெலிந்திருப்பதைப் போல, அவர்க ளுடைய ஊடல் முதிர்ந்து அளகபாரத்தில் சூடியெறிந்த புஷ் பத்தில் வண்டோடு தேனும் பொருந்தியிருந்தன. அந்தப் பட்டணத்திலுள்ளவர்கள் யானையோடு யானையைச் சண் டைக்கு விட்டு வேடிக்கை பார்க்கிறதும், ஸ்திரீகள் தடாகங்

களில் இறங்கி விளையாடுகிறதும், பந்துகள் வேசிகள் மனத்தைப் போலக் கைகளில் வரும்போது சிவந்தும் கண்ணால் பார்க்கிற போது கறுத்தும், இப்படி வேறு வேறு விதமாய்க் காணும்படி விளையாடுகிறதுமாய் இருந்தார்கள்.

இவ்வித அலங்காரத்தோடிருக்கிற மிதிலாபுரிப் பட்டணத்தின் மத்தியில் ஜனக மகாராசனுடைய அரண்மனைக்குச் சமீபத்தில் நடைபெற்ற பலவித வேடிக்கைகளைப் பார்த்துக் கொண்டு முனிவரும் ஸ்ரீராமலக்குமணரும் போனார்கள். அப்படி விசுவாமித்திரர் முன்னும், ஸ்ரீராமர் இடையிலும், இலட்சுமணர் பின்னுமாகப் பார்த்துக்கொண்டே நடக்கிற போது, அவ்விடத்தில் கன்னிமாடத்தில் மின்னல் கூட்டத்தின் நடுவே ஒரு மின்னல் பிரகாசித்துக்கொண்டிருக்கிறதுபோல, பல பெண்கள் மத்தியில் சீதாலட்சுமி பிரகாசித்துக்கொண்டிருந்தாள். அந்த இலட்சுமியினுடைய சௌந்தரிய அலங்காரத்தை அடியேன் எங்ஙனம் புகழப் போகிறேன்! பிரமன் முதலானவரும் ஒரு ஸ்திரீக்கு உவமானம் சொல்ல வேண்டுமென்றால், ஸ்ரீமகா லட்சுமிக்குச் சமானமெனச் சொல்வதேயல்லாமல் வேறில்லை. அந்த மகாலட்சுமியே வந்து அவதரித்திருக்க, அவளுக்கு உவமானம் யாரைத் தேடிச் சொல்ல மாட்டுவேன்? பார்வதிக்குச் சமானமான பெண்கள் நமஸ்காரஞ் செய்கிறதற்கு யோக்கியதையுடைய அந்தச் சீதையினழகென்கிற சாகரம் வரம்பற்றதாய் இருந்தது. பூலோகத்தார், 'அவ்வழகைப் பார்க்கிறதற்கு இமையாத கண்கள் நமக்குக் கிடையாமற் போயினவே!' என்பார்கள். தேவர்கள், 'இரண்டு கண்கள் நமக்குப் போதா,' என்பார்கள். பால் சமுத்திரத்துக்கு ஆதாரமான அமிர்தம் போல, பிரம சிருஷ்டிக்கு ஆதாரமான ஸ்திரீ சீதையேயல்லாமல் வேறில்லை. இப்பூமியில் சீதை பிறந்து அவள் திருமேனியைக் கண்ட பின்பு தேவலோகத்து மேனகை முதலான ஸ்திரீகள் சூரியப் பிரகாசத்துக்கு முன் சந்திரப் பிரகாசம் போல அழகற்றவர்கள் ஆனார்கள். இவ்

வளவுசுந்தரத்தோடுங்கூடிய சீதாலட்சுமியைப் பலபெண்கள் சூழ்ந்து நமஸ்காரஞ் செய்து வர, அவளது விசால நேத்திரத் தோடு விளங்கிய திருமுக மண்டலத்தைக் கண்டு மரங்களும் கல்லும் புல்லும் மற்றவைகளும் உருகும். அந்தச் சீதை யைச் சூழ்ந்திருக்கிற பெண்களும் அவ்வழகைப் பார்த்து மயங்கித் தியங்குவார்கள். ஸ்ரீராமர் அவளைப் பார்த்தார். சீதையும் ஸ்ரீராமரைப் பார்த்தாள். சீதையினுடைய பார்வை யென்கிற வேலானது, ஸ்ரீராமருடைய தோளில் உருவிற்று. ஸ்ரீராமருடைய பார்வை சீதாலட்சுமியினுடைய தனத்திலுரு விப் பாய்ந்தது. பார்வை என்கிற அவாவினுலே இருவரும் ஒருவரையொருவர் இருதயகமலங்களில் தழுவிக்கொண்ட னர். இருவர் கண்களும் ஒன்றையொன்று கவ்விக்கொண்டு பிரிகிறதற்குக் கூடாமல், நெடுநேரம் ஒரே நிலையைப் பெற் றிருந்தன; இரண்டு சரீரமும் ஒரே ஜீவனைப் பெற்று நின்றன. ஏனெனில், திருப்பாற்கடலில் கூடியிருந்தவர்கள் பிரிந்து, இப்போது கூடினுல், அதை இன்னபடி என்று விளக்கக் கூடுமா? கூடாது. ஆதலால், சீதை மயங்கிச் சித்திரப் பிரதிமை போல ஸ்தம்பித்து நின்ருள். ஸ்ரீராமரும் மயங்கிச் சீதையினுடைய மனமும் நிறையும் தம்மைத் தொடர்ந்து வர, விசுவாமித்திர முனிவரின் பின் நடந்தார்.

அப்படி நடக்கிற போது சீதையின் மனமென்கிற மத யானை நிறையென்கிற அங்குசத்திற்கு அடங்காமல் மீறி, அவர் பின்னே சென்றது. கண் வழியாக வந்த ஆசையாகிய பாலுக்குப் பிரை குத்தினது போல, சரீரமெல்லாம் விரகாக் கினியுண்டாகி, பூசியிருந்த சந்தன கதம்ப கஸ்தூரிகள் கரிந்து உதிர்ந்தன. அது கண்டு தாதிகள் முதலிய மற்ற வர்கள் மிகவும் கிலேசப்பட்டு, 'இது என்ன!' என்று பயந்து, திருஷ்டி பரிகாரங்களும் தெய்வப் பிரார்த்தனைகளும் செய் தார்கள்; ஆலவட்டம், விசிறி, வெண்சாமரை முதலியவை களினுலே விசிறினுர்கள். அது அக்கினிக்கு விசிறினது போல மிகவும் வெப்பம் கொடுக்கவே, சீதையானவள் பொற்

பிரதிமை போல உருகினள். அவள், இருள் அவர் சிகை யென்றும், மரகத ரத்தினம் அவர் தோளென்றும், கமலம் அவர் கண்ணென்றும், இந்திர தனுசுடனே பூமியிலிறங்கிய மேகம் அவருடைய நிறமென்றும் சொல்லுவள். அன்றியும், 'என் மனத்துள்ளே புகுந்து என் நிறையையும் பெண் தன் மையையும் உயிரையும் உருக்கி உண்டு போனவர் காமனே வென்ருல், கையில் கருப்பு வில் இல்லை; கண் வழியாய் என் மனத்துள் புகுந்து நலத்தைப் பறித்தவர் கள்ளராக வேண் டும்; சந்திரனைப்போலிருக்கிற முகமும், ஆஜானுபாகுவும், அழகு பொருந்திய தோள்களும், அவர் புன்சிரிப்பும் என் னுயிரை உண்கின்றன; அவர் தேவரோவென்ருல், கண் கள் இமைக்கிறபடியினுல் தேவரல்லர்; கையில் வில்லும் மார்பில் பூணூலும் இருக்கிறபடியால் ராஜகுமாரராக வேண் டும்; என் மனத்தை இப்படிக் கரைத்துக் கன்னிமாடத்தின் மதிலைக் கடந்து போன அந்தப் புருஷரை இன்னமொருதரம் கண்ணினுல் பார்த்து இப்படிப் பலவாறு மகிழ இயலுமா ?'' என்று நினைந்து நினைந்து சொல்லிச் சொல்லி உருகிக்கொண் டிருக்கிற சமயத்தில், சீதையினுடைய விரகாக்கினி தன்னை யும் சுடுமென நினைத்துத் தாளமாட்டாமல் நீண்ட கதிர்க ளாகிய தன் கைகளை ஒடுக்கிக்கொண்டு சூரியனேடி மேற் சமுத்திரத்தில் மூழ்கினுன். பின்பு தென்றற்காற்றும் இருளும் தோன்றியபடியால், அக்கினியைச் சொரிகின்ற அந்தி மாலை யானது கறுத்த நிறமும் சிவந்த மயிரும் கையிற் பாசக்கயி றுங் கூடிய யமனைப்போலத் தோன்றிற்று. தென்றலானது தடாகங்களென்கிற அக்கினியில் மூழ்கி, வாசனை பொருந்திய புஷ்பத்தில் விஷம் ஊட்டிக்கொண்டு, காமபாணம் பட்ட புண் வழியாய் நுழைந்ததால், அறிவும் அழகுங் குலைந்து சோர்ந்த வள், உயிருண்ணப் பிரகாசிக்கும் அந்தி வானத்தைப் பார்த்து, "இதுதானே கூற்றுவனுடைய வடிவு!'' என்று சொல்லுவள். "கடலோ? மேகமோ? இரத்தினமோ? காயாம்பூவோ? குவளையோ? நீலோற்பலமோ? என்னு

டைய உயிரையுண்பது யாது?'' என்று தளர்ச்சியடைந்தவள், மாலைப் பொழுதைப் பார்த்து, "நீ என்னை ஏன் பகைக்கிறாய்? இப்பழியை நீ அடைதற்கு உன்னோடு எனக்குப் பகையுண்டா? ஆலகால விஷம் உலகெல்லாம் பரவியதோ? அல்லது அந்த மகா புருஷருடைய நீலத்திருமேனியை யாரும் நினைக்க நினைக்க அதுவே இப்படி நிரம்பியதோ? அல்லது கூற்றுவனுடைய நிறத்தை மையுடனே கலந்து குழைத்து ஆகாயத்திலும் பூமியிலும் மெழுகியிருக்கின்றதோ? இவ்வித மகா கொடிய இருளுண்டாயிற்றென்று தரிசனமானவர் மறைந்து போய்விட்டாரோ? இவ்விருளை விலக்குகிறவர் ஒருவரையும் காணேனே! இருளே, என்னைப் பெண்ணென்றெண்ணி மனம் இரங்காயோ? இருட்டிலே ஒளித்துக் கொண்டு அம்பை எய்யும் மன்மதனார் உனக்கு இந்த யுத்தி சொன்னாரோ? அல்லது என்னுடைய பொல்லாத காலத்தினாலே அன்றில் பட்சியே, நீயுங் கூவிக் கொல்லப்புறப்பட்டாயோ?'' என்று பலவாறு சீதை வருத்தப்பட்டுக்கொண்டு இருக்கிறபோது, தோழிகள் இரத்தினமயமாகிய திருவிளக்கினால் இருட்டைப் பகலாகச் செய்தார்கள். முன்பு பாற்கடலைக் கடைந்தபோது அமுத கலசம் உதித்ததுபோலச் சந்திரோதயமாயிற்று. தாமரைப் புஷ்பங்கள் குவியவும், அல்லிப் புஷ்பங்கள் மலரவும், இருள் நீங்கவும், தனது கிரணங்களோடு புறப்பட்ட சந்திரோதயம், வள்ளலாகிய வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப முதலியாருடைய கீர்த்தியைப்போல உலகமெல்லாம் வியாபித்தது. "ஸ்ரீமந்நாராயணருடைய உந்திக் கமலத்தில் பிறந்த இந்த அண்டம் பழையதாய்ப் போயிற்று. ஆகையால், இதைப் புதுக்குவேன்,'' என்று புதுக்குகிறவனைப்போலச் சந்திரன் தன்னுடைய கிரணங்களை எங்கும் பரப்பினன். சீதை சந்திரனைப் பார்த்து, "உலகங்களை விழுங்கிக்கொண்டு வந்த கருநெருப்புக்கு நடுவே புறப்பட்ட வெண்ணெருப்பே, நீயும் என்னைச் சுட வந்தாயோ? ஆ! சந்திரா, நீ பொல்லாதவனல்லவே! அமிர்தத்துடனும் ஒரு பெண்ணுடனும் பிறந்த

நீ, என்னை இப்படிச் சுடலாமா ?'' என்று கூறி அந்தச் சந்திர கிரணங்கள் தனங்கள்மேல் படுவதால் நெருப்பிலே விழுந்த அன்னப் பட்சியைப் போலப் பஞ்சணைமேல் பதைத்துப் புழுங்குவள். புஷ்ப மெத்தைகள் சரீர வெப்பத்தால் கருகிக் கருகிப்போக, அவைகளைத் தாதிகள் அன்போடு அடிக்கடி மாற்றிக்கொண்டேயிருப்பார்கள். இப்படிச் சீதாலட்சுமி ஸ்ரீராமருடைய திருவழகை நினைத்து நினைத்து விரகதாபப் பட்டுக்கொண்டிருந்தாள்.

இப்படியிருக்கிற சீதாலட்சுமியின் திருவழகைக் கண்டு மிகுந்த ஆசைகொண்ட ஸ்ரீராமர் விசுவாமித்திர முனிவரின் பின்னே தம்பியாருடனே நடந்து போய்ச் ஜனகராசரைக் காண, அவர் மிகுந்த சந்தோஷத்துடனே உபசாரஞ்செய்து போக பூமிக்குச் சமானமான ஒரு விடுதி மாளிகையைத் திட்டஞ்செய்ய, மூவரும் அதிலிருந்தனர்.

அப்போது ஸ்ரீராமருடைய பாதாரவிந்த மகிமையினாலே சாபவிமோசனமான அகலிகையினுடைய புத்திரராகிய ***சதானந்தர்*** அவ்விடத்திற்கு வந்தார். ஸ்ரீராமர் அந்த மகானுபாவரை வணங்கினர். அந்த ரிஷி மிகுந்த அன்புடனே ஆசீர்வாதம் செய்து, விசுவாமித்திரரைப் பார்த்து, "ஐயா, நீர் இவ்விடத்திற்கு வருகிறதற்கு இந்தப் பூமி என்ன தவம் செய்தது !'' என்று பாராட்ட, விசுவாமித்திரர், "சதானந்தரே, இந்த ராஜகுமாரன் தாடகையையும், என்னுடைய வேள்வியையும், உம் தாயினுடைய சாபத்தையும் முடித்து, என் மனக்கிலேசத்தையும் ஒழித்தவன்,'' என்று சொல்லினர். அது கேட்ட சதானந்தர், "ஐயா, உம்முடைய கிருபை அவரிடத்தில் பரிபூரணமாயிருக்க, அவருக்கு எந்தக் காரியம் அருமையாயிருக்கப்போகிறது !'' என்று சொல்லி, ஸ்ரீராமருடைய திருமுகத்தைப் பார்த்துச் சொல்லுகிறார் :

### விசுவாமித்திரர் வரலாறு

"ராஜ குமாரரே, கேளும்: இந்த மகானுபாவரான விசுவாமித்திரர் நெடுங்காலம் இராச்சியத்தை ஆண்டுகொண்டிருந்தார். அப்படியிருக்கிற காலத்தில் ஒரு நாள் வேட்டைக்குப் புறப்பட்டுக் கொடிய ஆரணியத்திற்குப் போனுர். அவ்விடத்தில் வசிஷ்ட மாமுனிவர் இவரைக் கண்டு ராஜா வந்தாரேயென்று சந்தோஷித்து, 'உமக்கு விருந்து செய்விக்கின்றேன்; போசனம் செய்து போம்,' என்று சொல்லி, காமதேனுவை அழைத்து, 'இந்த ராஜாவுக்கும் கூட வந்திருக்கின்ற சேனைகளுக்கும் திருத்தியாகும்படி அறுசுவைப் பதார்த்தங்களும் திவ்வியான்னமும் சித்தம் செய்,' என ஆக்கியாபித்து, சகலபேருக்கும் போசனம் செய்து வைத்து, புஷ்பம் சந்தனம் தாம்பூலவர்க்கம் முதலியனவும் கொடுப்பித்தார். அது கண்டு விசுவாமித்திரர் ஆச்சரியப்பட்டு, 'ஐயா, முனிவரே, நீர் ஆசனம் விட்டு எழுந்திருக்கவேயில்லை. இப்பசுவைக்கொண்டே எனக்கும் என் சேனு சமுத்திரத்துக்கும் விருந்து செய்து திருத்தி செய்தீர். ஆனுல், இப்படிப்பட்ட பசு அரசர்களிடத்திலிருக்குமாகில், அதிக பிரயோசனமாயிருக்கும். மேலும், ரிஷிகளுடைய பொருள்களெல்லாம் அரசர்களுக்கு உரியவை என்று சாஸ்திரமும் இருக்கிறபடியினுலே, காமதேனு என்னும் இந்தப் பசுவை எனக்குக் கொடும்,' என்று கேட்க, வசிஷ்டர் சில கடிகை பேசாமல் மௌனமாயிருந்து, பின்பு இவரைப் பார்த்து, 'இந்தப்பசு நம் ஆதீனப் பொருளன்று. இது வருமாளுல் அழைத்துக்கொண்டு போம்,' என்று சொல்லினர். இவர் அது கேட்டு, 'அப்படியே செய்கிறேன்,' என்று எழுந்து, சேனு சமுத்திரத்துடனே அந்தப் பசுவை வளைத்துப் பிடித்துக் கயிற்றுற்கட்டினுர். அப்போது காமதேனு அந்தக் கயிற்றைச் சின்னபின்னமாக அறுத்துவிட்டு, வசிஷ்ட முன் வந்து, 'சுவாமி, அரசருக்கு என்னை நீர் கொடுத்

தீரோ ?' என்று கேட்டது. வசிஷ்டர், 'நான் கொடுக்க வில்லை. அரசர் தாமே பிடித்துப் போகின்ருர்,' என்று சொல்ல, பசு மிகுந்த கோபத்தோடு, 'இந்த ராசாவினுடைய சேனைகளை எல்லாம் மடித்துப் போடுகிறேன் !' என்று மயிர் களைச் சிலிர்த்தது. அந்த மயிர்களிலிருந்து பப்பரும், வேடரும், சீனரும் உற்பவித்து, இவர் சேனைகளெல்லாம் மடிய அடித்தார்கள். அப்போது இவருடைய குமாரர்கள் கோபித்து, 'இது பசுவின் தன்மையன்று; இந்த ரிஷியின் வஞ்சனை,' என்றெண்ணிக்கொண்டு, 'இவருடைய சிரசை வெட்டிப் போடுகிருேம்!' என்று ஆயுதபாணிகளாய் வசிஷ் டர் சமீபத்தில் அக்கினி போல வந்தார்கள். அப்போது அவர் கோபத்துடனே அவர்களைப் பார்க்க, அந்தக் குமாரர் களுள் நூறுபேர் மடிந்து போனுர்கள். அது கண்ட இவர், மிக்க கோபத்துடனே இரதமேறி வில்லை வளைத்து வசிஷ்டர் மேல் சரமாரி பொழிந்தார். அவர் அதைக் கண்டு தமது யோகதண்டத்தை எதிர்க்கும்படி ஆக்கியாபித்தார். அதை இவர் அறிந்து சிவபிரானை நோக்கித் துதி செய்தார். அவர் ஒரு அஸ்திரங் கொடுத்தார். அந்த அஸ்திரத்தை வாங்கி வசிஷ் டர்மேல் விட்டார். அது அக்கினிச் சுவாலையாய் வந்தது. வசிஷ்டர் அதைக் கரத்தினுல் பிடித்துச் சாப்பிட்டுவிட்டார். அதிலிருந்த அக்கினிச் சுவாலைகளெல்லாம் மயிர்க்கால் களில் புறப்பட்டுப் பொறிகளாய்விட்டன. அது கண்டு இவர் ஆச்சரியமாகி, சகல சாமர்த்தியங்களும் ரிஷிகளுக்கேயல் லாமல் வேருெருவருக்குமில்லையென்பதை அறிந்து, துணிவு கொண்டு, 'நாமும் தவம் செய்வோம்,' என்று நினைத்துப் புறப்பட்டு, கிழக்குத் திசையில் போய் வசிஷ்டர் செய்த மகிமையை மனத்திலே நினைத்துத் தவம் செய்துகொண் டிருந்தார்.

"இந்தச் செய்தியைத் தேவேந்திரன் கேட்டு, திலோத் தமை என்கிற பெண்ணை இவருடைய தவத்தைப் பின்னம் செய்ய அனுப்பினுன். இவர் அந்தத் திலோத்தமையின்

சொரூபத்தைக் காணவே, மனங்கலங்கி, விரகம் மிகுந்து, அவளைச் சேர்ந்து, உடனே தெளிந்து, 'இது இந்திரனுடைய தந்திரம்,' என்று அறிந்து, திலோத்தமையை, 'நீ பூலோகத்து ஸ்திரீயாகக் கடவாய்!' என்று சபித்து, அவ்விடம் விட்டுத் தெற்குத் திசையிற்போய்ச் சேர்ந்து, பின்னும் அதிகமான தவம் செய்தார்.

"அப்போது, அயோத்தியா புரியிலே *திரிசங்கு* மகாராஜா தன் குருவான வசிஷ்டரை வணங்கி, தான் சரீரத்துடனே சுவர்க்கலோகம் போக அனுக்கிரகம் செய்யவேண்டுமென்று கேட்டான். அதற்கவர், 'சரீரத்துடனே போகக்கூடாது,' என்று சொன்னார். அவன், 'அப்படிச் செய்யஉம்மாலாகாவிட்டால், என் மனத்துக்கு விருப்பமானவர்களைத் தேடி அதற்குத் தக்க உபாயஞ்செய்துகொள்ளுகிறேன்,' என்று சொல்ல, 'குருவை நிந்தித்து நீ வேறே ஒரு குருவைச் சம்பாதித்துக்கொள்ளுகிறேனென்று சொன்னபடியால், நீசனாகக் கடவாய்!' என்று அவர் சபித்தார். உடனே சூரியப்பிரகாசம் போன்றிருந்த திரிசங்கு மகாராஜாவின் முகவழகு நீங்கி, இரத்தினகசிதமான ஆபரணங்களெல்லாம் இரும்பாகி, சரீரங்கறுத்து, சகலரும் பார்த்து இகழ்ச்சி செய்யத்தக்க அழகற்ற ரூபம் அமைந்தது. அவன் அந்த ரூபத்தோடு ஆரணியஞ்சேர்ந்து சஞ்சாரஞ் செய்துகொண்டிருக்கும் போது, அவ்விடத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த இந்தக் கௌசிகரைக் கண்டு, தன் செய்தியெல்லாம் விகசிதமாகச் சொல்லினான். இவர் அது கேட்டு, 'இவ்வளவுதானா!' என்று நகைத்து, 'யாகஞ் செய்து இப்படியே சரீரத்துடன் உம்மைச் சுவர்க்கத்துக்கு அனுப்புகிறேன்!' என்று நிறுத்திக்கொண்டு, அங்குச் சமீபத்தில் இருந்த ரிஷிகளையெல்லாம் அழைப்பித்துக்கொண்டு, வசிஷ்டர் பிள்ளைகளையும் வரச் சொல்லி ஆளையனுப்பினார். அவர்கள், 'ஒரு ராஜன் ஒரு புலையனுக்குச் சுவர்க்கம் கொடுக்கப் போகிறானாம்! அதற்கு நம்மை வரச்சொல்லுகிறது நன்றாயிருக்கிறது!' என்று பரிகா

சஞ் செய்தார்கள். இவர் அதுகேட்டுக்கோபித்து, அவர்களை, 'நீங்கள் கிராதர்களாகக் கடவீர்கள்!' என்று சபித்தார். அந்தப்படியே அவர்கள் வேடுவர்களாய்க் காடுகளிலே திரிந்து கொண்டிருந்தார்கள்.

"பின்பு இவர் யாகத்தை ஆரம்பித்து, நிறைவேற்றி, சாபவிமோசனம் செய்யும்பொருட்டு அவர்களை வரச்சொல்லி ஆளை அனுப்பினர். அப்போதும் அவர்கள் முன் சொன்ன படியே சொல்லி வாராமல் நின்றுவிட்டார்கள். அப்பால் இவர் திரிசங்கு மகாராஜனை அழைத்து, விமானத்தில் ஏற்றித் தேவலோகத்திற்கு அனுப்பினர். தேவர்கள் கோபித்து, 'நீசன் இங்கு வரக்கூடாது!' என்று தள்ளிவிட்டார் கள். பின்பு அந்தத் திரிசங்கு மகாராஜன், 'சுவாமீ, சரணம்! சரணம்!' என்று கூவிக்கொண்டே பூலோகத் திற்கு வரத்திரும்பினன். அது கேட்டு இந்தக் கௌசிகர், 'என் ஆக்கினையை இகழ்ந்த தேவர்களையும் தேவலோகத் தையும் வேறே சிருஷ்டிக்கிறேன்! சந்திர சூரியரைத் தெற்கு வடக்காக வரச்செய்கிறேன்!' என்று கோபித்து, அப் படியே செய்ய ஆரம்பித்தார். தேவேந்திரன் முதலான தேவர்களும் பிரமாவும் சிவபிரானும் இவர் எதிரே வந்து, 'ஐயா, கௌசிகரே, கோபத்தைப் பொறுத்தருளும்! திரிசங்கு வுக்கு நட்சத்திரப்பதவி கொடுக்கிறோம். நீரும் ராஜரிஷியா யிரும்!' என்று சமாதான அனுக்கிரகம் செய்து அவரவர்கள் இடங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இக்கௌசிகரும் மேற்கிலமர்ந்து தவம் செய்துகொண்டிருந்தார்.

### *அம்பரீஷன் செய்த புருஷமேதம்*

"அவ்விடத்தில் *அம்பரீஷ மகாராசன்* புருஷமேத யாகம் செய்ய வேண்டுமென்று யோசனை செய்துகொண்டு, ஒரு பிள்ளையை விலைக்கு வாங்கப் பெருந்திரவியம் எடுத்துக் கொண்டு ஆரணியத்தில் வந்தான்; வந்தவிடத்தில் இருசிக ரிஷியைக் கண்டு, வந்த செய்தியைச் சொல்ல, அவர் கேட்டு,

‘எனக்கு மூன்று பிள்ளைகளிருக்கின்றார்கள். அவர்களுள் மூத்த பிள்ளை எனக்கு வேண்டும்,’ என்று சொன்னார். பெற்றவள் தனக்கு இளைய பிள்ளை வேண்டுமென்று சொன்னாள். அப்போது இடைப்பிள்ளை ராசாவைப் பார்த்து, ‘நீர் என்னைப் பெற்று எடுத்து வளர்த்தவருக்குத் தரித்திரந் தீரத் திரவியத்தைக் கொடும். நான் உம்முடன் வருகிறேன்,’ என்று சொல்லிப் பெற்றோரிடத்தில் செலவு பெற்றுக் கொண்டு, சந்தோஷ சித்தனாய், ராஜனோடு இரதமேறிப் போனான். உச்சிக்காலமான போது அம்பரீஷ மகாராசன் தன் காலக்கடன்களை முடிக்கிறதற்கு இரதம் விட்டிறங்கி, ஒரு தடாகத்துக்குப் போனான். தேரிலிருந்த அந்தப் பிள்ளை அங்கிருந்த இக்கௌசிக மகரிஷியைக் கண்டு, சமீபத்தில் வந்து சேவித்து, நடந்த செய்தியைச் சொல்ல, அதைக் கேட்டு இவர் தம் மைத்துனரும் தமக்கையும் செய்த காரியத்திற்கு மிகவும் வருத்தமுற்றவராகி, ‘நீ பயப்பட வேண்டா. உன் பிராணனை நான் இரட்சிக்கிறேன்,’ என்று சொல்லி, முன்பு வசிஷ்டர் கோபத்தினால் மடியாமல் தப்பி யிருந்த தம் நான்கு பிள்ளைகளையும் அழைத்து, ‘நீங்கள் அரசன் பின்னே போங்கள்,’ என்று சொன்னார். அவர்கள் அவ்வார்த்தையைக் கேளாமல் மறுத்தார்கள். அதன்மேல் இவர் அவர்களைக் கோபித்து, ‘நீங்களும் கிராதர்களாய்ப் போகக்கடவீர்கள்!’ என்று சபித்தார்; அப்பால் தம் மருகனை அழைத்து, இரண்டு மந்திரம் உபதேசஞ் செய்து, ‘நீ இந்த ராசன் பின் போய் யாகசாலையின் யூபஸ்தம்பத்தடியில் இந்த மந்திரத்தை உச்சரித்துக்கொண்டிருப்பாயாகில், உன் பிராணனுக்குச் சேதம் வாராது,’ என்று சொன்னார். அவன் அப்படியே செய்கிறேனென்று சொல்லி நமஸ்காரம் செய்து, அந்த ராசன் பின் போய், யாக சாலையில் யூபஸ்தம்பத்தின் அருகிலிருந்து, அந்த மந்திரத்தைச் செபித்தான். அப்போது பிரமா, விஷ்ணு, உருத்திரன், இந்திரன் முதலிய தேவர்கள் பிரசன்னமாகி, அம்பரீஷ மகாராசனுடைய அபீஷ்ட வரங்க

ளெல்லாம் கொடுத்து, அந்தப் பிள்ளைக்கும் உயிர்ச்சேதம் வாராமல் காத்தார்கள்.

"அப்பால், இந்தக் கௌசிக மகரிஷி வடக்குத் திக்கில் சென்று, ஓரெழுத்து மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, பிராணுயாமம் என்கிற யோகத்தினுல் பிராணவாயுவை இரேசக பூரக கும்பகம் செய்துகொண்டு, காருகபத்தியம், தக்ஷணுக்கினி, ஆகவனீயம் என்கிற மூன்று அக்கினியையும் முடுக்கி, அனேக வருஷ காலம் தவம் செய்தார். அப்போது மூலாக்கினியினுல் கபாலம் வெடித்து, அதனுலுண்டாகிய சுவாலையும் புகையும் எங்கும் பரவி, சூரிய சந்திரர் அஷ்டதிக்குப் பாலகர் முதலிய சராசரங்களினுடைய கண்கள் விழிக்கவொட்டாமல் மூடிக்கொள்ளவே, சூரியனுடைய இரதம் நகராமல் நின்றுவிட்டது. தேவர்களெல்லாம் திக்குமுக்காடி நடுநடுங்கினுர்கள். பின்பு அன்னத்தின் மேல் பிரமாவும், கருடன்மேல் விஷ்ணுவும், ரிஷபத்தின்மேல் சிவனும், மற்றத் தேவர்களும் இக்கௌசிக மகரிஷியின் முன் வந்து, 'உமக்குச் சமானமான ரிஷிகளில்லை,' என்று சொன்னுர்கள். இவரும் எழுந்திருந்து அவர்களைச் சேவித்துக்கொண்டு, 'நம்முடைய வினை போய்விட்டது!' என்று சந்தோஷித்து, ரிஷி துல்லியரானுர்.

"இப்படிப்பட்ட மகானுபாவர் உம்முடன் இருக்கிற போது, உமக்கு எந்தக் காரியம் அருமை?" என்று சதானந்தர் சொல்லினர்.

இவைகளை ஸ்ரீராமர் கேட்டுச் சந்தோஷமாகி, அவரைச் சேவித்துக்கொள்ள, அவரும் அன்புடனே இராமருக்கு ஆசீர்வாதம் செய்து, தாம் இருக்குமிடம் போய்ச் சேர்ந்தார். விசுவாமித்திர முனிவரும் இலட்சுமணரும் தங்களுக்கு யோக்கியமான இடங்களில் சயனித்துக்கொண்டார்கள். ஸ்ரீ ராமர் தனியே இருந்தபடியால், கன்னி மாடத்தில் கண்ட கன்னிகையை நினைத்து நினைத்து, "ஆகாயத்தில் பிரகாசிக்கின்ற மின்னலே ஒரு பெண் ரூபமெடுத்து

வந்ததோ! அவ்வுருவம் என் மனத்தை மயக்கிக் கண்ணெதிரேயும், இருதயத்திலும் நீங்காமலிருக்கின்றதே! என் இருதய கமலத்தில் பொருந்தியபடியால், அவ்வுருவம் இலட்சுமியே ஆகவேண்டும்! எந்த வஸ்துவைப் பார்த்தாலும் அவள் உருவமாய்த் தோன்றுகின்றதே! அவள் கிடையாவிட்டாலும், இளநிலாப் பிரகாசம் போலப் புன்சிரிப்போடு மருவியிருக்கிற அவளது சிவந்த வாயும், பூரண சந்திரனுக்குச் சமமான அவளுடைய திருமுகமும், இன்னமொரு தரம் காணக் கிடைக்குமா! மேகலாபரணத்தோடு கூடிய இடையும், வாளைப்போன்ற இரண்டு கண்களும், பாரித்த இரண்டு தனமும், நல்நகைப்பும்—ஆ! யாவராலும் எண்ணும் படியிருக்கிற யமனுக்கு இத்தனையும் வேண்டுமா? மன்மதனுடைய கருப்பு வில்லிலிருந்து புறப்படுகிற புஷ்ப பாணங்கள் என்னையே இப்படித் துளைத்து வதைக்குமானால், இனித் தைரியமென்பது யாரிடத்திலிருக்கும்? பாற்கடல் போலப் புறப்பட்ட சந்திரன், என் உயிரைத் தொளைக்கின்றானே! உலகத்தில் வெள்ளை விஷமுமுண்டோ! அந்தப் பெண்ணினிடத்தில் வாளைப்போலிருக்கிற இரண்டு கண்களும், வச்சிரக் கிண்ணங்கள்போலிருக்கிற இரண்டு தனங்களும், உயிரை உருக்குகிற சிறு நகையுமே போதாவோ! கூற்றுவனுக்கு இத்தனை கோலமும் வேண்டுமா? ஆ! ஆ! என் மனம் நல்வழியிற் போகுமேயல்லது, தீயவழியில் செல்லமாட்டாதே! அதனால், அப்பெண் கன்னிகையாகவே இருக்கவேண்டும். இதற்குச் சந்தேகமில்லை,'' என்று இப்படிப் பலவாறு சிந்தித்துக்கொண்டிருக்கிற சமயத்தில், இரவென்கிற அரசனுடைய குடை விழுந்தாற்போலச் சந்திரன் மேற்குச் சமுத்திரத்திற் போய் விழுந்தான். சூரியன் ஸ்ரீராமர் வருத்தப்படுகிறாரென்று இருளைக் கடிந்து, தாமரைக் கமலங்கள் மலர, தேவர்களும் ரிஷிகளும் நமஸ்காரஞ் செய்ய, கின்னரர்களிசைபாட, உலகங்களெல்லாம் துதிக்க, சமுத்திர கோஷம் மத்தளம் போல அதிர, ஆகாயமென்கிற சபையிலே சிவன் சடைகளை

விரித்துக்கொண்டு நடனஞ் செய்கிறது போலத் தானும் தன் கிரணங்களை விரித்துக்கொண்டு பிரகாசித்தான்.

கரத்தில் தரித்திருந்த சக்கரத்தை நீக்கிக் கோதண்டத்தைத் தரித்து வந்திருக்கிற மேகசொரூபரான ஸ்ரீ ராமரைச் சூரியன் தன்னுடைய இளங்கிரணமாகிய கரங்களினாலே திருவடிகளைப் பிடித்து நித்திரையிலிருந்து எழுப்ப, ஸ்ரீராமர் ஓர் ஊழிக்காலம் கழிந்தாற்போன்ற அவ்விரவென்கிற சமுத்திரத்தின் கரை கண்டு, நித்திரை செய்து எழுந்திருந்த மத யானையைப்போல எழுந்திருந்து, காலக்கடமைகளை முடித்துக்கொண்டு, விசுவாமித்திரருடனும் தம்பியாருடனும் ஜனக மகாராசாவினுடைய யாகசாலையிற்போய்ச் சேர்ந்தார். ஜனகமகாராசரும் தம்யாகத்தை முடித்து, பேரிகை முதலான மேளவாத்தியங்களார்ப்பரிக்கத் தம்முடைய சபா மண்டபத்தில் வந்து சேர்ந்தார். இராமலட்சுமணர்களோடு விசுவாமித்திர மகரிஷியும் சமீபத்தில் எழுந்தருளியிருந்தார். ஜனக மகாராசர் இராமலட்சுமணர்களுடைய சுந்தரத்தை நேத்திரானந்தமாகப் பார்த்து, விசுவாமித்திரரைச் சேவித்து, "சுவாமி, இந்தப் பிள்ளைகள் யார்? எனக்குத் தெரியச் சொல்ல வேண்டும்," என்று கேட்டனர். விசுவாமித்திரர், "அரசரே, இவர்கள் உமக்கு விருந்தாக வந்தவர்கள்; அன்றியும், நீர் செய்கிற யாகமும் பார்க்க வந்தார்கள்; உம்மிடத்திலிருக்கிற வில்லையும் பார்க்கத் தக்கவர்களே; கீர்த்தி பொருந்திய தசரத மகாராசாவினுடைய புத்திரர்கள்," என்று சொல்லிப் பின்னும் அவர்கள் பிரதாபத்தைச் சொல்லத் தொடங்கினர்:

# 11. குலமுறை கிளத்து படலம்

“ஜனகமகாராசரே, சூரிய வமிசத்தில் **மனு** என்கிற மகானுபாவரையறியாதவர் ஒருவருமில்லை. உலகத்தில் உள்ள ஜீவராசிகளெல்லாம் பசியினாலே வருந்தாமல் பூதேவி அருள்சுரந்து, சகல தானியங்களும் விளையும்படி செய்த மகா புருஷரும் இவர் குலத்திலே பிறந்தவர். நெடுங்காலம் பிரமாவை நோக்கித் தவம் செய்து அவரது ஆராதனைக் கடவுளாகிய அரங்கநாதரை நாம் யாவருந் தரிசிக்கப் பூலோகத்திற்குக் கொண்டு வந்த மகாராசரும் இவர் குலத்திற் பிறந்தவர். அசுரர்களின் உபத்திரவம் பொறுக்க மாட்டாமல் தேவேந்திரன் வந்து முறையிட்டு ரிஷபவாகனமாய் நிற்க, அதன்மேலேறிக்கொண்டு போய் அசுரர்களைச் சங்காரம் செய்து செயித்து இந்திரனுக்குப் பட்டங்கட்டி வைத்தவரும் இவர் குலத்திற் பிறந்தவர். மந்தரகிரியைச் சமுத்திரத்திலே இட்டுக் கடைந்து இந்திராதி தேவர்களுக்கு நரை திரை மூப்பு மரணங்கள் வாராதபடி அமிர்தங் கொடுத்தவரும், புலியும் பசுவும் ஒரு துறையில் நீர் குடிக்கும்படி ராஜ்யபாரம் செய்தவரும், தேவர்களும் அசுரர்களும் போர் செய்த நாளையில் தேவலோகத்தில் தரும சிந்தையுடனிருந்து ராஜரீகம் செய்தவரும், ஒரு பட்சியினுடைய பிராணனுக்கு ஈடாகத் தம் பிராணனைக் கொடுத்தவரும், நூறு யாகம் செய்தவரும் இவர் குலத்திற் பிறந்தவர்களே. சமுத்திரத்தைத் தோண்டினவர்கள் இவர் குலத்தவர்கள் ஆனால், வேறே நான் சொல்ல வேண்டுவதென்ன ? கொன்றை மாலை சூடின சிவபிரானைக்கண்டு ஆகாயகங்கையைப் பூமிக்குக் கொண்டு வந்தவரும் இவர்குலத்திற்பிறந்தவரே. அன்றியும், சந்திரனை வென்று, உருத்திரரை ஜயித்து, துந்துமியென்கிற அசுரனை அக்கினி அஸ்திரத்தினால் கொன்று, கீர்த்தி வகித்த இந்திரனை ஜயித்து, அஷ்ட திக்குகளையும் தம் வசம் செய்துகொண்டு இராச்சியபாரம் பண்ணிய **இரகு** என்னும் அரசரை நீர்

அறிவீரே! அந்த வமிசத்தில் அஜமகாராஜர் இராசகூட்ட மென்கிற சமுத்திரத்தை வில்லென்கிற மந்தரகிரியினுல் கடைந்து, இலட்சுமிக்குச் சமானமான இந்துமதி என்கிற கன்னிகையை மகா விஷ்ணுவைப்போல மார்புக்கு ஆபரண மாக வைத்துக்கொண்டார். அவருடைய புத்திரராகிய தசரத சக்கரவர்த்தியாரை இவ்வுலகத்தில் அறியாதவர் யாரிருக்கிருர்? அவருடைய குமாரர்களான இவர்களுடைய பிரதாபங்களைக் குறித்துச் சொல்லுவது அருமை. நான் அறிந்த மட்டுஞ் சொல்லுகிறேன்: தசரத மகாராசர் சூரியன் பனியைத் தகிப்பதுபோலப் பகையாளிகளை ஜயித்து, ஏக சக்கரேஸ்வரராய்த் தரும சிந்தையோடு மனுச்சட்டப்படி இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண்டு வருகிருர். அவர் தமக்குப் புத்திரர்களில்லாமையைக் குறித்துக் கிலேசித்து, கலைக்கோட்டு மகரிஷியை அழைப்பித்து, 'சுவாமி, எனக்குப் பின் இந்த இராச்சியமாளுகிறதற்குப் புத்திரருண்டாகும்படி அனுக்கிரகம் செய்ய வேண்டும்,' என்று கேட்டனர். அது கேட்ட கலைக்கோட்டு முனிவர் சந்தோஷசித்தராய் அவரை நோக்கி, 'பதினுன்கு லோகமும் ஆளத்தக்க பிள்ளைகள் உமக்குப் பிறக்கப்போகிருர்கள். நீர் கிலேசிக்க வேண்டா. நீர் யாகத்துக்கு வேண்டுவனவற்றைச் செய்யும்,' என்று சொல்லினர். தசரதர் அப்படியே யாவும்வரவழைத்தார். பின்பு அந்த ரிஷி சிரேஷ்டர் அவ்விடத்திலிருந்து புத்திரகாமேஷ்டி யாகத்தை முடித்தார். அப்போது அந்த ஓமகுண்டத்திலிருந்து ஒரு ராசபூதம் பொற்கும்பாளத்தில் அமிர்தத்துக்குச் சமானமான திவ்வியான்னம் கொண்டு வந்தது. அதை யறிந்த மகரிஷி ஆக்கியாபித்தபடி தசரத மகாராசர் தம் மனைவியர் மூவருக்கும் அதை நாலு பங்காக்கிக் கொடுத்தார். தருமம் செய்த தர்மத்தினுலும், பாவம் செய்த பாவத்தினுலும், கற்கடக லக்கினத்தில் இராமன் என்னும் இந்தப் புருஷோத்தமனைக் கௌசலை என்கிற புண்ணியவதி பெற்ருள். இவனைப் போலவே குணமும் சுந்தரமுமுடைய பரதனென்கிற

வனைக் கைகேசியென்கிற பாக்கியவதி பெற்ருள். மகாமேரு பருவதமும் கைலாய பருவதமும் போல் சுந்தரத்தையுடைய இந்த இலட்சுமணனையும் இவன் தம்பி சத்துருக்கனென்கிற வனையும் இளையவளாகிய சுமித்திரையென்கிற பாக்கியவதி பெற்ருள். இவ்வாறு பெறப்பட்ட நால்வரும் சகல சாஸ்திர பண்டிதராகி, தனுர் வேதங்களெல்லாம் அறிந்துள்ளார்கள். தசரதரின் பிள்ளைகளென்கிற பெயர் மாத்திரமேயல்லது, இவர்களை உபநயனம் வித்தியாரம்பம் முதலானவை செய்து வளர்த்தவர் வசிஷ்ட மகாமுனிவர். இவர்களால் என்னுடைய யாகத்துக்கு விகாதம் செய்து வருகிற இராட்சதர்களைக் கொல்ல வேண்டுமென்று, இவர்களை அழைத்துக்கொண்டு ஆரணியத்துக்கு வந்தேன். வருகிறதற்கு முன்னமே தாடகை தலைப்பட்டாள். ஜனகராசரே, இந்த இராமனுடைய புஜபல பராக்கிரமத்தை நீர் எண்ணிப்பாரும். இவன் அந்தத் தாடகைமேல் ஒரே பாணம் வாங்கிவிட்டான். அது அக்கினி நேத்திரங்களுடனே வந்த தாடகையினுடைய மார்பிலும் ஆகாயத்திலும் பூமியிலும் ஊடுருவிப்போயிற்று. பின்பு அனேக இராட்சதர்களுடனே அந்தத் தாடகையின் பிள்ளைக ளிருவரும் வந்தார்கள். அந்த இராட்சதர்களுடைய தலைக ளெல்லாம் அற்று மலைமலையாய்க் குவிந்தன. அவர்களில் ஒருவன் மடிய, மற்ருெருவன் இருக்கிறவிடம் தெரியாது மறைய, நானும் யாகத்தை முடித்தேன். என்னிடத்தில் தேவர் கள் வைத்திருந்த ஆயுதங்களெல்லாம் இவனுக்குக் கொடுத் தேன். கொடுத்த எனக்கும் ஆச்சரியமுண்டாகும்படி அந்த ஆயுதங்கள் இவனுக்கு ஏவல் செய்து வருகின்றன. உம் முடைய குருவான கௌதம மகரிஷி பத்தினி அகலிகைக்குச் சாபவிமோசனம் செய்து முன் ரூபத்தைக் கொடுத்தது இவ னுடைய திருவடித்தூளென்ருல், வேறே மகிமை சொல்ல வேண்டுமோ! இவனிடத்தில் எனக்கு என்னுடைய பிராண னைப்பார்க்கிலும் அதிகமான அந்தக்கரண அபேட்சை உண்டு,'' என்று விசுவாமித்திர மகரிஷி சொன்ஞர்.

இவ்வார்த்தைகளையெல்லாம் ஜனக மகாராசர் கேட்டு, ஆச்சரிய சித்தராகி, அதிக சந்தோஷத்தோடு, " சுவாமி, நானென்ன சொல்லப் போகிறேன்! ஒரு வில்லினாலல்லவா என் மனம் கசிகின்றது? அந்த வில்லை இவர் வளைப்பாராகில் கிலேச சாகரத்தில் மூழ்கியிருக்கிற என்னைக் கரையேற்றினதாகும். சீதையும் தவம் செய்தவளாவள்," என்று சொல்லி, எதிரே நிற்கிற தம் ஏவலரைப் பார்த்து, " சீக்கிரத்தில் அந்த வில்லைக் கொண்டு வாருங்கள்," என்று ஆக்கியாபித்தார்.

உடனே நாலுபேர் வில்லிருக்கிற சாலைக்குப்போய், அங்கிருக்கும் காரியஸ்தரிடம் சொன்னார்கள். உடனே அதிக பலசாலிகளாய், பர்வதங்கள் போன்ற தோள்களையுடையவர்கள் அவ்வில்லை எடுத்துக்கொண்டு வந்தார்கள். அப்படி வரும்பொழுது அந்நகரத்திலிருக்கிறவர் யாவரும் சமுத்திரம் போல வந்து நிறைந்து இரைந்துகொண்டு பார்த்தார்கள். அப்படிப் பார்க்கிற ஜனங்கள், "வில்லை ஏன் எடுக்கிறார்கள்? கையில் சங்கு சக்கரம் தரித்திருக்கிற விஷ்ணுவானால் இதை எடுத்து வளைக்கலாமேயல்லாது, மற்றொருவராலாகமாட்டாதே! ஆதலால், சீதைக்கும் கலியாணமாகப் போகிறதா!" என்று சொன்னார்கள். சிலர், " இது வில்லன்று. மகாமேரு பர்வதமே," என்று சொன்னார்கள். சிலர், "பூர்வத்தில் யார் இந்த வில்லை நாணேற்றி அம்பெய்தவர்?" என்றார்கள். சிலர், " பிரமதேவன் தன் பிரதாபம் தெரிகிறதற்குத் தன் கையினால் செய்த வில்லே இது," என்றார்கள். சிலர், " இந்த வில்லிலே நாணேற்றி அம்பு எய்தால், அதற்கு இலக்கு என்ன இருக்கிறது?" என்றார்கள். சிலர், 'இந்த வில்லா அந்தச் சீதையின் விவாகத்துக்கு விகாதமாக வரவேண்டும்?', என்றார்கள். சிலர், "இதுவிதியின் செயல்," என்றார்கள். சிலர் "இப்போது இருக்கிற ராஜாக்களுள் இவ்வில்லை வளைக்கத் தெரிந்தவர்கள் இருக்கிறார்களா?" என்றார்கள். இப்படிப் பல பல விதமாக நகரத்து ஜனங்கள் சொல்லிக்கொள்ள, அந்த வில்லை அரசருக்கு எதிரில் கொண்டு வந்து பூமியில் வைத்

தார்கள். அந்தச் சபையிலிருந்த அரசர்களெல்லாம் பார்த்து, "இதை வளைக்கிறவர் யார் இருக்கிறார் !" என்று கையைப் பிசைந்தார்கள். ஜனகராசர் ஸ்ரீராமரையும் தம் மனத்தில் வேதனையை உண்டாக்கியிருக்கிற அந்த வில்லையும் பார்த்து, தம்முடைய குமாரத்தியையும் மனத்திலே நினைத்துக்கொண்டு சும்மா இருந்தார்.

அவருடைய மனத்தைக் கௌதமரிஷியின் புத்திரரான சதானந்தர் அறிந்து, விசுவாமித்திரரைப் பார்த்து, "ஐயா, முனிவரே, பூர்வத்தில் மகாமேருவை வில்லாகப் பிடித்த சிவபிரான் பாகத்திலிருக்கிற உமையை அவள் தகப்பனான தக்கன் இகழ்ச்சி பண்ணி யாகஞ் செய்தான். சிவபிரான் கோபாவேசராகி, இந்த வில்லைக் கையில் பிடித்துக்கொண்டு போய், அந்த யாசகசாலையில் புகுந்து, மிகவும் கோபத்துடனே சில தேவர்களுடைய கைகளைச் சிதைத்தும், சிலருடைய பற்களைப் பேர்த்தும், பலவாறு சின்னபின்னம் செய்தார். அப்போது தேவர்களெல்லாம் ஓடிப்போனார்கள். தக்கன் ஆரம்பித்த யாகம் நின்றுபோயிற்று. அப்போது சிவபிரான் கோபமாறி, கையில் கொண்டு வந்த வில்லை இந்த ஜனகமகாராஜருடைய வமிசத்தினரான ஓர் அரசரிடத்தில் வைத்தார். ஆனதால், இந்த வில்லினுடைய பலமும் பெருமையும் நீரே அறிந்துகொள்ளக் கடவீர்," என்று சொல்லி, "இந்த வில்லுக்குச் சம்பந்தமான சீதை பிறந்த விருத்தாந்தத்தையுஞ் சொல்லுகிறேன்; கேளும் : முன்னாலே யாகம் செய்வதன் நிமித்தம் பூமியைப் பொற்கலப்பைக்கு வச்சிரக்கொழு பூட்டி உழுதோம். அந்தக் கொழு முகத்தில் சூரியன் உதித்தாற்போல ஸ்ரீ மகாலட்சுமியும் நாணத் தகுந்த அதிக சுந்தரத்தோடு பெண் சிகாமணியாகிய சீதை கிடைத்தாள். அவளுடைய உத்தம குணங்களை என்னாலே சொல்ல முடியாது. அழகே தவஞ்செய்து அவளைப் பெற்றது. அந்தச் சீதை பிறந்த பிறகு அதிக சுந்தரமான தேவகன்னிகைகள் முதலான யாவரும், ஆகாய கங்கை பூமிக்கு வந்த பிறகு மற்ற

ஆறுகளெல்லாம் எப்படிப் பெருமை இழந்தனவோ, அப்படி மகிமையை இழந்து போனுர்கள்! விதி வழி வேறிருக்க, பூர்வத்தில் அமிர்தத்துடன் பிறந்த இலட்சுமியைத் தேவர்களெல்லாம் விரும்பியது போல, மன்னர் பலர் வந்து எனக்குனக்கென்று சேனு சமுத்திரம் போலத் திரண்டிருக்கின்றனர்,'' என்று கூறிப் பின்னும் கூறுவார்:

## 12. கார்முகப் படலம்

" விசுவாமித்திரரே, அரசர் பலராகையால் நாங்களொரு யோசனைசெய்து, இந்த வில்லை யாரொருவர் வளைத்து நாரி பூட்டுகிறுரோ அவருக்கு இந்தப் பெண்ணைக் கலியாணஞ் செய்துகொடுக்கிருேமென்று சொன்னேம். அந்த ராஜாக்கள் இந்த வில்லை எடுக்கவுமாட்டாமல், மன்மதனுடைய கரும்பு வில்லுக்கும் தாளமாட்டாமல், விவேகமின்றிக் கோபத்துடனே சண்டைக்கு வந்தார்கள். அவர்களுடைய சேனு சமுத்திரத்திற்கு முன்னே எங்கள் சேனு சமுத்திரம் நின்று எதிர்த்தது. 'சிவனுடைய வில்லை இவர்கள் வைத்திருக்கிற படியினுல் தேவானுகூலமும் இவர்களுக்கு உண்டாயிருக்கின்றது!' என்று அவர்கள் எண்ணிப் பயந்து, இரவில் கூகையைக் கண்டோடும் காகங்களைப்போல ஒருவர் பின்னுல் ஒருவராக ஓடிப்போனுர்கள். அன்று முதல் இன்றை வரைக்கும் இந்த வில்லைக் குறித்து ஒருவரும் வந்ததில்லை. "ஓடிப்போன ராஜாக்களும் திரும்பி வரவில்லை; இனிக் கலியாணமுமில்லை,' என்றேயிருந்தோம். இன்றைக்கு இந்தப் பிள்ளை இந்த வில்லை எடுத்து நாண் ஏற்றினுல், சீதையினுடைய இளமையும் அழகும் பழுதாகா,'' என்று சதானந்தர் சொன்னுர்.

இதை விசுவாமித்திர முனிவர் கேட்டு, அவருடைய மனேபாவமும் அறிந்து, தம்முடைய சடை முடியை அசைத்து, சிங்கம் போலே எதிரேயிருக்கிற ஸ்ரீராமருடைய

திருமுகத்தைப் பார்த்தார். ஸ்ரீராமரும் விசுவாமித்திரர் நினைத்ததைத் தமது விவேகத்தால் அறிந்து, அந்த வில்லைப் பார்த்தார்; பார்த்து, ஓமாக்கினியில் நெய்யாகுதி விட்டால் அந்த அக்கினிச் சுவாலை எப்படி எழும்புமோ, அப்படி அதி சீக்கிரமாய் எழுந்தார். அதைத் தேவர்களெல்லாரும் பார்த்து, 'வில் ஒடிந்தது! ஒடிந்தது!' என்றார்கள். மகரிஷிக ளெல்லாம் ஆசீர்வாதஞ் செய்தார்கள். இப்படி எழுந்திருந்த ஸ்ரீராமர் வில்லை வளைக்க, ஸ்ரீ ராமருடைய சுந்தரத்தைப் பார்க்கும் ஸ்திரீ கூட்டங்களின்மேல் மன்மதன் புஷ்பபாணம் எய்யும் அவசரத்தில் ஆயிரங் கரும்பு விற்களொடிந்தன. அந்த ஸ்திரீகள், 'இந்த வில் பலமானது! இதை இந்த ராஜ குமாரன் வளைக்காமற்போனால் சீதைக்கு வாழ்வில்லை!' என் பாரும், கரங்களைக் கூப்பிக்கொண்டு கண்களிலே ஜலம் பெருக, 'இந்த ராஜகுமாரன் இதை வளைக்காவிட்டால், சீதையும் நாமும் அக்கினியில் விழக்கடவோம்!' என்பாரும், 'இந்த ராஜகுமாரனைச் சீதை கலியாணஞ் செய்துகொள்ளு தற்குச் சம்மதித்தால், சீக்கிரமாய்ப் பெண்ணைக் கலியா ணஞ் செய்து கொடுத்துவிட வேண்டுமேயல்லாமல், இந்த வில்லைக்கொண்டு வந்து இந்தச் சிறுபிள்ளை முன் போட்டது புத்தியீனம்!' என்பாரும், 'இந்த முனீஸ்வரனுக்குக் கொஞ்ச மாகிலும் விவேகமில்லை!' என்பாரும், 'நம் ராஜாவைப்போல் பொல்லாதவர் வேறேயில்லை!' என்பாரும், 'இந்தப்பிள்ளை வில்லை வளைக்காமற்போனால் சீதை பாக்கியவதியல்லள்!' என்பாருமாய்ப் பலர் பலபடி சொல்லிக்கொள்ள, பெரியோர் சகலரும் மகிழ, தேவர்கள் சந்தோஷிக்க, சிங்கமும் மத யானையும் ரிஷபமும் பர்வதமும் வெட்கிப் போகும்படி நடந்து, ஸ்ரீராமர் சீதையின் கழுத்திலே தரிக்க எடுக்கும் பூ மாலை யைப்போல அந்த வில்லைக் கரத்தினலெடுத்தார்! எடுத்து, அந்த வில்லின் நுனியில் தமது பாதத்தினுடைய பெருவிரலை ஊன்றிக்கொண்டதும், ஒரு கையால் நாண் ஏற்றியதும், ஒரு கையால் வில்லை வளைத்ததும், அங்கிருந்த ஒருவரும்

பார்த்ததேயில்லை; வில் ஒடிந்த சத்தம் மாத்திரமே கேட்டார்கள்.

அதைக் கேட்ட தேவர்களெல்லாம் பிரமாண்டம் பிளந்ததென்று ஏங்கிப் பயந்து, யாரிடத்திற்போவோமென்று நடுங்கினர்களென்றால், பூலோகத்தார் பட்ட பாடு சொல்ல வேண்டுவதேன் ! இந்தப் பூமியைத் தாங்கிக்கொண்டு வேர்போலக் கிடக்கிற அனந்தன், இடி விழுந்ததென்று ஏங்கிப் பயந்து நடுநடுங்கினன். தேவர்கள் உடனே தெளிந்து புஷ்பமாரி பொழிந்தார்கள். மேகங்கள் பொன் மழை பொழிந்தன. சமுத்திரம் முத்துகளைத் தூவி ஆர்ப்பரித்தது. மகாமுனிவர்களெல்லாம் ஆசீர்வாதம் செய்தார்கள். ஜனக மகாராஜரும், " நாம் செய்த புண்ணியம் இன்றல்லவோ இலபித்தது!" என்று சந்தோஷித்தார். பட்டணத்திலுள்ள ஜனங்களெல்லாம் சந்தோஷப் பரவசராகிப் புட்பமாலை, சந்தனம், முத்து, பொன், இரத்தினம் முதலியவற்றை ஒருவர்மேல் ஒருவர் வீசிக்கொண்டு, பேரிகை முதலான மேளவாத்தியங்கள் முழங்க, சந்திரனைக் கண்ட சமுத்திரம் போலப் பொங்கி மகிழ்ந்தார்கள். நாட்டியப் பெண்கள் மேகத்தைக் கண்ட மயில்கள் போல, பரதநாட்டியம் செய்தார்கள். ஊடலினாலே புருஷனோடு பிணங்கிக் கோபித்திருந்த ஸ்திரீகளெல்லாம் இந்தச் சந்தோஷத்தினால் அக்கோபம் தீர்ந்து புருஷனைத் தழுவிக்கொண்டார்கள். ஸ்ரீராமபிரான் வில்லிறுத்ததைப் பார்க்க வந்த தெய்வ அரம்பையர்கள் இந்தப் பட்டணத்து ஸ்திரீகளைத் தழுவிக்கொண்டார்கள் ; ரூபம், நடத்தை, பாடல் முதலியவற்றினாலே மானிடரென்று வித்தியாசங் காணமாட்டாமல், கண்கள் இமைக்கிறதைக் கண்டு நாணி மயங்கி நின்றார்கள். 'தசரதன் மதலை,' என்பாரும், 'தாமரைக்கண்ணன்,' என்பாரும், 'மேகரூபன்,' என்பாரும், 'காயாம்பூ வண்ணன்,' என்பாரும், 'மனிதனல்லன் ' என்பாரும், 'விஷ்ணுதான் ' என்பாரும், 'இவரைப் பார்க்கச் சீதைக்கு ஆயிரங்கண் வேண்டும்!' என்பா

ரும், 'சீதையைப் பார்க்கிறதற்கு இவருக்கும் ஆயிரங்கண் வேண்டும்!' என்பாரும், 'தம்பியைப் பாருங்கள்!' என்பாரும், 'இந்த நகரம் பெரும்புண்ணியஞ் செய்தது!' என்பாரும், 'இவரை இவ்விடத்துக்கு அழைத்து வந்த முனிவரை நமஸ்கரியுங்கள்!' என்பாருமாய்ப் பலரும் மகிழ்ச்சியால் பேசிக்கொண்டனர். இது நிற்க.

ஸ்ரீராமரைக் கண்ணினல் கண்டு விரகதாபம் பட்டுக் கொண்டிருந்த சீதையைத் தாதிகள் தாமரைத் தடாகத்தின் ஓரத்தில் சந்திரகாந்தக் கல்லினலே சதுரித்துக் கட்டியிருக்கிற சீதள மண்டபத்திலே புட்பமெத்தையின்மேல் வளர்த்தி, சயித்தியோபசாரங்கள் செய்துகொண்டிருந்தார்கள். சீதை அந்தத் தாமரைத் தடாகத்தைப் பார்த்து, "ஆ! தடாகமே, நான் கண்ட ராஜகுமாரருடைய சரீரம்போலும் தாமரையிலைகளையும், அவர் திருநேத்திரங்களைப்போலும் புஷ்பங்களையும் வைத்துக்கொண்டிருக்கிற நீ அவரை எனக்குக் காட்டி என் பிராணனை இரட்சிக்கலாகாதா? கையில் வில்லும், தோளில் அம்பருத் தூணியும், மார்பில் பூணூலுமுடைய மேகசொரூபரை இன்னமொருதரங் காண்பேனே? பச்சை வில்லோடும் வந்த மேகத்தின் கண்கள் என் உயிரைப் புசிக்கின்றனவே! மன்மத பாணங்களாலடிபட்டு நொந்து சஞ்சலப்படுகின்ற என்னைப் பயப்படாதேயென்று சொல்ல நேரில் வாராமலிருப்பது ஆண் பிள்ளைத்தனமா?" என்று இப்படிப் பல விதமாக இரா முழுதும் பிரலாபித்தனள்.

விடிந்த பின்பும் இப்படியே நினைத்து வாதனை பட்டுக் கொண்டிருக்கும் சீதைக்கு ஸ்ரீராமர் வில்லொடித்த செய்தியைச் சொல்லும்பொருட்டு ஓடி வந்த *நீலமாலை* என்கிற தாதியானவள், எதிரே நின்று, சந்தோஷ மயக்கத்தினல் நமஸ்காரங்கூடச் செய்யாமல், நடனஞ் செய்தாள். அவளைச் சீதை பார்த்து, 'ஆ தாதி, நீ அதிக சந்தோஷத்துடனே வந்தாற்போலிருக்கின்றது! இவ்வளவு மகிழ்ச்சி வர நடந்த செய்தி என்ன? சொல்,' என்று கேட்க, அவள் நமஸ்கரித்து,

'அம்மா, தசரத மகாராசாவின் புத்திரர், மன்மதனைப் பார்க்கிலும் அதிக சுந்தரமும், நீலம்போலும் திருமேனியும், கமலம் போலும் நேத்திரமுமுடையவர். அவரை ஸ்ரீ மகாவிஷ்ணுவென்றே சொல்ல வேண்டும். அவருக்கு இராமர் என்பது பெயர். அவர் தம் தம்பியாரோடு ஒரு ரிஷியைத் தொடர்ந்து நேற்று இந்தப் பட்டணம் வந்து சேர்ந்தார். அவர் அந்த வில்லையும் பார்க்கிறதற்காக வந்தாரென்று அந்த ரிஷி சொல்ல, நம்முடைய ராஜா அவ்வில்லை அழைப்பித்தார். அந்த இராமர் அந்தப் பெருவில்லை ஒரு மலர் மாலையை எடுப்பதுபோல எடுத்து நாணேற்றினர். சபையிலிருந்த ராஜாக்கள் நடுநடுங்க அவ்வில் முறிந்து விழுந்தது!' என்று சொன்னாள். சீதை அது கேட்டு, 'அவர் நாம் கண்ட புருஷோத்தமராகவே இருக்க வேண்டும்! ஆனால், ஒரு வேளை அவரல்லாமல் வேறொருவர் வில்லொடித்திருந்தால், பிராணனை ஒழிக்கிறதே தகுதி,' என்று நிச்சயம் செய்துகொண்டிருந்தாள்.

விசுவாமித்திர முனிவரை ஜனக மகாராஜர் பார்த்து, "சுவாமி, உம் திருமகனுருக்கு இன்றே திருக்கலியாணம் முடித்துக்கொள்ளுகிறதற்குத் தேவரீர் திருவுளமோ, தசரத சக்கிரவர்த்தியாரையும் வரவழைத்து முடித்துக்கொள்ளத் திருவுளமோ?" என்று கேட்க, அவர், 'தசரதரும் வந்தால் சர்வோத்தமம்,' என்று சொல்ல, உடனே தசரத மகாராஜாவுக்கு மண ஓலையெழுதித் தூதனிடம் கொடுத்தனுப்பினர்கள். அவன் அயோத்தியாபுரி சேர்ந்து, ஆசாரவாசலில் நின்று, தசரத மகாராஜாவைக் கண்டு, சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, மங்கல வார்த்தை சொல்லி, மண ஓலையை முன் வைத்தான். அதை வாசிக்கச் சொல்லி ராஜா ஆக்கியாபிக்க, ஓலை வாசிக்கிற கருணீகன் அதைப் பிரித்து, 'கௌசிக முனிவர் தசரத மகாராஜாவுக்குத் தெரிவிப்பது: உம்மை விட்டு நாங்கள் புறப்பட்ட பின்பு ஆரணியத்திலே தாடகையானவள் பருவதாகாரமாய் நேரில் வந்தாள். அவள் இராகவனுடைய

பாணத்தினுலே மடிந்தாள். அப்பால் நான் யாகம் செய்தேன். அதை அழிக்க அந்தத் தாடகையின் பிள்ளைகளிருவரும் அனேக இராட்சதர்களுடன் வந்தார்கள். ஸ்ரீராமனுடைய பாணத்தினுல் ஒருவன் மடிந்தான்; மற்றெருவனேடிச் சமுத்திரத்திலே மூழ்கினுன். வந்த இராட்சதர்களெல்லாரும் இலட்சுமணன் பாணங்களினுல் மடிந்தார்கள். என் யாகமும் குறைவில்லாமல் நிறைவேறிற்று. அப்பால் கௌதமருடைய பத்தினியான அகலிகையின் சாபத்தை ஸ்ரீராமன் நீக்கினுன். மிதிலைக்குப் போனேம். அவ்விடத்தில் சிவனுடைய வில் இருந்ததை நீரறிவீரோ? அந்த வில்லை ஸ்ரீராமன் எடுத்து நாணேற்றவே, அது முறிந்து வீழ்ந்தது. ஜனகமகாராஜர் சந்தோஷித்து, தம் குமாரத்தியாகிய சீதையை ஸ்ரீராமனுக்கு மணம் செய்துகொடுக்கச் சம்மதித்திருக்கிருர். ஆதலால், உடனே நீர் குடும்ப சமேதராய் இவ்விடம் வந்து சேரவேண்டும்,' என்று வாசித்தான்.

அது கேட்கவே தசரத மகாராஜாவின் சரீரம் பூரித்து, வாகு வலயங்கள் பூட்டுவிட்டன. அவர், 'மிதிலையிலே இராமன் வில்லையொடித்த சத்தமா இங்குக் கேட்டது!' என்று புளகாங்கிதராய்ச் சந்தோஷித்து, வசிஷ்ட மாமுனிவர், ராஜாக்கள், சுமந்திரர் முதலிய மந்திரிகள், ஸ்ரீராமபிரானுடைய தாய்மார் ஆகிய அனைவருக்கும் இந்தச் சந்தோஷச் செய்தியைச் சொல்லி, மண ஓலை கொண்டு வந்த மிதிலாபுரித் தூதனுக்குத் திரவியமும் வஸ்திராபரணங்களும் கொடுத்தார்.

## 13. எழுச்சிப் படலம்

### *தசரதர் புறப்பாடு*

தசரதமகாராஜர் மிந்த சந்தோஷத்தோடு ரதகஜதுரக பதாதிகளுடன் பட்டணத்திலுள்ள யாவரும் திருக்கலியாண மகோற்சவத்திற்குப் பிரயாணமாகும்படி யானையின்மேல் பேரிகை வைத்துப் பறை சாற்றும்படி ஆக்கியாபித்தார்.

அப்படியே வள்ளுவன் அயோத்தியாபுரிப் பட்டணத்தைச் சுற்றிப் பேரிகை அடித்தான். பட்டணத்து ஜனங்கள் கேட்டு, அதிக சந்தோஷமானுர்கள். புரவித் திரள்களும், யானைத் திரள்களும், இரதத்திரள்களும், பதாதித்திரள்களும், வெகு விசித்திரமான கொடிகளோடு கூடிய குடைகளும் நெருங்கிப் புறப்பட்டன. தசரத மகாராஜாவின் அரண்மனையிலிருந்து ஸ்திரீகள் நவரத்தினுலங்கிருத வாகனங்களின்மீது புறப் பட்டார்கள். தாமரை மலர்களிலிருக்கிற அன்னங்கள் போல நவரத்தினகசிதமான அனேக சிவிகைகளில் ராஜ ஸ்திரீகளும் தோழிமார்களும் புடை சூழ்ந்து வர, யாழ் வீணை தண்ணுமையுடன் பொருந்திய பாடல்கள் முழங்க, மிகுந்த பிரதாபத்தையுடைய கைகேசி கோடி சூரியப் பிரகாசமான சிவிகையில் புறப்பட்டாள். தெய்வ ரம்பைகளுக்குச் சமான மான தோழிமார்கள் அருகிலே சூழ்ந்து வர, அனேக ஸ்திரீ கள் கீதங்கள் பாடி வர, ஆலவட்டம் குடை முதலானவை நெருங்கி வர, சுவர்ணத்தினுல் அலங்கரித்த பல்லக்கில் சுமித்திரை நாயகி புறப்பட்டாள். பல ஸ்திரீகள் தெய்வ கன்னிகைகள் போலச் சூழ்ந்துவர, தேவர்களும் ரிஷிகளும் துதிக்க, சுவர்ண ரதத்தில் ஸ்ரீராமரைத் தனயராகப் பெற்ற கௌசலை நாயகி புறப்பட்டாள். பவழத்தினுலும், மரகதத் தினுலும், முத்தினுலும், சிறந்த பொன்னுலும் புதுக்கின இரதங்களில் மகாராஜாவினுடைய அந்தப்புரத்து ஸ்திரீகள் அறுபதினுயிரம் பேர் புறப்பட்டார்கள். இந்தக் கூட்டத்தைச் சூழ்ந்து அனேக சுத்தவீரர்கள் கையில் பிரம்பைப் பிடித்துக் கொண்டு, நிலையங்கியோடு குதிரைகள்மேலும் பாதசாரி களாயும் நெருங்கி அதிக எச்சரிக்கையோடு காத்துக் கொண்டு போனுர்கள். வசிஷ்ட முனிவரும் யாகாதி கிரியை கள் செய்யத்தக்க பிராமணுேத்தமரும் ரிஷிகளும் சூழ, முத் துச் சிவிகையிலேறிக்கொண்டு பிரமாவைப் போலப் புறப்பட் டார். யானை, குதிரை, தேர், பதாதிகள் ஆகிய சேனுசமுத்திரஞ் சூழ, பரத சத்துருக்கரிருவரும் கையில் வில்லுடன் இரத்தின

கசிதமான இரதத்தில் ஆரோகணித்து, வசிஷ்டர் பின்னே சென்றுர்கள். தசரத சக்கரவர்த்தியார் நித்திய நியமங்களை முடித்துக்கொண்டு, ஸ்ரீ ரங்கநாதரைச் சேவித்து, அனேக பசுவும், இரத்தினமும், பொன்னும், பூமிகளும் மிகுதியாகப் பிராமணர்களுக்குத் தானஞ் செய்து, நல்ல சுப முகூர்த்தத்தில் இரதம் ஏறினுர். பிராமணர் பலர் இரத்தின கசிதமான பூரண கலசங்களேந்திக்கொண்டு வேத கோஷத்துடன் எதிரே வந்தார்கள். பல தேசதேசத்து இராசாக்கள் அவரை நெருங்கி வந்தார்கள். இப்படிப் புறப்பட்ட சேனு சமுத்திரத்தினுடைய பாததூளிகள் ஆகாயமெல்லாம் பரவி மூடிக் கொண்டு, ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியாதபடி எங்கும் நிறைந்தது. பொன்னுலகமான தேவலோகத்திலும் அத் தூள் படிந்தபடியால், அதுவும், மண்ணுலகமாயிற்று. சங்கம், பேரிகை, கொம்பு, தாளம், எக்காளம், மத்தளம் முதலான பல வாத்தியங்கள் முழங்குகிற சத்தங்கள் மேகக் கர்ஜனையைத் தாழ்த்திவிட, கொடிகள், குடைகள், ஆலவட்டங்கள், மயில் பிச்சங்கள், மகரதோரணங்கள் முதலானவைகள் வெயிலையோட்டிவிட, ராஜாவினுடைய தனிக்குடையைக் கண்டு பூரண சந்திரன் வெட்கியோடிப்போக, தேவர்களும் பார்த்துப் பிரமிக்கச் சகலரும் நடந்தனர். அவர்கள் இவ் விதம் இரண்டு யோசனைத்தூரம் போனுர்கள்.

## 14. வரைக்காட்சிப் படலம்

வழியில் *சந்திரசைலம்* என்னும் ஒரு பெரிய மலை இருந்தது. அனைவரும் அதைக் கண்டு அதன் சாரலில் இறங்கினர். உடனே யாவரும் சந்தனம், தேவதாரு, அகில், தேக்கு, ஆச்சா முதலிய பல விருட்சங்களில் மேகங்களைப் பிடித்துக் கட்டுகிறது போல, யானைகளைக் கட்டினர். ஒவ்வொரு யானை தன் பாகன் எப்படி மறித்தாலும் மறிபடாமல்,

மந்திரி ஆலோசனையைக் கேளாத ராஜனைப்போல கர்வித்து, முகம் விட்ட வாக்கே நடந்தது. சகல கல்விகளுங் கற்றுத் தேறின பெரியோர்களிடத்தில் ஒரு மூடன் சேர்வானாகில், அவனை அவர்கள் எப்படிப் பரிசுத்தனாகச் செய்வார்களோ, அப்படிப் பொற்றேரினுடைய சக்கரம் கருங்கல் பாறையின் மேலோட, அப்பாறை பொன்னிறமாயிற்று. குதிரைப் பந்திகளைப் பூமிதேவிக்கு இட்ட வர்ணமாலை போல வரிசை வரிசையாய்க் கட்டினார்கள். சில குதிரைகள் பூமியில் புரண்டு எழுந்திருந்து, நல்லவர்கள் பொல்லாதவருடைய சினேகத்தை விடுகிறது போல உடம்பை உதறிக்கொண்டன. கூடாரங்களும், புஷ்பப் பந்தல்களும், கடை வீதிகளும், அங்கங்கே நிறைந்தன. பல்லக்கிலேறி வந்த ஸ்திரீகள் தாமரை மலரை விட்டுத் திருமாளிகையில் பிரவேசிக்கும் இலட்சுமியைப் போலக் கூடாரங்களில் பிரவேசித்தார்கள். மேகத்திலிருக்கிற மின்னல்கள் பூமியிலிறங்குகிறது போல, அனேகம் ஸ்திரீகள் யானையை விட்டிறங்கினார்கள். சமுத்திரத்தின் அலைகள் போல அங்கங்கே திரைகள் இட்டார்கள். ஆங்காங்குச் சமுத்திரம் போல நிறைந்திருக்கிற கடை வீதிகளில் யாவும் நிறைத்து வைத்தார்கள். மலைகளிலிருந்து சிங்கங்களிறங்குவது போலப் புருஷர்கள் வாகனங்களை விட்டு இறங்கினார்கள். சமுத்திரத்தினிடையிலே சந்திரோதயமானது போல, ஸ்திரீகளுடைய திருமுகங்கள் அந்தந்தக் கூடாரங்களில் பிரகாசித்தன. அம்மானையாடுகிற ஸ்திரீகளுடைய கண்கள் கூடாரமென்கிற சமுத்திர வலையிலே கயல் மீன்கள் குதிக்கிறது போல இருந்தன.

மடைப்பள்ளிகளுடைய புகைகள் மேகங்கள் வரைக்கும் தாவியிருந்தன. இப்படி அனேக சம்பிரமத்துடனே இறங்கின இராச குமாரர்களும் அவர்கள் ஸ்திரீகளும் கூடிக்கொண்டு, சந்திரசைலமென்கிற பருவதத்தின் மேலேறி, அங்கேயிருக்கின்ற சிங்கார அலங்காரங்களைப் பார்த்தார்கள். அப்பர்வதத்திலுள்ள சம்பிரமங்களைப் பார்த்துக்

கொண்டு ஸ்திரீகளும் புருஷர்களும் திரிகிற போது தண்ணீர்த் தடாகங்களைப் பளிங்குப் பாறையென்றெண்ணி ஸ்திரீகள் அதிலே நடக்க, அதிலவர்கள் விழுந்து, கட்டியிருக்கின்ற வஸ்திரங்கள் நனைய, அதைக் கண்ட புருஷர்கள் கைகொட்டி நகைத்து விளையாடியும், பளிங்குப்பாறையைப் புருஷர்கள் தண்ணீர்த் தடாகமென்றெண்ணித் தொங்கக் கட்டியிருக்கிற வஸ்திரங்களைத் தூக்கியொதுக்கிக்கொண்டு இறங்க, அதைக்கண்ட ஸ்திரீகள் நகைத்து விளையாடியும், அம்மலை சத்திக்கும்படி திரும்பத் திரும்ப அதனுடனே கூவிக்கொண்டும், குயில்களோடு கூவியும், இப்படிப் பலபல விதங்களாகப் பொழுதுபோக்கினார்கள். அப்படி அனேக நாழிகை விளையாடிக்கொண்டிருக்குங்காலையில் சூரியன் அஸ்தமனகிரியுற்றனன். வானம் முழுதும் சிவந்தது. அப்போது தசரத மகாராஜாவினுடைய சேனா சமுத்திரத்தில் அனேகசெந்தாமரைப் புஷ்பம்புஷ்பித்தது போல, அனேக நட்சத்திரங்களுடனே ஆகாயத்தில் சந்திரனும் பிரகாசித்தான். ஒரு புறத்தில் மதயானைகளை அதட்டிக் கட்டுகிறவர்களுடைய சத்தமும், ஒரு புறத்தில் மதுபானம் செய்து குளறுகிறவர்களுடைய சத்தமும், ஒரு புறத்தில் நடனஞ்செய்கிற பெண்களுடைய மேகலாபரணச்சத்தமும் ஆகிய அனேக சத்தங்கள் எங்கும் நிறைந்திருந்தன. ஒரு புறத்தில் பல நூல்களைக் குறித்துப் பேசுகிறவர்களுடைய தொனியும், ஒருபால் ஸ்திரீகளுடனே கூடிச் சம்பிரமமாகப் பேசிக்கொண்டிருக்கிறவர்களுடைய தொனியும், ஒருபால் யாழ் வீணைகளை வாசிப்பதனாலுண்டான தொனியுமுண்டாகும்படி இரவு முழுதும் ஆனந்தத்துடனே கழித்தார்கள். பின்பு சூரியன், நட்சத்திரங்களைப் பற்களாகவும், இராத்திரியைத் தேகமாகவுமுடைய இரணியாசுரனை, உதயகிரியென்கிற பொன் தூணிலுதித்துக் கிரணம் என்கிற கைகளை நீட்டிக்கொண்டு கோபிக்கும் உக்கிர நரசிங்க மூர்த்தியைப்போலப் புறப்பட்டான். அப்போது தசரத மகாராஜர் தம் நித்திய நியமங்களை முடித்துத் தேரின்மே

லேறி, சேனை சமுத்திரம் சூழ்ந்து வரச் சோணமா நதி போய்ச் சேர்ந்தார். காலம் நண்பகலாயிற்று.

## 15. பூக்கொய் படலம்

அவ்விடத்தில் ஸ்திரீகளும் புருஷர்களும் சோலையில் புஷ்பங்கள் பறித்து விளையாடப் பிரவேசித்தார்கள். அந்தச் சோலையிலிருந்த மயில்களெல்லாம், ‘இந்த ஸ்திரீகள் தங்கள் புருவமென்கிற வில்லை வளைத்துக் கண்ணென்கிற அம்புகளினுல் எய்வார்கள்!’ என்று பயந்து போய்விட்டன. அன்னங்கள் அவர்கள் நடையைக்கண்டு வெட்கிப் போய்விட்டன. குயில்கள் அவர்களுடைய சாரீரத்தைக் கேட்டுச் சங்கோசப்பட்டு, கல்விமானுக்கு முன் மூடன் வாயடங்கியிருக்கிறது போலப் பேசாமல் அடங்கியிருந்தன. ஸ்திரீகள், மரங்களில் புஷ்பித்திருக்கிற கிளைகளை வளைக்க, அவைகள் வளைந்து அவர்கள் பாதத்தில் புஷ்பங்களைச் சொரிந்து வணங்கும். இப்படி மரங்களே அவர்கள் கையில் அகப்பட்டுக் கொண்டு வணங்கி உபசாரம் செய்யுமானுல், ஸ்திரீகளுக்கு வணங்காத புருஷர்களுமுண்டோ? ஐம்புலனேடுங் கூடிய புருஷர்கள், ஸ்திரீகள் கையிலகப்பட்டுக்கொண்டு, அவர்களுக்கு உபசாரஞ்செய்து, அவர்கள் மனத்தின்படி நடந்து கொள்ளுகிறவர்களாயிருந்தால், ஓரறிவோடு கூடிய மரம் வளைந்து கொடுக்குமென்பதற்குச் சந்தேகமுமுண்டா? அவர்களுடைய முகங்களையும் கண்களையும் தாமரைப் புஷ்பங்களும் நீலோற்பலப் புஷ்பங்களுமாக எண்ணிய வண்டுகள், புதிய புஷ்பங்கள் மலர்ந்தனவென்று களித்துப் பறந்து வந்து சூழ்ந்து சுழல, அவைகள் ஓட்டினுலும் அப்பால் போகாமல், புதுமை பார்க்கிறது போல மிகவும் நெருங்கி மொய்த்துக்கொண்டேயிருந்தன. சில மரங்கள், புருஷர்களுடனே பிணங்கிக் கோபமாயிருக்கிற ஸ்திரீகளைப்போல, வளைக்க வளைக்க வளையாமலிருந்தன. சில மரங்கள், சங்

தோஷமாயிருக்கிற ஸ்திரீகள் போல வளைந்து புஷ்பங்களைக் கொடுத்தன.

ஒரு ஸ்திரீ பளிங்குப் பாறையில் தன்னிழல் புஷ்பத்துடன் காண, அதைப் பார்த்து, 'இந்தப் பெண் நம் நாயகனுக்கு அந்தரங்கமானவள் !' என்று கோபித்துக்கொள்ளுவள். ஒரு ஸ்திரீ, தன் புருஷனுடனே பிணங்கிக் கோபமாய்ப் பேசாமலிருக்கிறவள், புஷ்பம் தன் கைக்கு எட்டாதவள் போல அவனுக்குக் கேட்கும்படி ஒரு குயிலைப் பார்த்து, 'எனக்கந்தப் புஷ்பத்தைப் பறித்துக்கொடு,' என்று கும்பிட்டுச் சொன்னாள். ஒரு புருஷன் செவ்விளநீரைப் பார்த்து, 'இது ஸ்திரீகள் தனத்துக்குச் சமானமாயிருக்கின்றது,' என்று சொன்னான். அதற்கு அவனுடைய நாயகி கோபித்துக்கொண்டு, 'எந்த ஸ்திரீகளின் தனத்துக்குச் சரியாய் இருக்கின்றதோ, அதை எனக்குச் சொல்லும் ! சொல்லும் !' என்று மிகக் கொடூரமாகச் சொன்னாள். ஒரு புருஷனுடைய நாயகி அவனுக்குப் பின் புறம் வந்து கண்ணை மூடினாள். அவன், 'யாரெனது கண்ணை மூடினவர் ?' என்று கேட்கவே, அவள் நெருப்புப்போலச் சீறிக் கோபித்துக்கொண்டாள். ஒரு புருஷன் மறதியாய்ப் பின்னொருத்தி பேரைச் சொல்லித் தன் நாயகியை அழைத்துப் புஷ்பம் கொடுத்தான். அதை அவள் கோபத்துடன் வாங்கி மோந்தாள். உடனே அந்தப் புஷ்பம் கருகிப்போயிற்று. ஒருவன் புஷ்பம் பறித்துத் தன் இரண்டு ஸ்திரீகளுக்கும் சரியாய்ப் பங்கிட்டுக் கொடுக்க, ஒருத்தி புஷ்பத்தை இறைத்துவிட்டுக் கண்கள் சிவந்தாள்.

இப்படி அந்தச் சிங்காரச் சோலையிலே பல நாழிகை விளையாடிக்கொண்டிருந்து, அப்பால் தாமரைத் தடாகத்திலிறங்கி விளையாட உத்தேசித்து, ஒரு பெரிய தடாகத்திலே, தேவர்களும் தேவ ரம்பைகளும் பூர்வத்தில் தூருவாசமகரிஷி கோபத்தினாலே சமுத்திரத்தில் எப்படி இறங்கினார்களோ, அப்படி ஸ்திரீ புருஷர் அனைவரும் இறங்கினார்கள்.

# 16. நீர் விளையாட்டுப் படலம்

இப்படிப் பல ஸ்திரீகளும் புருஷர்களும் அத்தடாகத்திலி றங்கி ஒருவர்மேலொருவர் தண்ணீரை வாரி இறைத்துக் கொண்டு விளையாடுகிறபோது, அதிலே ஒரு தாமரைக்கொடி காலில் மிதிபடவே, ஒருத்தி மிகவும் பயந்து, தன் புருஷனைத் தழுவிக்கொண்டாள். ஒரு ஸ்திரீ வாளைமீன் துள்ளுகிறதைக் கண்டு பயந்து, புருஷன் தோளைப் பிடித்துக்கொண்டு இலட்சு மியைப் போலப் பிரகாசித்தாள். ஒருத்தி முகத்தில் புருஷன் தண்ணீரை இறைத்தான். அது பொருமல் அவள் கண்களில் ஜலம் பெருகுவதால், அது தேகம் முழுவதும் நிறைந்தது. ஒரு ஸ்திரீ தன் வாய் நீரைக் கொப்பளித்துத் தன் புருஷன் மேல் உமிழ்ந்துகொண்டிருக்கிறதும், ஒரு ஸ்திரீ கயல் மீன் களைக் கண்டு, ‘தடாகத்துக்கெல்லாங் கண்களுண்டோ!’ என்று புருஷனைக் கேட்பதும், ஒரு ஸ்திரீ தண்ணீரிலே தெரிகிற தன்னிழலைக் கண்டு, ‘நாம் நகைத்தால் இவளுங் கூட நகைக்கிருள். இவள் நமக்குத் தோழி,’ என்றெண் ணிச் சந்தோஷிப்பதும், ஒரு ஸ்திரீ மேகலாபரணம் விழுந்து காலில் சுற்றிக்கொள்ள, பாம்பு சுற்றிக்கொண்டதென்று பயந்து, கண்களைக் கையினுல் மூடிக்கொண்டு, வாய் குழறிக் கூவுகிறதுமாய், இப்படிப் பலர் விளையாடினர். சில ஸ்திரீகள் தங்களுடைய சிவந்த அதரங்களெல்லாம் வெளுக்க, கண் கள் சிவக்க, வஸ்திரங்கள் நழுவ, தண்ணீரில் விளையாடின படியால், அந்தத் தடாகம் புருஷனுக்குச் சமானமாயிருந்தது. நல்லவர்களுடனே சேர்ந்த மூடனும் ஞானவானுகிறதுபோல, ஸ்திரீகளினுடைய கதம்பம், கஸ்தூரி, மஞ்சள், குங்குமம், சந்தனம், அத்தர், புனுகு, சவ்வாது, பன்னீர் முதலிய கலவையின் பரிமளங்களினுல் அத்தடாகத்திலிருக்கின்ற கயல் மீன்களும் பரிமளித்தன.

பின்பு அவர்கள் கரையேறி வந்து வெவ்வேறு வஸ்திரங் களைத் தரித்துக்கொண்டு, ஆபரணங்களைப் பூண்டுகொண்

டார்கள். அவர்கள் அதிலே விளையாடிக்கொண்டிருந்து வெளியே வந்துவிட்டதால், அதிலிருந்த தாமரைப் புஷ்பங்களெல்லாம் குடிபோய்விட்டது போலத் தடாகத்தின் அழகு குலைந்து போயிற்று. இவ்வித நீர் விளையாடலைப் பார்த்துச் சூரியன் தானும் நீர் விளையாட வேண்டுமென்று மேற்குச் சமுத்திரத்திற் போய்க் குதித்தான்.

அப்போது சந்திரன், அதிக சாமர்த்தியத்தோடு, எதிராளிகளுடனே எதிர்த்துத் தோற்றுப்போன ஒருவன் திரும்பவும் நாணமில்லாமல் வந்தது போல, ஸ்திரீகளுடைய முகத்துக்குச் சமானமாகாமல் போய்விட்டவன், அன்றைக்கு வந்து பிரகாசித்தான். அந்தச் சந்திரனுடைய பிரகாசம் பூமியெல்லாம் நிறைந்து, புருஷனோடு கூடியிருக்கிற ஸ்திரீகளுக்குக் கள்ளுப்போலவும், பிரிந்திருக்கிறவர்களுக்கு விஷம் போலவும், பிணங்கி ஊடலோடிருக்கிறவர்களுக்கு ஒரு தூது போலவும் பிரகாசித்தது. அந்த நிலவினுடைய கிரணகாந்தியின் வெண்மையினால், உலகத்திலிருக்கிற ஆறுகளெல்லாம் கங்கையைப் போலவும், சமுத்திரம் திருப்பாற்கடல் போலவும், பருவதங்களெல்லாம் கைலாயம் போலவும் வெளுத்து இருந்தன. அப்போது ஸ்திரீகள் முத்துப் பந்தலிலேயும் கூடாரங்களிலேயும் புஷ்பப் பந்தல்களிலேயும் தங்கள் நாயகர்களோடு பிரவேசித்தார்கள்.

## 17. உண்டாட்டுப் படலம்

அங்கிருந்து போன பின்பு புஷ்பவாசனை நீங்காத அளக பாரத்தையுடைய பெண்கள் இன்பத்தையடையும் பொருட்டுப் பொற்கிண்ணத்தில் தேனை விட்டுப் புசித்தார்கள். தேனோடு மலர்ந்திருக்கிற புஷ்பங்களில் தேனை வார்க்கிறது போலச் செவ்வல்லிப் புஷ்பத்துக்குச் சமானமான அவர்கள் வாயில் தேனை விட்டுக்கொண்டார்கள். பால் போல வெளுத்திருக்கிற கள்ளும், அதைக் கொண்டிருக்கிற

பளிங்கு வட்டிலும், ஸ்திரீகளுடைய கைக்காந்தியினுலே சிவந்து காட்டின. இவ்விதப் பானத்தினுல் வாள் போன்ற அவர்கள் கண்கள் சிவந்தன. பொன் வள்ளத்திலிருக்கிற கள்ளை ஒருத்தி பார்க்க, அதிலே தன்னுடைய முகத்தின் நிழல் தோற்ற, அதைச் சந்திரனென்றெண்ணி, 'சந்திரனே, நீ இராகுவென்கிற பாம்புக்குப் பயப்பட்டு இங்கு வந்து ஒளித்துக்கொண்டாயோ? நல்லது! நான் புருஷனுடனே பிணங்கியிருக்கிற நாளையிலே நீ எனக்கு வெப்பத்தைத் தாராமல் குளிர்ந்திருக்கிறதானுல், உன்னை அப்பாம்பு தீண்டாதபடி காத்து, இந்தக் கள்ளையும் உனக்குக் கொடுக்கிறேன்,' என்ருள்.

ஒருத்தி மாணிக்கக் கிண்ணத்திலிருக்கிற கள்ளில் தன் நிழல் தெரிய, அதைத் தோழியென்றெண்ணி, 'இந்தக் கள்ளுக்கு ஆசை கொண்டு பார்க்கிருயோ? ஆனுல், நீயே சாப்பிடு,' என்ருள். ஒருத்தி, 'இந்த ஜாடியில் கள் நிறைந்திருக்க, நீ இந்த உச்சிஷ்டமானதைப் புசிக்க நினைவுகொண்டு வந்தாயோ?' என்று நகைத்தாள். ஒருத்தி, சந்திரனுடைய கிரணத்தைப் பளிங்கு வள்ளத்தில் கண்டு, அதைக் கள்ளென்று வாயினிடத்தில் வைத்துக் குடிக்க, ஒன்றுமில்லாமையைப் பார்த்து நாணினள். ஒருத்தி, தன்னுடைய கண்களின் நிழல்கள் நிறைந்த ஜாடியில் தெரிய, அந்நிழலை வண்டுகளென்று எண்ணி ஓடினுள். ஒருத்தி, மிகுந்த மயக்கத்தினுல் அரையில் உடுத்தியிருந்த வஸ்திரத்தை அவிழ்த்துப்போட்டு, புஷ்பமாலையை அரையிற் கட்டிக்கொண்டு, அவ்வஸ்திரத்தைத் தலையில் தரித்துக்கொண்டாள். ஒருத்தி, பளிங்கு வள்ளத்திலிருக்கிற கள் கவிழ்ந்து போனது தெரியாமல், அதை எடுத்து வாயிலே வார்த்துப் பார்க்க, அதிலொன்றுமில்லாததனுல் பின் பக்கத்திலேயிருக்குமென்றெண்ணி வள்ளத்தைத் திருப்பி வாயிலே வைத்தாள். ஒருத்தி தன்னுடைய இருதயத்திலிருக்கிற நாயகன் கள் குடிக்கிறதில்லையென்று, தானும் குடியாமல் கிளியுடனே பேசிக்கொண்டிருந்தாள்.

இப்படிப் பற்பல ஸ்திரீகள் கள்ளினுடைய மயக்கத்தினுல் கண்கள் சிவந்து, புருவங்களை நெறித்துக்கொண்டு, பற்களினுல் உதட்டைக் கடித்துக் கைகளை அசைத்துக்கொண்டு ஆடுகிறபடியினுல், அபிநயம் பிடிக்கிறவர்களைப் போலக் காணப்பட்டார்கள். தொண்டைக்கனி போலச் சிவந்திருக்கிற அவர்கள் வாய் ஈறுகளில் நீரூற்று வர, முலைக்கச்சின் முடிகள் இற்றுப்போக, கட்டியிருக்கிற வஸ்திரங்கள் விழுந்து போக, தலை மயிர் சரிய, இவ்விதக் கோலாகலமாக அந்தக் கள் செய்தபடியால், அக்கள்ளும் நாயகனைப் போலவேயிருந்தது. அவர்கள் சரீரங்களில் வியர்வை தோன்றுவது, குடித்த கள் வெளியில் புறப்படுவதுபோலிருந்தது. ஒருத்தி, தன் நாயகனை அழைத்துவரச்சொல்லித் தாதியை அனுப்பினுள் ; அவள் உடனே அழைத்து வாராதபடியால், பின்னும் சில தாதிகளை மேலும் மேலும் அனுப்பினுள் ; அவர்கள் திரும்பி வருகிற மட்டும் மனந்தாளாமல் தானும் புறப்பட்டு நடந்தாள். ஒருத்தியின் வள்ளத்திலிருக்கிற கள்ளில் ஈக்கள் மொய்த்துக்கொண்டிருக்கிறபடியால், செங்கழுநீர்க் கொடியினுல் கள்ளை உறிந்து குடித்தாள். ஒருத்தி, தோழியைப்பார்த்து, ‘ என் வருத்தமெல்லாம் என்னுடைய நாயகனுக்குச் சொல்லி அழைத்து வருகிருயா, அல்லது என் மனத்தைப்போல நீயும் அவனிடத்திலேயே மயங்கிக் கிடக்கிருயா? சொல்,’ என்ருள். அது கேட்டு அவள் நகைத்து, உடனே கண்களில் முத்துமுத்தாய் ஜலத்தை விட்டாள். ஒருத்தி, தன் நாயகனிடத்தில் தூதனுப்பியிருந்தாள். அவன் வருகிருனென்ற செய்தி தெரிந்து, கதவைச் சாத்திக்கொண்டு, தன் மனத்தில் எதுவோ ஒன்றை நினைத்துத் தன் கண்கள் சிவக்க இருந்துவிட்டாள். ஒருத்தி, புருஷன் வரவே, கோபித்துக்கொண்டு செம்பஞ்சூட்டிய தன் காலினுல் உதைத்தாள். அது படவே, அவன் சரீரமெங்கும் காமவிரை விரைத்து முளைகள் புறப்பட்டதுபோல மயிர்க்கூச்சிட்டுப் புளகாங்கிதனுனுன். ஒருத்தி, தன் நாயகன் சீக்கிரம் வாராமையால் அவன் பேரைச் சொல்

லிக்கொண்டிருக்கிற கிளியைச் சீறிக் கோபித்துப் பார்த் தாள். ஒருத்தி, புருஷன் வரவே, புஷ்ப மாலையையெடுத்து அவன் தோள்களை இறுகக் கட்டினுள். அவன் மகா பல சாலியாயிருந்தும்அந்தக்கட்டையறுக்கமாட்டாமல்,அக்கட்டி லேயே அகப்பட்டுக்கொண்டிருந்தான். ஒருத்தி, தன் புருஷன் வருகிற வழியைப்பார்த்துப் பார்த்துத் திரும்பிக்கூடாரத்திலே மேகத்திலேமின்னல் பிரகாசிக்கிறதுபோல அடிக்கடி புகுந்து, வெளியே வந்தாள். ஒருத்தி, தன் நாயகன் வரவே, எழுந்து சேவித்தாள். அவன், ‘இதேது! ஒரு நாளுமில்லாத விநயம் இன்றைக்கு நூதனமாக வருவானேன்!’ என்று ஆச்சரியப் பட்டு மிகவும் பயந்தான். ஒருத்தி, தன் புருஷன் வரவே, மார்பிலுதைத்தாள். அவன் தன் மார்பிலிருக்கிற முத்தாரம் முதலியவைகள் அவள் காலில் உறுத்துமென்று கையினுலே மூடிக்கொண்டான். அது கண்டு அவள், ‘உம் இருதயத்தி லிருக்கிற ஸ்திரீயின்மேல் உதைபடுமென்றல்லவா மூடிக் கொண்டீர்?’ என்று முன்னிலும் அதிக கோபமானுள். ஒருத்தி, புருஷனேடு கோபித்துக்கொண்டு பொய் உறக்க மாய்ப் படுத்திருந்தாள். அவன் அது கண்டு பயந்து, ‘இவளை இப்போது தொட்டால் மிகுதியுங் கோபங்கொள் வாள்!’ என்று பேசாமல் ஒரு புறத்தில் படுத்திருந்தான். அப்போது அவள் கலவியை அபேட்சித்து, திடுக்கிட்டுப் பயந்தவள் போலப் புருஷனைத் தழுவிக்கொண்டாள். இவ் வண்ணம் அன்றைய தினம் யாவரும் அதிக மயக்கத்தால் விரகமீறியிருந்தபடியால், மன்மதனுங் கள் குடித்தவன் போன் றிருந்தனன். அன்று இராத்திரி ஸ்திரீகளும் புருஷர்களும் இவ்வாறு இன்பத்தை அனுபவித்துக்கொண்டிருந்தார்கள்.

# 18. எதிர்கோட்படலம்

அப்போது சந்திரன் தரும சிந்தையில்லாதவனுடைய பாக்கியம் போல ஒளி மழுங்கிப் போனுன். உடனே சூரியன் ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய கௌஸ்துவாபரணம் போல உதய கிரியிலே பிரகாசித்தான். தசரதமகாராஜர் எழுந்து, தமது சேனு சமுத்திரத்துடனே புறப்பட்டு, கங்கா நதி வந்து சேர்ந்தார். அந்தக்கங்கை பாதாள லோகமட்டும் ஆழ மாகித் தண்ணீர் நிறைந்து பிரவாகமாயிருந்தும், அந்தச் சேனு சமுத்திரமிறங்கி ஜலம் அருந்தவே சமுத்திரசங்க முகத் துவாரமும் நீரில்லாமல் வறண்டு போய்விட்டது. அதனுல், அந்தச் சமுத்திரத்திலிருந்து இந்தக் கங்காநதி தீர்த்தத்தைச் சாப்பிட்டுக்கொண்டிருந்த ஜீவஜந்துக்களும் ஏக்குற்று மயங்கின. பிறகு அனைவரும் கங்கையைக்கடந்து மிதிலாபுரிப் பட்டணத்தின் சமீபத்திற் போய்ச் சேர்ந்தனர்.

அவர்கள் வருகிற சமாசாரம் ஜனக மகாராஜர் கேள்விப் பட்டு, அதிக மகிழ்ச்சியுற்று, யானை குதிரை தேர் காலாள் முதலிய சேனு சமுத்திரத்துடனே சம்பிரமமாய் இரதாரூட ராய்ப் புறப்பட்டுச் சூரியனைச் சந்திக்கிற சந்திரனைப்போல வந்தார். அப்போது அந்தச் சேனையுடனே இந்தச் சேனையும் கலந்தது எப்படியிருந்ததென்ருல், ஸ்ரீ மகாலட்சுமியைப் பெற்ற பாற்கடலானது, மற்ற உப்பு, நன்னீர், தயிர், நெய், தேன், கருப்பஞ்சாறு என்று சொல்லப்பட்ட அறுவகைச் சமுத்திரமுங் கூடி வருகிற பிரவாகத்தில் கலந்திருக்கிறது போல இருந்தது. முரசு பேரிகை முதலான வாத்தியங் களின் முழக்கமும், யானைகள் பிளிறுகிற ஓசையும், குதிரைகள் கனைக்கிற சத்தமும், இரதங்களினுடைய முழக்கமும், மனிதர்களுடைய சந்தோஷச் சத்தமும் அனேக சமுத்திரங்கூடிச் சத்திக்கிறது போலச் சத்தித்தன. குடை களும், கொடிகளும், ஆலவட்டங்களும், மயில் பிச்சங் களும், மகர தோரணங்களும் ஆகாயமெல்லாம் நிறைந்தன.

அவ்விடத்தில் பாக்கியலட்சுமி நிர்த்தனமாடினுள். ஜனக மகாராஜர் தேர் விட்டிறங்கித் தசரதமகாராஜாவின் சமீபத் திற்கு வரக்கண்ட அவரும் அதிக இஷ்டத்துடனே கைலாகு தந்து அவரைத் தம் இரதத்திலேற்றிக்கொண்டு, மிகுந்த ஆனந்தத்துடனே மார்புறத் தழுவி, 'உம்முடைய பந்து வர்க்கத்தார் யாவரும் சுகமோ?' என்று வினுவிச் சில நாழிகை வசனித்துக்கொண்டிருந்த பிற்பாடு, ஜனகமகா ராஜாவை முன்னே நடக்கச்சொல்லி ஆக்கியாபித்தார். அவ ரும் அப்படியே நடந்தார். ஸ்ரீராமரும் இலட்சுமணருடனே, விலகியிருந்த தசரத மகாராஜாவினுடைய பிராணன் வந்து கூடினது போல அவர் சமீபத்தில் வந்தார். அந்தச் சேனு சமுத்திரம் மிகுந்த சந்தோஷத்துடனே ஸ்ரீராமரைப் பார்த் துச் சேவிக்க, இராமர் தம் தகப்பனுரைச் சேவித்தார். அவர் அதிக பிரியத்துடனே தம் மார்பில் ஸ்ரீராமருடைய திருமேனி மறையும்படி தழுவி மகிழ்ந்தார். அப்போது பரதர் ஸ்ரீராமரைக்கண்டு, கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருகச் சேவித்தார். ஸ்ரீராமர் தம்மைத் தகப்பனுர் எவ்வளவு அன் போடு தழுவிக்கொண்டாரோ, அவ்வளவு அன்போடு பரத ரைத் தழுவி மகிழ்ந்தார். இலட்சுமணர் தசரத மகாராஜாவை யும் பரதரையுஞ் சேவித்தார். சத்துருக்கர் ஸ்ரீராமரையும் இலட்சுமணரையும் சேவித்தார். அவர்கள் மிகுந்த சந்தோஷ மடைந்திருந்தார்கள்.

தம் நான்கு பிள்ளைகளும் இருக்கு, யசுர், சாமம், அதர் வணம் என்கிற நான்கு வேதங்கள் போல எதிரே எழுந்தருளி யிருக்க வீற்றிருந்த தசரத மகாராஜர், ஸ்ரீராமரைப் பார்த்து, "அப்பா, குழந்தாய், நீ முன்னே நட," என்று ஆக்கியாபித் தார். அவரும் அப்படியே இரதமேறித் தம்பிமார் மூவரும் குதிரைகளின் மேலேறித் தம்மைச் சூழ்ந்து வர, அனேக கீத வாத்தியங்கள் முழங்க, சேனு சமுத்திரத்துடனே புறப்பட்டு, முன்னே நடந்தார். மிதுலாபுரிப் பட்டணத்து வீதியில் நடக் கிற போது அப்பட்டணத்திலுள்ள ராஜ கன்னிகைகள் முத

லான யாவரும், தேவாதிதேவராகிய ஸ்ரீராமரே எழுந்தருளிய படியால், அவர் திருமேனியைத் தரிசிக்கும்பொருட்டு, வீதியி னிடத்தில் வந்து கூடினுர்கள்.

## 19. உலாவியற்படலம்

அந்த ஸ்திரீகளெல்லாம் மான் கூட்டங்கள் வருகிறது போலவும், மயில் கூட்டங்கள் நிற்கிறது போலவும், மின்னற் கூட்டங்கள் பிரகாசிக்கிறது .போலவும் வந்து நெருங்கி, அவர்கள் அளகபாரத்தில் அழகு பெற முடித்திருக்கும் புஷ்ப வாசனை நிமித்தம் விருந்தாக வந்திருக்கிற வண்டுகள் எழும் பிப் பறக்க, ரூபலாவணியத்தோடு மொய்த்துக்கொண்டார் கள். தங்கள் அளகபாரம் அவிழ்ந்து விழுகிறதைப் பாரா மலும், மேகலாபரணங்கள் அறுந்து சிந்துகிறதைப் பாரா மலும், வஸ்திரம் சரிந்து போகிறதை எண்ணுமலும், தன பாரத்தினுலே மெலிந்த இடையானது தடுமாறுகிற வருத்த மும் பாராமலும் நெருங்கி வந்து மொய்த்துக்கொண்டு, 'இவரைக் கண்ணுல் காணக் கிடைத்தது நமது பாக்கியம்! பெண் சரீரமெடுத்ததற்குப் பலன் இன்றல்லவா கிடைத்தது!' என்று சொல்லி நெடுங்காலம் மழையில்லாமல் தண்ணீர் கிடையாத காலத்திலே மிகவும் தாகத்தோடு அவாக்கொண் டிருக்கிற மான் கூட்டங்கள் ஜலத்தோடு நிரம்பியிருக்கிற ஒரு தடாகத்தைக் கண்டு மேன்மேலும் போய் வீழ்கிறது போல நிறைந்து நெருங்கினுர்கள். கால் சிலம்பு முதலானவை சத்திக்க, இளைத்திருக்கிற இடை நோவ, 'அவரிடத்திற் போயிருக்கிற மனத்தை ஓடிப் பிடிப்போம்!' என்று போகிற வர்கள் போல ஓடித் தொடர்ந்தார்கள். சில ஸ்திரீகள், 'அகலிகையின் சாபத்தை விமோசனம் செய்த பாதார விந்தத்தையும், சீதை நிமித்தமாக வில் வளைத்து ஒடித்த சௌந்தரியமான தோள்களையும் பார்க்கவேண்டும்!' என்கிற

அபேட்சையினுலே, பள்ளத்தில் பாய்கிற வெள்ளம் போலச் சீக்கிரத்தில் வந்து மொய்த்துக்கொண்டார்கள்.

அப்போது, ஸ்ரீராமர் வீதியில் நடக்கிறவர் போலக் காட்டி, அந்த ஸ்திரீகளுடைய கண்கள் வழியாய்ப் புகுந்து மனத்துள் பிரவேசித்தபடியால், கண்ணன் என்கிற தம் திரு நாமத்தைச் சகலருக்கும் இன்னதென்று தோன்றும்படி செய் தார். ஒருத்தி, 'இத்தனை பேர்களுடைய கண்களிலும் அகப் படாமற்போகிற இந்தப் புருஷனைத் தன் கண்ணுள் அடங் கும்படி செய்துகொண்ட சீதையல்லவோ பெரியவள் !' என்று பெருமூச்செறிந்தாள். ஒருத்தி, வஸ்திரம், வளையல், அழகு, இளமை, மனம், தேஜசு, வச்சிரகசிதமான ஆப ரணம், நாணம், நிறை என்னும் இத்தனையும் ஒழிந்து போயும், தன் பிராணனை மாத்திரந் தாங்கிக்கொண்டிருந்தாள். ஒருத்தி, 'ஸ்திரீகள் கறுத்த கண்களினுல் பார்த்தபடியால், அக்கண் ணெளிகளெல்லாம் ஸ்ரீராமனுடைய திருமேனியிற்பாய்ந்து கறுத்ததோ, அல்லது ஸ்ரீராமனுடைய கறுத்த திருமேனியே அந்த ஸ்திரீ கூட்டங்களின் பார்வையில் பாய்ந்து கறுத் ததோ ? அதுதான் தோன்றவில்லை!' என்ருள். மாந்தளிருக் குச் சமானமான சரீரத்தையும் மூன்ரும் பிறைச் சந்திரனைப் போன்ற நெற்றியையுமுடைய ஒரு ஸ்திரீ, மன்மதன் எதிரே நின்று புஷ்பபாணங்கள் எய்கிறதைக் கண்ணினுல் கண்டு, 'நம்முடைய ராஜாவினுடைய ஆக்கினையையும் பாராமல், அவருக்கு மருமகனுகிய இந்த வீரனுடைய சாமர்த்தியத்தை யும் பாராமல், இவனுரோ ஒருவன் ஸ்திரீகள் மேலே இப்படி ஏன் அம்புகளை எய்கிருன் ?' என்ருள். வில்லைப் போன்ற புருவங்களை உடைய ஒருத்தி, ஸ்ரீராமரைப் பார்க்கிற அபேட் சையினுலே தன்னைத்தான் மறந்தாள். மையைப்போல் கூந் தலும் சிவந்த வாயுமுடைய ஒருத்தி, ஸ்ரீராமரைப் பார்த்து மனமுருகி, 'இந்த வஞ்சகன் எனது மனத்துக்குள்ளே புகுந்துகொண்டான் ! இவன் திரும்பிப் போகாதபடியால், கண்களென்கிற வாயிலை மூடிக்கொண்டேன். அடி தோழி,

என்னைக் கொண்டுபோய்ப் படுக்கையறையில் சேர்த்து விடு!' என்று சொன்னாள். ஒருத்தி, மன்மதனுடைய பாணம் சரீரமெல்லாம் துளைக்கிறதையும் பாராமல், கட்டிக்கொண்டிருக்கிற வஸ்திரம் கலைந்து போவதையும் கருதாமல், ஸ்ரீராமருடைய திருமேனியைப் பார்க்கிற மற்ற ஸ்திரீகளையெல்லாம் கோபத்துடனே கண்ணில் நெருப்புப்பொறி பறக்கப் பார்த்தாள். களித்து, மதர்த்து, நீண்டு, கள்ளத்தை ஒடுக்கிக்கொண்டு, சிவந்து, வெளுத்து, கறுத்து, வேல் போன்ற கண்ணையுடைய ஒருத்தி, ஸ்ரீராமர் வருகிற உலாவைப் பார்க்கிறதற்கு அதிக சந்தோஷத்துடனே மனங் குளிர்ச்சியாய் வந்தாள்; அவருடைய சுந்தரத்தைப் பார்த்தாள்; உடனே மன்மதபாணப் பிரயோகத்தினால் காமாக்கினியெழும்ப, மன வெறுப்புடனே திரும்பி வீட்டுக்குப் போய்விட்டாள். ஒருத்தி, ஸ்ரீராமருடைய திருமேனியைப் பார்க்கிறதற்கு முன்னே ஸ்திரீ கூட்டங்கள் வந்து நெருங்கிவிட்டதால், அவர்களுடைய இடைகளின் சந்துகளில் தன் கண்களை வைத்துப் பார்த்தாள். ஸ்ரீராமருடைய தோள்களைக் கண்ட பேர்கள், அந்தத் தோள்களையே பார்த்துக்கொண்டிருந்தார்கள்; கைகளைக் கண்ட பேர்கள், அந்தக் கைகளையே பார்த்துக்கொண்டிருந்தார்கள்; செந்தாமரைப் புஷ்பம் போலும் அவருடைய உபயசரணாரவிந்தங்களைக் கண்ட பேர்கள், அவைகளையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுள் ஒருத்தியாகிலும் ஸ்ரீராமருடைய திருமேனியை முழுதுங் கண்டு தரிசித்தவளல்ல. ஏனெனில், உலகத்திலுண்டாகிய ஆறு சமயங்களுக்கும் ஒரே கடவுளாயிருந்தும், அவர் அந்தச் சமயங்களுக்குப் பலராகத் தோன்றுகிறது போல, ஸ்ரீராமபிரான் தாம் ஒருவராகவேயிருந்தும் பார்ப்பவர்களுக்குப் பலவாறு தோன்றினார்.

ஒருத்தி, மேகலாபரணங்களும் பாதச் சிலம்புகளும் சத்திக்க வெகு துரிதமாய் வந்தாள்; ஆனால், திரும்பிப் போகையில் தாதிகள் கைலாகு கொடுக்கப் போனாள். தாமரையின்

மொக்கைப் போன்ற தனங்களையுடைய ஒருத்தி, ஸ்ரீராமனைப் பார்த்து, ‘ஐயா, உமது மனம் இரும்பு. ஆயினும், ஒரு ஸ்திரீ நிமித்தம் பர்வதம் போன்றிருந்த வில்லையொடித்த புண்ணிய புருஷராகிய நீர், இந்த மன்மதனுடைய கரும்பு வில்லை யொடித்து என்னை இரட்சிக்க மாட்டீரோ?’ என்றாள். ஒருத்தி, ‘தேரின்மேல் போகிறவன், அதை விட்டு, என் எதிரே நிற்கின்றான்! இதென்ன மந்திரசத்தியோ, அல்லது நான் கனவு காண்கிறேனோ! ஆ! இதென்ன!’ என்று, இராமரது உருவெளித் தோற்றத்தைக் கண்டு சொன்னாள். ஒருத்தி, தன் மனத்தைத் தானே அவரிடத்தில் தூதனுப்பியதாக எண்ணி, யோசனை செய்து, ‘சீதை செய்த புண்ணியமே புண்ணியம்!’ என்றாள். தங்கப் பிரதிமை போலச் சௌந்தரியமான ஒருத்தி, தன் பாங்கியைக் கும்பிட்டு, ‘இந்த மகாபுருஷனை மன்மதனைக்கொண்டே படத்திலே எழுதலாமா?’ என்றாள். ஒருத்தி, ‘மனிதனுக்கு இத்தனை லட்சணங்களுண்டாயிருக்குமா? இரா. ஸ்ரீ மகாவிஷ்ணுவே இவர்; இது உங்களுக்குப் பின்பு தெரியும்,’ என்றாள். ஒருத்தி, ‘இந்தப் புருஷன் இந்தப் பட்டணத்துக்கு வந்தது ஜனகராஜர் இதுவரைக்குஞ் செய்த தவபலத்தாலே,’ என்றாள். ஒருத்தி, ‘இந்தப் புருஷன் தனியே ஒரு நாளைக்கு என் கனவிலேயாகிலும் வருவானோ?’ என்றாள். ஒருத்தி, ‘இத்தனை ஸ்திரீகள் ஆசையுடனே பார்த்து மயங்க, இவன் சிறிதாகிலும் எண்ணிப் பாராமல் போகிறானே! இவன் கிருபை என்கிறதைக் கண்டு மறியானோ? ஐயோ! இவன் கடூரன்!’ என்றாள்.

இவ்வாறு ஸ்ரீராமரைப் பார்க்கிறவர்களுக்கு மிதமில்லை. ஆனால், அவருடைய திருவழகுக்கும் மிதமில்லை. மன்மதன் தன் அம்பறாத்தூணியிலிருந்த அம்புகளை எல்லாம் செலவு செய்துவிட்டு, அப்பால் என்ன செய்யப்போகிறான், அரையில் கட்டியிருக்கிற வாளின் மேலேயும் கையை வைத்தான். அன்றைய தினம் மன்மதன் எய்த பாணம் பூமியெல்லாம் நிறைந்து தெய்வலோகத்துக்குப் போய், தேவ ரம்பைக

ளுடைய மார்பிலேயும் தைத்தது. ஒருத்தி, ஸ்ரீராமருடைய தேர் போகிறதும் திரும்பி வருகிறதும் மறுபடி போகிறதுமாய் இருக்கிறதைப் பார்த்து, கால் சிவக்க, ஊசலாடுகிறது போலவே உழன்று திரிந்தாள். ஒருத்தி, ஸ்ரீராமரைப் பார்த்து வருகிறவர்களைக் கண்டு, 'என் மனம் அங்குப் போயிற்று ; அதை நீர் கண்டீரா ?' என்று நாணமில்லாமல் வினவினள். ஒருத்தி, 'இவன் வமிசத்தாருள் ஒருவர், ஒரு புருவுக்காகத் தம் உடலைக் கொடுத்து இரட்சித்தார். இவன் நம்முடைய ஜீவனை நமக்குக் கொடுக்கிறதாகவுமில்லையே! இந்தக் கடூர புத்தி இவனுக்கு எங்கேயிருந்து உண்டாயிற்று ?' என்றாள். ஒருத்தி, 'இவன் அந்தப் பெரிய வில்லையொடித்தது சீதையின்மேலாசையினாலன்று ; ஆனால், தான் அடைந்திருக்கிற கல்வி சாமர்த்தியம் எல்லாருக்கும் தெரியவேண்டுமென்றே ஒடித்தான்,' என்றாள். ஒருத்தி, அதிக கோபத்துடனே மயங்கி, 'இந்தச் சாமர்த்தியன் முன்னே மன்மதன் பயமில்லாமல் பாணங்களைத் தொடுத்து நம்மைக் கொல்லுகிறானே! மன்மதனைப்பார்க்கிலும் யார் பலவான் ?' என்று சொன்னாள்.

இவ்விதமாக ஸ்திரீகள் ஆசையினால் சோர்ந்து மயங்கியிருக்க, ஸ்ரீராமர் வசிஷ்டரும் விசுவாமித்திரரும் எழுந்தருளியிருக்கின்ற திருமண்டபம் போய்ச் சேர்ந்து, அவர்களிருவரையும் சேவித்துக்கொண்டு, அவர்கள் அருளிச்செய்ய, தம்பிமார்கள் நிழல் போலச் சூழ்ந்திருக்க, இரத்தின சிங்காதனத்திலே திருக்கோலத்தோடு எழுந்தருளியிருந்தார். அப்போது தசரத மகாராஜர் ராஜகூட்டத்தோடு நட்சத்திரங்களுடனே வருகிற பூரணச் சந்திரனைப்போல வந்து சேர்ந்து, வசிஷ்டர் விசுவாமித்திரர் இருவரையுஞ் சேவித்துக்கொண்டு, தேவர்கள் புஷ்பமாரி பெய்ய, சபா மண்டபத்தில் தேவேந்திரனுடைய திருவோலக்கம் போல ஒரு சிங்காதனத்தில் எழுந்தருளியிருந்தார்.

# 20. கோலங்காண் படலம்

அந்தச் சபையிலே, கங்கர், குலிங்கர், சிங்களர், சேரலர், பாண்டியர், அங்கர், வங்கர், வந்தியர், வங்களர், மாளுவர், கொங்கணர், சேதியர், சோழர், மராடர், மாகதர், மச்சர், மிலேச்சர், இலாடர், விராடர், சீனர், சிந்தியர் சோனகர், துருக்கர் முதலான ராஜாக்களும் சூழ்ந்திருக்க ஸ்திரீகூட்டங்கள் வெண்சாமரை வீச, பல ஸ்திரீகள் பல்லாண்டு பாட, பல ஸ்திரீகள் யாழ் வீணை முதலியவைகள் வாசிக்க, பூரணச் சந்திரனைப்போன்ற முத்துக் குடை பிரகாசிக்க, சம்பிரமத்துடனே ராஜாதிராஜரான தசரத மகாராஜர் வீற்றிருந்தார்.

அப்போது வசிஷ்ட மாமுனிவர் ஜனகமகாராஜரைப் பார்த்து, ‘உம் குமாரத்தியாகிய சீதையை அழைப்பியும்,’ என்று சொன்னார். ஜனகர் அதைக் கேட்டு நமஸ்காரஞ் செய்து, அதிக சந்தோஷத்துடனே எதிரே நிற்கிற ஸ்திரீகளைப் பார்த்து, ‘ஸ்திரீ ரத்தினமான சீதையை அழைத்து வாருங்கள்,’ என்று ஆக்கியாபித்தார். அவர்கள் மிகுந்த சந்தோஷத்துடனே வேகமாயோடிச் சீதாலட்சுமியின் தாதிகளிடம் சொன்னார்கள். அவர்கள் சந்தோஷ சித்தராய், அமிர்தத்துக்கு ருசியுண்டாக்குகிறவர்கள் போல, ஆபரணங்கள் திருமேனியை மறைக்குமென்பதும் தெரியாமல், சீதையைச் சிங்காரம் செய்தார்கள். அந்தச் சீதாலட்சுமி ஸ்ரீராமபிரானை வருகிற போது கண்டு, அவருடைய திருமேனி நிறத்தைத் தன் மனத்திலே பதிய வைத்திருக்கிறபடியினால், அது சரீரமெல்லாம் பொங்கிப் பொங்கி மேல் நோக்கிச் சிரசிலேயிருந்து அந்த நிறம் வடிந்து அனேக கொடிகளாயோடி உலகமெல்லாம் பரவியது போலிருக்கிற அவள் கூந்தலில் மேகத்தில் பிரகாசிக்கின்ற சந்திரனைப்போலும் முல்லை, ஜாதி, மல்லிகை முதலான சுகந்த பரிமள புஷ்பங்களை முடித்தார்கள். இளஞ்சந்திரனுக்குச் சமானமான நெற்றி

யிலே இரத்தினச் சுட்டி பிரகாசிக்க, அளகபந்தி பூட்டி னூர்கள்; சீதை, 'சிவனுடைய வில்லையொடித்த வீரன் அன்றைய தினம் நாம் கண்ட புருஷனே அல்லவோ!' என் றெண்ணியதால் அவள் மனம் அசைகிறது போல அசைந்து கொண்டிருக்கிற இரத்தினக் குழைகளைக் காதில் பூட்டினூர் கள்; பாஞ்சசன்னிய சங்கத்துக்குச் சமானமான திருக்கழுத் தில், ஹாரம், பதக்கம், சரப்பளி முதலான ஆபரணங்களைத் தரித்தார்கள். ஸ்திரீ சாதிகளுக்கெல்லாம் கழுத்துக்கு மாங் கலியமாயிருக்கிற இந்த இலட்சுமிக்கு அழகு பிறக்கும்படி என்ன ஆபரணங்கள் பூட்டப்போகிறூர்கள்? கல்வியறியாத வன், அறிந்தவர்களைச் சேர்ந்தால், தானும் அறிந்தவனுகிறது போல, திருமேனியினுடைய காந்தியினுலே வெண்முத்துஞ் சிவந்து காட்டிற்று. பராபர வஸ்துவைப்போல உண்டோ இல்லையோ என்கிற இடைக்குப் பாரமாகிய தனங்களிலே கதம்பம் கஸ்தூரிமுதலிய பரிமள திரவியாதிகளைப் பூசினூர் கள்; பாதங்களிலே பொற்சிலம்பு முதலான ஆபரணங்களைப் பூட்டினூர்கள்; விஷமும் அமிர்தமும் கூட்டிச் செய்தவை போன்றிருக்கிற விசாலமான நேத்திரங்களுக்கு மையிட்டார் கள்; சுவர்க்கமத்திய பாதாளமென்கிற திரிலோகங்களிலும் சஞ்சரிக்கிற ஸ்திரீகளுக்கெல்லாம் திலகமான சீதைக்கு ஒரு திலகமுமிட்டார்கள்; பிரகாசம்பொருந்திய பீதாம்பரம் தரித்து, இரத்தினகசிதமான மேகலாபரணமும் பூட்டினூர்கள். பஞ்ச வர்ணக் கிளி போலப் பேசுகிற சீதையினுடைய திருவழகைப் பார்த்து, சிங்காரித்த ஸ்திரீகளே மெய் சோர்ந்து மயங்கித் திகைத்துப் போனூர்கள். புருஷ ஜாதிக்கும் ஸ்திரீ ஜாதிக் கும் மனமென்கிறது ஒரு தன்மையதா யிருக்கிறபடியினூலும், உலகங்களிலிருக்கிற அழகுகளெல்லாம் ஒரே இடத்தில் வந்து கூடியிருக்கக் கண்டபடியினூலும் அந்த ஸ்திரீகள் அப்படி மயங்கிச் சோர்ந்தார்கள்; பின்பு கர்ப்பூரதீபம் முதலிய திருஷ்டி பரிகாரம்செய்து, தெய்வப்பிரார்த்தனைகளும் செய்து, பிராமணர்களுக்கும் தானங்கள் கொடுத்து, சீதையை ராஜ

சபைக்கு அழைத்துக்கொண்டு வருகிற போது, அந்தச் சீதையினுடைய ஆபரணங்களிலே இழைத்திருக்கிற நவரத்தினத்தினுடைய காந்தி பூமியிலே பற்றிப் பாய்ந்து பிரகாசிக்கிறது எப்படியிருந்ததென்ருல்,இந்தப் பூமிதேவியானவள், தன் குமாரத்தியினுடைய பாதங்கள் நடக்கிற போது வருந்துமென்று புஷ்பங்களும் தளிர்களும் விதம் விதமாய்ப்பரப்பினது போல இருந்தது. அப்போது அன்னப்பட்சிகள், 'உம்முடைய நடைக்குத் தோற்றுப் போனேம்! இனி உம்முடைய பாதாரவிந்தமே கதி!' என்று வணங்கிச் சேவித்துக்கொண்டு வருகிறதுபோல இரு பக்கத்திலும் ஸ்திரீகள் வெண்சாமரை வீச, சீதை பிடி போல நடந்தாள். இப்படி நடக்கும் சீதையினுடைய அழகைப் பார்க்க, ஆகாயத்தில் பிரகாசிக்கிற அருந்ததி அனேக நட்சத்திரங்களுடனே வந்திருக்கிறது போல இட்டிருக்கிற முத்துப்பந்தலின் நிழலில் சீதை வந்து, ஆபரணங்களினுடைய பிரகாசமும், புஷ்பங்களினுடைய வாசனையும், சந்தனத்தினுடைய சீதளமும், மின்னல் போலப் பிரகாசிக்கிற திருமேனியினுடைய ஒளியும் பிரகாசிக்க, அன்னமும் அரம்பையும் அமிர்தமும் நாண, ராஜர்களிருக்கிற சபா மண்டபம் சேர்ந்தாள். அச்சபையிலிருந்த ராஜாக்களும் ஸ்திரீகளும் சீதையைக் கண்டு ஆச்சரிய சித்தராய், கண் இமையாமல் சுவாசம் விடாமல் சித்திரப் பதுமை போலத் திகைத்துப் பார்த்தார்கள். ஸ்ரீராமரும் திகைத்து, 'நாம் வருகிற போது கன்னி மாடத்தில் கண்டோமே! அந்த ஸ்திரீயோ இவள், அல்லவோ!' என்ற ஐயத்தோடிருந்தவர், சீதையைக் காணவே, 'அந்த ஸ்திரீரத்தினந்தான்,' என்று ஐயந்தீர்ந்து, பூர்வத்திலே அமிர்தத்தைக் கண்ட தேவேந்திரனைப்போலச் சந்தோஷத்தை அடைந்திருந்தார்; 'அக்கன்னிகை நம்முடைய மனத்திலிருந்தும், வெளியிலும் தோற்றுவாளோ!' என்று தாமே நினைத்துக்கொண்டிருந்தார். வசிஷ்ட மாமுனிவர், "நாம் செய்த தவத்தினுல் ஸ்ரீமந்நாராயணரே ஸ்ரீ ராமனுய் அவதரித்திருக்கிறபடியினுலே, இந்தச்

சீதையும் அச்செந்தாமரை மலரில் வாசமாயிருக்கிற ஸ்ரீ மகாலட்சுமிதான்,'' என்று ஐயமறச் சந்தோஷமானுர். சக்கரவர்த்தியாராகிய தசரதர் கண்டு, 'நாம் இது வரைக்கும் ஏக சக்கரேஸ்வரனுய் உலகத்தை ஆண்டுகொண்டிருந்த போதிலும், இன்றைக்கல்லவா இலட்சுமி விலாசத்தைப் பெற்றுப் பாக்கியவானுனேம்!' என்றெண்ணி மிகவும் சந்தோஷமானுர். விசுவாமித்திர மகரிஷியும் பார்த்து, 'இந்த ரூபலாவணியமான கன்னிகை தனக்குக் கிடைப்பதை ஸ்ரீராமனறிந்திருந்தால், அந்த வில்லே மாத்திரமா ஒடிப்பான்? சத்தகுல பர்வதங்களேயும் தூளாக்கிப் போடுவானே!' என்றெண்ணி, அதிக சந்தோஷமானுர்.

அப்போது, அந்த மகரிஷிகளும், ஸ்ரீராமரும், தசரதரும் தவிர, மற்ற ஜனங்களெல்லாம் சீதையை நமஸ்காரம் பண்ணினுர்கள். சீதை மகரிஷிகளேச் சேவித்துக்கொண்டு, ராஜாதி ராஜரான தசரதரையும் சேவித்து, சந்தோஷ சாகரத்தில் மூழ்கியிருக்கின்ற தன் தகப்பனுருடைய சிங்காதனத்தில் வீற்றிருந்தாள். சீதை, இராமர் கன்னி மாடத்திலிருந்து தான் பார்த்த இராசகுமாரர்தானே, அல்லவோ என்கிற சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ளத் தன் கைவளேயலேத் திருத்துகிற பாவனேயாகக் கடைக்கண்ணினுல் பார்த்து, அவர்தானென்று அறிந்து, அஞ்ஞானம் போய் மெய்ஞ்ஞானம் உண்டானவர்களேப்போல ஆனந்தமடைந்தாள்.

இப்படியிருக்கிற சமயத்தில் வசிஷ்டமாமுனிவர் விசுவாமித்திர முனிவரைப் பார்த்து, 'கல்யாண முகூர்த்தம் என்றைக்குப் பார்த்திருக்கிறீர்?' என்று கேட்க, 'நாளேயதினம்,' என்று விசுவாமித்திர மாமுனிவர் சொல்ல, அது கேட்ட தசரதமகாராசர் மிகவும் சந்தோஷமாய் இராசாக்களெல்லாம் வணங்க எழுந்திருந்து, சங்கம் முதலான மங்களவாத்தியங்கள் முழங்கத் தம் விடுதியில் வந்து சேர்ந்தார். ஜனக மகாராஜாவும் சீதையை அழைத்துக்கொண்டு அரண்மனேயிற்

போய்ச் சேர்ந்தார். ரிஷிகளும் பிராமணர்களும் மந்திரி முதலானவர்களும் அவரவர்கள் ஸ்தானம் போய்ச் சேர்ந்தார் கள். ஸ்ரீராமரும் சீதை பிரிந்து நடக்கவே, தாமும் எழுந் திருந்து தம்முடைய திருமாளிகையிற் போய்ச்சேர்ந்தார். சூரியனும் மேருவின் சாரலில் போய் மறைந்தான்.

## 21. கடிமணப் படலம்

இவ்வாறு, தசரதமகாராஜர் முதலிய அனைவரும் ஜனக மகாராஜர் உபசாரத்தோடு செய்வித்த விருந்தினால், சரீரத் துடனே சுவர்க்காதி போகம் அனுபவிக்கிறவர்கள் போலப் பரவசமாயிருந்தார்கள். அப்போது, சீதை ஸ்ரீராமரைச் சபையிற்கண்ட போது உண்டான விரகதாபத்தை அன்றிர வில் ஆற்றாளாகி, அதிக தாபங்கொண்டு, ஒருவர் தண்ணீர்த் தடாகத்தைக் கண்டும் அதில் இறங்குகிறதற்கு வழி காணா மல் அலைந்து ஐயமுறுகிறது போல, மிகவும் கிலேசித்து, தானே பேசலானாள்: "இரவே, சூரியன் வருவானாகில் என்னை அடிமையாகவுடைய நாயகரும் என்னிடத்திற்கு வருவார். நீ மிகவும் கொடியை! போய்விடு! மனமே, கறுத்த சூரியனைப்போல் திருமேனியையுடைய அந்நாயகர் பாதத் தின் பிறகே நீ போய்விட்டாயோ? அவர் வரும்போது கூட வருகிறதற்கிருக்கிறாயோ? ஒரு தரமாகிலும் வந்து விசாரிக்க லாகாதா? பனைமேலிருக்கும் அன்றிற்பட்சியே, சத்த சமுத் திரம் போன்ற இராத்திரி விடியவில்லையே! பிரிந்திருக்கிற வருத்தம் உனக்குத் தெரியுமே! ஏதுக்கு நீயுங் கூவிப் பழி சம்பாதித்துக்கொள்ளுகிறாய்? சந்திரனே, நீ நெருப்புப் போலச் சுடுகின்றாயே! இப்படிச் செய்கிறதனாலல்லவா உன் சரீரம் நாளுக்கு நாள் தேய்ந்து போகின்றது? ஆ! தென்றற் புலியே, நீயும் இரை தேடிக்கோண்டு வெளிப்பட்டாயோ? இந்த இராத்திரி ஓர் ஊழிக்காலம் போலிருக்கின்றதே! பகலும் வருகிறதில்லை; இராத்திரியும் போகிறதில்லை. கண்

களோ, நித்திரையுங் கொள்வதில்லையே! ஐயோ! இப்படி நமக்கு வந்து சம்பவிக்க வேண்டுமா? சமுத்திரமே, என்னைப் போலவே நீயும் உறங்கவில்லையா? எழுந்தெழுந்து படுக்கிருயே! மன்மதபாணத்திற்குப் பயந்திருக்கிறதற்கு என்னைப்போல நீயும் ஒரு கன்னிகைதானே?'' என்று இப்படிப் பலவாறு சொல்லிச் சொல்லிச் சோர்ந்து மயங்கியிருந்தாள்.

ஸ்ரீராமரும் அப்படியே விரகதாபத்தினுல், ''அந்தக் கன்னிகையை முன் கண்டதுமல்லாமல் இன்றைய தினமும் கண்டும், ஆசைக்கடலுக்குக் கரை காணுமற் போனேனே! சந்திரனே, என் மனத்தில் குடியாயிருக்கிற ஸ்திரீயினுடைய நெற்றியைப் போல இருந்துகொண்டு, காமவிரைப் புக்கு எருப்போலிருக்கிற நீ, என்னுடனே உறவாகவில்லையே! இருளே, நீ அந்த ஸ்திரீயினுடைய கண்ணைப்போலக் கறுத்து விசாலமாய் வளர்ந்திருக்கின்றனையே! மனமே, நீ அக்கன்னிகையின் பின்னே போயிருக்கிருயா? நீ உன் வார்த்தைகளைக் கேளாதவர் அண்டையிலும் இருக்கலாமோ? அவளை விரைவாய்க் கொண்டு வந்து விடலாகாதோ? என்னை மறந்து போய்விட்டாயோ? விஷம் பாம்பினிடத்திலுள்ளது என்பது பொய்யாயிருக்க வேண்டும். இப்போது என் மனத்திலுங் கண்ணிலும் இடை விடாமல் நிற்கிற அந்த ஸ்திரீயினுடைய கண்களிலேதான் அந்த விஷமிருக்கின்றது. தன் மாளிகையும், சோலையும், நந்தவனங்கள் முதலானவைகளுமிருக்க, அவைகளில் விளையாடாமல், கல்லைப் போலிருக்கிற என் மனத்திலேயா அக்கன்னிகை விளையாட வேண்டும்!'' என்று பலவாறு சொல்லிச் சொல்லித் துயரத்தில் அழுந்தியிருக்கிற சமயத்தில், ''நாளைய தினம் சீதைக்குத் திருக்கலியாண முகூர்த்தம் ஆதலால், பட்டணத்தை அலங்காரஞ் செய்யுங்கள்,'' என்று யானையின்மேல் பேரிகை வைத்து அடித்தார்கள்.

அந்தப் பேரிகைச் சத்தம் கேட்கவே, பட்டணத்திலுள்ள வாலிபர் விருத்தர் முதலிய யாவரும் அதிக சந்தோஷத்

துடனே இராத்திரியென்கிற சமுத்திரத்திற்குக் கரை கண்டார்கள். அப்போது சூரிய பகவான் நீலமேக சொரூபனுன புருஷோத்தமனும் ஸ்ரீ மகாலட்சுமியும் நாளைய தினம் சேருவார்களென்கிற செய்தி கேட்டு, அந்த மணமக்கள் கோலத்தைத் தரிசனஞ் செய்கிறதற்காக ஒரு தேரின்மேலேறிக் கொண்டு அதிசீக்கிரமாய் வந்தான். சூரியனுதயமாகவே, பட்டணத்து ஜனங்கள் தங்கள் தங்கள் மாளிகைகளைச் சிங்காரித்து மகர தோரணங்கள் நாட்டுவாரும், இரத்தினகசிதமான தூண்களுக்குத் தாவள்ளியமான சீலைகளைச் சுற்றுவாரும், உப்பரிகைகளின் மேலே சொர்ணக் கலசங்கள் வைப்பாரும், பலபல வர்ண விதங்களான துவசங்கள் கட்டுவாரும், பிராமண போசனத்துக்கு அறுசுவைப் பதார்த்தத்துடனே சமையல் செய்து வைப்பாரும், முத்து, சுவர்ணம், இரத்தினம் இவைகளால் செய்த ஆபரணங்களை அணிந்துகொள்ளுவாரும், வாழை, கமுகு, கரும்பு முதலானவைகளைக் கொண்டு பந்தல்களுக்கு அலங்காரம் செய்வாரும், சந்தனம் அகில் முதலிய பரிமள திரவியங்களை வீதிகளில் இறைப்பாரும், சுகந்த புஷ்பங்களைச் சொரிவாரும், பளிங்கினுலே கிண்ணங்கள் பந்தி பந்தியாகச் செய்து அகண்ட தீபங்களேற்றிப் பாலிகைகள் வைப்பாரும், வீதிகளிலேயும் முற்றங்களிலேயும் முத்துப்பந்தல் போடுவாரும், 'தேவேந்திரனுடைய சபை கூட இதற்குச் சமமாக மாட்டாது,' என்று சொல்லும்படி மேல் கட்டி முதலானவைகள் கட்டிப் பந்தல்கள் சிங்காரிப்பாரும், இரதத்தின்மேலேறி வருவாரும், புஷ்பங்கள் கொண்டு வருவாரும், தாம்பூலங் கொண்டு வருவாரும், குண்டலம் பிரகாசிக்கக் குரவை பிணைந்தாடுவாரும், மத யானைகளைச் சிங்காரிப்பாரும், வச்சிரப் பிரகாசமான மேடைகளிலே தீபங்கள் கொண்டு வந்து வைப்பாரும், கந்தம் சுதம்பப்பொடி புஷ்பதூளிகள் இவைகளைக் குப்பையாக வாரியெடுத்து அப்பாலே போடுவாரும், யாழ் வீணைகள் கேட்பாரும், முகூர்த்த வேளையாயிற்று என்று நாழிகை பார்ப்

பாரும், வித்தியா பிரசங்கம் பண்ணுவாரும், ஆபரணங்கள் பூட்டிக்கொள்ளுவாரும், தலை மயிர் முடிப்பாரும், கண்ணுடி பார்த்துக் கிரீடம் முதலான ஆபரணங்களைத் திருத்தித் தரித்துக்கொள்ளுவாரும், புஷ்பமாலை தரிப்பாரும், சித்திர வஸ்திரங்கள் தரித்துக்கொள்ளுவாரும், வாளைப்போலவும் விஷம் போலவும் கண்களையுடைய ஸ்திரீகளும், அமிர்தம் போலும் வார்த்தையுடைவர்களும், பர்வதம் போன்ற ரூபங்களையுடையவர்களும், முத்துப்போலும் தந்தங்களையுடையவர்களும், செவ்விளநீர் போலும் தனங்களையுடையவர்களும், நூலிழை போலும் இடையும் அன்னம் போலும் நடையுமுடையவர்களுமாய் எங்கும் நிறைந்து நெருங்கினுர்கள்.

அன்றையதினம் அந்த மிதுலாபுரியானது, தேவேந்திரனுக்குப் பட்டாபிஷேகமாகிற போது அமராவதிப் பட்டணமிருந்தது போன்று இருந்தது. கலியாண மண்டபம், நவரத்தின கசித கோடி சூரியப் பிரகாசமாய்ப் பிரகாசித்துக் கொண்டு, விஸ்தீரணம் இவ்வளவென்று ஒருவராலுங் காணக் கூடாத விதமாய் அமைந்திருந்தது. அந்த மண்டபத்துக்கு ராஜாதிராஜரான தசரதர் புறப்பட, மங்கள பேரிகைகள் முழங்க, தவளச்சங்கம் முதலானவைகள் சத்திக்க, தேவப் பிராமணர்கள் வேத பாராயணம் செய்ய, மேலே முத்துக் குடை பிரகாசிக்க, அனேக ராஜாக்களும், ரிஷீஸ்வரர்களும் உடன் வந்தார்கள். ஜனக மகாராஜாவும் பந்து சனங்கள் மந்திரிகள் ராஜாக்கள் முதலான பேர்களோடு வந்து சேர்ந்தார். இவ்வித அலங்காரங்கள் அடங்கியிருக்கிறபடியினுலே அந்த மண்டபம் மகாமேரு பர்வதம் போலவும், பிரமாண்டம் போலவும், ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய வயிறு போலவும் பிரகாசித்திருந்தது. அப்போது ஸ்ரீராமபிரான் சத்த சாகரத்தினுடைய தீர்த்தமும் கங்கை முதலான சத்த நதியினுடைய தீர்த்தமுமாடி, தங்கள் குலத்தார் சேவித்து வழிபட்டு வருகிற ஸ்ரீரங்கநாதரைச் சேவித்து, பிராமணர்களுக்கு அனேகவிதமான தானங்கள் செய்து, சிற்பசாஸ்திரமறிந்த

சித்திரக்காரனுலும் எழுதுதற்கருமையான சுந்தரத்தோடு அமைந்திருக்கிற திருமேனியில் புஷ்பமாலை தரித்து, சீதையினுடைய மனேபாவத்தைச் சந்திர சூரியர் திருச்செவியில் சொல்லுகிற பாவனை போல இரண்டு செவிக்கும் குண்டலந் தரித்து, கீற்றுச் சந்திரனைப்போலும் வீரபட்டமும் கட்டி, கண்டத்தில் சீதையினுடைய நகைப்பானது இருதயத்திலிருந்து திருமேனியில் புளகிக்கிறதுபோல முத்துமாலையைத் தரித்து, வாசுகி போல இரத்தினகசிதமான தோள் வலயம் பூட்டி, கற்பக விருட்சம் போன்று இருக்கிற கைகளில் இரத்தினக் கடயங்களிட்டு, திருமார்பில் நவரத்தின கசிதமான பதக்கத்தோடு கூடிய ஹாரம் முதலானவைகளும் தரித்து, பரம ஞானிகளின் மனம் போலத் தாவள்ளியமான உத்தரீயம் பிரகாசிக்க, மும்மூர்த்திகளும் தாமே என்பது யாவருக்குந் தோன்ற முப்புரிநூல் விளங்க, கருங்கடலைத் திருப்பாற்கடல் தழுவினது போல வெண்பட்டு வஸ்திரமுந் தரித்து, மகா மேருவைப் பிரதட்சிணம் வருகிற சூரியனைப்போல அறையில் வாளுங்கட்டி, அந்த வாளென்கிற சூரியனுடைய பிரகாசம்போலக் கச்சினுடைய தொங்கல் தொங்க, பூரண சந்திரனைப்போலும் திருமுகத்தின் அழகும், பாலசந்திரன் பிரகாசம் போலச் சிறு நகையின் ஒளியும் வீச, சிங்காரித்துக் கொண்டு, அழகிய மணவாளத் திருக்கோலமானர்.

ஸ்ரீராமபிரான் பல பசுக்களும் சுவர்ணங்களும் பூமிகளும் இரத்தினங்களும் பிராமணேத்தமருக்குத் தானம் செய்து, அவர்கள் ஆசி கூற, ஓர் இரதத்தின்மேலேறினர் ; பரதாழ்வார் ஆனந்தத்துடனே அருணனைப்போலக் கரத்தில் கோல் பிடித்துக்கொண்டு இரத சாரதியாய் நடாத்த, இலட்சுமணரும் சத்துருக்கரும் இரு பக்கத்திலும் வெண்சாமரை வீச, கலியாண மண்டபம் நோக்கிப் புறப்பட்டார். அப்போது அவருடைய சுந்தரத்தைப் பார்க்க வந்த அனைவரும் இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தனர். தேவர்களும், 'இனி ராக்ஷசக் கூட்டம் நசித்துப்போம்!' என்று பரமானந்

தத்திலிருந்தார்கள். அந்தத் தேவர்கள் அரம்பா ஸ்திரீகளுடனே நடனம் பண்ணினுர்கள். ஸ்ரீராமபிரான் அரசர் பலர் சூழ்ந்து வர ராஜாதிராஜரான தசரதர் வீற்றிருக்கிற திருமண மண்டபத்தில் மகாமேருவைச் சேரும் சூரியனைப் போலச் சேர்ந்து, பரத லட்சுமணர் இருவரும் இரு பாரிசங்களிலும் கைலாகு கொடுக்க இரதம் விட்டிறங்கி, மகரிஷிகளையும் தம் பிதாவையும் சேவித்துக்கொண்டு, சமீபத்தில் இரத்தினு சனத்தில் எழுந்தருளியிருந்தார்.

சீதாபிராட்டியானவள் அந்தத் திருக்கலியாண மண்டபத்தில் அனேகம் பாங்கிகளோடு வந்து சேர்ந்தாள். சமுத்திரம் போலப் பிராமணேத்தமரும் இருஷிகளும் சூழ்ந்து வர, வசிஷ்ட மாமுனிவர் இந்தத் திருக்கலியாண மஹோற்சவத்திற்கு வேண்டிய தருப்பை சமிதை முதலியவற்ருேடு வந்து சேர்ந்து, தண்டுலம் பரப்பி, தருப்பை சாத்தி, வேதசாஸ்திர விதிப்படி ஓமகுண்டத்தை மண்டலாகாரமாகச் செய்து, ஓமாக்கினியை மூட்டி, ஆவின் நெய்யை ஆகுதியாக விட்டு, மிகுந்த அன்புடனே ஓமம் வளர்த்தினுர். அப்போது ஸ்ரீராமரும் சீதாபிராட்டியும் ஏகாசனத்திலெழுந்தருளி, இரு பக்கத்திலும் ஸ்திரீகள் வெண்சாமரை வீச, முனி சிரேஷ்டர்கள் ஆசி கூற, யோகமும் போகமும் ஒன்ருகக் கூடினது போல ஒத்து வீற்றிருந்தார்கள். ஜனகமகாராஜர், ஸ்ரீராமரெதிரே வந்து, சந்தோஷத்துடனே, "ஸ்ரீமகா விஷ்ணுவும் இலட்சுமியும் போல என்னுடைய குமாரத்தியாகிய சீதையோடு கூடி வாழ்ந்திரும்!" என்று ஆசீர்வதித்துத் தாரை வார்த்தார். அத்தருணத்தில் தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். பிராமணர்களும் மகரிஷிகளும் ஆசீர்வதித்தார்கள். ஸ்திரீகள் பல்லாண்டிசைத்தார்கள். பல தேசத்து ராஜாக்கள் நமஸ்காரஞ் செய்து தோத்திரஞ் செய்தார்கள். பேரிகை முதலிய பல வாத்தியங்கள் சமுத்திரகோஷம் போல முழங்கின. மகரிஷியாகிய வசிஷ்டர் சொல்லியபடி ஸ்ரீராமர் ஓமாக்கினிக்குச் சகல ஆகுதியும் கொடுத்து, பிராமணர்க்குச்

சோடச தானங்களும் செய்து, சீதையினுடைய மாந்தளிர் போன்ற திருக்கரத்தைத் தாமரை மலர்போலிருக்கிற தமது திருக்கரத்தினுல் பிடித்துக்கொண்டு, உயிருமுடலும் போலத் தாம் முன்னும் சீதாலட்சுமி பின்னுமாக ஓமாக்கினியைப் பிரதக்ஷிணம் வந்து, அக்கினி தேவனை வணங்கிப் பொரி சிந்தி, அம்மி மிதித்து, எதிரில் நின்ற அருந்ததியையும் பார்த்து, செய்ய வேண்டிய யாவும் செய்து, முனிவர்களையும் தசரத மகாராஜாவையும் சேவித்து, பேரிகை சங்கம் முதலிய வாத்தியங்கள் ஆர்ப்பரிக்க, நான்கு வேதங்களும் சாஸ்திரங் களும் சத்திக்க, தேவர்கள் பல்லாண்டிசைக்க, திருக் கோலத்தோடு திருமாளிகையிற் போய்ச் சேர்ந்து, தாயைப் பார்க்கிலும் மிகுந்த அன்போடு தம்மைக் காப்பாற்றி வரும் கைகேசியையும், தம் அன்னையாகிய கௌசலையையும், சுமத்திரையையும் சேவித்தார். சீதா பிராட்டியும் அவ்வாறே அவர்களைச் சேவித்தாள். அவர்கள் அதிகப் பிரியத்துடனே, மருமகளைத் தழுவிக்கொண்டு மிதமில்லாத வாற்சலியத் துடன், 'நம்முடைய ஸ்ரீராமனுக்கு இயற்கையான ஸ்திரீ இவளைப்போல உலகத்தில் கிடையாள்,' என்று சொல்லிக் கண் களித்து மனங்குளிர்ந்து பார்த்து, ஆசிகள் கூறி, திருவாபரணங்கள், திரவியங்கள், பட்டு வஸ்திரங்கள், இரத் தினங்கள் முதலியவற்றை அபரிமிதமாக அளித்தார்கள்.

கிருபாநிதியான தசரதராமரும் ஸ்ரீ மகாலட்சுமியான சீதையும் திருப்பாற்கடலுக்குச் சமானமான பள்ளியறையிற் சேர்ந்து, அதிக மகிழ்ச்சியுடன் கூடியிருந்தார்கள். பங்குனி உத்திரத்திலே வசிஷ்ட மாமுனிவர் மங்கலாக்கினி செய்து வைத்தனர். ஜனகமகாராஜர் தசரதமகாராஜாவினிடம் வந்து, 'என் தம்பிக்கு மூன்று குமாரத்திகளிருக்கிறுர்கள். அவர்களை உம்முடைய குமாரர்களாகிய மற்ற மூவருக்கும் திருக்கலியா ணம் செய்யவேண்டும்,' என்று மிகுந்த அன்புடனே சொல்லி னர். அவரும் அதைக் கேட்டு அதிக சந்தோஷத்தோடு வசிஷ் டர் விசுவாமித்திரர் முதலானவர்களிடம் சொல்லி, அந்தப்

பெண்களேயும் பார்த்து, மிகுந்த சந்தோஷத்துடனே பரதருக்கு ***மாண்டவி*** என்கிற கன்னிகையையும், இலட்சுமணருக்கு ***ஊர்மிளே*** என்கிற கன்னிகையையும், சத்துருக்கருக்குச் ***சுருதகீர்த்தி*** என்கிற கன்னிகையையும் கலியாணம் செய்தார். ஜனகமகாராஜரும் அவர் தம்பியார் **குசத்துவஜரும்** அதிக சந்தோஷப்பட்டார்கள். ஸ்ரீராமரும் சீதையும் பேரின்பத்துடனே வீற்றிருந்தார்கள்.

## 22. பரசுராமப் படலம்

தசரதமகாராஜர் முதலிய அனைவரும் மிகுந்த விருப்பத்தோடு சில நாள் மிதிலாபுரியிலிருந்தனர். அப்போது விசுவாமித்திரர் இமாசலத்திற்குப் போகக் கருதி, ஸ்ரீராமர் முதலிய யாவருக்கும் ஆசீர்வாதம் செய்து போய்விட்டார்.

பின்பு சில நாள் சென்று ஒரு நாள் தசரத மகாராஜர் அயோத்தியா புரிக்குப் போகப் பிரயாணமாகி, பிள்ளேகளும் மருகிமார்களும் பந்து ஜனங்களும் மிதிலேச் சனங்களும் தொடர்ந்து வரத் தேரின்மேலேறிப் புறப்பட, வழியிலே காகம் இடமும் மயில் வலமுமாய்ச் சிறிது தடையான சகுனத்தைக் கண்டு, "இவ்விடத்தில் என்னவோ இடையூறு வர இருக்கிறது!" என்று எண்ணித் தேரை நிறுத்தினர்.

தசரதர், சகுனப் பரீக்ஷையறிந்த ஒருவனே அழைத்து, 'இச்சகுனம் நன்மையோ, தீமையோ?' என்று கேட்க, அவன், 'உடனே ஓர் இடையூறு வரும். ஆனல், அது உடனே நன்மையாகும்,' என்று சொன்னன். இதைக் கேட்டுக்கொண்டிருக்கிற சமயத்தில் ஒரு மகா புருஷர் ஆகாயத்திலுள்ள இருளேக் கிழித்துப் பிரகாசிக்கிற மின்னல்போன்ற சடையுடன், கையில் மழுவாயுதமும் தாங்கி, கண்ணில் பொறி பறக்க, மகாமேரு பர்வதம் போலே எதிரே வந்தார். அவர் யாரெனில், பூர்வத்தில் ஓர் அரசன் குற்றஞ்செய்ய, அதற்கு மற்ற அரசர்களே இருபத்தொரு தலேமுறை கரு

வறுத்து அவர்களிரத்தத்தில் ஸ்நானம் செய்தவர்; மகா பலவானன **கார்த்தவீரியார்ச்சுன**னுடைய ஆயிரந் தோள்களேயும் மழுவாயுதத்தினல் அறுத்து ஜயங்கொண்ட பிரதாபத்தையுடையவர். அவர் நாமம் *பரசுராமர்* என்பது.

அவர் வரவே, தசரதமகாராஜர் கண்டு பயந்து, ‘ இந்தக் கடூரன் இப்போது வரவேண்டிய காரணமென்ன ?’ என்று நினைக்கிற சமயத்தில், அவர் சேனுசமுத்திரத்தின்மத்தியில்வந்து, புருவங்களே நெறித்துக்கொண்டு, கண்களில் அக்கினிப்பொறிகள் பறக்க, யுகாந்தகால இடியைப்போலச் சத்தித்துக்கொண்டு, இரதத்திலிருக்கிற ஸ்ரீராமர் சமீபத்தில் போனுர். இராமர், ‘இவர் யாரோ !’ என்று நினைக்கிற வேளேயில் தசரதமகாராஜர் அதி சீக்கிரம் பரசுராமர் எதிரே வந்து சாஷ்டாங்கமாகச்சேவிக்க,பரசுராமர்அதைப்பாராமல்,பிரளய காலாக்கினி போல ஸ்ரீராமரைப்பார்த்துக் கோபங்கொண்டு, “தசரத தனயா, நீ பூர்வத்தில் ஊனமான வில்லேயொடித்தாய். அதனுடைய நிருவாகம் நானறிவேன். உன் நிருவாகத்தையும் நானறியவேண்டுமென்றிருக்கிறேன். மேலும், நெடுங்காலமாய் என்னேடெதிர்ப்பாரில்லாமல், என் புஜங்கள் தினவு கொண்டிருக்கின்றன. அந்தத் தினவைத் தீர்த்துக்கொள்ள இவ்விடத்திற்கு வந்தேன் !” என்று சொல்ல, அவ்வார்த்தையைத் தசரத மகாராஜர் கேட்டு, மிகவும் பயந்து, “சுவாமி, நீர் பூலோகத்திலிருந்த ராஜாக்களேயெல்லாம் ஜயித்து, பூலோகத்தைப் பிராமணர்களுக்குத் தானம் பண்ணினீர். உம்முடனே எதிர்க்கிறதற்குச் சிவனுலேயும் பிரமாவினுலேயும் ஆகாதே ! மனிதன் உமக்கு எவ்வளவு ? அதிலும், இவன் மிகவும் சிறு பிள்ளே. ஆதலால், இவனும் என் பிராணனும் உமக்கு அடைக்கலம்! உமக்குச் சமானமானவருடனே கோபம் கொள்ள வேண்டுமேயல்லது, ஏழைகள் மேல் கோபம் கொள்வதில் யாது பயன்? பூர்வத்தில் ராஜாக்களிடத்தில் கோபித்து, அக்கோபம் ஆறி அனுக்கிரகஞ் செய்த தேவரீரே, திரும்பக் கோபங்கொள்வது தருமமன்று. தருமத்

துடன் வந்த ஜயமே ஜயம்; அதர்மத்திலே வருகிற ஜயமுஞ் ஜயமல்ல, பலமும் பலமல்லவே! என் மகனே, இன்னம் ஆயுதப்பரீட்சையே அறியாதவன். இவன் பிராணனை நீர் கொடுக்க வேண்டும்! இவனுக்கோர் அபாயம் நேரிடுமானால், நான் என் குலத்துடனே மடிந்து போவேன்! உம்முடைய அடியனாகிய நான் குலத்துடனே மடிந்து போகாதபடி கிருபை செய்து இவன் பிராணனைக் கொடுக்கிறேனென்கிற வரம் எனக்குக் கொடுக்க வேண்டும்,'' என்று வருந்தி, திரும்பவும் சாஷ்டாங்கமாய் விழுந்து சேவித்தார்.

இப்படிச் சரணாகதியாகிய தசரத மகாராஜரை அவர் நோக்காமல், இகழ்ச்சி செய்து, அதிக கோபத்துடனே ஸ்ரீராமரைப் பார்த்தார். அப்போது தசரத மகாராஜர், 'நம்மால் யாதொரு செயலும் இல்லை!' என்று மின்னலைக் கண்ட நாகம் போல நடுநடுங்கிச் சோர்ந்து போனார்.

பரசுராமர் ஸ்ரீராமரை நோக்கி, "நீ ஒடித்த வில் ஊனமானது. அதனுடைய விருத்தாந்தம் சொல்லுகிறேன், கேள்: பூருவத்தில் மகாமேரு பருவதத்தின்மேல் ஒரு மகரிஷியின் தபோபலத்தினால் ஒரு மூங்கில் முளைத்தது. அதை இரண்டு வில்லாகச்செய்து, ஒன்றைப் பார்வதி சமேதரான சிவபிரான் எடுத்துக்கொண்டார். மற்றொன்றை ஸ்ரீயப்பதியாகிய மகாவிஷ்ணு எடுத்துக்கொண்டார். தேவர்கள், 'இவைகளுள் எது பலமான வில்?' என்று பிரமதேவரைக் கேட்க, அவர் தேவர்கள் வில்லை நோக்கிப் பலாபலமறியக் கேட்கிறார்களென்பதை அறிந்து, இருவருக்கும் சண்டையுண்டாக்கி வைத்தார். அவர்கள் அவ்விற்களை எடுத்துக்கொண்டு உலகங்களிலும் திக்குகளிலும் அக்கினிச்சுவாலை எழும்படி யுத்தஞ் செய்தார்கள். சிவபிரான் கையிலிருந்த வில் நெரிந்தும் போர் செய்ய யத்தனம் செய்யவே, பிரமாவும் தேவர்களும் பயந்து வியக்க, தேவேந்திரன் கையை நீட்ட, அவன் கையில் சிவபிரான் தமது வில்லைக் கொடுத்துவிட்டார். மகாவிஷ்ணுவும் தம் இடக்கையிலிருந்த வில்லை மகாதவசியாகிய இருசிகமகரிஷி

கையிற்கொடுத்தார்; அவர் என் பிதாவாகிய ஜமதக்கினி மகரிஷிக்குக் கொடுத்தார்; அவர் எனக்குக் கொடுத்தார். அதுதான் இது. இதை நீ நாணேற்றி வளைப்பாயாகில், ராஜாக்களில் உனக்குச் சமமானவர்களில்லை. உன்னுடன் போருஞ் செய்யேன். மேலும், இன்னமொன்று சொல்லு கிறேன்; கேள்: அந்த ஊனவில்லை ஒடித்தோமென்கிற கர்வம் வேண்டா. என் தகப்பனுரை ஓரரசன் கொல்ல, அது நிமித்தம் இந்த மழுவாயுதத்தினுல் இராச்சியத்திலுள்ள ராஜாக்களையெல்லாம் வேரறக்களைந்து கொன்று, அவர்கள் உதிரத்திலே மூழ்கி, என் தகப்பனுருக்குரிய திலோதக வாசோதகமாக அதையே விட்டுத் தணிந்தேன். பிறகு ஒரு பருவதச்சாரலில் போய்த் தவம் செய்துகொண்டிருந்தேன். அவ்விடத்தில் நீ அந்த வில்லையொடித்த சத்தம் கேட்டுக் கோபத்துடனே புறப்பட்டு வந்தேன். நீ சாமர்த்தியவானுனல் உன்னுடன் போருஞ்செய்கிறேன். உன்னுலாமாகில், இந்த வில்லை நாணேற்று,'' என்று சொல்லினர்.

அது கேட்டு ஸ்ரீ ராமபிரான் புன்சிரிப்பாக நகைத்து, "ஸ்ரீமந்நாராயணருடைய வில்லைக்.கொடும்,'' என, அதைப் பரசுராமர் கொடுக்க, ஸ்ரீ ர்ாமபிரான் வாங்கி, ஒருகணத்தில் வளைத்து, நாணேற்றி, அஸ்திரத்தைப் பூட்டி, இழுத்துவாங்கி, நிறுத்திக்கொண்டு, "கேளும் பரசுராமரே, நீர் பூலோகத்து ராஜாக்களையெல்லாம் கொன்றவராயிருந்தாலும், வேத வித்தாயிருக்கிற பிராமணராய் இருக்கிறீர்; அன்றியும், விரதம் பூண்டிருக்கிறீர். ஆதலால், உம்மைக் கொல்லலாகாது. நான் விடுகிற பாணமோ, வீண் போவதன்று. ஆனபடியினுல், சிக்கிரமாக இதற்கு ஒரு லக்ஷியம் சொல்லும்,'' என்றனர்.

பரசுராமர் பயந்து, ஆச்சரிய சித்தராகி, "ஸ்ரீராமா, கோபம் செய்யாதே! நீ சகலத்திற்கும் ஆதியான வஸ்துவென்பதை நானறியாமற்போனேன்! உனது பலத்துக்குச் சிவபிரானுடைய வில் ஈடுகொடாமலே ஒடிந்தது. நீயே அந்த ஸ்ரீமந்நாராயணன். ஆனதால், இப்போது நான் கொடுத்த

வில்லும் உனது பலத்துக்குப் போதாது. நீ செலுத்தும் பாணமும் பழுது போகாது. ஆகையால், நீ என்னுடைய தபோபலத்தின்மேல் அதைச் செலுத்து,'' என்றனர்.

அப்படியே இராமர் செலுத்த, அது பரசுராமருடைய தபோபலன்கள் யாவற்றையும் கிரகித்துக்கொண்டு வந்து விட்டது. அப்போது பரசுராமர், "ஸ்ரீராமா, நீ நினைத்த பொரு ளெல்லாங் கைகூடக்கடவன!'' என்று அன்புடனே ஆசீர் வாதம் செய்து, விடை பெற்றுக்கொண்டு தொழுது போனர்.

ஸ்ரீராமர் துயரசாகரத்தில் மூழ்கிக்கிடக்கிற தகப்பனுரை அன்புடனே தழுவ, அவர் மூர்ச்சை தெளிந்து, மனங் குளிர்ந்து, ஸ்ரீராமபிரானை மார்போடு தழுவி, உச்சி மோந்து, மகிழ்ந்தார். "இந்தக் காரியம் யாராலே ஆகும்! இம்மை மறுமை இரண்டிற்கும் இந்த இராமனே கதி!'' என்று தசரத மகாராஜர் தம்முள் எண்ணிச் சந்தோஷித்தார். ஸ்ரீராமர் வருணதேவனை அழைப்பித்து, அந்தப் பரசுராமர் கையில் வாங்கிய வில்லை அவனிடத்தில் கொடுத்தார். பின்பு, சேனு சமுத்திரத்துடனே அனைவரும் அயோத்தியாபுரிக்குப் போய்ச் சேர்ந்தனர்.

தசரத மகாராஜர் ஒரு நாள் பரதரை அழைத்து, "அப்பா, பரதா, கேகய தேசாதிபதியாகிய உன் பாட்டனுர் உன்னைப் பார்க்க விரும்பித் தம் மைந்தன் உதாசித்துவி னிடம் சொல்லி அனுப்பியிருக்கிருர். ஆதலால், நீ கேகய தேசத்துக்குப் போய் வா,'' என்றனர். பரதர், "ஐயா, அப் படியேபோய் வருகிறேன்,'' என்று அவரையும் இராமரையும் சேவித்து, பிரயாணமாய், சத்துருக்கருடனே வாகனுரூட ராய்ப் புறப்பட்டு, ஏழு நாள் வழி நடந்து, கேகயதேசம் சேர்ந்து, பாட்டனுர் முதலிய யாவரையும் கண்டு மகிழ்ந்தார்.

பால காண்டம் முற்றிற்று

# உ. அயோத்தியா காண்டம்

## 1. மந்திரப் படலம்

வானின் றிழிந்து வரம்பிகந்த
மாபூ தத்தின் வைப்பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வும்போல்
உள்ளும் புறத்தும் உளனென்ப
கூனும் சிறிய கோத்தாயும்
கொடுமை இழைப்பக் கோல்துறந்து
கானும் கடலும் கடந்திமையோர்
இடுக்கண் காத்த கழல்வேந்தை.

### சக்கரவர்த்தி திருமகனுருக்கு முடி சூட்ட ஆலோசனை செய்தல்

சில காலத்திற்குப் பின்பு ஒரு நாள் தசரத சக்கரவர்த்தியார், ஆலோசனை மண்டபத்திற்குப் போய், அவ்விடத்திலிருந்தவர்களை அனுப்பிவிட்டு, தாம் உலகத்தை இரட்சிக்கும் வஸ்துவைப்போல ஒருவராயிருந்து, தம் குருவையும் மந்திரிகளையும் அழைப்பிக்கும்படி ஆக்கியாபித்தார். அப்படியே மும்மூர்த்திகளோடு நாலாமவரென்று சொல்லத் தக்க வசிஷ்டர் அச்சபைக்கு எழுந்தருளினர். உடனே குலத்தின் பழமையும் சாஸ்திர சம்பிரதாயக் கேள்வியின் சாரமும் தெரிந்து வருத்தம் வந்த வேளையிலும் தருமம் தவிராத மனத்தையுடையவர்களாகவும், மானத்தில் கவரிமானைப்போலவும், காலதேச வர்த்தமானங்களைத் தெய்வானுகூலக் குறிப்பினால் அறிந்து நடக்க வேண்டிய காரியங்களை

நிறைவேற்றி இராசனுக்குக் கீர்த்தியை வருவிக்கத்தக்கவர்களாகவும், தங்கள் பிராணனிடத்தில் ஆசை வையாமல் இராசனுக்கு இடித்துச்சொல்லும் நீதியில் தேர்ந்தவர்களாகவும், பூதபௌதிய வர்த்தமானங்களை உணர்ந்தவர்களாகவுமிருக்கும் மந்திரிகள் வந்து சூழ்ந்து, வசிஷ்ட மாமுனிவரைச் சேவித்துக்கொண்டு, தங்கள் அரசரையும் நமஸ்காரம் செய்துகொண்டார்கள்.

அந்த மந்திரிகளையும் குருவான வசிஷ்ட மாமுனிவரையும் தசரத மகாராசர் பார்த்து, "சூரிய குலத்திற்பிறந்த எங்கள் பெரியோர்கள் தருமந்தப்பாமல் ராஜ்ய பரிபாலனஞ் செய்துகொண்டு வந்தார்கள். யானுமப்படியே உங்கள் பலத்தினாலே அறுபதினாயிரம் வருஷம் ராஜ்யபாரம் செய்துகொண்டு வந்தேன். இது வரைக்கும் ராஜ்யத்திலுள்ள சகல ஜீவனுக்கும் அவற்றினுறுதியாகிய தருமமே கைகொடுக்கச் செய்து வந்தேன். இப்போது என் ஜீவனுக்குறுதி பிறக்க வேண்டிய யோசனை செய்திருக்கின்றேன். எனக்கு மூப்புச் சமீபித்தபடியால், இந்தப் பூமி பாரத்தை இனி நான் சுமக்க மாட்டேன். எங்கள் பெரியோர்கள் தங்கள் தங்கள் பிள்ளைகளுக்குப்பட்டங்கட்டி வைத்து,தாங்கள் ஆரணியங்களில்தவம் செய்து மோட்ச சாம்பிராச்சியத்தை அடைந்தார்கள். ஆதலால், சுவர்க்க மத்திய பாதாளம் என்கிற திரிலோகங்களிலும் ஜயிக்கக்கூடாத பகைகளையெல்லாம் ஜயித்த யான், இப்போது சரீரத்திற்கலந்து கள்ளர் போல உழன்றுகொண்டிருக்கிற காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்கிற அறுவகை விகாரமாகிய பகைவர்களை ஜயிக்க மாட்டாமல் அவர்களுக்கு அஞ்சி வாழ்வேனோ? கைகேசி தேர் விட அசுரர்களுடைய இரதம் பத்தையுஞ் ஜயித்த யான், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்கிற ஐம்புலன்களாகிய ஐந்து தேர்களையும் ஜயிக்கிறது அருமையா? மானிட தேகமெடுத்தால், பகைவர்களுடனே யுத்தஞ்செய்து பட வேண்டும். அல்லவென்றால், ஞானத்தில்

பழகித் தெளிந்து சரீரம் விடவேண்டும். இவ்விரண்டுமில்லா விடில் பாக்கியம் நிலையல்லவென்று துறந்து, ஞானத்தைச் சம்பாதித்து, மோக்ஷத்தை அடையவேண்டுமல்லவா? சகல ஜீவராசிகளுக்கும் இறப்பு உண்டென்பது நிச்சயமாயிருக்க, அந்த இறப்பென்கிறதற்கு மூலகாரணமாகிய பிறப்பென்கிற துக்கசாகரத்துக்குத் துறவென்கிற தெப்பம் சம்பாதித்துக் கொள்ளாமற்போனால், அச்சாகரத்தைக் கடக்கலாகுமா? பிறவியென்கிற சிறையில் அகப்பட்டுக்கொண்டிருக்கிற ஆன்மாவுக்குத் துறவென்கிற சிறகுண்டானால் அல்லவா அச்சிறையை விட்டு நீங்கலாகும்? அப்படி ஆட்சியை விட்டு மோட்சமடையத் துறவறத்தில் என் மனம் பிரவேசித்திருப்ப தால், நீங்கள் எப்படி இதுகாறும் இகலோக சாதனத்திற்கு அனுகூலமாயிருந்து நடந்தீர்களோ, அப்படியே பரலோக சாதனத்திற்கும் தயை செய்ய வேண்டும். ஒருவன் என்ன எண்ணுகிறானோ அதைக் கொடுப்பதற்குத் தவமிருக்க, கிலே சத்தையே உண்டுபண்ணுகிற சமுசாரத்தில் மூழ்கியிருக் கிறது அமிர்தத்தை விட்டு விஷத்தைப் புசிக்கிறது போலு மல்லவா? ஒரு தரம் எல்லாப் பாக்கியங்களையும் அனுபவித் தும் பின்பு அவற்றையே இச்சிக்கிறது எச்சிலைத் தின்கிறது போலுமல்லவா? அதில் என்ன இன்பமிருக்கிறது! நானும் புத்திரனில்லாமல் நெடுங்காலம் மனம் நொந்திருந்தேன். அந்த நோயை ஸ்ரீராமன் பிறந்து தீர்த்தான். அவன்மேல் நான் இந்தப் பாரத்தை வைத்துத் தப்பிப்போக நினைத்தேன். 'ஸ்ரீராமனுடைய தகப்பன் இரணக்களத்திலிறவாமற் போனா லும், கிழவனாகியும் துறந்துவிடாமற் போனான்,' என்கிற அபவாதம் சாதாரணமா? ஸ்ரீராமனுக்குச் சீதையை மணஞ் செய்வித்தது போலவே பூமிதேவியையும் மணப்பிக்க விரும்பி யிருக்கின்றேன். ஆதலால், ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்து, நான் துறவியாய் ஆரணியம் போக எண்ணி னேன். உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள்,'' என்றார்.

இப்படி ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகஞ் செய்வதென்று சொல்லவே சந்தோஷமானது பொங்க, உடனே மன்னர் பிரிந்து போவாரென்ற கிலேசத்தினுல் விம்மி, மந்திரிமார் முதலியவர்கள் இரண்டு கன்றுக்கு இரக்கப்படும் ஒரு பசுவைப்போன்று இருந்தார்கள். ஆகிலும், மன்னருக்கு இது தவிர வேறே உறுதியில்லை என்பதாலும், பூலோகத்திலுள்ள ஜீவராசிகளுக்கு ஸ்ரீராமரைப் பார்க்கிலும் நாயகன் வேறில்லை என்பதனுலும், விதியின் பலத்தினுலும் மந்திரிகள் சம்மதித்தார்கள்.

வசிஷ்டமாமுனிவர் மந்திரிகளுடைய மனத்தையும், அரசர் தம் குமாரரிடத்தில் வைத்திருக்கிற அன்பைப்பற்றிச் சொன்ன வார்த்தையின் சாரத்தையும், சகல உயிர்களுக்குமுண்டாகிற உறுதியையும் நன்ருய் யூகித்துப் பார்த்து, அரசரைநோக்கி, “மன்னரே, உம்முடைய பெரியோர்கள் சக்கரவர்த்திகளாயிருந்து அனேகம் பெருமைகளையடைந்து கீர்த்தியைச் சம்பாதித்தார்களேயல்லாமல், உம்மைப்போல ஸ்ரீராமனை யார் பிள்ளையாகப் பெற்ருர்கள்? நீர் உமது மகிமைக்குத் தக்க காரியமே நினைத்தீர்; மேலும், அனேகம் யாகாதிகளையும் செய்தீர். இனித் தவம் செய்கிறதற்கும் தகும். பூமிதேவி உம்மைப் பிரிந்து கண்ணில்லாதவளாய்ப் போகாமல், நீர் பெற்ற ஸ்ரீராமனுல் இரட்சிக்கப்படுவள். தருமமூர்த்தியே வந்தவதரித்தார். அண்டங்களை உண்டாக்கிக் காத்துத் துடைத்து உண்டு உமிழ்ந்து அளந்துகொள்ளும் அப்பரம் பொருளே உமக்குப் பிள்ளையாய் அவதாரம் செய்தார். அவன் உம்முயிருக்கு எப்படியோ, அப்படியே சகலவுயிர்களுக்கும் இகபர சௌக்கியங்களைக் கொடுப்பான். அவன் பெயரைச் சொன்னுல் வருகிற இடையூறுகளெல்லாம் போய் இன்பம் வருகிறபடியினுல், ரிஷீஸ்வரர் முதலியவரும், ‘நாங்கள் செய்த புண்ணியத்தின் பலன் அவன்தான்,’ என்றிருக்கிருர்கள். பூமிதேவி சரஸ்வதி லட்சுமி பார்வதி இவர்களைப் பார்க்கிலும் அதிக நன்மையும் கீர்த்தியுமுடைய ஜானகி

அவனுக்குத் தேவியானுள். ஆதலால், நன்ருய்க் கற்றறிந்தவர்கள் உண்ணும்போதும் ஜலபானம் செய்யும்போதும் அவனையே நினைக்கின்ருர்கள். மக்கள் உள்ளிட்ட யாவற்றையும் இரட்சிக்கிற ஸ்ரீராமனே உமக்கு உறுதி தரும் தவமல்லாமல் வேறேயில்லை,'' என்று சொன்னுர்.

இப்படி வசிஷ்ட மாமுனிவர் சொல்லக் கேட்ட தசரத மகாராஜர் அந்தப் புத்திரரைப் பெற்ற நாளிலும், அவர் சிவபிரான் வில்லையொடித்த நாளிலும், பரசுராமரது வில்லை வாங்கி அவரைத் தோற்கச் செய்த காலத்திலுமுண்டான சந்தோஷத்தைப்பார்க்கிலும் அதிக சந்தோஷத்தையடைந்து, சாஷ்டாங்கமாகச் சேவித்துக்கொண்டு, ''சுவாமி, எனக்கு உறுதியானதையே சொன்னீர்கள். உங்கள் கிருபையினுலேதானே நான் இதுவரைக்கும் இராச்சியபாரஞ் செய்தது! அந்தக் கிருபையை அவனிடத்திலும் வைத்து நடப்பித்தால், அவன் ராஜரீகஞ் செய்கிறதற்குத் தடையென்ன? எங்கள் பெரியோர்களும் உங்கள் கிருபையினுலே ராஜ்ய பாரஞ் செய்து, யாகாதிகளை முடித்து, வினைகளைப் போக்கி, நற்கதியடைந்தார்கள். அந்நலம் எனக்கும் கிடைத்தது,'' என்று மிகவும் மகிழ்ந்து சொன்னுர்.

பின்பு மந்திரிகளுக்குத் தலைவரான சுமந்திரர் ராஜாவை நமஸ்கரித்து, ''சுவாமி, ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகம் செய்கிறேமென்பதைக் கேட்டுச் சந்தோஷிக்கிற மனத்தை உங்களைப் பிரிந்திருக்க வேண்டுமே என்கிற கிலேசம் சுடுகின்றது. ஆயினும், 'தருமத்துக்கு மிஞ்சின இன்பமும், அதை மறந்ததற்கு மிஞ்சின துன்பமும் இல்லை,' என்கிற சாஸ்திரம் பொய்யன்று. அப்படியே நீங்கள் செய்யலாம். ஆனுல், ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்த பின்பு நீங்கள் நினைத்ததை முடிக்கிறது உத்தமமாயிருக்கும்,'' என்று சொல்லக்கேட்டு, ''நல்ல வார்த்தை சொன்னீர்! அப்படியே முன்னே ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்து, பின்பு செய்ய வேண்டுவதைச் செய்துகொள்வோம். நீர் சீக்கிரத்

தில் ஸ்ரீராமனை அழைத்துக்கொண்டுவாரும்,'' என்று மன்னர் ஆக்கியாபித்தார்.

உடனே சுமந்திரர் ராஜாவைச் சேவித்துக்கொண்டு, தமக்கே பட்டாபிஷேகமாவதுபோலச் சந்தோஷித்து, இரதத்தின்மேலேறி, ஸ்ரீராமர் திருமாளிகைக்குப் போனார். அங்கு ஸ்ரீராமர் பெண்ணமிர்தமாகிய சீதையும் தம்மைப் பிரியாத தம்பியாரும் சமீபத்திலிருக்க மகிழ்ந்திருக்கிற திருவழகைச் சுமந்திரர் கண்டு, கண்ணும் மனமும் களித்துத் தொழுது, "சுவாமி, சக்கரவர்த்தியார் ஒரு காரியம் பேசுகிறதற்கு உங்களை அழைத்து வரச் சொன்னார்,'' என்று கூறினார். உடனே கமல நேத்திரரான ஸ்ரீராமர் எழுந்திருந்து, நீலமேகம் நடக்கிறது போல நடந்து, சுமந்திரருடைய தேரின்மேல் ஏறினார். உடனே பேரிகை முதலான வாத்தியங்கள் சத்தித்தன. தேவர்கள், "எங்கள் குறை முடிந்தது!'' என்று சந்தோஷித்தார்கள். ஸ்ரீராமர் செல்லுகையில் இரு புறத்தும் யாழ் வீணைகளினுடைய பாடல் நிறைந்தது. எங்கும் ஸ்திரீகள் நிறைந்து மிகுந்த பரிவுடனே பார்த்தார்கள். மாளிகை வாயில், வீதி, உப்பரிகை, சாளரந்தோறும் அலர்ந்த தாமரைப் புஷ்பங்கள் போல ஸ்திரீகளினுடைய திருமுகங்கள் விளங்கின. தேவாதிதேவரான ஸ்ரீராமருடைய திருமார்பிலிருக்கும் மலர் மாலையில் மொய்த்துக்கொண்டிருக்கிற வண்டுகளோடு ஸ்திரீகளுடைய கண்ணென்கிற கெண்டைகளும் கலந்து மொய்த்தன. புருஷர்களெல்லாம் தாயைக் கண்ட கன்றுகள் போல மனம் குளிர்ந்து பார்க்க, ஸ்ரீராமர் தம்பியாருடன் தம் வரவைப்பார்த்துக்கொண்டிருக்கும் தசரத மகாராஜாவின் சமுகத்தில் போய், கிரமப்படி வசிஷ்டரைச் சேவித்து, பின்பு தம் தந்தையாராகிய தசரத மகாராஜாவையும் சேவித்தார். தசரதர் மிகுந்த அன்போடு ஆனந்தபாஷ்பம் சொரிய, ஜானகி வல்லபரான ஸ்ரீராமருடைய மார்பு இனிமேல் பூமிபாரந் தாங்குகிறதற்கு விசாலமாயிருக்கின்றதா என்று அறியத் தம்முடைய மார்பினால் அளப்பதுபோலத் தழு

விக்கொண்டு, அவரைப் பார்த்து, “மழுவாயுதம் பிடித்த பரசு ராமருடைய கீர்த்தியைத் தலையெடுக்கவொட்டாமல் பங்கம் செய்த ஸ்ரீராமா, எனக்கு மூப்பு வியாபித்து வருகிறபடியால் நான் இனி இந்த இராச்சியபாரம் சுமக்கமாட்டேன். ஆத லால், இந்தச் சிறையை விட்டு நற்கதியடையும்படி நீ தயை செய்ய வேண்டும். உலகத்திலே புத்திரர்கள் வேண்டுமென் பது பெற்றவர்கள் வருத்தத்தைத் தீர்க்கவும், அவர்களை நற் கதி அடைவிக்கவும் அல்லவா? தரும சொரூபனான உன் னைப் பெற்ற நான் வருந்துகிறது சரியல்லவே! என் மனத் தின்படி செய்வதானால், நான் சொல்லுகிற வார்த்தையைக் கேள்: நம்முடைய பெரியவர்கள் தங்கள் தங்கள் பிள்ளை களுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்து, மூப்பால் வருந்தா மல் தவங்கள் செய்து, நல்வழியில் நின்று, நற்பதவியடைந் தார்கள். நான் பூர்வ புண்ணியத்தினாலும், இப்போது செய்த யாக மகிமையினாலும், வெகு அருமையாய் உன்னைப் பெற்றேன். இந்த மூப்புக்காலத்திலே ராஜ்யத்தைத் துறந்து தவம் செய்கிற பலனுமுண்டானால், உன்னைப் பெற்றதைப் பார்க்கிலும் வேறே நலமென்ன இருக்கின்றது? ஆகையால், இந்தப் பூமி பாரத்தை உன்னிடத்திலே விடவேண்டுமென்கிற ஆசை என் மனத்தில் உண்டாயிருக்கின்றது. பூர்வத்தில் நமது குலத்தில் ஒரு பிள்ளை தன் பெரியவர்கள் நற்கதி பெற வேண்டுமென்று எண்ணி, நமது குலதெய்வமான ஸ்ரீமந்நாராயணனது பாதாரவிந்தத்திலிருக்கிற கங்கையை இப்பூமிக்குக் கொண்டு வந்து, அவர்களை நற்கதியடையச் செய்தான். ‘உலகத்தில் இருக்கிற ராசாக்கள் தேவர்கள் தேவேந்திரன் ரிஷிகள் இவர்களைப்பார்க்கிலும் பெரியவன் யாரென்றால், தன் பேச்சு மறுக்காமல் நடந்துகொள்ளுகிற புத்திரரைப் பெற்றவனே,’ என்று தரும சாஸ்திரஞ் சொல்லு கின்றதல்லவா? ஆகையினாலே, நீ அபிஷேகஞ் செய்து கொண்டு, ராஜ்யபாரம் செய்,” என்று சொல்ல, ஸ்ரீராமர், “பிதா சொல்லுகிறபடி கேட்கிறதல்லவா நமது கடமை?

அதல்லவா நமக்கு நீதியும் தருமமும்?'' என நினைத்துப் பேசாமலிருந்தார். அவருடைய மனத்தையறிந்த தசரத மகா ராஜர் பின்னுமவரைப் பார்த்து, “ஐயனே, நீ எனக்கு எப் படியும் இந்த வரம் கொடுக்க வேண்டும்,'' என்று கூறி மார் புடனே தழுவிக்கொண்டு சந்தோஷித்து, மந்திரி பிரதானிகள் சூழத் தம்முடைய மாளிகையிற்போய்ச் சேர்ந்தார். ஸ்ரீராம ரும் சுமந்திரர் தேரிலேறிக்கொண்டு தம் திருமாளிகையிற் போய்ச் சேர்ந்தார்.

பின்பு சகல ராஜாக்களையும் தசரதர் அழைப்பித்து, “ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேம் செய்கிறதற்கு வேண்டுபவை களை அழைப்பியுங்கள்,'' என்று ஆக்கியாபித்தார். அப் போது வசிஷ்டர் சந்தோஷத்துடனே அனேகம் பிராமணர்கள் சூழ, அரசரிடம் வந்தார். அப்போது தசரத மகாராஜர் தம் சமீபத்திலிருந்த அரசர்களைப்பார்த்து, “ஸ்ரீராமனுக்குப் பட்டா பிஷேகம் செய்யவேண்டுமென்றெண்ணி இப்படி உத்தரவு செய்தேன்,'' என்று சொல்லினர். அதை அவர்கள் கேட்டு மிகுந்த சந்தோஷசித்தராகி, சரீரத்துடனே சுவர்க்கலோகம் போனவர்களைப்போல ஆனந்தமடைந்து, “நல்ல காரியம் செய்தீர்கள்!'' என்று சொல்லி, ராஜாவைச் சேவித்து, “சுவாமி, நம்முடைய கூட்டத்தை இருபத்தொரு தலைமுறை யாய்க் கருவறுத்து வந்த பரசுராமருடைய மதத்தை ஒடுக்கிய ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகம் செய்கிறது மிகவும் நல்லது. அதுவே தருமம்,'' என்று சொன்னார்கள். சகல ராஜாக்களும் இவ்வளவு சந்தோஷத்தோடு சொல்லுவதைக் கேட்ட சக்கர வர்த்தியார், தம் சந்தோஷத்தை மனத்தில் அடக்கிக் கொண்டு, அவர்களைப் பார்த்து, “நண்பர்களே, நான் பிள்ளை யினுடைய ஆசை மயக்கத்தினாலே மயங்கி இராச்சியத்தைக் கொடுக்கப்போகிறேனென்று சொன்னால், நீங்கள் என் னுடன் இத்தனை நாள் பழகியிருந்தும், என்னிடத்தில் அன்பு வையாமல், அவனுக்குத்தானே ராஜ்யத்தைக் கொடுக்கச் சொன்னீர்கள்! நீங்கள் சந்தோஷத்தினாற் சொன்னீர்களா,

அல்லது என் மனோபாவமறிந்து சொன்னீர்களா ? அதைத் தெரியச் சொல்லுங்கள்,'' என்று கேட்டார். அதற்கு அவர்கள், "சக்கரவர்த்தியே, தானம், தருமம், தவம், ஞானம், கல்வி, ஒழுக்கம், பொறுமை முதலிய உத்தம குணங்கள் யாவும் ஸ்ரீராமரிடத்திலிருக்கின்றன. சகல ஜீவனுக்கும் அவரிடத்திலிருக்கிற அன்பு ஒருவராலுஞ் சொல்ல இயலாதது. அவருக்கு இந்த இராச்சிய பட்டாபிஷேகம் வருவது, ஊருக்குச் சமீபத்திலிருக்கிற குளம் நீர் நிறைகிறது போலவும், உள்ளூரில் சாரமுள்ள கனியிருப்பது போலவும், மேகமானது மழை பொழிகிறது போலவும், கழனிகளுள்ளவிடத்திலே ஆற்று நீர் வருகிறது போலவும் உதவியானபடியினாலே, அக்காரியத்திற்குத் தடை சொல்லுகிறவர்கள் யாரிருக்கிறார்கள்? மகாராஜரே, ஸ்ரீராமரோ, சகல ஜீவகோடிகளையும் தம் ஜீவனைப்போலவே எண்ணியிருக்கிறார். ஜீவகோடிகளும் ஸ்ரீராமரையே தங்கள் ஜீவனாய் எண்ணிக்கொண்டிருக்கின்றன,'' என்று சொன்னார்கள். அந்தக் கேள்வியினால் தசரதருக்கு உண்டாகிய சந்தோஷமானது மறைத்துச் சொன்ன மனத்தைக்கூடத் தள்ளிக்கொண்டு வெளியிலே பொங்கியதால், கண்களில் ஆனந்த பாஷ்பம் வர, அவர், "ராஜாக்களே, நீங்கள் தருமம், நீதி, ஒழுக்கம் இவைகளில் மிகுந்தவர்கள். ஸ்ரீராகவன் இதுகாறும் என் பிள்ளை. இன்று முதல் அவன் உங்கள் பிள்ளை. ஆதலால், அவன் உங்களுக்கடைக்கலம்,'' என்று சொல்லி, அச்சபையை விட்டெழுந்து, வித்துவான்களைக் கூட அழைத்துக்கொண்டு சத்காலக்ஷேபம் செய்யும்படி ஒரு மண்டபத்தில் வீற்றிருந்தார்.

அப்போது இந்தச் சமாசாரமறிந்த தாதியர் நால்வர் கௌசலையினுடைய திருமாளிகைக்கு ஓடி, கௌசலைக்கெதிரில் நின்று, ஆனந்த நிர்த்தனத்தோடு பாடி, எதிரில் நின்றவர்களையெல்லாம் சேவித்து, சந்தோஷ ஆவேசத்தினாலே வாய் குழறினார்கள். அவர்களைக் கௌசலை பார்த்து, "தாதிகளே, உங்களுக்கு இவ்வளவு சந்தோஷம் உண்டான

தற்குக் காரணமென்ன?'' என்று கேட்டனள். அதற்கு அவர்கள், "அம்மா, உம் திருமகனுருக்கு அரசர் இராச்சிய பட்டாபிஷேகம் செய்யப் போகிருர்!'' என்று சொன்னுர்கள். அது கேட்ட கௌசலை சந்தோஷச் செய்தியைச் சொன்ன ஸ்திரீகளுக்கு ஆடையாபரணங்களும் திரவியங்களுங் கொடுத்து, மிகுதியும் அன்பையுடைய சுமித்திரைக்கு இந்தச் சந்தோஷ வார்த்தையைச் சொல்லி, அவளோடு ஸ்ரீ ரங்கநாதர் கோயிலுக்குப் போய், உபய நாச்சிமாரோடு பள்ளி கொண்டிருக்கிற ஸ்ரீ ரங்கநாதரைச் சேவித்து, "சுவாமி, நீரென் பிள்ளைகளுக்குக் கொடுத்த பாக்கியங்கள் யாவும் உம்முடையனவே,'' என்று சொல்லி, ஆராதனை முதலிய யாவும் செய்து, கோதானம் பூதானம் கன்னிகா தானம் சுவர்ண தானங்களைப் பிராமணர்களுக்குக் கொடுத்து, சந்தன புஷ்பாதிகளால் உபசாரம் நடத்தி, மீட்டும் ஸ்ரீ ரங்கநாதரைச் சேவித்துக்கொண்டு, கோயிலைப் பிரதட்சிணம் செய்து, தனது திருமாளிகைக்கு வந்து சேர்ந்து, தான் செய்ய வேண்டிய விரதங்களை அனுசரித்துக்கொண்டிருந்தாள்.

## 2. மந்தரை சூழ்ச்சிப் படலம்

தசரத மகாராஜருடைய சமுகத்திற்கு வசிஷ்டமா முனிவர் வந்து, "ராஜாவே, ஸ்ரீ ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்கிறதற்கு நாளைக்கு நல்ல முகூர்த்தம்,'' என்று சொல்லினர். அது கேட்ட மகாராஜா மிகுதியுஞ் சந்தோஷமாகி, "சுவாமி, ஸ்ரீ ராமனிடத்துக்கு நீங்களே எழுந்தருளி, தரும நீதி முதலியவைகளைச் சொல்லவேண்டும்,'' என்று பிரார்த்தித்தனர். அப்படியே வசிஷ்டரும் ஸ்ரீராமரிடத்துக்கு வந்தார். அவரைக் கண்ட ஸ்ரீராமர் எழுந்து சேவித்தார். அப்போது வசிஷ்டர் அவரைப் பார்த்து, "ஸ்ரீராமா, உன் தந்தையார் நாளைய தினம் உனக்குப் பட்டாபிஷேகம் செய்

யப்போகிறார். ஆதலால், நான் ஒரு விஷயம் சொல்லு கிறேன். அதைக்கேட்டு மனத்தில் உறுதியாய் வை:

" ஸ்ரீ மகாவிஷ்ணு, சிவன், பிரமா இவர்களிடத்திலும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்று சொல்லப்பட்ட ஐந்து பூதங்களிலும், பெரியவர்கள் அந்தணர்களிடத்திலும் அன்பு வைத்துப் பூஜிக்க வேண்டும். இவர்கள் கோபித்தா லும் கிருபை பண்ணினாலும் பலிக்குமாகையால், இவர்க ளுடைய பெருமையை ஒருவராலுஞ் சொல்லி முடியாது. ஆதலால், இவர்களைச் சேவித்து நல்ல வசனஞ்சொல்லி, இவர்களேவினதைச் செய்துகொண்டிரு. ஆகிறதும் அழி கிறதும் இவர்களால் ஆனபடியால், இவர்களுயர்ந்தவர்கள். பிரமா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளுக்கும் தருமமும் நன்மையும் அருளும் வேண்டியிருக்கிற போது, மற்றப்பேருக்கு அவைகள் அவசியம் வேண்டுமென்கிறதைச் சொல்ல வேண்டுமா ? சூது முதலான துர்நடத்தை உன் னிடத்தில் இல்லை. ஆனாலும், பெரியோர்கள் குற்றமென்று சொல்லுகிற காரியங்களில் ஒன்றானாலும் உன்னிடத்தில் வர வொட்டாமல், ஒருவரோடும் பகை கொள்ளாமல் இருக்க வேண்டும். யாவரோடும் பகை கொண்டால், பகை ஒடுங் காது வளர்ந்தே வரும். அதனால், ராஜாவுக்குக் காரியம் கெட்டுப்போம். மும்மூர்த்திகளுக்குச் சமமான ராஜாக்களா னாலும் மந்திரி சொல்லுகின்ற வழியே நடந்துகொள்ளுவதே பலம். சகல ஜீவனிடத்திலேயும் அன்பு வைத்திருந்தால், அதற்கு மிஞ்சின பலன் வேறில்லை. சகல ஜீவனையும் தன் ஜீவனாகவும், தான் ஒரு சரீரமாகவும் எண்ணி, தருமத்தோடு நடத்துகிற மன்னன் வேறு ஒரு யாகமும் செய்ய வேண்டுவ தில்லை. அரசனுக்கு நல்ல வார்த்தையும் சந்தோஷமும் யோசனையும் நீதியும் தருமமும் உண்டாயிருக்குமாகில், அவனுக்கு ஒரு போதும் அழிவு வரமாட்டாது. பொல்லாத வைகளைத் தள்ளி, பொன்னை நிறுக்கிற தராசுபோலச் சம மான மனத்தோடு ராஜ்யபாரம் செய்துகொண்டு அன்போ

டிருந்தால், அரசனுக்குப் பகைவரை ஜயிக்க வேறு ஆயுதம் வேண்டுவதில்லை. பூமியில் தூமகேதுபோலப் பிறந்திருக்கிற வேசிகளுடைய காமம் விட்டிருந்தால், கேடென்கிற பேரு மில்லை; நரகமுமில்லை,'' என்று பல நீதிகளைச் சொல்லி, இராமருடன் ஸ்ரீ ரங்கநாதர் கோயிலுக்குப்போய், திருவாரா தனம் செய்துவைத்துச் சேவித்துக்கொண்டு, தசரதரிடத் திற்கு வந்து நடந்த சமாசாரமெல்லாம் சொன்னர்.

தசரதர் சந்தோஷித்து மந்திரிகளுக்குப் பட்டணத்தைச் சிங்காரிக்கச் சொல்லி ஆக்கியாபித்தார். அப்போது வள்ளு வன் யானையின்மேல் பேரிகைவைத்து, 'ஸ்ரீராமருக்கு நாளைய தினம் பட்டாபிஷேகம் ஆதலால், பட்டணத்தை அலங்கரியுங் கள்,' என்றுகூறி அடித்தான். பட்டணத்திலிருக்கின்ற ஜனங் கள் அதைக்கேட்டுக் களித்து, ஆடிப்பாடி, பட்டணத்தை அலங்காரமாகச் சிங்காரித்தார்கள். அப்போது உப்பரிகை களின்மேல் கொடிகள் பறப்பது, ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேக மாகிறதைப் பார்க்கப் பட்சி ஜாதிகள் எல்லாம் ஆகாயத்தில் பறக்கிறதுபோல இருந்தது. வாழை மரங்களையும் கமுக மரங் களையும் நட்டு, முத்து மாலைகளாலே பந்தல்கள் இட்டு, பொற் கலசங்களையும் வைத்தார்கள்; மகரதோரணங்கள் கட்டினர் கள்; பவழத் தூண்களுக்கெல்லாம் மெல்லிய வஸ்திரங்களி னல் கௌசனை செய்தார்கள். முத்தினலே நிலாவும், இரத் தினத்தினலே வெயிலும், நீலக்கல்லினலே இருட்டுமுண் டாகிய ஒரு நாள் போலப் பட்டணம் விளங்கியது. தேர்க ளெல்லாம் தேவர்கள் விமானம் போலவும், வீரபட்டங் கட்டி யிருக்கிற யானைகள் சூரியனை எதிர்க்கிற உதயகிரி போல வும், வீதிகளில் திரிந்தன. புஷ்பங்களும் பன்னீரும் கந்தப் பொடியும் மனித நெருக்கத்தினல் இற்று விழுந்த முத்தும் பொன்னுபரணங்களும் வீதியெல்லாம் நிறைந்தன. ஆண் யானைகள் பின்னே பெண் யானைகள் ஸ்திரீகள் நடக்கிறது போல நடந்தன. இந்தப் பட்டணத்தினுடைய அழகைப் பார்த்த தேவலோகத்திலிருக்கிற தேவர்கள், ''இதிலே வாசம்

செய்ய நமக்கு வாய்ப்புக் கிடைக்காமற் போயிற்றே !'' என்று ஏக்கமுறும்படி,தேவலோகத்தைப்பார்க்கிலும்சிறந்திருந்தது.

இப்படியிருக்கிற நாளையில் இராவணனது பாவமே உரு வெடுத்தது போலக் கொடுமையையுடைய கூனியென்பவள் ஆதியில் ஸ்ரீராமர் உண்டை வில் எறிந்த பகையை நினைத் துக்கொண்டு, மனம் துடிக்க, கண்களில் அக்கினிப்பொறி பறக்க, அதிசீக்கிரம் கைகேசியினிடத்திற்குப் போனுள், அப்போது கைகேசி, பால் சமுத்திரத்தின்மேல் பவழக்கொடி படர்ந்திருக்கிறது போல மெத்தையின்மேல் நித்திரை செய்து கொண்டிருந்தாள். அது கண்ட கூனி, அவளுடைய பாதார விந்தத்தைத் தன் ,கரங்களினுலே பிடித்தாள். பிடிக்கவே, கைகேசி நித்திரை தெளிந்து அவளைப் பார்க்க, கூனி, "அம்மா, கிரகணங் தீண்ட இருக்கும்போதும் சந்திரன் பிரகா சிக்கிறது போல நீ இருக்கலாமா? ஆபத்து வந்த போதுங் கூட நித்திரை செய்யலாமா?'' என்றனள். இதைக் கேட்ட கைகேசி, "அம்மா, என் பிள்ளைகள் தருமபுருஷர்களாயிருக் கும்போது எனக்கு ஆபத்தேன் வருகின்றது? இராச்சியத் தில் ஒரு பிள்ளையைப் பெற்றவர்கள், 'கிலேசங் தீர்ந்தோம்,' என்கிருர்கள். ஸ்ரீராமனைப் பெற்ற எனக்கும் ஆபத்து வருமா? நீ என்ன சொல்லுகிருய்?'' என்று வினவினள். இதனைக் கூனி கேட்டு, "ஐயோ! உன் உரிமை போகவே, பாக்கியம் போய்விட்டது! கௌசலை புத்தி சாதுரியத்தினுலே பாக்கியவதியானுள்!'' என்று சொன்னுள். கைகேசி, அவ ளைத் தழுவி, "ராஜாதிராஜரான புருஷரும், பரதனுகிய பிள்ளையுமிருக்க, என்னைப்பார்க்கிலும் அவளுக்கதிகமான வாழ்வென்ன?'' என்று கேட்க, கூனி நகைத்து, "உன் கணவர் தம்மைப்போன்ற புருஷர்களெல்லாம் நகைக்கவும், தம் ஆண்மைக்கு அபகீர்த்தி வரவும், தாடகையென்கிற பெண்ணை அம்பினுலே கொன்ற ஸ்ரீராமனுக்கு நாளை பட்டாபி ஷேகம் செய்யப் போகின்ருரே! இது கௌசலைக்கு அதிக வாழ்வல்லவா?'' என்று சொன்னுள்.

இந்த வார்த்தையைக் கேட்கவே, கௌசலைக்கு எவ்வளவு சந்தோஷமாயிற்றோ அவ்வளவு சந்தோஷம் கைகேசிக்கும் பொங்கி வழிந்தது. அவள் உடனே சூரியப் பிரகாசம் போலத் தன் கழுத்தில் விளங்கிய ஓர் இரத்தினாரத்தை வாங்கி, கூனியின் கழுத்திலே போட்டாள். போடவே, கூனி தன் கண்களில் நெருப்புப் பொறி பறக்க விழித்துப் பார்த்து, பெருமூச்செறிந்து, அழுது, தன் கழுத்தில் போட்ட ஆரத்தைக் கழற்றித் தரையிலெறிந்து, கோபத்துடன், 'ஆ! கைகேசி, நீ பேதை. உன் வயிற்றில் பிறந்த பரதன் ஒரு பயித்தியக்காரன். நீவிர் இருவீரும் கிலேசப்பட, உன் சக்களத்திக்கு நான் ஏவல் செய்துகொண்டிருக்க மாட்டேன்! சீதையும் இராமனும் சிங்காதனத்திலிருக்க, பரதன் தரையிலிருக்கக் காலமிருக்கும்போது, நீ சந்தோஷமாய் இரத்தின ஹாரம் கொடுத்த வயணமென்ன? ஐயோ! கௌசலை தனக்குறுதியான காரியத்தை மறவாமல் இருதயத்தில் வைத்திருந்து, சமயம் பார்த்துத் தன் பிள்ளைக்குப் பட்டங்கட்டுகிறதற்குத் திட்டம் செய்துகொண்டாள்! உன் வயிற்றில் பிறந்த பரதன் முழுமையும் பாக்கிய ஈனனானான்! அவன் இருந்தாலென்ன, இறந்தாலென்ன? அவனுக்கு என்ன தைரியமிருக்கப் போகின்றது! அவனை நீ பெற்றதனால் என்ன பிரயோஜனம்? அவன் பூமியிற்பிறந்தும் பிறவாதவனானான். இந்த ராஜ்யமெல்லாம் இராமன் தன் தம்பியுடனே ஆள, பரதனும் அவன் தம்பியும் பட்டணத்தை விட்டுத் தவம் செய்யப் போகவேண்டுமே அல்லாமல் வேறில்லை. பல கோடி ராஜாக்களுக்கு முன்னே பரதனிப்படி எளியவனாய் இருக்கிறதிலும் இறந்து போவதே உத்தமம்! பரதனைப் பாட்டனார் வீட்டுக்குப் போகச் சொல்லி ராஜா அனுப்பினது இப்போதல்லவா எனக்குத் தெரிய வந்தது!—அப்பா, பரதா, உனக்குத் தாயும் பொல்லாதவள்; தகப்பனாரும் பொல்லாதவர். நீ என்ன செய்வாய்?'' என்று சொல்லி, மீண்டும் கைகேசியைப் பார்த்து, "நீ அரசர் வீட்டில் பிறந்தும், அரசர் வீட்டில் வளர்ந்தும், அரசர் வீட்டில்

புகுந்தும், உனக்கு இவ்வளவுகூடத் தெரியாதா! ராஜரீகம் உன்னுடையதாகச் செய்துகொள்ளத் தேவையில்லையா? துக்க சாகரத்தில் விழ இருக்கின்றனையோ? சொன்னாலும் கேட்கவில்லை; உனக்கும் தெரியவில்லை. பரதனுக்கு உண்டா யிருக்கிற கல்வியும், பலமும், வீரமும், இளமையும், நல்ல குணங்களும், புல்லில் ஊற்றிய அமிர்தம் போல ஆய்விட்ட னவே!'' என்று அழுது துடித்தாள்.

கூனியாகிய மந்தரையைக் கைகேசி பார்த்து, ஓமாக் கினியில் நெய்விட்டாற்போலக் கோபம் கிளர்ந்து, கண்கள் சிவக்க, ''மந்தரா, சூரிய குலத்திற் பிறந்த ராஜாக்கள் தங்கள் இராச்சியத்தைச் சற்றும் தருமம் தப்பாமல் நடத்திக்கொண்டு வருகிறார்கள். கவரிமானுக்குச் சமானமான மானத்தை யுடைய மனுக்குலத்துக்குக் குற்றமான பேச்சை நீ எப்படி வாயினாலே சொல்லத் துணிந்தாய்? நீ எனக்கும் நல்லவ ளல்லை; என் மகன் பரதனுக்கும் நல்லவளல்லை. நீ சொல்லு கிற வார்த்தையோ, பாவத்துக்கு ஏதுவாயிருக்கின்றது! மேலும், நீ புத்தியில்லாமல் மனத்துக்குத் தோன்றியபடி பிதற்றுகிறாய்! பிறந்திருக்கிற சரீரத்திற்குக் கீர்த்திதானே சம்பாதிக்க வேண்டும்? மனு தரும சாஸ்திரத்தில் சொல்லி யிருக்கிற நீதியைத் தள்ளலாமா? என்னெதிரில் நில்லாதே! போய்விடு! நீ இவ்வார்த்தையைச் சொன்னதற்கு உன் நாக்கை அறுக்க வேண்டும்! நீ எங்கள் தாய் வீட்டுத் தாதி யானபடியால், மனம் பொறுத்துக்கொண்டேன்! புத்தி இல் லாதவளே, இனிமேல் இப்படிப் பேசாதே!'' என்று மிகவும் கடுகடுத்துச் சொன்னாள்.

மந்தரை பயந்து அப்பால் போகாமல் நின்று, ''இதெல் லாம் எதற்காகச் சொல்லுகிறேன் என்றால், உறுதியான காரியம் செய்யவேண்டுமென்றல்லவா? நீ மனத்தில் நன்றாக ஊன்றிக்கேள். உன் மனத்தில் மூத்தவனிருக்க இளைய வனுக்குப் பட்டம் வரமாட்டாதென்றல்லவா நினைக்கிறாய்? இப்போது ராஜ்யபாரம் செய்து வருகிற ராஜா பெரியவரல்

லரா? அவர் சின்னவனுன இராமனுக்குப் பட்டங்கட்டச் சம்மதித்திருந்தால், பரதனுக்குப் பட்டங்கட்டுகிறதற்குத் தடையாது? தரும சிந்தையாயிருக்கிற ரிஷீஸ்வரர்களுக்கும் மிகவும் பாக்கியம் வந்தால், புத்தி வேறே திரும்பிப்போம். இப்போது இராமனையும் கௌசலையையும் நல்லவர்களென்றல்லவோ நீ எண்ணியிருக்கிருய்? அவர்களே நாளைக்கு நமக்கு மிகுந்த துயரம் வரச் செய்யப்போகிறவர்கள். அப்போது, கௌசலை கொடுக்க, வாங்கித்தானே நீயும் உன் மகனுஞ் சாப்பிட வேண்டும்? அப்போது உன்னிடத்தில் யாராவது தரித்திரர் வந்து ஏதாகிலும் கொடுவென்று கேட்டால், அப்போது அவர்களைக் கேட்டு வாங்கிக் கொடுப்பாயோ, இல்லையென்று சொல்வாயோ? உனக்குப் புத்தி இப்படித் திகைத்துப்போனது எதனுலே? இன்னஞ்சில நாளையில் உனக்குத் தரித்திரமும் ஏழ்மையும் வர, உன் தாய் தகப்பனுர் வந்து உன் சக்களத்தி பாக்கியத்தையல்லவோ பார்த்துவிட்டுப் போக வேண்டும்? இதுவுமல்லாமல், உன் புருஷருக்குப் பயந்து சீதையின் தகப்பன் உன் தகப்பனுர் ராஜ்யத்தைக் கவர்ந்துகொள்ளாமலிருக்கின்ருன். அந்தப் பயமும் இன்ரேடு தீர்ந்தது! அவன் மருமகனுக்கு ராஜ்யமானுல், உன் தகப்பனுர் வீடு சுத்தமாய் முழுகிப்போய்விடும்! அப்போது உனக்குத்தான் மிகுந்த வருத்தமாய் இருக்கும்! நீ கெடுகிறதுமல்லாமல், உன் தகப்பனுர் வீட்டையும் கெடுக்கிருய்! ஸ்ரீராமனுக்குப் பட்டமானுல், அவனுக்கும் அவன் தம்பியாகிய இலட்சுமணனுக்குமேயல்லாமல், பின்னை யாருக்குச் சவுக்கியமுண்டாகப் போகிறது?'' என்று இப்படிச் சொல்ல, நல்ல மனத்தையுடைய கைகேசிக்கும், தேவர்கள் பண்ணிய புண்ணியத்தினுலும் இராட்சதர்கள் செய்த பாவத்தினுலும் மனம் திரும்பிற்று.

அப்போது அந்த வார்த்தையைக் கேட்ட கைகேசி, கூனியைச் சந்தோஷத்துடனே பார்த்து, "அம்மா, பரதன் எனக்குப் பிள்ளையானபடியினுல் உனக்கும் பிள்ளைதான்.

ஆதலால், இப்போது நடக்கப்போகிற பட்டாபிஷேகம் அவனுக்காகும்படி ஓர் உபாயஞ் சொல்,'' என்று சொல்லினள். அது கேட்ட கூனி, "இப்போது நான் சொல்லுகிறபடி நீ கேட்பாயானல், உன் பிள்ளைக்கு இப்போதே பட்டங்கட்டி வைக்கிறேன்! அம்மா, உன் புருஷர் முன்னுளிலே சம்பராசுரன்மேல் யுத்தத்துக்குப் போய், நீ சாரதியாயிருந்து தேர் விட, அவனை ஜயித்தபோது உனக்கு இரண்டு வரம் கொடுக்கிறேனென்று சொல்லியிருந்தாரே! அந்த வரங்களுள் ஒன்ருல் பரதனுக்குப் பட்டங்கட்டவும், மற்ருென்ருல் இராமனை ஆரணியத்துக்கனுப்பவும் ராஜாவைக் கேட்டால், பூலோகமெல்லாம் உன் மகன் வசமாகும். 'இதுதான் அதற்கு உபாயம்,'' என்று சொன்னுள். அப்படிச் சொன்ன கூனியைக் கைகேசி மார்புடன் தழுவிக்கொண்டு, இரத்தின ஆரங்களும் திரவியங்களும் கொடுத்து, "என் மகனுக்கு நீ ராஜ்யமெல்லாம் கொடுத்து அவனை ராஜாவாகச் செய்தாய்! அவனுக்கு நீதான் தாய்! இந்த இரண்டு வரமும் எனக்கு ராஜா கொடாவிட்டால், அவர் முன்னிலையிலேயே பிராணனை விட்டுவிடுகிறேன்! நீ போ,'' என்று சொன்னுள். கூனி அதிக சந்தோஷத்துடனே தன்னிடத்துக்குப் போனுள்.

அவள் போனபிற்பாடு கைகேசி புஷ்பமெத்தையை விட்டிறங்கி, கூந்தலிலிருக்கிற புஷ்பமாலைகளையெல்லாம் மேகத்திலடங்கிய சந்திரனையிழுத்து வெளியில் போட்டது போல வண்டுகளெல்லாம் எழும்பிப் பறக்க இழுத்து எறிந்து, தன் கீர்த்தியின் கொடியை அறுக்கிறது போலத் தன் மேகலாபரணத்தை அறுத்துப் போட்டு, சந்திரனிலிருக்கிற களங்கத்தைத் துடைத்தாற்போலத் திலகத்தையழித்து, கைவளை இரத்தினுபரணங்களையெல்லாங் கழற்றியெறிந்து, தன் கூந்தல் பூமியின்மேல் புரள விரித்துக்கொண்டு, கண்ணில் தீட்டிய மை கரைய அழுது, பூவுதிர்ந்த கொம்புபோலவும், தோகையுதிர்ந்த மயில் போலவும், தரையிலே விழுந்து புரண்டு, இனி இலட்சுமியாகிய சீதை ஆரணியத்துக்குப்

போவாளென்று அயோத்தியாபுரியில் அவள் தமக்கையாகிய மூதேவி வந்து பிரவேசித்தது போல விழுந்து கிடந்தாள்.

## 3. கைகேசி சூழ்வினைப் படலம்

இவ்வாறு கைகேசியிருக்க, சூரியன் அஸ்தமித்தவுடனே தசரதமகாராஜர் ராஜாக்களெல்லாருங் கும்பிட்டு வெளியிலே நிற்க, அவள் வீட்டிற்கு வந்தார்; அந்தப் புரத்தில் போய்க் கைகேசியைக் கண்டு, "இவளுக்கு இப்படி வரவேண்டிய காரணமென்ன?" என்று சிந்தித்து, மதயானையானது துதிக்கையினாலே மானைத்தூக்கி எடுப்பது போல அவளைத் தூக்கியெடுக்க, கைகேசி அவர் கையைத் தள்ளிவிட்டு, மின்னல் துவளுகிறது போலப் புரண்டு ஒன்றும் பேசாமல் துக்கத்துடனே கோபாவேசமாயிருந்தாள். இப்படியிருக்கிற தம் பிராண நாயகியைக் கண்டு தசரதர் அஞ்சி, "உனக்கு இப்படித் துக்கம் வரும்படி செய்தவர் யார்? அதை நீ சொன்னால், அவர்கள் படுகிற பாடும் நான் செய்கிற காரியமும் பிறகு தெரியும்!" என்று மிகுந்த அன்புடனே சொல்ல, அவ்வார்த்தையைக் கேட்ட கைகேசி கண்ணிலிருந்து நீர் முத்து முத்தாய் ஸ்தனங்களின்மேல் விழத் துக்கித்து, "ஐயா, உமக்கு என்னிடத்தில் இவ்வளவு தயை இருக்கிறதா? நான் சொல்லுதற்கென்ன இருக்கிறது?" என்று சொன்னாள். அவ்வார்த்தையைக் கேட்ட சக்கரவர்த்தியார் நகைத்து, "பெண்ணே, உன் பேச்சுக்கும் தடையுண்டோ? நீ என்ன சொல்லுகின்றாயோ அதை உன் மகனாகிய ஸ்ரீராமன் ஆணையாய்ச் செய்கிறேன்! சொல்," என்று கேட்க, அவர் இனி மறுக்கமாட்டாரென்று கைகேசி தைரியமாகி, "ஐயா, அவ்வளவு தயை என்னிடத்தில் உண்டானால், தேவர்கள் சாட்சியாகப் பூர்வத்தில் எனக்கு நீர் இரண்டு வரங்கொடுப்பதாக வாக்களித்திருந்தீரன்றோ? அவற்றை இப்போது கொடும்," என்று சொல்லினள். சக்கரவர்த்தியார் அவளைத் தழுவி

"மாதரசீ, இதற்கித்தனை சந்தேகமென்ன ? இன்றைக்கே வாங்கிக்கொள்," என்று கபடமில்லாமற் சொல்லினர். கைகேசி, "மகாராஜரே, நீரெனக்கு அவ்விரண்டு வரங்களைக் கொடுப்பது நிச்சயமானல், அவற்றுளொன்று என் பிள்ளை பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவும், மற்றென்று சீதை நாயகனுன ஸ்ரீராமன் காட்டுக்குப்போகவும் ஆகட்டும்," என்று துணிந்து சொல்லி எதிரே நின்றாள்.

அந்த வார்த்தையைக் கேட்ட தசரதர், விஷம் தீண்டி அவ்விஷத்தினுல் சரீரம் வெந்து கீழே விழுந்த ஒரு மதயானை யைப்போலப் பூமியில் விழுந்து புரண்டு, மிகவும் துக்கித்து, மனவேதனையோடு கருமானுலையில் எழும்பும் அக்கினிபோலப் பெருமூச்சு விட்டு, நாவுலர்ந்து, கண்கள் சிவக்க, ஐம்புலன் களும் சோர்வுற, சரீரத்தை விட்டுப்போகிற ஜீவனைப்போல மனம் புழுங்க எழுந்திருந்து, திரும்பிப் பூமியிலே விழுந்து, சுவாசமில்லாத சித்திரம் போலத் திகைத்து, "இந்தப் பாவி யைப் பிடித்து அடித்துக் கொல்லுவோமா!" என்று நினைத்து, மறுபடி, "ஸ்திரீ ஹத்தி ஆகாதே!" என்று பழிக்கு நாணி, விஷம் தலைக்கேறினவர் போல அடிக்கடி பெருமூச்சு விட்டு, அவளைக் கண்ணுல் அடிக்கடி பார்த்து, வேலாயுதத்தால் எய்யப்பட்ட யானை போலத் துக்கித்தார்.

இப்படி அவர் துக்கிக்கிறதற்குத் தேவர்களும் கிலே சித்து, ஊழிக்காலம் வந்தது போல நடுங்கினுர்கள். கைகேசி அப்படியே பார்த்துக்கொண்டிருந்தாள். இப்படிப் பிராண நாயகராகிய மகாராஜர் கிலேசித்துப் பிராணனை விடுகிற சரீரம் போலப் பதைக்கிறதைக் கைகேசி பார்த்தும், சிறிதா கிலும் இரக்கம் நாணம் இல்லாமலிருந்தாள். இதனுலல்லவா பெரியோர்கள் ஸ்திரீ ரூபத்தை வஞ்சனை வேடமென்று விளக்கினுர்கள்? இப்படி எதிரில் நிற்கிற கைகேசியைத் தச ரத மகாராஜர் பார்த்து, "நீ ஏதாகிலும் புத்தி மயங்கிச் சொன் னுயோ, எந்தப் பாவிகளாவது சொல்லக்கேட்டுச் சொன் னுயோ ? என்னுணையின்படி நீ நிஜத்தைச் சொல்," என்று

கேட்க, "நான் புத்தி மயங்கிக் கேட்டதன்று; எனக்கு ஒருவர் சொன்னதுமன்று. முன் நீர் வாக்குக் கொடுத்த வரத்தை இப்போது கொடுத்தால் வாங்கிக்கொள்ளுகிறேன். இல்லையென்றால், உமக்கு அபகீர்த்தி வர, உமக்கெதிரில் என் பிராணனை விட்டுவிடுகிறேன்!" என்று சொன்னாள்.

இவ்வார்த்தை காதில் விழுந்தும் விழாமலும் இருக்கையிலேயே தசரதர் வெந்த புண்ணிலே வேலிட்டது போல மனம் நொந்து திகைத்து, ஸ்ரீராமரையே தம் பிராணனாகத் தீர்மானித்திருந்தவராதலால், கீழே விழுந்து, "அடி பாவி! பாவி! என் பிராணன் போகின்றதே! ஐயையோ! தருமம் பொல்லாதது! பொல்லாதது! சொன்ன பேச்சுத் தப்பினாலும் தப்பும்!" என்று நாவெழாமல் சரீரம் தள்ளாடினவராகி, "இனிப் பூமியிலே ஸ்திரீகளென்கிற பூண்டில்லாமல் வெட்டி அக்கும்பலில் நாமும் பிராணனை விட்டுவிடுவோமா!" என்று நினைத்து, கையோடு கையைப் பிசைந்து, உதட்டைக் கடித்து, "மெய் பொல்லாததாய்விட்டதே! என்ன செய்வோம்!" என்று மனம் புழுங்கி, "இவள் இப்படியே நம் பிராணனை வாங்கினாலும், பேச்சை மறுத்தாலும், 'அரசன் சொன்ன பேச்சைத் தப்பினான்,' என்று அபவாதம் வந்தாலும் வரட்டும்! இவள் பிராணனை விட்டாலும் சரி! இவளை நல்ல வார்த்தையினால் இரந்து கேட்டுக்கொள்வோம். இவள் மேல் என்ன குற்றமிருந்தாலும் இருக்கட்டும். நாம் எந்த விதத்திலாகிலும் காரியத்தைக் கவனிப்போம்," என்று தைரியம் செய்துகொண்டு, பின் வருமாறு சொல்லுகிறார் :

"பெண்ணே, உன் மகன் பட்டாபிஷேகம் செய்துகொள்ளுவதற்குச் சம்மதியான்; சம்மதித்தாலும், இராச்சியம் கொள்ளாது; உலகத்தார்கள் இகழ்ச்சி செய்வார்கள்; கீர்த்தியுண்டாகாது. இப்படி அபவாதம் சம்பவிக்கிறதனால் உனக்குத்தான் என்ன பலன் கிடைக்கும்? ராஜாக்கள் இவ்வார்த்தையைக் கேட்டால், பிராணனை விட்டுவிடுவார்கள். மற்றப் பிரஜைகளின் சமாசாரம் பற்றிச் சொல்ல வேண்டுவ

தென்ன? நீ பிறகு யாரைக்கொண்டு இராச்சியமாளப் போகிருய்? இப்போது பட்டாபிஷேகத்துக்கு உத்தேசித்த ஸ்ரீராமனே உன் மகனுக்கு இராச்சியத்தைக் கொடுப்பான். என் பிராணனைக் கேட்டாலும் இந்த க்ஷணம் கொடுக்கிறேன்! மிகுந்த தாதாவாயிருக்கிற கேகயதேசத்து ராஜாவின் பெண்ணே, இந்த இராச்சியத்தை மாத்திரம் கேளாமல், மறந்துவிடு. நான் வாயினுலே சொல்லிய அந்தப் பேச்சைத் திருப்பி மறுக்கிறதில்லை. என் பிராணன் போய்விடத்தக்க கிலேசமான வார்த்தைகளை இனிமேல் சொல்லாதே. பொல் லாத பேயானுலும் கேட்டவர்களுக்கு வேண்டுவதைக் கொடுக்கும். இவ்வளவு நான் கேட்டது நீ கொடுப்பாயாகில், அதனுல் தப்பு வாராது,'' என்று வருந்திச் சொன்னுர்.

இப்படிச் சொன்ன ராஜாவைப் பார்த்துக் கைகேசி சிறிதாகிலும் மனம் தடுமாருமல், "நீரெனக்கு வேண்டும் போது இரண்டு வரம் கொடுப்பதாக வாக்குத்தத்தஞ் செய் திருக்கிறீர். அவற்றை இப்போது தரச்சொல்லிக் கேட்டால், கொடாமல் என்மேலுமக்குக் கோபமுண்டானுல், இனிப் பூமியில் உம்மைப்போல் சத்தியவந்தர் யாரிருக்கிருர்?'' என்று சொன்னுள்.

இவ்வார்த்தை கேட்கவே, பிராணன் புழுங்கி அயர்ந்து, பொய் என்கிறதே அறியாத அந்தச் சக்கரவர்த்தியார் பொறுத்துக்கொண்டு, 'இவ்வுலகத்தில் விஷாக்கினிதான் பெண்ரூபமெடுக்கிறது!' என்று நினைத்து, பின்னும் அவளைப் பார்த்து, "அடி மான் விழியே, உன் மகனும் இராச்சியமாள் வான்; நீயுமாள்வாய்; இராச்சியமும் உன் வசமாகும். சுகமாய் ஆள். நான் சொன்ன பேச்சுத் தப்புகிறதில்லை. இராச்சியம் கொடுத்தேன்! என் மகனும் என் கண்ணும் என்னுயிரும் மற்ற உயிர்களுக்குக் கிருபா நிதியுமாயிருக்கிற ஸ்ரீராமனை மாத்திரம் இந்த ராஜ்யத்தை விட்டு அப்பால் போகாமலிருக்கும்படி நீ தயை செய்! உண்மையாய்ச் சொல்லுகிறேன்! சமுசார சாகரத்தைத் துறந்து நான் நற்

கதிபடைய வேண்டுமென்று நினைத்திருக்கின்றேன். எனக்கு மூப்புமாயிற்று. இந்த வேளையில் அவன் என்னெதிரே ஆரணியத்துக்குப்போனால் நான் பிழையேன்! ஆதலால், என் பிராணன் உன் அடைக்கலம்! நீயே என்னைக் காப்பாற்றி இரட்சித்துக்கொள்,'' என்று இனிய வார்த்தை சொன்னார்.

கைகேசி, அதையுங் கேளாமல், அவருடைய கோபத்துக்கும் அஞ்சாமல், மரம்போல் மனத்தையுடையவளாய், அவரைப் பார்த்து, "ஐயா, நீர் சொன்ன வார்த்தையைத் தவறுவது மாத்திரம் நல்ல தருமமா? நீரே சொல்லும்,'' என்று சொன்னாள். அரசர், "எப்படியும் ஸ்ரீராமன் ஆரணியத்துக்குப் போவான். அவன் போனால் நம்முடைய பிராணன் போய் விடும்!'' என்று இடி விழுந்த பர்வதம்போலக் குன்றிப் பூமியில் விழுந்து, துக்கமென்கிற சமுத்திரத்திலழுந்தி, அதற்கு ஒரு கரை காணாமல், "வாய்ப்பேச்சினால் நம் பிராணனை வாங்கினாளே!'' என்று நினைத்து நினைத்துப் புரண்டு, "அடி பாவி உலகத்தில் ஸ்திரீகள் தங்கள் புருஷன் செத்துஞ் சாகாததற்கு முன்னமே தங்கள் பிராணனை விடுகிறார்கள். இப்படி உன்னைப் போலப் புருஷனைக் கொல்லுகிற பாவி ஒருத்தியையும் நான் கண்டதில்லை! குற்றம் வருமென்றும் பார்க்கவில்லையே! தருமத்தையும் நினைக்கவில்லையே! கடூரமான கோபத்தினால் அருளைக்கொன்று, வாய்மொழியின் அன்பினால் என் பிராணனை வாங்கினாய். இப்படிப்பட்ட நீ, எந்த ஜீவனை இரட்சிக்கப் போகிறாய்? ஸ்திரீகளுக்கு நாணமும் அச்சமும் ஆபரணமென்று சொல்லுவார்கள். நீ ஸ்திரீயானாலல்லவா உன்னிடத்தில் அவைகளிருக்கப் போகின்றன! இந்தக் காரியத்துக்குப் புருஷர்கள்கூட வெட்கப்படுவார்களே! பூமியிலிருக்கிற ராஜாக்களில் பலத்திலேயும் விவேகத்திலேயும் என்க்கொருவரும் சமானமில்லையென்று பெரியோர்களெல்லாம் என்னைப் பிரக்கியாதியாகச் சொல்லுவார்கள். யானும் தேவருலகமட்டும் போய் அனேக யுத்தங்கள் செய்து அசுரர்

களையும் ஜயித்தேன்! இப்படிப்பட்ட நான் ஒரு மனையாட்டியினாலே மாண்டுபோனேனென்கிற அபவாதம் எனக்குண்டாக வேண்டுமா?'' எனப் பலவாறு சொல்லி இரங்கி, மிகுந்த துக்கத்துடனே கிலேசப்பட்டுப் பூமியிலே புரளுகிற போது, கைகேசி பார்த்து, "அரசரே, எதுவாகிலும் வரவேண்டிய விதியிருந்தால் தப்பாதே! நீர் அந்த வரங்களைக் கொடுத்தால் நான் என் பிராணனை வைத்துக்கொண்டிருக்கிறேன். இல்லையென்றால் உம்மெதிரிலே என் பிராணனை விட்டுவிடுகிறேன். பூர்வத்தில் உங்கள் பெரியோர்களுள் ஒருவர் வாய்ப் பேச்சு நிமித்தம் தம் சரீரத்தை அரிந்து கொடுக்கவில்லையா? நீர் முன்பு வாக்குத்தந்து இப்போது அதற்காகச் சலிக்கிறது உத்தமமா?'' என்று சொன்னாள்.

தசரதர், "அடி பாதகி, அந்த இரண்டு வரமும் உனக்குக் கொடுத்தேன். நானும் தேவலோகம் போய்ச் சேருகிறேன். நீ உன் மகனுடனே ராஜ்யம் ஆண்டுகொண்டிரு,'' என்று சொல்லி, துக்கமென்கிற சமுத்திரத்திலே மூழ்கி, மூர்ச்சையடைந்து நித்திரை போனார். அப்போது இரவு என்கிற பெண்ணானவள், "இந்தக் கைகேசியின் புருஷனாகிய தசரத மகாராஜன் மிகவும் வருந்தி மூர்ச்சையடைந்தும் இவள் சிறிதாகிலும் இரக்கமில்லாமலிருக்கிறாள்! இவளைப்போல நாமும் பெண்ணாகையால், பெண்களெல்லாம் கொடியவர்களென்றல்லவோ யாவரும் சொல்லுவர்?'' என்று வெட்கிப் புருஷர் முன்னே முகங்காட்டி நிற்கமாட்டாதவள் போலப் போய் விட்டாள். பொழுது விடியுங்காலமாயிற்று. அரசருடைய துயரத்தைப் பார்த்துக் கோழிகளும் சிறகென்கிற கைகளினாலே வயிற்றிலே அடித்துக்கொண்டு அழுகிறது போலக் கூப்பிட்டன. உடனே மற்றப் பக்ஷிகளெல்லாம் கைகேசியை வைவது போல ஒலித்துக்கொண்டு கூட்டை விட்டுப் புறப்பட்டன. காட்டிலிருக்கும் யானைகள், "ஸ்ரீராமனுக்கு ராஜ்யமில்லாதபடியால், நாமும் பூமியைவிட்டுப் போய்விடுவோம்!'' என்று எண்ணிப் புறப்படுவது போலப் புறப்பட்டன.

நக்ஷத்திரங்களெல்லாம், ஸ்ரீராமபிரானுக்குப் பட்டாபிஷேக மில்லாதபடியால் போட்டிருந்த முத்துப்பந்தலைப் பிரித்தது போல மறைந்தன. பட்டணத்திலுள்ள பெண்களெல்லாம், 'இன்றைய தினம் ஸ்ரீராமபிரானுக்குப் பட்டாபிஷேகம் ஆகப்போகிறது,' என்று முழக்கின பேரிகைச் சத்தங் கேட்டு, மேகத்தைக் கண்ட மயில்கள் போலச் சந்தோஷித் தெழுந்திருந்தார்கள். 'ஸ்ரீராமபிரானுடைய பட்டாபிஷேகம் பார்ப்பதை ஒரு ராத்திரி நடுவே வந்து கெடுத்ததே!' என்று அந்த இராத்திரியை ஊழிக்காலம் போலக் கழித்தவர்களான புருஷர்களெல்லாம், தாங்களும் சகல உலகங்களும் சுகப்படு கிற நாள் இந்நாள் என்று சந்தோஷத்துடன் எழுந்திருந்தார் கள். மாளிகைதோறும் வைத்திருந்த தீபங்களெல்லாம் கைகேசியினாலே தசரத மகாராஜாவுக்கு ஐம்புலன்களும் எப்படி ஒடுங்கினவோ, அப்படிப் பிரகாசம் மழுங்கி வெளுத் துப்போயின. அல்லிப் புஷ்பங்களெல்லாம் கைகேசியி னுடைய நடத்தையைக் கேட்ட பெண்கள் எப்படி வாயை மூடிக்கொள்ளுவார்களோ,-அப்படிக் குவிந்தன. அப்போது சூரியன் தன் வமிசத்திலே பிறந்தவராகிய தசரத மகாராஜ ருடைய பிராணன் ஒழியும்படி செய்த கைகேசியை வைது கொண்டு புறப்படுவது போல, இருளைக் கடிந்து மிகவும் சிவந்த ரூபமாக உதயகிரியில் உதயமானான். "மூவ ராயும், மூவருள் முதல்வராயும், ஆதி மூலமாயும், உலக மாயும், தேவாதி தேவனாகிய சாம்பசிவ மூர்த்தியினுடைய வில்லை ஒடித்தவராயுமிருக்கிற ஸ்ரீராமருக்கு இப்பூமியைக் காக்கும்படி பட்டாபிஷேகம் செய்யப்போகிற வேடிக்கை யைப் பார்ப்போம்!" என்று அவாக்கொண்டிருக்கிற அந் நகரத்துப் பெண்களுடைய முகம்போலத் தாமரைகள் மலர்ந் தன. எங்கும் பேரிகை, மத்தளம், தாளம் முதலான வாத் தியங்கள் முழங்கின. 'ஸ்ரீராமருக்கு இன்றைக்குப் பட்டாபி பிஷேகம்,' என்று பட்டணத்திலுள்ளவர் யாவரும் அதிக சந்தோஷத்துடனே அலங்காரம் செய்துகொண்டனர். அரச

குமாரர்களெல்லாரும் ஸ்ரீராமருடைய தம்பிமார் போலச் சந்தோஷித்துக்கொண்டிருந்தார்கள். பதிவிரதா சிரோமணிகளாகிய ஸ்திரீகள் கௌசலையைப் போலச் சந்தோஷித்திருந்தார்கள். பிராமணோத்தமர்களெல்லாம் வசிஷ்டரைப் போலச் சந்தோஷித்திருந்தார்கள். சாது ஜனங்களாயிருக்கிற புருஷர்களெல்லாரும் தசரத மகாராஜாவைப்போலச் சந்தோஷித்திருந்தார்கள். அன்று ஸ்ரீராமருடைய பட்டாபிஷேகத்துக்கு இலங்கையிலுள்ள இராட்சதரும் அஷ்டகஜங்களுந் தவிர, மற்ற உலகத்திலுள்ள யாவரும் வந்து நிறைந்தார்கள். ராஜாக்களெல்லாம் சந்திரோதயம்போல முத்துக்குடைகள் பிரகாசிக்க, அன்னப்பட்சிகள் பறக்கிறது போல வெண்சாமரை இரு பக்கத்திலும் வீச, ஒவ்வொருவரும் ஒவ்வோர் இந்திரனுக்குச் சமானமாகச் சகலரும் பட்டாபிஷேக மண்டபம் வந்து சேர்ந்தார்கள். மகரிஷிகள் சந்தோஷத்துடனே வந்து கூடினார்கள். பூலோகத்தார் யாவரும் எல்லாத் திக்குகளிலும் நிறைந்தார்கள். மங்கள பேரிகை முழக்கினார்கள். இப்பால் வசிஷ்ட மாமுனிவர் அனேகம் பிராமணர்கள் சூழப் பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய வஸ்துக்களும் கங்கைமுதல் கன்னியாகுமரி வரையிலுள்ள தீர்த்தங்களும் பூரித்து வைத்து, சிங்காதனம் முதலானவைகளுஞ் செய்வித்தார். ஜோசியர்கள் வசிஷ்டரிடம் முகூர்த்த காலம் சமீபித்திருக்கின்றதென்று சொல்ல, அப்போது வசிஷ்டர் சுமந்திரராகிய மந்திரியாரைப் பார்த்து, "நீர் போய்ச் சீக்கிரம் மகாராஜாவை அழைத்துக்கொண்டு வாரும்," என்று சொன்னார். சுமந்திரர் மிகுந்த அன்புடனே நடந்து சபாமண்டபத்தை அடைந்தார். ராஜாதிராஜரை அவ்விடத்திற் காணாதபடியால், அவ்விடத்திலிருக்கிறவர்களைக் கேட்டுக்கொண்டு கைகேசி வீட்டுக்குப் போய், தாதிகளிடம் சொல்லி அனுப்பினார்.

அந்தச் செய்தியைத் தன் தாதிகள் வந்து சொல்லக் கைகேசி கேட்டு, " இராமனை இவ்விடத்துக்கு அழைத்துவரச்

சொல்,'' என்று சொன்னுள். அதைச் சுமந்திரர் கேட்டு, அதிக சந்தோஷத்துடனே ஸ்ரீராமரிடம் போய், அவரைக் கண்டு தொழுது, வாய் புதைத்துக்கொண்டு, "சுவாமி, ராஜாக்களும், மகரிஷிகளும், மற்ற ஜனங்களும் அதிக சந்தோஷத்துடனே வந்து நிறைந்திருக்கிருர்கள். தேவரீருடைய சிறிய தாயார் தம்முடைய அரண்மனைக்கு உம்மை அழைத்து வரச் சொல்லி ஆக்கியாபித்தார்; கிரீடந்தரித்துக்கொள்ளுகிறதற்குச் சீக்கிரம் வாரும்,'' என்று சொல்ல, ஸ்ரீராமர் ஸ்ரீரங்கநாதரைத் தொழுதுகொண்டு, பலர் தம்மைச் சூழ்ந்து வர, தேவ கீதங்கள் பாட, தேவர் சந்தோஷிக்க, இரதத்திலேறி வந்தார்; பட்டாபிஷேகம் செய்துகொள்ளுகிறதற்கு ஸ்ரீராமர் போகிருரென்று அனைவரும் ஆசையுடனே ஆங்காங்கு நிறைந்து பார்த்துக்கொண்டிருந்தனர். சகலரும் தேரின்மேல் போகிற ஸ்ரீராமரைப் பார்த்து, "அனேகம் ஊழிக்காலம் நீர் சுகமாயிருக்க வேண்டும்!'' என்பாரும், "நாங்கள் செய்த தபோபலமெல்லாம் உமக்குச் சித்திக்கக் கடவது!'' என்பாரும், "நீர் நல்லவரானபடியினுலே உமக்கு நல்ல காரியம் பலித்தது!'' என்பாரும், "இவருடைய திருநேத்திரங்களுக்குச் செந்தாமரைப் புஷ்பத்தையும், திருமேனிக்கு மேகத்தையும் உவமானஞ் சொல்லத்தக்கனவாக அவைகளென்ன புண்ணியம் செய்தனவோ!'' என்பாரும், "இந்த இராமனைப் பெற்று நமக்கு நல்கிய தசரத மகாராஜாவுக்குப் பதிலுபகாரம் என்ன செய்யப்போகிருேம்!'' என்பாரும், "இவருடைய அறிவும் குணமும் சீலமும் தேவர்களுக்குத்தானுண்டா?'' என்பாரும், "பராபர வஸ்துவே இவன்,'' என்பாரும், தான் ஈன்ற இளங்கன்று வரப் பசுவானது கண்டு மனமுருகுவது போல மனம் உருகிப் பரிவுடனே நிற்பாரும், "இவனைப் போல உலகத்திலே பிள்ளைகள் உண்டா?'' என்பாரும், "இந்தப்பிள்ளை தாய் கையிலே வளரவில்லை; கைகேசியே இவனை வளர்த்தாள். இப்போது பட்டமுங் கைகேசியே கட்டிவைக்கப் போகிருள்,'' என்

பாரும், "பூமி எல்லாருக்கும் பொதுவென்று சொல்லுவதை இன்று முதல் சொல்லக்கூடாது. அது இனி இவரதுதான்," என்பாரும், "தேவர்களுடைய பகைவர்களையெல்லாம் இவர் ஜயிப்பார்," என்பாரும், "இவர் சொன்னபடி கேட்டு ராஜ்ய பாரம் செய்கிற ராஜாக்களுடைய பாக்கியமே பாக்கியம்!" என்பாருமாய் இப்படிச் சகலரும் சொல்லிச் சந்தோஷிக்க, ஸ்ரீராமர் வீதிகளெல்லாம் தாண்டி, சபா மண்டபத்திற்குப் போனார்.

அவ்விடத்தில் தம் தகப்பனாரைக் காணாதபடியால், அவர் தம் சிறிய தாய் அரண்மனைக்குப் போனார். ஸ்ரீராமர் தகப்பனாரிருக்கிற அரண்மனைக்கு வருகிறதைக் கைகேசி கண்டு, "இவனுக்கு ராஜா தமது வாயினாலே சொல்லமாட்டார். நாமே சொல்வோம்," என்று துணிந்து, எழுந்து தனியே நேரில் ஒரு யமன் போல வந்தாள். அவளைக் கண்டவுடனே ஸ்ரீராமர் அந்திக்காலத்தில் தன் தாயைக் கண்ட பசுக் கன்றைப்போல மனங்களித்துச் சாஷ்டாங்கமாகச் சேவித்து நின்றார். அப்படி நின்ற ஸ்ரீராமரை இரும்பைப் போல வலிய மனத்தையுடைய கைகேசி பார்த்து, "அப்பா, உன் தகப்பனார் உனக்கு ஒரு வார்த்தை சொன்னார்," என்று சொன்னாள். அதற்கவர், "அம்மா, தகப்பனார் உமக்குச் சொல்ல, அதை நீர் எனக்குச் சொல்ல, நான் அதைக் கேட்க, எவ்வளவு புண்ணியம் செய்தேன்! இவ்வளவு பாக்கியம் கிடைத்ததனால் எனக்குச் சமமானவர் யார் இருக்கிறார்? தகப்பனும் தாயும் நீரே. கிருபை செய்து சொல்லும்," என்று வணங்கிக் கேட்க, கைகேசி, "அப்பா, ஸ்ரீராமா, சமுத்திரம் சூழ்ந்த பூலோகமெல்லாம் பரதன் ராஜரீகம் செய்ய, நீ ஜடாதரனாய்த் தவவேடம் பூண்டு ஆரணியத்துக்குப் போய்ப் புண்ணிய தீர்த்தங்களாடிப் பதினான்கு வருஷம் சென்ற பின்பு வரவேண்டும் என ராஜா சொன்னார்," என்றாள். அப்போது ஸ்ரீராமருடைய திருமுக மண்டலம் அப்பொழுது அலர்ந்த செந்தாமரைக் கமலம் போல விளங்கியது. முன் தகப்பனார் சொன்ன வார்த்தை

யைத் தள்ளலாகாதென்று ராஜ்யமென்கிற கிலேசத்திற்குச் சம்மதித்திருந்தவரானபடியினால், வண்டியிற் கட்டிய எருதைப் பூட்டுத் தறித்து விட்டுவிட்டாலெப்படியோ, அப்படிக் கைகேசி வார்த்தைக்குச் சந்தோஷித்தார். "அம்மா, அரசர் சொல்லாமலிருந்தாலும், உம்முடைய வார்த்தையை நான் மறுப்பேனோ? தம்பிக்கு வந்த பாக்கியம் அடியேனுக்கு வந்ததல்லவா? அப்படியே உம்முடைய வார்த்தையைச் சிரமேல் வகித்துக்கொண்டேன். இதோ ஆரணியத்துக்கு நடக்கிறேன். இதுவே உத்தரவாகப் பெற்றேன்," என்று சாஷ்டாங்கமாகச் சேவித்து, அங்கிருந்தபடியே தகப்பனாரிருக்கிற திக்கை நோக்கித் தொழுது, பூமி தேவியும் இலட்சுமியும் அங்கலாய்க்க, கௌசலையினுடைய திருமாளிகைக்கு வந்தார்.

## 4. நகர் நீங்கு படலம்

"பட்டாபிஷேகம் செய்துகொண்டு மகன் வருவான்," என்று எதிர்பார்த்திருந்த கௌசலைக்கு முன் வெண் சாமரை குடை முதலானவைகள் இல்லாமல், தம்முடைய ஆதி சங்கற்பம் முன்னே நடக்க, தருமம் பின்னே அழுதுகொண்டு வர, இராமர் தனியே வந்தார்; வந்த மைந்தரைக் கண்டு, 'கிரீடந்தரித்துக்கொள்ளாமல் திருமஞ்சனமுமாடாமல், வந்ததென்னவோ!' என்று ஐயமுற்ற கௌசலையைச் சாஷ்டாங்கமாகச் சேவித்தார். சேவித்த மைந்தரை அன்னை அன்புடனே வாழ்த்தி, 'அப்பா, உனது பட்டாபிஷேகத்துக்கு ஏதாகிலும் தடை உண்டாயிற்றோ?' எனக் கேட்க, ஸ்ரீராமர் கரங்களைக் கூப்பிக்கொண்டு, 'அம்மா, உம் குமாரனும் என் தம்பியுமான பரதனுக்குப் பட்டாபிஷேகமாம்,' என்று சொன்னார். அந்த வார்த்தையைக் கௌசலை கேட்டு, 'அப்பா, மூத்தவனிருக்கத் தம்பிக்காவது முறைமையல்ல என்கிறது ஒன்றல்லாமல், வேறில்லை. உன்னிலும் பரதன் நல்லவன்.

அப்படியே ராஜ்யத்தை ஆண்டு அனேககாலம் கூடியிருந்து வாழக்கடவீர்கள்!' என்று சொன்னாள். அப்போது ஸ்ரீராமர் தாயினுடைய குணாதிசயத்தைக் கண்டு சந்தோஷித்து, "அம்மா, ராஜா எனக்கு ஒரு காரியம் சொல்லியிருக்கிறார். அதென்னவென்றால், நான் பதினாலு வருஷம் ஆரணியத்தில் ரிஷிகளோடு வாசம் செய்துவரவேண்டும் என்பதே," என்றனர். அவ்வார்த்தை தன் காதில் விழுவதற்கு முன்னமே கௌசலை திகைத்து, விம்மி அழுது, பூமியில் விழுந்து, "அப்பா, உன்னைப் பட்டம் கட்டிக்கொள்ளச்சொல்லி ராஜா சொன்னது வஞ்சகமோ! அல்லது விஷமோ! என் பிராணன் இனிமேலிராதே! என்னுயிர் நடுங்குகிறதே!" என்று சொல்லிக் கைகளை நெரித்து, தன் பிள்ளையிருந்த ஆலந்தளிருக்குச் சமமான வயிற்றைத் தங்கக் கடகமிட்ட தன் கரங்களினால் பிசைந்து, பெருமூச்சுவிட்டு, மனம் புழுங்கி, விம்மி, "இராசாவினுடைய கிருபை நன்றாயிருந்தது!" என்று நகைத்து, மகனை நன்றாய்ப்பார்த்து, 'அப்பா, நீ இராசாவுக்கு என்ன பிழை செய்தாய்?' என்று சொல்லி ஏங்கி, மிகுந்த தரித்திரனுக்கு அதிக திரவியமகப்பட்டு உடனே அவன் அதை இழந்தால் எப்படியோ அப்படிக் கிலேசித்து, 'தருமமென்கிறது என்னிடத்திலில்லையோ? ஆ! தெய்வங்களே! இப்படியா செய்தீர்கள்!' என்று சொல்லித் துக்கித்து, கன்றைப் பிரியும் பசுப்போல மனங்கலங்கினாள்.

தாய் இவ்வாறு கிலேசப்படுவதை ஸ்ரீராமர் கண்டு, "அம்மா, என் தம்பி இராச்சியமாள யான் தகப்பனாரைப் பொய்யில்லாதவராக்கி ஆரணிய வாசஞ் செய்யும்படி எனக்குறுதி உண்டாயிற்று. சரீரம் எடுத்ததற்கு இதைப்பார்க்கிலும் பாக்கியம் வேறென்ன இருக்கின்றது? ஐம்பூதங்களும் அழிந்து போனாலும், ராஜாவினுடைய வார்த்தையை நான் மறுக்கலாகுமா? ஆதலால், அம்மா, கிலேசிக்க வேண்டா," என்று தேறுதல் சொன்னார்.

கௌசலை ஸ்ரீராமரைப்பார்த்து, "அப்பா, ராஜாவி

னுடைய ஆக்கினையின்படி நீ போகவேண்டாவென்று நான் சொல்லவில்லை. உயிரை விடமாட்டாமல் தாங்கிக்கொண் டிருக்கிற என்னையுங் கூட அழைத்துக்கொண்டு போ,'' என்று சொல்லினள். அதனை ஸ்ரீராமர் கேட்டு, "அம்மா, ராஜா என்னைப் பிரிந்தவுடன் துக்கசாகரத்திலழுந்துவர். நீர் அப்படியிருப்பவரோடு இருந்து அவருக்குத் தைரியஞ் சொல் லிக்கொண்டு இருக்கவேண்டுமேயல்லாமல், என்னுடன் ஆர ணியத்துக்கு வர நினைக்கிறது உத்தமமா? நீர் தருமம் பார்க்க வில்லையா? என் தம்பி இந்த ராஜ்யத்துக்கு ராஜாவான பிற் பாடு ராஜாதிராஜரானவர் இல்லறத்தை விட்டுத்துறவறத்தை யடுத்துத் தவஞ்செய்யப் போகின்றார். அந்நாளையில் நீரும் கூட இருந்து விரதங்களை அனுசரிக்க வேண்டுமாதலால், நீர் கிலேசித்து மனந்திகைக்க வேண்டிய காரணமென்ன ?தேவர் களும் தவம் செய்தல்லவோ பெரியவர்களானார்கள் ? ஆகி லும், இந்தப் பதினாலு வருஷமும் தேவருக்குப் பதினாலு பக லல்லவா? அம்மா, முன்னாலே கௌசிக மகரிஷியின் பிறகே மகாராஜா ஆக்கினையின்படி யான் போனதனாலல்லவா அனேக மந்திரங்களும் சிறப்புகளும் கிட்டின! அதை நீர் மறந்து போனீரா ? ரிஷீஸ்வரர்கள் மனம் மகிழ நடந்து அவர்கள் அனுக்கிரகமும் பெற்றுக்கொண்டு, என்னிடத்தில் தேவர்களுக்கும் அபேக்ஷையுண்டாகும்படி வருவேன். அது வும் இருந்து பாரும். முன்னாலே சகரர்கள் பிதா வார்த்தை யைக் கேட்டுச் சமுத்திரத்தைத் தோண்டிச் சரீரங்களைத் தியாகம் செய்தார்கள். அக்கீர்த்தி இன்னமுமிருக்கின்றதே! கையில் மழுவாயுதம் பிடித்த பரசுராமரும் தகப்பனார் பேச் சைக் கேட்டுத் தம் தாயாரைச் சங்கரிக்கவில்லையோ ?'' என் றிப்படித் தாய்க்குத் தைரியம் பிறக்கத் தேறுதல் சொல்ல, கௌசலை, "இவனெப்படியும் ஆரணியத்திற்குப் போகிற தற்கே சித்தமாயிருக்கிறான். ஆதலால், இராச்சியம் பரத னாவும் இவன் காட்டுக்குப் போகாமற்பட்டணத்திருக்கவும் ராஜாவுக்கு நாமே போய்ச் சொல்லுவோம்,'' என்று எண்

ணிக்கொண்டு உடனே தசரதர்இருக்கிற இடத்துக்குப்போயி ஞள். அப்படிப்போகின்ற தாயை நமஸ்கரித்து, சுமத் திரைக்கு இச்சேதி தெரிவித்தால் தாயைத் தேற்றித் தைரி யஞ் சொல்லுவாளென்றெண்ணி, அவள் அரண்மனைக்கு ஸ்ரீராமர் போயினர்.

கௌசலை, கைகேசியின் அரண்மனைக்குப்போய் அவ் விடத்தில் அரசர் மூர்ச்சையாய்ப் பிரஞ்ஞை தப்பியிருக்கிற தைப் பார்த்து, ஜீவன் போய்விட்ட சரீரம் போலப் பூமியில் விழுந்து, “ சுவாமி, என்னைப் பிரிந்துபோகிறீரா ? பெரியவர்க ளுக்கு இது உத்தமமா ? நீதியா ? அடியேனை நினைக்கவில் லையா ? ஆ ! என்னுடைய அறிவே, நீர் இப்படி ஆகிறது அறிந்துதானே பிள்ளைக்குப் பட்டங்கட்ட வேண்டுமென்று யோசனை செய்தீர் ? ராஜாதிராஜரே, தரித்திரர்களுக்குத் தனமே, பூலோகத்தாருக்குத் தவமே, பாக்கியத்துக்குப் பாக் கியமே, கல்விக்கடலே, வேதசாரமே, கருணாலயமே, இப்படி அழுகிற என்னை ஏனென்றுதான் கேட்கலாகாதா ? இது உமக்கழகா? ஜீவனில்லாத சரீரம் போல ஆகவேண்டிய காரணமெனக்குத் தெரியச் சொல்லலாகாதோ ? ஐயையோ ! எனக்குத் தெரியவில்லையே ! அப்பா, மகனே, தகப்பனுர் கதி யைப் பார்க்கிறதற்காகிலும் வாராயா ?” என்று அழுதனள்.

இப்படிக் கௌசலா தேவி வந்து அழுகிற சத்தங்கேட் டவர்கள் வெளியிலே சொல்ல, அதைச் சபையிலே கூடி யிருந்தவர்கள் கேட்டு, வசிஷ்ட மாமுனிவரைச் சேவித்து, “ சுவாமி, என்னவோ விபத்து உண்டாயிருக்கின்றது போலக் காண்கிறது ! நீங்கள் விஜயஞ்செய்து அறியுங் கள் !” என்று சொன்னார்கள். உடனே அவர் கைகேசி யின் வீட்டுக்கு வந்து, ராஜாவைப் பார்த்து, ராஜா மூர்ச் சையாயிருக்கிறாரென்பதைத் தெரிந்துகொண்டு, கைகேசி யின் முகம் துக்கமில்லாமலிருக்கிறதைக் கண்டு வியந்து, ஒருவர் மனம் ஒருவருக்கு எப்படித் தெரியுமென்றெண்ணி, அங்கலாய்த்துக்கொண்டிருக்கிற கௌசலையைத் தேற்றி,

தம்மைச் சேவித்த கைகேசியை நோக்கி, "ராஜாவுக்கு இப்படி நேர்ந்ததற்குக் காரணமென்ன?" என்று கேட்டனர். அதற்கவள் தன்னுலே வந்த செய்திகளெல்லாம் வசிஷ்டருக்குத் தெரியச் சொன்னுள்.

அது கேட்ட வசிஷ்டர் மலர்போன்ற தம் கைகளினுலே ராஜாவை வாரியெடுத்து, "ஐயா, மகாராஜரே, நீர் சகலமும் தெரிந்தவரல்லவா? நீர் இப்படிக் கிலேசிக்கலாமா? அவள் உம் பிள்ளைக்கு ராஜ்யங் கொடுப்பாள். துயரப்படாதீர்!" என்று சொல்லிச் சரீரத்தைத் தடவிக்கொடுத்து, சந்தனம் பன்னீர் முதலியவைகளை வீசும்படி ஆக்கியாபித்து, தம் மார்பிலே அவரைச் சாய்த்துக்கொண்டு இன்சொல் சொல்லினர். அப்போது கைகேசியின் வார்த்தையாகிய விஷமேறி மயங்கிக்கிடந்த தசரதர், ஸ்ரீராமரை நினைத்துக்கொண்டேயிருந்தபடியினுல், அந்த விஷம் நீங்கி விழித்தார். அது கண்ட வசிஷ்ட மாமுனிவர், "ராஜாவே, துயரப்படாதீர்; துயரத்தை விட்டுவிடும். உம் பிள்ளை இராமனே ராஜ்யபாரம் செய்யக் கைகேசி வரம் கொடுப்பாள். அவன் மகுடஞ் சூடாமற் போனுல் நாம் யாரிருக்கப்போகிறேம்!" என்று சொல்லினர். அது கேட்ட மன்னர், "சுவாமி, அடியேனுக்கு முடிவு நெருங்கிற்று! இந்த வேளையில் ஸ்ரீராமனுக்குப் பட்டங் கட்டுகிறேனென்று சொல்லியதை மறுத்து அவனை ஆரணியத்துக்கனுப்பும்படியாயிற்று. என் வார்த்தையும் தவருமல், உலக அபவாதமும் வாராமல், தேவரீர் என் பிராணனையுங் காத்துக்கொள்ளும்," என்று சொல்லினர்.

வசிஷ்ட மாமுனிவர் அன்புடன் கைகேசியைப் பார்த்து, "மகாலட்சுமிக்குச் சமானமானவளே, உன் பிள்ளைக்கு ராஜரீகமும், உலகத்துயிர்களுக்குப் பிராணனும், உன் சொந்தப் புருஷருக்கு ஜீவனும் கொடுத்துக் கீர்த்தி சம்பாதித்துக் கொள்," என்று சொன்னுர். அந்த வார்த்தையைக் கேட்ட கைகேசி, விம்மி அழுது, கீழே விழுந்து, "அரசர் பேச்சுத் தப்பினுல் நான் பூமியில் ஜீவனுடனிருக்கிறதில்லை! அவர்

பேச்சுத் தப்பினாலும், நான் பேச்சுத் தப்புவேனோ? ஒரு காலத்திலும் தப்பேன்! அவர் தப்புவராயின், எனது பிராணனை விட்டுவிடுகிறேன்!'' என்று சொன்னாள்.

வசிஷ்ட மாமுனிவர், "அம்மா, கைகேயி, உன் புருஷர் சாவாரென்றும், இந்த வார்த்தையை உலகத்தார் மதியாரென்றும், உனக்கு அபகீர்த்தி வருமென்றும் எண்ணிப் பார்த்தும் இந்தக் காரியத்தை நீ விடவில்லை; சொன்னாலுங் கேட்கவில்லை. நானினி உனக்கென்ன சொல்லப் போகிறேன்! புருஷர் போய்விடுவாரென்கிற இரக்கம் சிறிதும் இல்லாமல் அப்படிச் சொல்லுகிறாயே! நீ என்ன நெருப்பா? விஷமா? பேயா? ராஜாவுக்கு நீயென்ன பகையாளியா? ராஜா சொல்வதற்கு முன்னம் நீயே ஸ்ரீராமனை ஆரணியத்துக்குப் போகச் சொன்னாய். அவன் உடனே புறப்பட்டான். உனக்கு மிஞ்சின பொல்லாதவர் ராஜ்யத்திலே ஒருவரையுங் காணேன்,'' என்றார்.

இந்த வார்த்தைகளனைத்தையும் தசரத மகாராஜர் கேட்டு, கண்ணை விழித்துக் கைகேசியைப் பார்த்து, "அடி பாவி, என் மகனைக் காட்டுக்குப் போகச் சொல்லிவிட்டாயா? அவனும் போனானா? என் கண்ணான ஸ்ரீராமனை ஆரணியத்துக்குப் போகும்படி செய்தால், உன் பிள்ளைக்குப் பட்டங் கட்டுகிற போது கையிலே கங்கணங் கட்ட வேண்டுமே! அதற்கு உன் தாலிக்கயிற்றைத்தான் கட்ட வேண்டி வரும்! அனேக நாள் உன் வாயினுடைய விஷத்தைப் புசித்து வந்தேன். ஆகையால், அது என் பிராணனை வேரோடே விழுங்கி விட்டது. பூர்வத்தில் நான் உன்னை அக்கினி சாட்சியாய் மனைவியாகத் தேடிக்கொண்டது ஒரு கூற்றுவனைத் தேடிக் கொண்டதுபோலாயிற்று!'' என்று சொல்லி வருந்தினார்.

இதைக் கேட்டும் சிறிதாகிலும் இரங்காமலிருந்த கைகேசியை ராஜா வெறுத்து, வசிஷ்ட மாமுனிவரை நோக்கி, "சுவாமி, இந்தப்பாவி எனக்கு மனைவியுமல்ல; ராஜ்யம் ஆள வருகிற பரதன் எனக்குப் பிள்ளையுமல்ல. அவன் எனக்கு

உரிய அபர கிரியைகளுக்கும் பாத்திரனல்ல,'' என்று சொல்லித் தம் சமீபத்தில் அழுதுகொண்டிருக்கிற கௌசலையைப் பார்த்து, "என்னைக் கண்டுகொள்ளாமற்போன இராமன் உன்னையும் காணவில்லையோ?'' என்று கண்களில் தாரை தாரையாய் நீரைப் பெருகவிட்டுத் துக்கித்தார்.

அப்போது கௌசலை பிள்ளையைப் பிரிகிற துயரத்தையும் புருஷருடைய வருத்தத்தையும் கண்டு ஆலோசித்து, "இந்த வஞ்சனை கைகேசி செய்ததே,'' என்று தீர்மானித்து, அரசர் கொடுத்த வரத்தைத் தப்பமாட்டாமல் வருந்தி மூர்ச்சித்திருக்கிருரென்று அறிந்து, ராஜாவுக்குத் தேறுதல் சொல்ல நினைத்தவளாகி, "ஸ்ரீராமன் திரும்பினுனென்று சொல்லாமற்போனுல் அரசர் தேற மாட்டார். அப்படிச் சொன்னுல் ஆபத்துமாகிறது,'' என்று எண்ணி மனஞ் சோர்ந்து, "சுவாமி, மகனுடைய வாஞ்சையினுலே சத்தியத்தை விட்டு இப்படிக் கிலேசிக்கிறது தேவரீருடைய பிரதாபத்துக்கும் கீர்த்திக்கும் தகுமா? உலகம் சம்மதிக்குமா? மகன் திரும்புவான். நீர் வருந்தவேண்டா,'' என்று சொல்ல, அதுகேட்ட தசரத மகாராஜர், மிகுந்த ஆவலுடனே கண்களை விழித்துப் பார்த்தார். அப்போது அவருடைய வருத்தத்தையும் அவர் பிள்ளையின்மேல் வைத்திருக்கிற வாஞ்சையையும் கௌசலை தெரிந்துகொண்டு, "ஐயோ! அவன் ஆரணியத்துக்குப் போகாமல் இரான். இவருடைய நிலைமையைப் பார்த்தால், இவர் இறந்துபோகாமலிரார். ஆ! இதென்ன! தெய்வமே! இப்படி வினை வந்து மூண்டதா?'' என்றெண்ணி மிகவும் துன்புற்ருள்.

அப்போது சக்கரவர்த்தியார் தம் நிமித்தம் கௌசலை தைரியமாய்ச் சொல்லுகிருளென்று அக்கருத்தின் குறிப்பையறிந்து, 'எப்படியும் ஸ்ரீராமன் ஆரணியத்துக்குப் போய் விடுவான்,' என்றெண்ணி, "மகனே, ஸ்ரீராமா, நான் என் சரீரம் சோர்ந்து பூமியில் விழுந்து கிடக்கின்றேன்! இந்தக் கண்ணீரையாகிலும் வாரி எனக்கு உண்ணும் நீராக விட்டு

உன் கடனைக் கழித்து நீ காட்டுக்குப் போகாயா? அப்பா, மகனே, ராஜாக்களை இருபத்தொரு தலைமுறை கருவறுத்த மழுவாளியாகிய பரசுராமனை ஜயித்த உனக்கு முடி சூட்டு கிறேனென்று சொன்ன பாவியாகிய நான், உடனே உனக்குச் சடைமுடி தரிப்பித்த பாவியென்று இந்த விருத்தாப்பிய காலத்தில் என்னை வெறுத்துவிட்டுப் போய்விடுகிருயோ? மகனே, இனியும் நான் ஜீவனை வைத்துக்கொண்டிருக் கிறேன்! திரிபுராதிகளைத் தகனம் செய்த சாம்பசிவ மூர்த்தி யினுடைய வில்லையொடித்த ஸ்ரீராமா, கீர்த்தியையுடைய வனே, மெய்க்கு மெய்யானவனே, என் கண் முன்னே நீ வனத்துக்குப் போக நான் தாளமாட்டேன்! உனக்கு முன்னே இதோ நான் தேவலோகம் போகிறேன்! நான் மிக இளகிய நெஞ்சன்; உன் ஆசையினுலே ஆவி கழன்று போகிற சரீரத்தையுடையவன். நான் உன்னைப் போலத் தைரிய சாலியல்ல. அப்பா, ஸ்ரீராமா, நீ ஜனகன் குமாரத்தியைப் பாணிக்கிரகணம் செய்து அவள் கரத்தைப் பிடித்துக் கொண்டு போகக்கண்ட என் கண்ணினுலே, நீ ஆரணியம் போகப் பார்ப்பேனு? உன்னைப் பிரிகிறதற்கு உலகஞ் சம்ம தித்தாலும், தேவர்கள் சம்மதித்தாலும், உன்னைப்பெற்ற அருமையை அறிந்த நான் சம்மதியேன்! ராஜ்யமும் ராஜரீக மும் திரவியம் முதலியவைகளும் கள்ளியாகிய கைகேசிக் குக் கொடுத்துக் கீர்த்தி சம்பாதித்த பிரதாபம் என் பிராணனை வாங்குகின்றதே! கீர்த்தியும் உயிருமான ஸ்ரீராமா, சுவர்க்கம் மத்தியம் பாதாளமென்கிற மூன்று உலகத்தார்களும் உன் னையே தோத்திரம் செய்கிருர்களே! பரசுராமனை ஜயித்தவனை யார்தான் தோத்திரஞ் செய்யார்? நீ காட்டுக்குப் போனு யென்று கேட்டுஞ் சாகாமலிருப்பேனுகில், என்னைப்போல வன்கண்ணர் யாரிருக்கிருர்? உன்னைக் காட்டுக்குப் போகச் செய்த இந்தக் கைகேசியைக் கொல்லாமல் நானும் இந்தப் பூமியிலிருந்தால், என் கீர்த்திதானென்ன? மகாலட்சுமியும் பூதேவியும் உன்னைப் பிரிந்து சகிக்க மாட்டார்களே! நான்

சாகாமல் உன்னை விட்டுப் பிரிந்திருந்தேனானால், இந்தக் கைகேசியைப்போல நானும் பாவியாய்ப் போவேனே! ஆபரணங்களும், கிரீடமும், இரத்தின சிங்காதனமும், முத்துக்குடையும் கொடுத்துக் கண்களால் பார்க்கவிருந்த நான், நீ மரவுரியும் மான்தோலுமாகப் போவதைக் காணாமல் போய்விடுவது நல்லதல்லவா? அடா என் கண்ணே, கண் மணியே," என்று பலவாறு சொல்லி மனம் நொந்து, கண் களில் நீர் பெருக்கினார்.

இப்படி வருந்துகிற ராஜாவை வசிஷ்ட மாமுனிவர் பார்த்து, "ஐயா, நீர் விசனப்பட வேண்டா. நான் ஸ்ரீராம னிடத்திற்குப் போய் அவனுக்குத் தெரியச் சொல்லி, அவனை ஆரணியத்துக்குப் போகவொட்டாமல் நிறுத்துகின்றேன்," என்று எழுந்து நடந்தார். அதைக் கண்ட அரசர் தம்முயி ரைச் சற்று நிறுத்தி, "இவர் போய்ச் சொன்னால் எப்படியும் கேட்பான்," என்று தம்மை மறந்து நித்திரை செய்தார்.

கௌசலை அது கண்டு, அரசர் இறந்துபோகிறாரென்று துக்கித்து, "சுவாமி, ராஜாதிராஜரே, இது தருமமா? இப்படிச் சோர்ந்து பிராணனை விடுகிறது உத்தமமா? வசிஷ்டர் போனபடியால் ஸ்ரீராமன் வந்தாலும் வருவான்," என்று சொல்லி அழுதுகொண்டே தன் கரத்தினால் அரசருடைய முகத்தையும் மார்பையும் திருவடிகளையும் வருடினாள். அப் போது அரசர் மயக்கம் தெளிந்து, கண்களை விழித்து, கௌசலையைப் பார்த்து, "மகன் வருவானா? இந்தப் பாவி யாகிய கைகேசி என் பிராணனை வாங்குகிறதற்குத் துணிந் தாள்! தானுந் தன் மகனும் ராஜ்யபாரம் பண்ணுகிறதற்காக என் மகனைக் காட்டுக்குப்போவென்று சொன்னாள்! ஸ்ரீராமன் ஆரணியத்துக்குப் போகாமலிரான். என் பிராணனும் போகாமலிராது. ஏனெனில், பூர்வத்தில் எனக்கு ஒரு மக ரிஷியின் சாபம் நேரிட்டிருக்கின்றது. அதைச் சொல்லு கிறேன், கேள்," என்று கௌசல்லையைப் பார்த்துச் சொல்லுகிறார்:

## தசரதர் செய்த தவறு

"பூர்வத்தில் நான் ஆரணியத்தில் யானை வேட்டைக்குப் போய் யானைகளைத் தேடிக்கொண்டிருக்கையில், அம்பும் வில்லும் கொண்டு ஒருநதியின் கரையில் மறைவாயிருந்தேன். அவ்விடத்தில் ஒரு ரிஷியும் அவர் பத்தினியும் நேத்திரம் அற்றவர்களாய் மிகவும் விருத்தர்களாய்த் தவஞ்செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய குமாரனொருவன், அவர்கட்கு ஜலம் கொண்டுவர அந்த நதியில் வந்து கமண்டலத்தினால் ஜலம் மொள்ளுகிற சத்தம், யானை நீர் அருந்துகிறதுபோல எனக்குத் தோன்ற, உடனே ஓர் அஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்தேன். அது அந்த ரிஷி புத்திரன்மேல் பட்டது. உடனே அவன் பூமியில் விழுந்து பதைபதைக்கிறது மனித சத்தம் போலக் கேட்கவே, நான் மிகவும் பயந்து நடுநடுங்கி, அந்தப் பிராமணப் பிள்ளையினிடத்தில் போய், அவனைப் பார்த்து, என் கரத்திலிருந்த வில்லைப் பூமியிலெறிந்துவிட்டு, நானும் விழுந்து அங்கலாய்த்து, "நீ யாரப்பா?" என்று கேட்டேன். அந்த ரிஷி குமாரன், "மகாராஜரே, பிரமதேவர் வழியில் அவதரித்த காசிபருடைய மைந்தர் **விருத்தசேனர்**. அவருடைய பிள்ளை **ஜலபோசனர்**; அவருடைய பிள்ளையாகிய யான் **சுரோசனன்**. என் தாயும் தகப்பனும் கண்ணில்லாதவர்கள்; விருத்தர்கள். அவர்கட்கு ஜலம் கொண்டு போகிறதற்கு இவ்விடம் வந்தேன். வந்த விடத்தில் இப்படியாயிற்று. நீர் தெரியாமல் யானையென்று அம்பு எய்தீர்! என் விதியும் இப்படி இருந்தது! என் தாய் தந்தையர்கள் நான் வரும்போதே மிகவும் தாகமாயிருந்தார்கள். அவர்கட்கு இந்த ஜலத்தை நீர் கொண்டு போய்க் கொடுத்து, எனக்கு நேர்ந்த ஆபத்தும், மரணமும், என் நமஸ்காரமும் சொல்லும்," என்று சொன்னான். தம் பிள்ளை தாகத்துக்குச் சலங்கொண்டு வருவானென்று எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு நான் அந்தக் கமண்

டல தீர்த்தத்தைக் கொண்டுபோய்க் கொடுத்தேன். முனிவர், ‘அப்பா, மகனே, நீ வர இந்நேரமானதேன்? உன்னைக் காணுமல் மிகவும் மனம் நொந்தேன்! உன்னைத் தழுவிக் கொள்ள வேண்டும். சமீபத்தில் வா,’ என்றழைத்தார். அப்போது நான் மிகவும் பயந்து, ‘ஐயா, நான் ஓர் அரசன்; அயோத்தியிலிருப்பவன்; யானை வேட்டை நிமித்தம் ஆரணியத்துக்கு வந்தேன். உம் புத்திரன் நதியிலிறங்கிக் கமண்டலத்தால் தண்ணீர் மொண்டான். அந்தச் சத்தத்தை யானை நீருண்ணும் சத்தமென்றெண்ணி, மறைந்திருந்த யான், கண்ணுல் பாராமல், அம்பை விட்டேன். அது பட்டு அவன் அலறுகிறபோது, ‘இது யானைக்குரலல்லவே! என்ன பாவம் வந்து சம்பவித்தது!’ என்று ஓடிப்போய்ப் பார்த்து அங்கலாய்த்து, ‘நீ யார்?’ என்று கேட்டேன். அவன் கிருபையுடனே உங்களுடைய சமாசாரஞ்சொல்லி, உங்களுக்கு நமஸ்காரஞ் செய்தான். ஆதலால், அடியேன்மேல் கோபஞ் செய்யாமல் பொறுத்து இரட்சியுங்கள்!’ என்று சேவித்துக் கொண்டேன். அவ்வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் அவனைப் பெற்றோர் பூமியில் விழுந்து அழுது புரண்டு, ‘இன்றைக்குத்தான் உண்மையில் கண்ணிழந்தோம்!’ என்று துக்கசாகரத்தில் மூழ்கி, ‘ஐயோ! மகனே, நீ தெய்வலோகம் போனது நாங்களறியோம்! நாங்களும் உன் பின்னே இதோ வந்தோம்! வந்தோம்!’ என்று பெரிதும் வருந்தினர்கள். அப்போது நான் அவர்களைச் சேவித்து, ‘இன்று முதல் உங்களுக்கு நான் பிள்ளை; நீங்களிட்ட ஏவலைச் செய்துகொண்டிருக்கிறேன். ஒன்றுக்கும் நீங்கள் கிலேசிக்க வேண்டா. துயரத்தை விட்டுவிடுங்கள்!’ என்று மிகவும் வேண்டினேன். அந்த ரிஷி, ‘ராஜாவே, எங்கள் பிள்ளை போன பின்னும் எங்கள் பிராணனை ஆசரித்துச் சாப்பிட்டுக்கொண்டிருந்தால், உலகத்தார் என்ன சொல்லுவார்கள்? நாங்களும் தெய்வலோகம் போய்ச் சேருகிறோம்! நீர் ஒன்றைக் கண்ணுல் பார்த்தறிந்து அம்பு எய்யாதபடியால், நீரும் எங்களைப்

போலவே பிள்ளையைப் பிரிந்து அந்தச் சோகத்தினுலே தெய்வ லோகம் போய்ச் சேருவீர் !' என்று சொல்லிய பின் அவர்களிருவரும் இறந்து போனுர்கள். ஆதலால், அந்த மகரிஷியின் வாக்கியமும், ஸ்ரீராமன் ஆரணியத்துக்குப் போவதும், என் பிராணன் தெய்வலோகம் அடைவதும் தப்பமாட்டா,'' என்று சொல்லி முடித்தனர்.

அங்கிருந்து புறப்பட்ட வசிஷ்டர் ராஜசபைக்கு வந்தார். அவ்விடத்திலிருந்த அனைவரும் வசிஷ்டரைக் கண்டு, "ராஜா என்ன காரணத்தினுல் வெளியில் வரவில்லை? அழுகுரல் கேட்கின்றதே! ஏதாவது விபத்து உண்டோ?'' என்று கேட்டார்கள்.

வசிஷ்டர் அவர்களை நோக்கி, "பூர்வத்தில் ராஜா கைகேசிக்கு இரண்டு வரம் கொடுத்திருந்தார். அவைகளில் ஒன்ருல் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவும், மற்ருென்ருல் ஸ்ரீராமன் ஆரணியத்துக்குப் போகவும் கைகேசி கேட்டுக் கொண்டு இராமனுக்கும் உத்தரவு செய்தாள். ராஜாவினுடைய வார்த்தையினுலேயே கைகேசி புத்திரனுகிய பரதன் இராச்சியபாரம் செய்யவும், ஸ்ரீராமன் ஆரணியத்துக்குப் போகவும் நேரிட்டிருக்கிறது,'' என்று சொன்னுர்.

அது கேட்ட அந்த ராஜாக்களும், மந்திரிகளும், வேதியர்களும் தசரத மகாராஜாவைப் போலவே பூமியில் விழுந்தழுதார்கள். புருஷர்கள் சக்கரவர்த்தியார் கிருபையில்லாதவரென்றும், 'இனி நாமும் தருமங்களைக் கைவிடுவோம்,' என்றும் சொல்லி ஏங்கி, சண்டமாருதமடிக்கச் சாய்ந்து விழும் மரங்கள் போல விழுந்தழுதார்கள். பட்சிகள் மிருகங்கள் முதலியவைகளும் அழுதன. பருவமடையாத பிள்ளைகளும் இராமர் வனத்திற்குப் போகிற செய்தி கேட்டு அழுதார்களென்ருல் மற்றவர்கள் பட்ட பாட்டை யானெப்படிச் சொல்லப்போகிறேன் ! 'இந்தப் பூமி பண்ணின பாவம்,' என்பாரும், 'பாக்கியலட்சுமி பண்ணிய பாவம் பெரிது,' என்பாரும், 'நம் மனத்தைப் புண்ணுகப் பண்ணினது விதி,' என்பாரும்,

'உலகத்தார் கண்கள் செய்த பாவம்,' என்பாரும், 'நம் பிராணன் போகாமலிருக்கின்றதே! நம்மைவிடக் கல் மனம் உடையவர் யார்?' என்பாரும், 'பரதன் ராஜ்யபாரஞ் செய்யான்,' என்பாரும், 'ஸ்ரீராமன் ஆரணியத்துக்குப் போகாமல் இனித் திரும்பான்,' என்பாரும், 'நம் விதி பொல்லாதது!' என்பாரும், 'கைகேசி மயக்கத்திலே அகப்பட்டுக்கொண்டு அரசர் புத்தியீனரானார்,' என்பாரும், 'சீதை நாயகனை ஸ்ரீராமன் ஆரணியத்துக்குப் போனால் நாம் அக்கினிப் பிரவேசமாவோம்,' என்பாரும், 'இனிக் கௌசலை பிராணனை வைத்துக்கொண்டிராள்!' என்று பெருமூச்சு விடுவாரும், 'அப்பா, இலட்சுமணா, நீ மனம் தாளுவாயா?' என்பாருமாய் இப்படி நெருப்பிலே நெய் சொரிந்தது போல மனமுழன்று பட்டணத்து ஜனங்களெல்லாம் அழுதார்கள்.

தன் பிள்ளைக்கு ராஜ்யம் வேண்டுமென்றெண்ணி இப்படி உலகங்களுக்கெல்லாம் விபரீதமான விபத்தைத் தந்த கைகேசியினுடைய செய்தியைக் கேட்ட வேசிகள் கூட, 'கைகேசி மனத்தில் கொஞ்சமாகிலும் பசை அன்பில்லாதவள்!' என்று சொல்லிக்கொண்டு மிகவும் அழுதார்கள். 'நம் அரசர் இல்லம் துறந்து தவம் பண்ணுகிறதற்காகவோ, அல்லது பூமியிலிருக்கிற ஜனங்களையெல்லாம் கொன்றுபோடவோ இப்படிக் கைகேசிக்கு வரங்கொடுத்தது?' என்பாரும், 'ராஜ்யம் வாங்கிக்கொண்ட கைகேசிக்கு ராஜ்யத்தை விட்டு நாம் எல்லாரும் ஸ்ரீராமன் பிறகே காட்டுக்குப்போய் அந்தக் காட்டையெல்லாம் சில நாளையில் நாடாக்குவோமென்ற எண்ணமோ? ஈதென்ன? மூத்த பிள்ளைக்குப் பட்டங்கட்டுகிறேமென்று சொல்லி, உடனே அவன் தம்பிக்குப் பட்டங் கொடுக்கிறேமென்று சொன்னால், தருமம் தப்பாதா?' என்பாரும், 'ஸ்ரீராமனுக்குக் கொடுத்த பூமியைப் பின்னொருவர் அனுபவிக்கக்கூடுமா? வஞ்சனை செய்த கைகேசி பிள்ளையை ஸ்ரீராமன் பின்னே போகிற பூமிதேவி திரும்பிப்பாராள்,' என்பாரும், 'ஒரு வேளை சீதா பிராட்டி

ஸ்ரீராமனைப் பிரிந்தாலும், ஸ்ரீ மகாலட்சுமி பிரியாள்,' என்பாரும், 'ஸ்ரீராமனுடைய நீலத் திருமேனியையும் கமல நேத்திரங்களையும் நாம் எப்படிக் காணுமலிருக்கப் போகிறோம்! ஐயோ விதியே!' என்பாருமாய்ச் சகல ஜனங்களும், அழுது பிரலாபித்தார்கள்.

அப்படிப் பிரலாபிக்கிறதை இளைய பெருமாள் கேட்டு, யாதெனத் திடுக்கிட்டு விசாரிக்குமளவில், தம்முடைய தமையனுரை ஆரணியத்திற்கு அனுப்புகிறத்ற்குக் கைகேசியான சிறிய தாய் வரம் வாங்கின செய்தி கேட்கவே, பிரளயகாலாக்கினி போலக் கோபம் கொண்டு, கண்களிலே நெருப்புப் பறக்க, புருவங்கள் நெற்றி மட்டுமேற, அதிக உக்கிரமாய்ச் சரீரம் வியர்க்க, கோபாவேசத்தினுலே கடூரமான சுவாசம் பிறக்க, "ஒரு ராஜ சிங்கத்துக்கு வைத்திருந்த ஆகாரத்தை ஒரு நாய்க்குட்டிக்கு இரையாக்குகிறதற்கு யத்தனம் செய்தாளல்லவா? நன்ருயிற்று! நன்ருயிற்று!" என்று கைகளைக் கொட்டி நகைத்து, அரையிலே வாள் விசித்து, கையில் வில்லேந்தி, அம்பருத்தூணியைத் தோளிலே தரித்து, மார்பிலே கவசம் பூண்டு, காலில் வீர கண்டை அணிந்து, "ஜனங்களே, இந்தப் பூமியினுடைய பாரந்தீர எதிர்த்து வந்தவர்களையெல்லாம் அடித்து மலைமலையாகக் குவிக்கிறதற்கும் என்னுயகரான ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கிறதற்கும் யான் சித்தமாய் நிற்கின்றேன்! எல்லாரும் பாருங்கள்! தேவலோகத்தார் பூலோகத்தார் விஞ்சையர் முதலியோர் ஒன்ருகக்கூடி அந்த மும்மூர்த்திகளுடனே வந்து காத்தாலும், 'பெண்' என்கிற பூண்டு இராச்சியத்திலில்லாதபடி செய்து, ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகம் பண்ணுவேன்!" என்று பால சூரியனைப்போலப் பிரகாசித்துக்கொண்டு, பூர்வத்தில் பாற்கடலில் மந்தரகிரி சுழன்று திரிந்தது போல அயோத்தியாபுரிப் பட்டணத்தின் நடுவே இலட்சுமணர் ஆக்குரோஷத்துடனே திரிந்தார்.

அந்த வேளையில் ஸ்ரீராமர் சுமித்திரையின் திருமாளி

கைக்குப் போய் நடந்த சமாசாரம் சொல்ல, அந்த அம்மாள் கேட்டு மிகவும் அங்கலாய்க்க, அவளுக்கு என்ன தேறுதல் சொன்னாலும் அவள் தெளியாமலிருக்கின்ற சமயத்தில் இலட்சுமணருடைய வில்லின் குணத்தொனியைக் கேட்ட உடனே ஸ்ரீராமர் அதிசீக்கிரமாக இலட்சுமணருடைய கோப மென்கிற அக்கினியை ஆற்றுகிறதற்கு நீலமேகம் வந்தது போல அவர் சமீபத்தில் வந்து, " ஆ! தம்பி, நீ தேவர்களைப் போன்ற பலவான்கள் மேலல்லவோ கோபம் கொள்ள வேண்டும்? அதற்கிங்கே காரணம் காணேமே! நீ வில் லெடுக்க வேண்டிய காரணமென்ன ?" என்று கேட்டனர்.

இலட்சுமணர் கோபாக்கினியையடக்கி, " சுவாமி, சத்தி யத்தை விட்டு முறைமை தப்பிச் செய்த அந்தப் பாவிக்கு முன்னே உமக்குப் பட்டாபிஷேகம் செய்ய நினைத்து, இது நிமித்தமாகத் தேவர்கள் வந்து எதிர்த்தாலும் என்னுடைய அஸ்திரங்களினாலே அதம் செய்து போடுகிறதாகத் துணிந் திருக்கிறேன்! என் கையில் வில்லிருக்கின்ற போது அந்தத் தேவர்கள் வந்து விலக்க மாட்டார்கள். ஒரு வேளை வந்து விலக்கினாலும், என் கைப்பாணத்தினால் அவர்களையும் சங் கரித்து, இந்தப் பட்டாபிஷேகமும் செய்து வைக்கிறேன்!" என்று சொன்னார். ஸ்ரீராமர் அதைக் கேட்டு, "இலட்சுமணா, நீதியும் சன்மார்க்கமும் உன்னிடத்தில் நிலையாயிருக்க, தர்மம் கெடக் கோபம் விளையாத நிலத்தில் உனக்கு எப்படி விளைந் தது ?" என்று கேட்டார். இலட்சுமணர் நகைத்து, "சுவாமி, உம் தகப்பனார் உம் இராச்சியத்தை உமக்குக் கொடுத் திருக்க, அதை நடுவில் பகையாளியினாலிழந்து நீர் ஆரணி யத்துக்குப் போகிறீரென்று கேள்விப்பட்டால், அடியேனுக்குக் கோபம் வருகிறது அதிசயமா ? உம்மிடத்தில் அன்பில்லாத வள் உம்மை ஆரணியத்துக்கனுப்ப, நான் என் சரீரத்தை வைத்திருப்பேனோ ? அப்படியிருப்பதற்கு, முன்னே உமக்கு இராச்சியங் கொடுத்துப் பிறகு இல்லையென்று சொன்ன வன்கண்ணரான அரசரா நான் ?" என்று சொல்ல, ஸ்ரீராமர்,

"தம்பி, 'நீ இந்த இராச்சியத்தையாள்,' என்று அரசர் சொல்ல, அதற்குச் சம்மதித்த என்மேல் என்ன குற்றமிருக்கின்றது? நதியில் ஜலம் வாராமற்போகிறது நதியினுடைய குற்றமா? நம் தகப்பனுரிடத்திலும் குற்றமில்லை. நமது தாயினிடத்திலுங் குற்றமில்லை. இது நம் விதியின் குற்றமேயல்லாமல் வேறன்று. அதற்குக் கோபிக்க வேண்டுவதென்ன?" என்று சொல்லினர்.

இலட்சுமணர், "சுவாமி, கருமானுலையில் எழும்புகிற அக்கினி போல என் மனத்தில் எழும்புகிற கோபம் எப்படி ஆறும்? இப்படிச் செய்தவளுடைய புத்திக்குப் புத்தியாயும், தேவர்கள் விதிக்கும் விதியாயுமிருக்கின்ற என் கைவில்லினுடைய தொழிலைப் பார்த்துக்கொண்டிரும்!" என்று சொல்ல, ஸ்ரீராமர், "அப்பா, நீ வாயில் வந்ததைச் சொல்லலாமா? வேத சாஸ்திரங்களெல்லாம் நீ ஒருவருக்குக் கொடுத்தாலுண்டு; அப்படிப்பட்ட நீ தாய் தந்தையரின்மேல் கோபித்துக்கொள்ளலாமா?" என்றுர். அவரை இலட்சுமணர் வணங்கி, "சுவாமி, என் தந்தையும் நீரே. என் தாயும் நீரே. சகலமும் நீரேயல்லாமல் வேறில்லை. நான் செய்கிற காரியத்தைப் பாரும்!" என்று பிரளயகால ருத்திரனைப் போல நின்றுர்.

இராமர், "தம்பீ, வரம் கொடுத்தவர் தகப்பனுர். வரம் வாங்கிக்கொண்டவர் தாயார். இராச்சியமாளுகிறவன் தம்பி. நமக்குக் கிடைத்தது தவம். இதைப்பார்க்கிலும் நமக்கு மேலான நலமென்ன இருக்கிறது? நீ ஏன் கோபிக்கிறுய்?" என்று சொல்ல, அதைக்கேட்ட இலட்சுமணர் அவரைப் பார்த்து, "சத்துருக்கள் சொல்லுகிற பேச்சையும் சுமந்து, பர்வதம் போலிருக்கிற தோள்களிலே அம்பறுத் தூணியும் வில்லும் வீணுய்ச் சுமக்கப் பிறந்த நான், கோபித்து ஆக வேண்டுவதென்ன?" என்று சொல்ல, இராமர், "அப்பா, என்னைப் பெற்று வளர்த்தவர்கள் சொன்ன பேச்சைத் தட்டி ராஜரீகம் செய்கிறது எனக்கு உத்தமமன்று. என் பேச்

சைத் தட்டினுல் உனக்கு என்ன புகழ் உண்டாகும்?'' என்று சொல்ல, உடனே இலட்சுமணர் கோபந்தணிந்து நின்ருர்.

அப்போது ஸ்ரீராமர் சந்தோஷத்துடனே தம்பியாரைத் தழுவிக்கொள்ள, இருவருஞ் சுமித்திரையின் அரண்மனைக்கே வந்தார்கள். வருகிற இரண்டு பிள்ளைகளையும் சுமித்திரை கண்டு, "ஆரணியத்துக்குப் போய்விடுவார்களே!'' என்கிற துக்கத்தினுலே மிகவும் நொந்து அழ, ஸ்ரீராமர், "அம்மா, இப்படியும் அங்கலாய்ப்பார்களா? ராஜாவைப் பொய்ய ராக்கலாகாதே. ஆரணியத்திலே போனுலும், சமுத்திரத் திலே போனுலும், தேவலோகத்திலே போனுலும், அவைக ளெல்லாம் உங்கள் ஆசீர்வாதத்தினுலே எனக்கு அயோத்தி யைப்போலிருக்க, என்னை யார் உபத்திரவப்படுத்துகிறவர் கள்? அப்படியிருக்க, எதற்காக நீங்கள் அங்கலாய்க்க வேண்டும்?'' என்று மிகவும் தேறுதல் சொல்ல, சுமித்திரை பின்னும் அங்கலாய்த்துக்கொண்டிருந்தாள்.

அத்தருணத்தில் கைகேசி தன் தாதிகள் கையில் மரவுரி கொடுத்தனுப்ப, அவர்கள் அதைக் கொண்டுவந்து, 'உங்கள் சிறிய தாயார் இதைக் கொடுத்து வரச் சொன்னுர்கள்,' என்று கூறி அங்கலாய்த்தார்கள். இலட்சுமணர் அந்தத் தாதிகளைப் பார்த்து, "ராஜ்யமிழந்து கொடுத்ததெல்லாம் வாங்கித் தரித்துக்கொள்ளுகிறவர் அதோ இருக்கிருர்! கையிலொரு வில்லும் வைத்துக்கொண்டு அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறதற்குப் பிறந்த நானும் இதோ இருக்கின் றேன்! நீங்கள் கொண்டு வந்ததைக் காட்டுங்கள்,'' என்று சொன்னுர்.

ஸ்ரீராமர் சுமித்திரையைப் பார்த்து, "அம்மா, எங்கள் தாயாரும் செலவு கொடுத்து அனுப்பினுர்கள். இதுவே எனக்கு விடை,'' என்று சாஷ்டாங்கமாகச் சேவித்துக் கொண்டனர். சுமித்திரை இலட்சுமணரைப் பார்த்து, "அப்பா, ஸ்ரீராமன் போகிற ஆரணியம் உனக்கு அயோத்தி.

உன் தகப்பன் இராமன். சீதை உன் தாய். இதை உன் மனத்தில் வைத்துக்கொண்டு கூடவே நட. இனி இங்கேயிருந்தாலும் குற்றம் வரும். மகனே, இவன் பின்னே போகிறபோது, உன்னைத் தம்பியென்று பாவியாமல் அடிமையைப் போல ஏவல் செய்துகொண்டிருந்து, இவன் வருகிற போது கூட வர்க்கடவாய். போகுமிடத்தில் எதுவாகிலும் ஆபத்து வருகிறதாயிருந்தால், முன்னே உன் பிராணனை விட்டுவிடு!'' என்று சொல்ல, இருவரும் சாஷ்டாங்கமாக விழுந்து அவளைச் சேவித்தனர். கைகேசி அனுப்பிய மரவுரியை ஸ்ரீராமர் தரித்துக்கொண்டார். அது கண்ட இலட்சுமணரும் மரவுரியைத் தரித்துக்கொண்டார். அதைப் பார்த்த ஸ்ரீராமர், "தம்பி, உனக்கோர் உறுதி சொல்லுகிறேன்; கேள்: நம் தாய் தந்தையர்கள் மிகவும் துயரத்தில் மூழ்கியிருக்கிறார்கள். என்னைப் பிரிகிற வருத்தம் உன்னால் தீரவேண்டும். என் நிமித்தம் நீ தயை செய்து இங்கேயே இருக்கவேண்டும்,'' என்று சொல்ல, அது கேட்ட இலட்சுமணர், விம்மி அழுது, "சுவாமி, அடியேன் என்ன தப்பிதம் செய்தேன்! இந்த வார்த்தை மிகவும் கொடியதாயிருக்கின்றது! சகல பாக்கியத்தையும் விட்டுப்போகிற நீர், என்னையும் விட்டுப் போகிறதற்காயிற்றல்லவா?'' என்று கண்களிலே தாரை தாரையாய் நீர் பெருக எதிரே நின்றார். அது கண்ட ஸ்ரீராமர் வேறு ஒன்றும் சொல்லாமலிருந்தார்.

இந்தச் சமயத்தில் ராஜசபையிலிருந்து புறப்பட்ட வசிஷ்ட மாமுனிவர் வந்து சேர்ந்தார். அவரை இவர்களிருவரும் நமஸ்காரம் செய்துகொண்டார்கள். அவர் ஸ்ரீராமருடைய திருமுகமண்டலத்தையும் மரவுரியையும் பார்த்து, துயரத்தினாலே திகைத்து நின்றார்; "உலகத்தாருக்குச் சகல பாக்கியங்களையும் கொடுக்கிற ஸ்ரீராமனே இப்படி ஊழ்வினையினால் மரவுரி தரித்தால், பிரமாவினாலும் அந்த ஊழ்வினையைத் தள்ளக்கூடாதே!'' எண்றெண்ணி, ஸ்ரீராமரைப் பார்த்து, "ஸ்ரீராமா, நீ ஆரணியத்துக்குப் போனால் அரசர்

பிராணன் இராது. ஆதலால், நீ ஆரணியத்துக்குப் போக வேண்டா,'' என்று சொன்னார். ஸ்ரீராமர், "சுவாமி, அவர்கள் பேச்சைச் சிரசாக வகித்துக்கொண்டு அந்தப்படி நடந்துகொள்ளுகிறது என் கடன். தருமநீதியும் அதுவே,'' என்று சொல்ல, வசிஷ்டர், "பூர்வத்தில் அரசர் அசுரர்களை ஜயித்த போது இப்படி இரண்டு வரம் கொடுக்கிறேமென்று சொன்னாரா?'' என்று கேட்க, அதற்கு ஸ்ரீராமர், "சுவாமி, என் தாயார் அந்த வரம் இப்படியாகக் கேட்டுக்கொள்ள, தகப்பனார் அந்தப்படியே கொடுக்க, அடியேன் பெற்றோர் வாக்கிய பரிபாலனம் செய்ய வேண்டுவதைச் சிரசில் வகித்துக்கொண்டு வெளியே புறப்பட்டிருக்க, சகல சாஸ்திரங்களுமறிந்த நீங்கள் இதைத் தடுத்துத் தருமந் தப்பச் சொல்லலாமா?'' என்று கூறிச் சேவித்து, அரசருடைய ஆசார வாயில் மட்டும் நடந்து போனார். அவர் இப்படி அரையிலே மரவுரியுடன் புறப்படுகிறதைக் கண்டு அந்தப் பட்டணத்திலுள்ள வேத வேதியர்களும், ரிஷிகளும், பிரஜைகளும், துக்கத்தினாலே மனம் புழுங்கினார்கள். ஸ்ரீராமரைக் கண்ட ஸ்திரீகளெல்லாம் தாமரை மலர்போன்ற கைகளினாலே வயிற்றில் அறைந்துகொண்டார்கள். சிலர் மூர்ச்சையாய்ப் பூமியில் விழுந்து, தசரதருக்கு முன் தேவலோகம் போய்ச் சேருகிறவர் போல இருந்தனர். தசரதருடைய அறுபதினாயிரம் மனைவியரும் ஸ்ரீராமரைக் கண்டு, கண்களிலே நீர் பெருக இரைந்து அழுதுகொண்டு தொடர்ந்து வந்தனர். அவர்கள் கண்ணீரானது அவர்கள் மெய்யிற்பூசியிருக்கிற சந்தன கதம்ப கஸ்தூரிகளையும் கரைத்து, வஸ்திரங்களையும் நனைத்தது. ஐயோ! தேவர்களாயிருந்தாலும் ஆபத்து வந்த வேளையில் என்னதான் வாராது? இப்படி அழுதுகொண்டு வருகிற தாய்மாரும் பந்துக்களும் சினேகிதர் முதலானோரும் மிகுந்த துக்கத்துடனே வாயிலில் வந்து மொய்த்தனர். ஸ்ரீராமர் தமது அரண்மனையை நோக்கி நடந்தார்.

அப்போது ஸ்ரீராமரை அங்கிருக்கிறவர்களெல்லாம்

கண்டு, “ முன்னாலே பட்டாபிஷேகம் செய்துகொள்ளத் திரு வாபரணங்கள் பிரகாசிக்கத் தேரின்மேலே பவனி வந்தவர், உடனே மரவுரி தரித்துக்கொண்டு வீதியில் வரக்கண்ட நம் முடைய மனம் பிளந்து போகாமல் கற்பாறைபோலிருக்கின் றதே! பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு வருவாரென்று வழி பார்த்திருந்த நம்முடைய கண், ஆரணியத்துக்குப் போகப் புறப்பட்ட கோலத்தைப் பார்க்கிறதற்காகவா இருந்தது!” என்பாரும், ‘ இராச்சியத்திலே ஏழைகளை இரட்சியாமல் விட்டுவிட்டு ஆரணியத்துக்குப் போகிறபடியினால், இவரும் கைகேசிக்குச் சமானந்தான்,’ என்பாரும், ‘ இந்த ஊரில் மரவுரியுடுத்திக்கொண்டு ஸ்ரீராமனைத் தொடர்ந்து போகிற தற்கு இலட்சுமணன் ஒருவன்தானா அவனுக்கு உற்ற உறவி னன்?’ என்பாரும், ‘இப்பிள்ளையைக் காட்டில் துரத்திவிட்டுக் கைகேசியும் அவள் மகனும் ராஜ்யமாள இருக்கின்றாரே!’ என்பாருமாய், உப்பரிகைகளிலிருக்கிற மாதர்கள் வீதியில் வந்துவிட்டபடியால், அவ்வுப்பரிகைகள் இலட்சுமியை விட்ட தாமரைகள் போல இருந்தன. கிளிகள் பாலடிசிலை இழந்தன. குழந்தைகள் தொட்டில்களிலே சோர்ந்திருந்தன. யானைகள் கவளமும், வண்டுகள் களிப்பும், அற்றிருந்தன. தெருக்களில் தேர் ஓடுதலும் யாழ் வீணை நாதமும் நின்றன. வேதோத் தமர்கள் வேதமோதலை மறந்தார்கள். ஞானிகள் மெய்யறிவை விட்டார்கள். பட்சிகளும் குஞ்சுகளுக்கு இரை தேடாமல் இருந்தன. கன்றுகளும் பசுவை ஊட்டவில்லை. நல்வினை தீவினையென்கிற இரண்டையும் சமானமாய் நினைக்கிற பரம யோகிகளும் ஆழ்ந்த துயர்க்கடலில் அழுந்தினார்கள். அந்த அயோத்தியாபுரிப் பட்டணம் இவ்வித அல்லோலகல்லோலத் தில் ஆழ்ந்தது.

இவ்வாறு மக்களெல்லாம் துயரப்பட்டுக்கொண்டு உடன் வர, ஸ்ரீராமர் சீதாபிராட்டியின் திருமாளிகைக்குப் போனார். மரவுரி தரித்துக்கொண்டு வந்த தன் பிராணநாயகரைச் சீதா பிராட்டி பார்த்து, மனம் திடுக்கிட்டு எழுந்தாள். நடந்த

வர்த்தமானம் ஒன்றும் அறியாத சீதா பிராட்டி தன் கண்களில் நீர் வடிய ஸ்ரீராமரைப் பார்த்து, "ஏதாகிலும் அதிசயம் உண்டோ?" என்று பதைபதைத்துக் கேட்க, ஸ்ரீராமர், "ஜானகி, இப்பூமியை என் தம்பி பரதன் ஆளும்படி எங்கள் தாயார் கைகேயியார் தந்தையாரிடத்தில் உத்தரவு பெற்றதற்கு இணங்கி நான் ஆரணியத்திற்குப் பிரயாணமானேன்! போய் வருகிறேன். நீ வருந்தாமலிரு," என்று சொன்னார். பிராட்டி பார்த்து, "சுவாமி, தாய் தந்தையர் சொன்னபடி நடக்க வேண்டுவது உத்தமமே. என்னை இங்கு இருக்கச் சொன்ன வயணம் என்ன?" என்று அழுதுகொண்டு கேட்க, ஸ்ரீராமர், "பெண்ணே, உன் திருவடி மிகவும் மிருதுவானது. நீ காட்டில் நடக்கமாட்டாய்," என்றார். அதனைக் கேட்ட பிராட்டி திகைத்து, "சுவாமி, உம்மைப் பிரிந்திருக்கிற காலாக்கினியைப்பார்க்கிலும் அந்த ஆரணியாக்கினி பெரிதாயிருக்குமோ? ஒரு காலத்துமிராது!" என்று சொல்ல, இராமர் அவள் மனோபாவத்தை அறிந்து, என்ன செய்யலாமென்று எண்ணிக்கொண்டிருக்கும்போது, சீதை ஓர் அறைக்குள்ளே போய் மரவுரி தரித்துக்கொண்டு அதிசீக்கிரமாய் ஸ்ரீராமரிடம் வந்து கையைப் பிடித்துக்கொண்டாள். இராமர், சீதையைப் பார்த்து, "நீ யோசிக்கவில்லை. நீ ஆரணியத்தில் மிகுந்த துன்பத்தைக் கொடுப்பாய்," என்று சொல்ல, சீதை கோபித்து, "என்னைப் பிரிந்திருக்கிறது உமக்கு இன்பமா?" என்று சொல்ல, ஸ்ரீராமர் ஒன்றுஞ் சொல்லாமல் கையில் வில்லோடு தம்பியார் முன்னே நடக்க, தாம் பிராட்டியுடன் பின்னே நடந்தார். ஜனங்களும், "இவர்களுக்கு முன்னே நாமும் ஆரணியத்துக்குப் போவோம்!" என்று அவர்களைச் சூழ்ந்து நடந்தார்கள். ஸ்ரீராமர், உடன்வந்த தாய்மார்களைப் பார்த்து, "ராஜாவினிடத்திற்குப் போய் அவருக்குத் தேறுதல் சொல்லி ஆற்றுங்கள்," என்று சொன்னார். அந்த வார்த்தையைக் கேட்ட தாய்மார் அழுது மயங்கி, மகனையும் மருமகளையும் வாழ்த்தி, இளைய பிள்ளையைத் தோத்திரஞ் செய்து

கொண்டாடி, "தெய்வங்களே, இவர்களைக் காத்துக்கொள்ளுங்கள்," என்று சொல்லி, நாத் தழும்பேற அழுது நடுங்கினார்கள். ஸ்ரீராமர் அவர்களை விட்டு அப்பால் நடக்கிறபோது எதிரே வசிஷ்டரைக் கண்டு நமஸ்காரஞ் செய்து, ஒரு ரதம் கொண்டு வரச் சொல்லி, தம்பியாருடனும் மகாலட்சுமியான சீதையுடனும் அதில் ஏறிப் பட்டணத்தைக் கடந்தார்.

## 5. தைலம் ஆட்டு படலம்

அப்பால், பட்டணத்திலுள்ள ஸ்திரீகளும் புருஷர்களும் காட்டை நோக்கி நடந்தார்கள். அப்போது, சூரியன் ஸ்ரீராமருக்கு வந்த துன்பத்தைப் பார்த்து மனம் தாளமாட்டாமல், அவருக்கு முன்னே தானும் ஆரணியத்திற்குப் போகிறவன் போல மேற்குச் சமுத்திரம் போய்ச் சேர்ந்தான். தாமரை மலர்களெல்லாம் அப்பட்டணத்து மாதர்களுடைய முகங்கள் அன்றையதினம் எப்படியிருந்தனவோ அப்படி அழகு இழந்தன. கைகேசியினுடைய மனம் மந்தரையான கூனியினுடைய வார்த்தை என்னும் விஷத்தினால் எப்படியிருண்டதோ, அப்படி எங்கும் இருள் வந்து மூடிக்கொண்டது. ஆகாயமெங்கும் நட்சத்திரங்கள் பூத்தன. அப்போது, ஸ்ரீராமர் பட்டணத்துக்கு அப்பால் இரண்டு யோசனைத்தூரம் போய் இரதத்தை விட்டிறங்கி, ஒரு சோலையில் ரிஷிகளுடனே கூடியிருந்தார். பின்னே போன ஜனங்களும் அந்தச் சோலையைச் சுற்றி இறங்கினார்கள். அவருட்சிலர், ஆகாரமும் நித்திரையுமில்லாமல் அழுது விம்மினர். பெண்கள் தங்கள் வஸ்திரத்தையே படுக்கையாக இட்டுப் படுத்துக்கொண்டார்கள். சிலர், தாதியருடைய மடியிலுறங்கினர். யானைகள் கொட்டாரங்களில் உறங்குவது போலப் புருஷர்களெல்லாம் உறங்கினார்கள். சிலர் மரத்தடியிலும் மணல் மேடுகளிலும் உறங்கினர். சிலர் கரங்களையே தலையணையாக வைத்துக் கொண்டு உறங்கினர்.

ஸ்ரீராமர் சுமந்திரரை அழைத்து, "இந்த ஜனங்கள் என்னிடத்தில் வைத்திருக்கும் மிகுந்த அன்பினுல் அதிக துயரத்துடனே வந்து சூழ்ந்துகொண்டிருக்கிருர்கள். இவர்களைப் போகச் சொல்லி எவ்விதம் சொன்னுலும் போகமாட்டார்கள். ஆகையால், நீர் அயோத்தியா புரிக்குப் போனுல், அதைப் பார்த்துத் தேர் திரும்பிற்றென்றும், நானும் பட்டணத்துக்கு வந்துவிட்டேனென்றும் எண்ணிச் சகலரும் பட்டணம்போய்ச் சேருவார்கள். நீர் அவ்வளவு உபகாரம் என்னைப்பற்றிச் செய்ய வேண்டும்," என்று கூற, சுமந்திரர் அதிக துயரத்துடனே பிரலாபித்து, அவரை நோக்கி, "சுவாமி, உம்மிடத்தில் மிகுந்த அன்புடையவன் போல உம்மைக் கொண்டு ஆரணியத்தில் விட்டுவிட்டுப் பட்டணத்திற்போய் அத்துக்கங்களைப் பார்க்கிறதற்கு நான்தானு ஏற்பட வேண்டும்? இரும்பு போலும் நெஞ்சையுடைய நான் மகாராஜாவின் சமுகத்துக்குப்போய் 'ஸ்ரீராமனைக் காட்டிலே விட்டு வந்தேன்,' என்று சொல்லவா? ஐயோ! இப்போது இச்செய்தியை ராஜாவுக்கு நான் போய்ச் சொல்லுவேனுயின், உடனே அவர் பிராணன் போய்விடுமே!" என்று அழுது துயரத்துடனே சேவித்து நின்ருர்.

ஸ்ரீராமர் அவரை நோக்கி, "ஐயா, பூமியில் பிறந்தால் வரவேண்டுவனவெல்லாம் வருமென்பதைத் தெளிந்த விவேகத்தையுடைய நீர் இப்படித் தருமத்தை மறந்து கிலேசப்படலாமோ? முன்னே கீர்த்தியுண்டாகிப் பின்னே துன்பம் வந்தால், அதற்குப் பயப்பட்டு, நல்ல காரியத்தை விட்டுவிடலாமா? சூரியகுலம் தருமம் தப்பாமல் நடந்து வந்தது. இதில் நான் பிறந்து தருமந்தப்பிப் போயிற்றென்னும் பேர் வரலாமா? ராஜாவினிடத்தில் என்னை வனத்திற் கொண்டு போய் விட்டு வந்தேனென்று சொல்லுவது, அவர் வாக்குப் பிசகாமல் நடந்ததானபடியால், அவருக்கு அது நன்மையன்றி வேறன்று. அவர் வார்த்தையைச் சிரசாக வகித்துக் கொண்டு ஆரணியத்துக்குப் போவது எனக்கும் தவம்.

ஆகையால், நீர் ஏன் அங்கலாய்க்கிறீர்? நீர் போய்ச் சேர்ந்த வுடனே வசிஷ்ட மாமுனிவருக்கு என் வந்தனையைச் சொல்லி, அவரையும் அழைத்துக்கொண்டு ராஜாவினிடம் போய் என் சமாசாரத்தை அவரையே சொல்லச் சொல்லும். என் தம்பி பரதன் வந்தவுடனே அவனுக்குச் சகல தருமசாஸ் திரங்களுஞ் சொல்லச்சொல்லி, தேவாலயங்களுக்கு யாதொரு குறைவுமில்லாமல் பூசை நிவேதனங்கள் நடக்கும் படி செய்யச்சொல்லும். ஒருவேளை அந்தப் பரதன் என்னைப் பிரிந்திருக்கிறேனென்று அங்கலாய்க்கப்போகிறான். அவ னுக்குத் தைரியஞ்சொல்லச் சொல்லும். அவன் தன் தாயா ரால் இப்படி நடந்ததென்று அவள்மேல் கோபம் கொள்ளப் போகிறான் ! என்னிடத்தில் எவ்வளவு அன்பாயிருக்கிறானோ, அவ்வளவு தாயாரிடத்திலும் அன்பாயிருக்கச்சொல்லி, இவ் வளவு வரமும் நானே கேட்டுக்கொண்டேனென்று சொல்லச் சொல்லும். நீரும் பரதன் வந்தவுடனே இவ்வாறு அவனுக் குச் சொல்லும். நீர் வசிஷ்டருடனே அரசருடைய கிலேசந் தீரத்தேறுதலைச் சொல்லி, பதினான்கு வருஷமானவுடனே நான் வந்து சேவிக்கிறேனென்றும் சொல்லி, வசிஷ்டரைக் கொண்டு மனம் தேறப் பண்ணிக்கொண்டிரும். என் தாய் மார் மூவருக்கும் என் வணக்கம் சொல்லி, இராசாவைக் கிலேசப்படவொட்டாமல் தேற்றிக்கொண்டிருக்கச் சொல் லும்,'' என்று சொன்னார்.

சுமந்திரர் அவ்வார்த்தைக்கு மறு வார்த்தை சொல்ல லாகாதென்பதனாலே ஊழ்வினை இதுதான் என்றெண்ணிச் சேவித்து, சீதையை வணங்கினார். சீதை அவரைப் பார்த்து, "மகாராஜாவுக்கும் என் அத்தைமாருக்கும் என் வணக்கத்தை முன்னே சொல்லும். என் தங்கைமாரிடம் நான் வளர்த்த கிளியையும் பூவையையும் போஷிக்கச் சொல்லும்,'' என்று சொல்லினள்.

அது கேட்ட சுமந்திரர் விம்மிவிம்மி அழுது, பின்பு ஒரு வாறு தேறி, "சுவாமி, விடை கொடுத்தருளும்,'' என்று

தொழுது, இலட்சுமணரைப் பார்த்து, "நீங்கள் ஏதாகிலும் ஆக்கியாபிக்கிறீர்களா?" என்று கேட்டார். இலட்சுமணர், "ஐயா, நான் என்ன சொல்லப்போகிறேன். பெருமானும் பிராட்டியாரும் சொன்னபடியே செய்யுங்கள்," என்ன, சுமந்திரர் இலட்சுமணரையும் வணங்கி ஒருவருக்குந் தெரியாமல் பட்டணத்தை நோக்கித் தேரைச் செலுத்தினர்.

ஸ்ரீராமரும் சீதையுடனும் தம்பியாருடனும் அன்று இராத்திரியே அப்பால் நடந்தார். இருளானது, நடந்து போகிறவரைத் தடுக்கிறது போல மூடிக்கொண்டது. அவ்விருட்டைக் கெடுக்கச் சந்திரனும் உதயமானன். அங்நிலவு, "இவர்களுடைய பாதாரவிந்தங்கள் ஆரணியத்தில் நடக்கிறபோது உறுத்தும்," என்று எண்ணிப் பூமியெல்லாம் பஞ்சைப் பரப்பி வைத்தது போல வெள்ளை நிறமாய்ப் பிரகாசித்தது. மிருதுவான பாதத்தையுடைய சீதையும் இலக்குமணரும் ஸ்ரீராமரைத் தொடர்ந்து நடந்தார்கள். மனத்தில் அன்பென்பது ஒன்றுண்டானல் எவ்வருத்தமும் தெரியாதல்லவா? இப்படி மூவரும் சூரியன் உதயமாவதற்கு முன்னே தெற்குத் திசையில் இரண்டு யோசனைத்தூரம் நடந்தனர்.

முன்னர் அழுதகண்ணுடன் இரதமேறிச் சென்ற சுமந்திரர் இரண்டு நாழிகையில் அயோத்தியா புரிக்குப் போய்ச் சேர்ந்து, வசிஷ்டரைக் கண்டு சேவித்து, நடந்த சமாசாரமெல்லாம் சொன்னர். சகலமும் தெரிந்த வசிஷ்டர், அது கேட்டு, "ஐயோ! அரசருடைய ஆயுளும் முடிந்தது! விதியை யார் வெல்லுவார்கள்?" என்று கிலேசித்துச் சுமந்திரரை அழைத்துக்கொண்டு அரசரிடம் போனர். அப்போது சகலரும், "தேர் வந்தது! வந்தது!" என்று சொல்லிய வார்த்தையைத் தசரதமகாராஜர் கேட்டு, மயக்கம் தீர்ந்து, கண்ணை விழித்துப் பார்த்து, வசிஷ்டரை நோக்கி, "சுவாமி, ஸ்ரீராமன் வந்தானு?" என்ருர். வசிஷ்டர் வரவில்லையென்று சொல்லமாட்டாமல், மௌனமாய் நின்ருர். அவர் முகக் குறிப்பைப் பார்த்து இராமர் வரவில்லை யென்பதையறிந்து அரசர்

மீண்டும் மீண்டும் சோர்ந்தார். அது கண்டு வசிஷ்டர், "இத் துக்கத்தை நான் கண்ணினுல் பார்க்கமாட்டேன்!" என்று அவ்விடம் விட்டு அப்புறம் போனுர். பின்பு ஒரு தரம் அரசர் கண்ணைத் திறந்து பார்த்துச் சுமந்திரரைக் கண்டு, "மகன் தூரப்போய்விட்டானே?" என்று கேட்டார். அதற்கவர், "சுவாமி, இலட்சுமணரும் சீதையும் தொடர, ஸ்ரீராமர் ஆரணியத்துக்குப் போனுர்," என்று சொன்னுர். அது கேட்ட மாத்திரத்தில் அரசர் பிராணன் போய்விட்டது! தேவேந்திரன் முதலான தேவர்களும் சந்திரனுக்குச் சமான மான விமானத்தைத் தாங்கிக்கொண்டு வந்து, அரசரை அவ்விமானத்திலெழுந்தருளப் பண்ணிக்கொண்டு, பிரம லோகத்துக்கும் உயர்ந்த மீளாத லோகமான பரமபதமென் னும் திருநாட்டிற்கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்.

அரசர் இறந்ததைக் கௌசலையறிந்து, சரீரமெல்லாம் தொட்டுப் பார்த்துப் பெருமூச்சு விட்டுப் பிராணன் போய் விட்டதென்று தெரிந்து, துக்கித்துக்கொண்டு பூமியில் விழுந்து, கோடை காலத்து வெயிலிலகப்பட்ட எலும்பில் லாத புழுவைப்போலத் துக்காக்கினியைச் சகியாமல் துணை பிரிந்த அன்றிற்பட்சியைப் போலவும், மாணிக்கமிழந்த நாகம் போலவும், தேவாமிர்தத்தை இழந்த தேவர் போலவும், துயரத்துடன் விம்மி, அருகே நின்ற கைகேசியைப் பார்த்து, "கைகேசி, உன் சிறு புத்தியினுல் ராஜ்யம் வேண்டுமென்று பிடிவாதம் செய்து வரம் வாங்கிக்கொண்டல்லவா இப்படி முடித்தாய்?" என்று சொல்லி அரசருடைய மார்பிலே மின் னல் போல விழுந்து புரண்டு, "ஐயோ! அரசர் ஆயுதங்க ளால் மாளாமல் பிள்ளைகளாலே மாண்டாரே!" என்று சொல்லி, தண்ணீர் வற்றிப்போன குளத்து மச்சத்தைப் போலச் சரீரம் துடித்துத் தடுமாறிப் பதைத்து மெலிந்தாள்; "பூர்வத்தில், தேவர்கள் நிமித்தம் சம்பராசுரனை ஜயித்தீரே! அதனுலல்லவா தேவர்கள் நிலைத்தார்கள்? அவர்களுக்கு இப்போது விருந்தாகப் போனீரோ? யாகாதிகளைச் செய்து

முடித்த புண்ணியப் பலன்களை அனுபவிக்கின்றீரோ? சத்திய வாக்கியத்தினுடைய புண்ணியப் பலனை அனுபவிக்கின்றீரோ?'' என்று சொல்லிச் சொல்லி அங்கலாய்த்தாள்.

சக்கரவர்த்தியாருடைய பெருந்தேவி இப்படிச் சொல்லி அங்கலாய்க்க, சுமித்திரையும் அப்படியே உருகிக் கரைந்து, துடித்துப் பதைத்து அங்கலாய்த்தாள். மற்ற அறுபதினாயிரம் ஸ்திரீகளும் சமுத்திரம்போல இரைந்துகொண்டு, மயில் கூட்டம் போல வந்து ராஜாவைச் சூழ்ந்துகொண்டார்கள்.

அப்போது, சுமந்திரர் வசிஷ்ட மாமுனிவரிடம் போய்ச் செய்தியைச் சொல்ல, அவர் அக்கணமே வந்து விதிசெய்த காரியத்தைப் பார்த்து விம்மி மனம் தளர்ந்து, பிறகு, "ராஜாவுக்கு நடத்தவேண்டிய காரியங்களுக்கு மைந்தர் ஒருவரும் சமீபத்திலில்லையே! கைகேசியின் பிள்ளை வந்தால் நடத்த வேண்டுவது நடக்கும்,'' என்று ஸ்திரீ கூட்டங்களுக்கு நடுவே கிடந்த ராஜாவினுடைய சரீரத்தை வாசனைத் தயிலத்திற் சேர்த்தார்; பின்பு ராஜாவினுடைய அறுபதினாயிரம் மனைவியரையும் பார்த்து, "ராஜாவுக்கு அந்திமக்கடன் செய்கிற நாளையில் நீங்கள் அக்கினிப் பிரவேசம் பண்ணுங்கள்,'' என்று சொல்லி, கௌசலை சுமித்திரை இருவரையுந் தேற்றி, அவர்களைத் திருமாளிகைக்குப் போகச்சொல்லி அனுப்பிவிட்டு, பரதருக்கு அரசர் எழுதிய ஓலையாக ஓர் ஓலை எழுதிக் கொடுத்து, சீக்கிரமாய் அழைத்துவரத் தூதர்களைக் கேகய தேசத்துக்கு அனுப்பினர்; பரதர் வரும் வரையில் மந்திரியாரான சுமந்திரரே அரசைக் கவனித்துவரத் திட்டம் செய்து, தம் திருமாளிகைக்குப் போய்ச் சேர்ந்தார்.

இராமரைச் சூழ்ந்து சென்று காட்டில் உறங்கிய குடிமக்கள் நித்திரை விட்டெழுந்து பார்க்க, கருணாநிதியான ஸ்ரீராமரைக் காணமல் திடுக்கிட்டுப் பெருமூச்செறிந்து, அதிக துக்கத்தையடைந்து, எட்டுத்திசைகளுமோடித் தேடி, "ஐயோ! நம்மைத் துக்க சமுத்திரத்தில் விட்டுப் போய்விட்டாரே!'' என்று தடுமாறும்போது இரதத்தினுடைய சக்கரத்

தின் சுவடு பட்டணத்துக்குச் செவ்வையாய்ப் போயிருக்கின் றதைக் கண்டு, "ஒருவரும் பயப்பட வேண்டா. ஸ்ரீராமர் அயோத்திக்கே போய்ச் சேர்ந்தார்!" என்று சொல்லிக் கொண்டு, விஷம் தீர்ந்து பிராணன் வந்தவர்கள் போலச் சந்தோஷத்துடனே அயோத்தியா புரியிற் போய்ச் சேர்ந்தார் கள். அப்படிப் போய்ச் சேர்ந்தவர்கள், அரசர் பரமபத மடைந்த சமாசாரங் கேட்டு, மனம் குன்றி, பதைத்து விழுந்து, ஸ்ரீராமர் ஆரணியத்துக்குப் போன சமாசாரம் கேட்டு, மிக வருந்தினர்கள். அந்த ஜனங்களை வசிஷ்ட மகரிஷி பார்த்து, "நடக்க வேண்டுவது நடந்தது. நீங்கள் துயரப்பட வேண்டா," என்று தேறுதல் சொல்லி, அவர்களுடைய பதைபதைப்பை நீக்கினர்.

இப்பால் பிதா வாக்கியத்தினலும் தேவதைகள் தவத்தி னலும் இருளில் நடந்த ஸ்ரீராமருடைய செய்கையைச் சொல்லுவோம்.

## 6. கங்கைப் படலம்

மை, மரதகம், நீலம் ஆகிய இவைகளைப் போன்ற திருமேனியையுடைய ஸ்ரீராமர் தம் சரீரத்தினுடைய காந்தி யினலே சூரியனுடைய பிரகாசம் மழுங்க, மிகவும் சிறுத்த இடையையுடைய சீதாபிராட்டியும் தம்பியாரும் உடன் வர, நடந்து, வழிகளில் அன்னப்பேடுகளும் சேவல்களும் கூடி விளையாடுகிறதைக் கண்டார். அவ்விடத்திலிருக்கிற தாமரை களெல்லாம் ஸ்ரீராமருடைய பாதத்துக்குச் சமானமாக மாட்டாமல் பிரகாசம் மழுங்கியிருப்பதைச் சீதை கண்டாள். இப்படி இருவரும் மேகமானது மின்னலுடனே நடப்பது போலவும், மதயானை பிடியுடனே நடப்பது போலவும் நடந் தனர். பல பூஞ்சோலைகளையும் கரும்பு ஆலைகள் முதலான வைகளையும் சீதை கண்டு, ஸ்ரீராமருடனே விளையாடிக் கொண்டே நடந்தாள். சந்தனமரம் முதலான விருட்சங்

களையும், மணற்குன்றுகளையும், நதிகளையும், எருமைகள் செந்நெற்கதிர்களை மேய்ந்து கடை வாயில் ஒழுகும் பால் தண்ணீரிற்போய் விழக் கயல் மீன்கள் துள்ளி எழும்புகிறதை யும் பார்த்துக்கொண்டே கங்காநதி போய்ச் சேர்ந்தார்கள். அக்கங்காதீரத்தில்வாசமாய்த் தவம்செய்துகொண்டிருக்கிற ரிஷீஸ்வரர்களெல்லாம் அவர்கள் வருவதைக் கண்டு, "நாம் போய்ச் சேருகிற பரமபதமே நமக்கெதிரில் வந்தது!" என்று சந்தோஷித்து, ஸ்ரீராமரையும் சீதா பிராட்டியையும் கண்டு ஆனந்தப் பரவசராய் எதிர்கொண்டு, வேதகோஷத் துடனே தங்கள் பர்னசாலைக்கு அழைத்துக்கொண்டுபோய், வழி நடந்து வந்த வருத்தந்தீரப் பல வித உபசாரஞ்செய்து, "ஸ்ரீராமா, காயும் கனியும் கிழங்குகளும் கொண்டு வந்திருக் கிறோம். கங்கையிலே ஸ்நானஞ் செய்து நியம நிஷ்டை முடித்துக்கொண்டு அமுது செய்," என்று சொன்னார்கள்.

ஸ்ரீராமர் சீதையின் கரத்தைப் பிடித்துக்கொண்டு, பூர் வத்தில் தம் பாதாரவிந்தத்தில் பிரம தேவன் ஆராதித்த கங்கையிலே ஸ்நானம் பண்ணினார். கங்கை, "சகல லோகத்திலிருக்கிறவர்களுடைய பாவங்களையெல்லாம் நான் போக்கடித்துக்கொண்டிருந்தேன். இன்றைய தினம் என் பாவத்தையும் போக்கடித்துக்கொண்டேன்! எனக்கும் நல்ல கதி கிடைத்தது!" என்று சந்தோஷித்தாள். அங்கே யிருக்கின்ற மலர்க்கொடிகளெல்லாம் தன்னைப் பார்த்து நாணி வணங்க, அன்னங்கள் தன் நடைக்குத் தோற்றுப் பயந்து ஒதுங்கிப் போக, தாமரை மலர்கள் தன் பாதத்திற்கு நாணுற்றுத் தண்ணீரிலொளிக்க, கயல் மீன்கள் தன் கண் களுக்கு நாணி விலகிப்போக, சீதை ஸ்நானம் பண்ணினாள். சீதை தனியே வந்திருக்கின்றாளென்று நுரையென்னும் நரைக்கூந்தலையுடைய கங்கையான செவிலித்தாய், அலை யென்னும் தன் கரங்களினாலே ஸ்நானம் பண்ணி வைத்தாள். அந்தக் கங்காசலத்திலே சீதை ஸ்நானம் பண்ணி எழுந்து, பூர்வத்தில் திருப்பாற்கடலில் அவதாரம் பண்ணி எழுந்தது

போல விளங்கினுள். இப்படிக் கங்கையிலே ஸ்நானம் பண்ணியபின், பூர்வத்திலே தாம் பிரயாசைப்பட்டுத் திருப்பாற்கடலைக் கடைந்து அதில் வந்த அமுர்தத்தைத் "தேவர்களே நீங்கள் சாப்பிடுங்கள்," என்று கொடுத்த ஸ்ரீராமர், அன்றைய தினம் இருடிகளிடத்தில் காய் கனி கிழங்குகளை விருந்தாய் உண்டார்.

இப்படி ஸ்ரீராமர் அவ்விடத்திலிருக்கும்போது, அக்கங்கா நதியில் ஓடம் விடுபவனும், ஆயிரம் ஓடத்துக்கு நாயகனும், பர்வதம் போன்ற தோள்களை உடையவனுமாய், யானைகள் போலக் கிராதர் பலர் வேட்டை நாய்களோடு சூழ்ந்து வர, செந்தோல் வஸ்திரமும், புலிவாற்கச்சையும், காலிலே செருப்பும், கோடையிடிபோலக் கூற்றுவனும் பயப்படத்தக்க குரலும், பலகறையாற்கட்டிய வீரகண்டாமணியையுடைய காலும், இருளைப்போலக் கறுத்திருக்கிற தலை மயிரும், யாளி போல நெறித்திருக்கிற புருவங்களும், எண்ணெயையுண்ட இருளைப்போல மிகவும் கறுத்திருக்கிற மேனியும், அரையிலே வாளும், பாம்பைப்போன்ற பார்வையும், பயித்தியக்காரனைப் போன்ற வார்த்தையும், வச்சிராயுதம் போன்ற இடுப்பும், மச்ச நாற்றமுடைய சரீரமும், நகைப்பில்லாத முகமும், கண்களில் நெருப்புப் பொறி பறக்கிற பார்வையும் கொண்ட சொரூபத்துடனே குகனென்பவன், அக்கங்கைக்கரையோரத்தில் உள்ள சிருங்கிபேரம் என்னும் நகரத்தில் வாசஞ் செய்பவன், ஸ்ரீராமரைக் காணவேண்டுமென்னும் அவாவினுலே தேனும் மீனும் காணிக்கை கொண்டு வந்து, கூட வந்த கிராதரையெல்லாம் அப்பால் நிறுத்தி, கையிலிருந்த வில்லையும் அரையிற் கட்டிய வாளையும் வாங்கி வைத்து, நிஷ்கபடமான மனத்தோடு ஸ்ரீராமரிருக்குமிடம் வந்து, வாயிற்படியில் நின்றுன். அவன் அழையாததற்கு முன்னே, இலட்சுமணர், "நீ யார்?" என்று கேட்க, அவன் நமஸ்காரம் செய்து, "சுவாமி, உம்மைச் சேவிக்க வந்தேன். நான் இக் கங்கையில் ஓடம் விடுபவன். உங்கள் அடியவன்," என்று

சொன்னான். அப்போது இலட்சுமணர் அவனை அவ்விடத்தில் நிறுத்தி, ஸ்ரீராமரிடம் போய்த் தொழுது, "சுவாமி, தேவரீரைக் காணும் நிமித்தம் இக்கங்கையில் ஓடம் விடுகிறவர்களுக்கு எஜமானனாகிய ஒருவன் பெருங்கூட்டத்துடன் வந்திருக்கிறான்," என்று சொல்ல, ஸ்ரீராமரும், "இங்கே அழைத்து வா," என்று ஆக்கியாபித்தார். இலட்சுமணர் அழைத்துக்கொண்டு வர, அக்குகன் ஸ்ரீராமரைக் கண்களால் தரிசித்து, மனம் களித்து, தலைமயிர் பூமியிலே படியச் சாஷ்டாங்கமாகச் சேவித்து எழுந்து, பயபத்தியுடனே கையினால் வாய் புதைத்துக்கொண்டு நின்றான். அப்படி நின்ற குகனை ஸ்ரீராமர் பார்த்து, "இவ்விடத்திலிரு," என்றுசொல்ல, அவன் உட்காராமல் நின்றபடியே, "சுவாமி, உங்களுக்குக் காணிக்கையாகத் தேனும் மீனும் கொண்டு வந்திருக்கிறேன். உங்கள் திருவுளமென்னவோ தெரியவில்லை?" என்று சொல்ல, அது கேட்ட ஸ்ரீராமர் அங்கிருக்கும் மகரிஷிகளைப் பார்த்து, நகைத்து, "ரிஷிகளே, யாராகிலும் அன்புடன் கொண்டு வந்தது எதுவாயிருந்தாலும் அதை அமிர்தத்திலும் அதிகமாய்க் கொள்ள வேண்டுவது நம் கடமை. எப்போது பரிவுடன் கொண்டு வந்தானோ, அப்போது அந்த வஸ்துவும் பவித்திரமாயிற்று. அதை நாம் அங்கீகரிக்க வேண்டுவதுதானே? அது சாப்பிட்டதற்குச் சமானம்," என்று சொன்னார்.

பின்பு அவர் குகனைப் பார்த்து, "இன்றைக்கு நாங்கள் இவ்விடத்திலிருக்கிறோம். நாளைக் காலையில் அப்பால் போக வேண்டும். ஆகையால், நீ இன்றைக்கு உன் கூட்டத்துடனே உன் கிராமத்துக்குப் போய், நாளை உதயத்துக்கு ஓடம் கொண்டுவா," என்று சொன்னார். குகன், "சுவாமி, உம்மை இப்படிச் சேவித்த என் கண்களைப் பிடுங்கி எறிந்துவிட வேண்டும்! அப்படிப் பிடுங்கிப் போடமாட்டாமலிருக்கிற கள்ளனான நான், என் கிராமத்துக்குத் தேவரீரை விட்டுப் போகமாட்டேன். உங்களுடைய பாதத்தண்டையிலிருந்து

அடிமைத்தொழில் செய்வேன்,'' என்று சொல்ல, அவ் வார்த்தையை ஸ்ரீராமர் கேட்டு, சீதையினுடைய முகத்தை யும் தம்பியாருடைய முகத்தையும் பார்த்து, "இவன் நம் மிடத்தில் மிகுந்த அன்புடையவன்,'' என்று சொல்லிக் குகனை நோக்கி, "நீயும் எனக்கு அன்பான தம்பிதான். அப்படியே நம்மிடத்தில் இரு,'' என்று ஆக்கியாபித்தார்.

குகன் சாஷ்டாங்கமாகத் தண்டம் சமர்ப்பித்து, மிகுந்த சந்தோஷத்துடனே தன் சேனைகளை அழைத்து, அந்தப் பர்னசாலையைச் சுற்றியிருக்கச் சொல்லித் திட்டப்படுத்தி, தான் கையில் வில்லெடுத்து, அரையிலே வாள் விசித்து, அதிக ஜாக்கிரதையாய்க் காத்திருந்தான். அப்போது தாங்கள் பட்டணம் விட்டு வந்த செய்தியெல்லாம் விவரமாய்த் தெரியும்படி இலட்சுமணர் சொல்ல, குகன் கேட்டு, மிகுந்த பரிவுடனே கிலேசித்து, கண்களிலே மலையருவியைப்போல நீர் வார, "இந்த நாதரை நாயகராய்ப் பெறுவதற்குப் பூமி தேவி பாக்கியம் செய்யாமற்போனளல்லவா!'' என்று மிக வும் வருந்தித் துக்கித்துக்கொண்டிருந்தான். அப்போது சூரியன் மறைந்து போனன். ஸ்ரீராமர் சந்தியாவந்தனம் முதலான நியமங்களை முடித்துக்கொண்டு, அமிர்தத்துக்குச் சமானமான சீதையுடனே தருப்பைப் புல்லினலமைத்திருக் கிற படுக்கையில் வந்திருந்தார். இலட்சுமணர் கையில் வில்லைப் பிடித்துக்கொண்டு பொழுது விடிகிற பரியந்தம் கண்ணிமைக்காமல் காத்துக்கொண்டு நின்றார். அப்போது நித்திரா தேவி எப்போதும் போல வர, "நான் திரும்பி அயோத்தியா புரிக்கு வந்த பிறகு நீ வா? அதற்கு முன் வாராதே!'' என்று ராமாநுஜரான இலட்சுமணர் ஆக்கியா பித்தார். நித்திராதேவி அவரைச் சேவித்து, "சுவாமி, அப் படியே அயோத்திக்கு வந்து சேர்ந்த பிறகு தேவரீரிடத்திற்கு வருகிறேன்,'' என்று போய்விட்டாள். இலட்சுமணர் ஸ்ரீராம ரும் சீதாபிராட்டியும் எளியவர்கள் போலத் தருப்பாசனத்தில் படுத்திருக்கிறதைக் கண்டு, மிகுந்த விசனத்துடனே கண்

களில் நீர் வடியச் சித்திரம் போல வில்லை ஊன்றிக்கொண்டே நின்ருர். குகன் யானைக்கூட்டங்கள் போல அனேகம் வேடர்கள் சூழ, கையிலே வில்லைத் தாங்கிக்கொண்டு மனம் வெம்பிப் புழுங்கிக் கண்களில் நீர் வாரத் தம்பியார் நிற்கிறதையும் ஸ்ரீராமர் படுத்திருக்கிற எளிமையையும் பார்த்து, அருவியோடு கூடிய பர்வதம் போல நின்றபடியிருந்தான். அப்போது சூரியன் உதயமானுன். தாமரை மலர்களெல்லாம் சூரியனைக் கண்டு மலர்ந்தன. ஸ்ரீராமரைக் கண்டு சீதையினுடைய முகக்கமலம் மலர்ந்தது. ஸ்ரீராமர் காலைக்கடன் முதலியவைகளை முடித்துக்கொண்டு, ரிஷீஸ்வரர்கள் சூழ்ந்து நிற்கக் குகனைப் பார்த்து, "ஓடங்கொண்டு வா," என்று ஆக்கியாபித்தார்.

அவ்வார்த்தையைக் கேட்ட குகன், தன் கண்களில் நீர் தாரை தாரையாய் வழிய, மிகவும் பதைத்து, சீதையுடன் ஸ்ரீராமரைச் சாஷ்டாங்கமாகச் சேவித்து, "சுவாமி, அடிமைகளாகிய நாங்கள் பொய்யென்கிறதறியோம். நாங்கள் வாசம் செய்கிறது ஆரணியம். நாங்கள் மிகுந்த பாவிகள்; நீங்களிட்ட ஏவல் செய்யத் தக்கவர்கள். நீங்கள் கிருபை செய்து எங்கள் நகரத்திலேயே இருக்க வேண்டும். இவ்விடத்திலே தேன் தினை தேவர்களுக்கும் யோக்கியமான மாமிசம் இவைகள் மிகுதியாயிருக்கின்றன. துணைக்கு நாங்களிருக்கின்ருேம். விளையாடுகிறதற்கு ஆரணியம் இருக்கின்றது. ஸ்நானத்துக்குக் கங்கையிருக்கின்றது. என் சரீரமிருக்கிறமட்டும் நீங்கள் இவ்விடத்திலேயே தங்கி வாசம் செய்ய வேண்டும். வஸ்திரங்கள் போலத் தோல்களும், கட்டில் போலப் படுத்துக்கொள்ளுகிறதற்குப் பரண்களும், வாசம் செய்கிறதற்குக் குடிசைகளும் இருக்கின்றன. தேவலோகத்து வஸ்துக்கள் வெண்டுமென்ருலும் அதி சீக்கிரத்தில் கொண்டு வர நாங்களிருக்கின்ருேம். பதினையாயிரம் வேடர்கள், தேவர்களுக்குச் சமானமான பலசாலிகள், உங்களுடைய ஏவலுக்குச் சித்தமாயிருக்கிருர்கள். நீங்கள் ஒரு

நாளைக்கு எங்கள் குடிசையிலிருந்தால் அதைப்பார்க்கிலும் மிகுந்த பாக்கியம் எங்களுக்கொன்றுமில்லை,'' என்று மிகுந்த அன்புடனே சொன்னான்.

ஸ்ரீராமர், மிகுந்த கிருபையுடனே, "குகனே, இந்தக் கங்காநதி முதலான நதிகளிலே ஸ்நானம் செய்து, மகரிஷிகளைச் சேவித்துக்கொண்டு, இன்னம் சில நாளையில் திரும்புவோம். அப்போது உன்னிடத்திற்கு வருகிறோம்,'' என்று சொல்லினர். குகன் இந்த வார்த்தையைக்கேட்டு,அவர்மனோபாவம் அறிந்துகொண்டு,உடனே ஓடத்தை அழைப்பித்தான். ஸ்ரீராமர் மகரிஷிகளை வணங்கி, "விடை பெற்றுக்கொள்ளுங்கள்,'' என்று சொல்லிக்கொண்டே தாமும் சீதாபிராட்டியும் இலட்சுமணருமாக ஓடத்தில் ஏறிக்கொண்டு ஓடத்தை விடச்சொல்லி ஆக்கியாபித்தனர். அப்படியே குகன் ஓடம் விட்டான். அந்த ஓடமானது அன்னம் நடக்கிறது போலச் சென்றது. அந்த ரிஷீஸ்வரர்களெல்லாம் ஸ்ரீராமரைப் பிரிந்திருக்க மாட்டாமல், அக்கினியில் விழுந்த மெழுகு போல மனமுருகி நின்றார்கள். ஸ்ரீராமரும் சீதையும் ஓடத்திலிருந்து தண்ணீரிறைத்து விளையாட, அந்த ஓடமானது தண்ணீரிலே அதிசீக்கிரமாயோடிற்று. மணற்குன்றுகளென்கிற தனங்களையுடைய அந்தக் கங்காநதியென்னும் ஸ்திரீ, இரத்தினங்களைக் கொழிக்கும் அலையென்கிற தன் கரங்களினால் அந்த ஓடத்தை ஏந்திக்கொண்டு போய் அக்கரையிற்சேர்த்தாள். கரையேறின மாத்திரத்தில் ஸ்ரீராமர் குகனைப்பார்த்து, "சித்திரகூடப் பர்வதத்துக்குப் போகிற வழி எது?'' எனக் கேட்டனர். அப்போது குகன் மிகுந்த பரிதாபத்துடனே சாஷ்டாங்கமாகச் சேவித்து, "புருஷோத்தமரே, அடியேன் ஒரு விண்ணப்பம் பண்ணிக்கொள்ளுகிறேன். அடியேன் இவ்விடத்துப் பாதைகளெல்லாம் நன்றாயறிவேன்; காய் கனி கிழங்குகள் தேன் தினை முதலியவைகள் தேடிக்கொண்டு வரத்தக்கவன்; இறங்கின இடங்களில் திவ்வியமான வீடுகளைக் கட்டுவேன்; ஒரு நொடிப்பொழுதாகிலும் உங்களைப்

பிரியாமல் காத்திருப்பேன்; பொல்லாத ஜீவஜந்துக்களையெல்லாம் பல திசைகளில் துரத்தி, வாசம் செய்கிறதற்கு நல்ல ஜாகைகள் செய்து வைப்பேன் ; எந்தக் காலங்களில் எந்த வஸ்து வேண்டுமோ, அதைக்கொண்டு வருவேன் ; ஒன்றுக்கும் பயப்படுகிறவனல்லேன்; இரவும் பகலும் உங்களுடைய திருவடிகளைப் பிரியாமலிருப்பேன்; நீங்கள் ஆக்கியாபித்தால் என் சேனையுங்கூடக் கொண்டு வருகிறேன். பகைவர் யாராகிலும் வந்தால் மாண்டுபோவார்களேயல்லாமல், என் முன்னே மீண்டு போக மாட்டார்கள். ஆகையால், அடியேனும் கூட வருகிறேன்,'' என்று சொன்னான்.

அந்த வார்த்தையைக் கேட்ட ஸ்ரீராமர், "குகனே, நீ என் பிராணன். உன் தம்பி இலட்சுமணன். என் மனைவி உனக்கு மதனி. நாங்கள் இது வரைக்கும் நால்வர் சகோதரராய் இருந்தோம்; இன்று முதல் உன்னோடு ஐந்து பேரானோம். ராஜ்யமெல்லாம் உன்னுடையது. நீ சொல்லுகிறபடி நடக்கிறவன் நான். நான்தான் நீ; நான் உன் பேச்சுத் தட்டுகிறதில்லை. நான் வடக்கே திரும்பி வருகிற போது உன்னிடத்திற்கு வருகிறேன். அயோத்தியாபுரிக் காரியத்துக்கு உன் தம்பி இருக்கின்றான். இவ்விடத்துக் காரியத்திற்கு வேறொருவரும் இல்லை. உன்னுடைய பந்து ஜனங்களெல்லாம் என் பந்து ஜனங்களல்லவா? இவர்களுன்னைப் பிரிந்து கிலேசப்படலாமா? இவர்களென்னுடைய பந்துஜனங்களானபடியால், நீ இவ்விடத்திலேயே, இவர்களை இரட்சித்துக்கொண்டிரு,'' என்று சொல்ல, குகன் அவரது வார்த்தையைத் தள்ளமாட்டாமல், துயரத்தோடு விடை பெற்றுக்கொண்டு திரும்பினான். அப்போது ஸ்ரீராமரும் பிராட்டியும் தம்பியாரும் ஆரணியத்தில் தொடர்ந்து நடந்தார்கள்.

## 7. வனம் புகு படலம்

புத்தியீனர்களைச் சேரும் வேசிகள் மனம் போலப் பசையற்று வரண்டிருக்கிற பூமியானது, ஸ்ரீராமர் வரவே மழை பெய்து குளிர்ந்திருக்க, சூரியகிரணம் சந்திரனைப் போலக் குளிர்ச்சியைக் கொடுக்க, பட்டுப்போன மரங்களும் தளிர் விட்டு நிழலுண்டாக்க, மேகங்களும் மழைத்தாரைகளைத் துளிக்க, புஷ்பவாசனையோடு காற்று வீச, மயில்கள் நடனஞ் செய்கிற ஆரணியத்தில் அவர்கள் நடந்தார்கள். ஸ்ரீராமர் சீதையைப் பார்த்து, "அன்பே, இந்திரகோபங்கள் கும்பல் கும்பலாய்க் கூடியிருக்கிறதும், கொன்றைப் புஷ்பங்கள் உதிர்ந்து குவிந்திருக்கிறதும், நாகரத்தினங்கள் போலவும் பொன் போலவும் இருக்கிறதைப் பார்! மயில்களெல்லாம் தோகைகளை விரித்துக்கொண்டு நடனம் பண்ணுகின்றன! அவை தங்களுடைய அனேகங் கண்களாலே உன்னுடைய அழகைப் பார்க்கிறதற்கு வந்தது போலத் தோகை விரித்து ஆடுவதைப் பார்! உன்னுடைய சாயலையும் கண்களையும் பார்த்துத் தம் இனமென்றெண்ணி மயில்களும் மான்களும் சமீபத்திலே வருகின்றதைப் பார்! அருந்ததிக்குச் சமான மானவளே, அமிர்தத்திலும் இனிமையானவளே, காந்தள் புஷ்பத்தின்மேல் கிளியேறிக் கோதிக்கொண்டிருப்பது, உன் கையிலே கிளி வைத்துக்கொண்டிருப்பது போல இருக்கிறதைப் பார்! ஒரு மயில் காந்தள் புஷ்பத்தின் மொக்கைக் கண்டு பாம்பென்று கவ்வ, அதைக் கண்டிருந்த பெண் மயில் பரிகாசமாக நகைக்கின்றதைப் பார்! சிங்கக்குட்டியும் யானைக்குட்டியும் யாதவர் வீட்டுக் குழந்தைகளுங் கூடி விளையாடுகிறதைப் பார்! அகில் வாசனை பொருந்திய அளக பாரத்தையுடையவளே, புஷ்பித்திருக்கிற கொம்புகள் நதிகளிலே அலையில் தோய்ந்து தோய்ந்து முழுகுகிற ஸ்திரீகள் போல இருக்கின்றதைப் பார்! கோங்க மலரின்மேல் வண்டுகள் நித்திரை பண்ணுவது பொன் தட்டிலே நீலரத்தினம்

பதித்திருக்கிறதுபோல இருப்பதைப் பார்!'' என்று இப்படி அந்த ஆரணியத்திலேயிருக்கிற சிங்காரங்களைச் சீதைக்குக் காட்டி விளையாடிக்கொண்டு நடந்தார்.

அப்போது சாயுங்காலமாயிற்று. அவ்விடத்தில் பாரத்துவாச முனிவர் இராமர் வருகிற சமாசாரம் கேட்டு, எதிர்கொண்டு அழைத்துப்போக வந்தார். அவர் எப்படிப்பட்டவரென்றால், குடையும், குண்டிகையும், தண்டும், சடையும், மான் தோலும், மரவுரியும், சரீரமெல்லாம் உரோமமும், ஒழுக்கமும், வேதபாராயணம் செய்கிற நாவும் உடையவர்; அக்கினி தேவனுடைய புத்திரர்; சகல ஜீவனையும் தம்முயிரைப்போல எண்ணி அருளும் கிருபையை உடையவர். அவர் வரவே, ஸ்ரீராமர் அவரைக் கண்டு, புஷ்பங்களினாலே அர்ச்சனை செய்து, சேவித்துக்கொண்டார். அந்த முனீஸ்வரரும் அதிக அன்புடனே இராமரைத் தழுவிக்கொண்டு, "அப்பா, நீ இந்த ரூபத்தோடு வரக் காணப்பெற்றேனே!'' என்று மனம் நொந்து, கண்ணீர் பெருகப் பார்த்து, "நீ ராஜ்யத்திலிருந்து ராஜரீகம் பண்ணாமல் இப்படித் தம்பியுடனே வர வேண்டிய காரணமென்ன?'' என்று கேட்டனர். ஸ்ரீராமர் நடந்த செய்தியெல்லாம் சொல்ல, அது கேட்டு, "விதியின் செயலுக்கு யார் என்ன செய்யலாம்!'' என்று கிலேசித்து, "பூமி தேவி பாக்கியம் பண்ணினவளல்ல,'' என்று சொல்லி, "என் நண்பரான தசரத மகாராஜர் உன்னை இப்படி ஆரணியத்துக்கனுப்பிவிட்டு எப்படி ஜீவனுடனிருக்கிறார்?'' என்று கேட்டார். ஸ்ரீராமர், "சுவாமி, அவரவர் செய்த புண்ணிய பாவத்துக்குத் தக்கவாறு சுகதுக்கமுண்டாகுமேயல்லாமல், வேறில்லையே! நீங்கள் ஏன் அதற்குக் கிலேசிக்க வேண்டும்?'' என்று சொல்லினர். முனிவர் மிகுந்த சந்தோஷத்துடனே மார்பில் அணைத்துக்கொண்டு ஸ்ரீராமரைத் தம் பர்னசாலைக்கு அழைத்துக்கொண்டு போனார்; அவ்விடத்தில் காய் கனி முதலியவை கொடுத்து, உண்ணச்செய்து, மகிழ்ச்சியாயிருந்தார். பாரத்துவாசர் ஸ்ரீராமரைப் பார்த்து,

"ஐயா, நீ இவ்விடத்திலேயே எங்களுடன் காய்கனி கிழங்குகளைச் சாப்பிட்டுக்கொண்டு தவம் செய்துகொண்டிருக்கலாம். இவ்விடம் கங்கையும் யமுனையும் சரஸ்வதியும் சங்கமமாகிற இடமானபடியினாலே, ஸ்ரீமந்நாராயணர் இங்கு வாசமாயிருக்கிறார். எங்களைப் போன்றவர்களுக்குக் கிடைப்பதற்கு அருமையாயிருக்கிற இடம் இது. ஆகையால், இவ்விடத்திலேயே வாசஞ் செய்துகொண்டு இரு," என்று மிகுந்த அன்புடனே சொல்ல, ஸ்ரீராமர், "நீங்கள் சொல்லுகிறது உத்தமமே. ஆனால், அயோத்தியாபுரி இவ்விடத்திற்குச் சமீபமானபடியால், அடிக்கடி சனங்கள் வந்து மிகவும் வருந்துவார்கள்," என்று சொல்லினர்.

பாரத்துவாசர், "அதுவும் உள்ளதுதான். இவ்விடத்திற்குப் பத்து யோசனைத் தூரம் தெற்கே போனால், சித்திரகூட பர்வதம் இருக்கின்றது. அது வாசம் செய்யத் தகுதியானது. ஆகையால், அவ்விடத்திலேயே போய்ச் சேருங்கள்," என்று விடை கொடுத்தனர்.

பிறகு ஸ்ரீராமர் அவரைச் சேவித்து அப்பால் நடந்து, காளிந்தி நதியைக் கண்டார். அப்போது மத்தியான வேளை ஆயிற்று. அந்த நதியிலே ஸ்நானம் செய்து, காய் கனி கிழங்குகள் சாப்பிட்டு, நீர் அருந்தி, "இந்த நதியைத் தாண்டுவதெப்படி?" என்று யோசனை செய்தார். அப்போது இலட்சுமணர் மூங்கில்களை வெட்டி மாணைக் கொடியினால் ஒரு தெப்பங்கட்டினார். அதன்மேல் ஸ்ரீராமரும் சீதையும் எழுந்தருளியிருக்க, இலக்குமணர் தம் இரு கரங்களினால் அந்தக் காளிந்தியை நீந்தினார்.

இப்படி அக்கரை போய்ச் சேர்ந்து நடக்கிற போது, கனி வர்க்கம் முதலிய யாவும் வெந்து தீய்ந்துவிடத் தக்கதும் நினைக்கும் நெஞ்சையும் சுடுவதுமான ஒரு பாலை நிலத்தைக் கண்டார்கள். 'இதில் ஜானகி நடக்கிறது கடினம்,' என்று இராகவர் நினைக்க, சூரியன் சந்திரனைப்போலக் குளிர்ச்சியைக் கொடுத்தான். பட்டுப்போன மரங்களும் தளிர் விட்

டன. அக்கினி சீதளத்தையுடைய தாமரைக்காடு போலக் குளிர்ந்திருந்தது. பருக்கைக் கற்கள் புஷ்பங்கள் போலக் குழைந்து குளிர்ந்திருந்தன. உலர்ந்து போன கொடிகளெல்லாம் வேரூன்றித் தளிர்த்தன. மேகங்கள் முழங்கி மழைத் துளிகளைச் சிந்தின. கடூரமான வேடரும் மகரிஷிகள் போலச் சகல ஜீவராசிகளிடத்திலும் கிருபையுடையவர்களானார்கள். சகல ஜீவராசிகளும் பசி முதலானவை இல்லாமல் சந்தோஷமாயிருந்தன. புலியினுடைய முலைகளை மான் குட்டிகள் ஊட்டின. புருஷனைப் பிரிந்த ஸ்திரீயினுடைய மனம்போலப் புழுங்கி வெந்து கொதித்துக்கொண்டிருந்த அந்த ஆரணிய மானது, புருஷன் வந்தால் அம்மனம் எப்படிக் குளிர்ந்திருக்குமோ அப்படிக் குளிர்ச்சியை அடைந்திருந்தது. அவர்கள் இவ்விதப் பாலை நிலத்தோடுங்கூடிய ஆரணியத்தைக் கடந்து மிக உயரமான சித்திரகூட பருவதத்தைக் கண்டார்கள்.

## 8. சித்திரகூடப் படலம்

தேவர்களுக்கும் நமக்கும் ஒத்து ஒரு வழியாக நின்ற சகஸ்திர நாமத்தையுடைய ஸ்ரீராமர் சித்திரகூட பருவதத்தின் அழகெல்லாம் ஜானகிக்குத் தெரிவிக்கிறார்: "சீதாய், இந்தப் பர்வதத்தின் மேலிருக்கிற யானையும், அதற்குச் சமீபத்தில் திரிகிற மேகமும் வேற்றுமை தெரியாமலிருக்கிறதைப் பார்! வரையாடுகள் குதிக்கிற போது அவற்றின்மேல் மரகதக்கல்லின் காந்தி பிரகாசிக்க, அவை பச்சைக் குதிரைகள் போலத் தோன்றுகிறதைப் பார்! மலைப்பாம்பின் தோல்கள் அயோத்தியா புரிப் பட்டணத்துக் கொடிகள் போல அங்கங்கே தொங்குகிறதையும், கவரிமான் மயிர் அருவித்தண்ணீரோடுகிறது போலக் கிடக்கிறதையும், மூங்கிலிலிருந்து உதிர்ந்த முத்துகள் சிங்கங்கள் கொன்ற யானையினுடைய இரத்தத்திலே தோய்ந்து, ஸ்திரீகளுடைய மார்பின் குங்குமக்

குழம்பிலே தோய்ந்திருக்கிற முத்து மாலைபோலிருக்கிறதை யும், அருவி நீர் சிவனுடைய சடாபாரத்தில் கங்காசலம் வருகிறது போல இருக்கிறதையும் பார்! சந்தனச்சோலை நெருக்கத்திலே சந்திரன் நுழைந்து போகிறதையும், மத யானைகள் தழையொடித்து ஈக்களை ஓட்டிவிட்டுத் தேனிருலைப் பிடுங்கிக் கர்ப்பமாயிருக்கிற பெண் யானைக்குக் கொடுக்கிற தையும், மலைத்தேன் விழுந்து குறவர் கிழங்கு தோண்டிய பள்ளங்களிலெல்லாம் நிறைந்து கிடக்கிறதையும், பெண் குரங்குகள் அருவித்தண்ணீரை வாரியிறைக்க ஆண் குரங்கு கள் மேகத்துத் தண்ணீரைப் பதிலுக்கு உதிர்க்கிறதையும், மாணிக்கப் பாறைகள் சூரியனைப்போலப் பிரகாசிக்கிறதை யும், தினைப்புனங்களிலே வேடுவ ஸ்திரீகள் கவணில் வைத் தெறிகிற மாணிக்கங்கள் நட்சத்திரங்கள் போல விழுகிறதை யும், கானுறுகளிலே இரத்தினங்கள் நட்சத்திரங்கள் போலப் பிரகாசிக்கின்றதையும், ரிஷீஸ்வரர்களுடைய ஓமப்புகைகள் பருவதத்தினுடைய சிகரங்கள் போல எழும்புகிறதையும், விஞ்சைய ஸ்திரீகளுடைய செம்பஞ்சு தோய்ந்திருக்கிற காலடிகள் மாணிக்கப்பாறையில் பிரகாசம் மறைந்து மரகதப் பாறையில் பிரகாசிக்கிறதையும், தேவலோகத்துக் கன்னி கைகள் கழற்றிப்போட்ட பாரிசாத மாலைகள் அருவி போலக் கிடக்கிறதையும், தினைப்புனம் காவல் காக்கிறவர்கள் வைத் திருக்கிற சிறு பறைகளை மந்திகள் எடுத்து அடித்து முழக்கு கிறதையும், குருக்கத்திப்புதரில் அரம்பைகள் படுத்திருந்த புஷ்பமெத்தைகளையும், குறத்திகள் பாடுகிற பாடலைக் கேட்டு அசுணங்கள் ஓடி வருகிறதையும், சுனைகளிலிருக்கிற நண்டு கள் தேவரம்பைகள் வந்து ஸ்நானம் பண்ணுகிறபடியினலே பாரிசாத புஷ்ப வாசனையாய்ப் பரிமளிக்கிறதையும், சூரியன் இந்தப் பருவதத்துக்குக் கிரீடம் போலப் பிரகாசிக்கிறதையும், மாணிக்கப் பாறையிலே மூங்கில் முத்துகள் செவ்வானத்தி லிருக்கிற நட்சத்திரங்கள் போலக் கிடக்கிறதையும், புஷ் பித்த முருக்கமரங்கள் வீடுகள் பற்றிக்கொண்டது போலப்

பிரகாசிக்கிறதையும், காட்டானைகள் அருவித்தண்ணீரைத் தும்பிக்கையினாலே மொண்டு வந்து ரிஷிகளுடைய கமண்டலத்திலே சொரிகிறதையும், மகா விருத்தாப்பியமாய் நரை திரையினாலே கண்கள்கூடத் தெரியாமலிருக்கிற ரிஷீஸ்வரர் களுக்கு மந்திகள் தங்கள் வாலை அவர்கள் கையிலே கொடுத்து வழி காட்டிக்கொண்டு போகிறதையும், கிளிகள் தினைக்கதிர்களையும் மூங்கிலரிசிகளையும் ரிஷிகளுடைய பர்ன சாலைகளில் கொண்டு போய்ப் போடுகிறதையும், மலைப்பாம்பு கள் கற்றறிந்தவர்கள் போல அடங்கி மகரிஷிகளுக்கு நடக்கிறதற்குப் படிக்கற்களாய்க் கிடக்கிறதையும், தவஞ்செய் கிறவர்களை அழைத்துப்போகிறதற்குத் தெய்வ விமானங்கள் வருகிறதையும் போகிறதையும் பார்!'' என்று இவ்வித அலங் காரங்களடங்கிய அந்தச் சித்திரகூடத்தின் பெருமைகளெல் லாம் சீதாபிராட்டிக்குச் சந்தோஷத்துடனே ஸ்ரீராமர் காண் பித்து, அவ்விடத்திலிருக்கிற ரிஷிகள் எதிரே வரச் சேவித்துக் கொண்டு, அவர்கள் விருந்து செய்யச் சந்தோஷத்துடனே அந்தக் காய்கனி கிழங்குகளைச் சாப்பிட்டுக்கொண்டு சம்பிரம மாய் இருந்தார்.

சூரியன் ஸ்ரீ மகாவிஷ்ணுகாலநேமி மேல் பிரயோகம் பண் ணின சக்கரம் போல அஸ்தமன கிரியில் பிரவேசித்தான். அந்தச் சக்கரம் போய்ப் படவே காலநேமியினுடைய சரீரத்தி லிருந்து இரத்தப்பிரவாகம் வந்தது போல எங்கும் செவ்வா னம் பரவிற்று. அவனுடைய கோரப்பல் உதிர்ந்து பிரகாசித் தது போலப் பாலசந்திரோதயமாயிற்று. தாமரைப் புஷ்பங்க ளெல்லாம் குவிந்தன. அல்லிப் புஷ்பங்களெல்லாம் மலர்ந் தன. மந்திகளும் கடுவன்களும் மரங்களை நோக்கி நடந் தன. மதயானைகளும் பிடிகளும் தடாகங்களை நோக்கி நடந் தன. பட்சிகளும் கூடுகளை நாடிப் பறந்தன. ஸ்ரீ ராமர் அப் போது சந்தியாவந்தன நியமங்களை முடித்துக்கொண்டு, சீதை யுடனே இலட்சுமணர் கட்டி வைத்த பர்னசாலையிலே பிரவே சித்தார். அந்தப் பர்னசாலை மூங்கில்களைத் தறித்து நிறுத்தி

முகடு சேர்த்து, தேக்கிலேயினுலே மேலே மூடி, நாணற் புற்களாலே கூரை சேர்த்து, மூங்கில் பத்தைகளினுலே சுவர் செய்து, அதன் மேலே மண் பூசி, தண்ணீர் கொண்டு திருத்தி, அதிலே வேறே ஸ்ரீ ராமருக்கும் சீதைக்கும் பள்ளி யறையுண்டாக்கி, குங்குமச்சேற்றினுலே மெழுகி, மயிலிறகி னுலே விமானங்கட்டி, மூங்கிலாலே தூங்குமஞ்சச் சங்கிலி கள் செய்து, புஷ்பமெத்தைகளுடன் விளங்குவதைப் பார்த்து ஸ்ரீ ராமர் சந்தோஷித்து, சீதையுடனே கிருகப்பிரவேசம் செய்தார். அவர் திருப்பாற்கடலும் வைகுந்தமும் போல அமைத்திருக்கிற அந்தப் பர்னசாலேயில் அதிக சந்தோஷத் தோடு இருந்து, "ஆரணியத்திலே சீதை பாதமும் நடந்தது! தம்பி கையும் பர்னசாலே செய்தது! ஒன்றுமில்லாதவர்க ளுக்கு என்னதான் இசையாதது!" என்று நினைத்து, "தம்பி, இதை எப்போது கற்றுக்கொண்டாய்?" என்று சொல்லிக் கண்களிலே ஜலம் பெருக்கி, "அப்பா, நான் பிதா வாக்கிய பரிபாலனம் செய்தேனென்ற கீர்த்தி பூண்டுகொண்டேன்; பிரயாசத்தை உனக்குக் கொடுத்தேன்!" என்று சொல்ல, இலட்சுமணர் நொந்த மனத்துடனே தமையனுர் திருமுகத் தைப் பார்த்தார். அப்படி நோக்கிய தம்பியாரைப் பார்த்து இராமர் பின்னேயும், "அப்பா, பிரயாசத்துக்கு இப்போது தான் முனே காண்கின்றது. ஆகிலும், பாக்கியத்துக்கு ஒரு கரையுண்டு. இதற்கு ஒரு நாளும் கெடுதி வருகிறதில்லே. இதனுலுண்டாகிற இன்பமும் கீர்த்தியும் ஆத்துமலாபமல் லவா?" என்று தம்பியாரைத் தேற்றி, அந்தச் சித்திரகூட பருவதத்திலே எழுந்தருளியிருந்தார்.

## 9. பள்ளியடைப் படலம்

அயோத்தியா புரிப் பட்டணத்திலிருந்து வசிஷ்ட மாமுனிவர் ஆக்கியாபித்தபடி தூதுவர்கள் இராத்திரி பகலாய் நடந்து, கேகயதேசம் போய்ச் சேர்ந்து, பரதர் இருக்கிற அரண்மனை வாயிலில் நின்று, வாயிற்காப்பாருடனே தாங்கள் வந்த செய்தி சொல்லி அனுப்பினார்கள். அவர்கள் பரதரிடத்தில் போய், "சுவாமி, உங்கள் தகப்பனாரிடத்திலிருந்து தூதர்கள் வந்திருக்கிறார்கள்," என்று சொன்னார்கள். அவ்வார்த்தையைப் பரதர் கேட்டு, மிகுந்த சந்தோஷத்துடன், "அவர்களை இங்கு வரச்சொல்," என்று ஆக்கியாபித்தனர். உடனே தூதர்கள் வந்து சேவித்து நின்றார்கள். அவர்களைப் பரதர் பார்த்து, "ஐயா, சுகமாயிருக்கிறீர்களா?" என்று கேட்டார். அவர்கள், "சுகமாய் இருக்கிறோம்," என்று சொன்னார்கள். அது கேட்டு, சந்தோஷமாய், "தம்பியாருடனே என் நாயகராகிய ஸ்ரீராமர் சுகமாயிருக்கிறாரா?" என்று கேட்க, "சுகமாயிருக்கிறார்," என்று தூதர்கள் சொல்ல, திக்கு நோக்கித் தீர்க்கதண்டஞ் சமர்ப்பித்து, சந்தோஷித்தார்.

தூதர்கள், கொண்டு வந்த திருமுகத்தை எதிரே வைத்தார்கள். அந்தத் திருமுகத்துக்கு நமஸ்காரஞ் செய்து எடுத்து, சிரசிலே வைத்துக்கொண்டு, கட்டுகளைப் பிரித்து, வாசித்து, வந்த தூதர்களுக்குத் திரவியம் கொடுத்து, அவ்விடத்திலே காலதாமதம் செய்யாமல் தமையனாரைப் பார்க்க வேண்டுமென்கிற அபேட்சையுடனே பிரயாண பேரிகை அடிக்கச் சொல்லி ஆக்கியாபித்து, கேகய தேசாதிபதியான பாட்டனாரைச் சேவித்து விடை பெற்றுக்கொண்டு, தம்பியாருடனே தேரேறி, கோசலதேசம் வந்து சேர்ந்தார்.

அந்தத் தேசத்திலும் கிராமங்களிலும் கழனிகளில் ஏர் கட்டி உழுவாரில்லை. பயிருக்கும் ஜலம் கட்டுவாரில்லை. பழுத்த நெற்களில் நீர் வற்றிப் போயிற்று. எங்கும் இலட்சுமி

கரம் நீங்கி அந்தகாரப்பட்டு அறுப்பறுக்கிற சமயத்தில் அறுப்பறுக்கிறவர்களில்லாமல் கதிர்களூடே முளைத்துப் போனதும், புஷ்பங்கள் பறிப்பாரில்லாமல் உதிர்ந்து கிடக்கிறதும், பள்ளஸ்திரீகள் ஓய்ந்து கிடக்கிறதும், ஜலம் நிரம்பிய ஏரியின் கீழிருக்கிற பயிர்களுக்குத் தண்ணீர் விடுவாரில்லாததனலே அப்பயிர்கள் லோபிகள் வீட்டுவாயிலில் காத்திருக்கிற தரித்திரர் போல உலர்ந்து கிடக்கிறதும், கிளிகள் பேசாமலிருக்கிறதும், போக்கு வரத்தில்லாமலிருக்கிறதும், தெருக்கள் பாழாய்க் கிடக்கிறதும், உப்பரிகைகளில் அகிற்புகைகளில்லாமலிருக்கிறதும், ஸ்திரீகள் அளகபாரங்களிலே புஷ்பமில்லாமலிருக்கிறதுமாய், இப்படி அந்தத் தேசம் பிராணன் போய்விட்ட சரீரம் போல அமங்கலமாயிருந்தது.

அதைப் பரதர் கண்டு கிலேசித்து, நடந்த சமாசாரமொன்றும் தெரியாமல் திகைத்து, "நாமென்னவோ பொல்லாத வார்த்தை கேட்க இருக்கிறோம்," என்று பெருமூச்சு விட்டு, தம் தேரின் வேகத்துக்கு முன் மனமோட, அதிக வேகமாய் வருகிற போது அயோத்தியா புரி தெரிந்தது. உப்பரிகைகளிலே கொடிகளும் இல்லாமல் வெள்ளமற்ற ஆறு போல வீதிகள் பாழடைந்திருக்கிற பட்டணத்தைப் பார்த்து, சத்துருக்கரை நோக்கி, "தம்பீ, ராஜாக்களிருக்கிற பட்டணம் இப்படியுமிருக்குமா? ஸ்ரீ மகாவிஷ்ணுவும் மகாலட்சுமியும் பிரிந்திருக்கிற திருப்பாற்கடல் போலக் காண்கின்றதே!" என்று சொன்னார்.

அப்போது சத்துருக்கரெழுந்து சேவித்து, "சுவாமி, என்னவோ ஒரு விதத்தில் மகாலட்சுமி பட்டணத்தைவிட்டுப் போயிருக்கிறதாகத் தோன்றுகிறது," என்று சொன்னார். அந்தச் சமயத்தில் இரதமானது கோட்டை வாயிலில் வந்து சேர்ந்தது. சக்கரவர்த்தியார் குமாரரான பரதர் அதிசீக்கிரம் இரதம் விட்டிறங்கி, தகப்பனாரிருக்கிற அரண்மனைக்குப் போய், அவரைக் காணமல், மனத்தில் ஐயமாய்த் திகைத்துக் கிலேசத்துடனே கௌசலை அரண்மனையை நோக்கி

நடந்தார். அப்போது கைகேசி தாதியை அனுப்ப, அவள் வந்து, "சுவாமி, அம்மாள் அழைக்கிருர்கள்," என்று சொன்னுள். அவர் வந்து தாயைச் சேவிக்க, அவள் மனச் சந்தோஷத்துடனே மகனைத் தழுவிக்கொண்டு, "அப்பா, என் தாயார், தகப்பனுர், தமக்கையார், தங்கை சகலரும் சுகமாயிருக்கிருர்களா?" என்று கேட்டாள். 'யாவரும் சுகமாயிருக்கிருர்கள்,' என்று சொல்லி, பரதர், "தகப்பனுரைச் சேவிக்க மிகவும் அபேட்சையாய் வந்தேன். ஆகையால், அவர் எங்கேயிருக்கிருர்?" என்று கேட்க, அது கேட்டுக் கைகேசி கிலேசமில்லாத மனத்துடனே, "தானவர்களை ஜயித்த உங்கள் பிதா தேவர்கள் நமஸ்காரஞ்செய்யத் தேவலோகம் போய்ச் சேர்ந்தார். நீ அங்கலாய்க்க வேண்டா," என்று சொன்னுள். பரதர் அந்த வார்த்தையைக் கேட்டு, இடியினுல் முறிந்து விழுந்த மரம் போலப் பூமியில் விழுந்து, சுவாசமில்லாமல் மூர்ச்சை போய், வாய் குழறி, கண்களிலே நீர் பொழியத் தாயைப் பார்த்து, "ஆ! நெருப்புச்சுவாலையைக் காதில் வைத்தது போல இந்த வார்த்தை சொன்னுயே! நீ அல்லாமல் பின்னெருவர் இப்படிச் சொல்லுகிறதற்கு மனத்திலும் நினைக்கமாட்டாரே!" என்று சொல்லி ஏங்கி மறுபடியும் பூமியில் விழுந்து, பெருமூச்சு விட்டு, மனமருண்டு, ஸ்திரீகள் போலப் புலம்பத் தொடங்கினுர் :

"ஐயா, தருமத்தை வேரறுத்து, அருளைக் கொன்று, பாக்கிய லட்சுமியினுடைய அழகை அழித்து, இறந்துபோய் விட்டீரோ ! இப்படி இறந்து போனுல் நீதி தப்பிப் போகாதா ! பகையாளிகளை ஜயித்து ரிஷீஸ்வரர்கள் பிராமணர்கள் முதலான பேர்களை ஆதரணை செய்துகொண்டு உங்கள் பெரியவர்களைப் போல ராஜ்யபாரஞ் செய்து வந்த நீர், எங்கே போய்விட்டீர்? உங்கள் பெரியவர்களுடைய கீர்த்தியைப் பார்க்கிலும் அதிசயமான கீர்த்தி உண்டாகத் திரிநேத்திர தரரான சிவனுருடைய வில்லை ஒடித்த உம் குமாரரை விட்டு எப்படிப் பிரிந்து போனீர்? இவ்விடத்திலே ராஜாக்களும்

வித்துவான்களும் மிகவும் சிநேகமாயிருந்த உமக்கு அவ்விடத்திலேயும் சிநேகிதர்களுண்டோ? தேவலோகம் ஆள வேண்டும் என்று ஆசை கொண்டு போனீரோ? ராஜாதி ராஜரே, முன்போலவே தேவர்கள் வந்து தங்கள் குறைகளைச் சொல்லி அழைத்துக்கொண்டு போனார்களோ? சம்பராசுரனைப்போல அசுரர்கள் இன்னம் தேவலோகததில் இருக்கிறார்களோ? அவர்கள் மேலே யுத்தத்திற்குப் போனீரோ? ஐயா, தவம் செய்து பெற்ற பிள்ளைக்குப் பட்டாபிஷேகம் செய்து கண்குளிரப் பார்க்கிறதற்கு உமக்கு வாய்ப்புக் கிடையாமற்போயிற்றல்லவா!'' என்று இப்படிச் சொல்லிச் சொல்லி, மிகவும் மனமுருகி, கண்ணிலே ஊற்றாய் ஜலம் வர அழுதார்.

அப்படி அழுகிற பரதரைக் கைகேசி தேற்ற, ஒருவாறு தேறினவராயெழுந்திருந்து, "இனி எனக்குத் தாயும் தகப்பனும் நாயகனும் தமையனும் ஸ்ரீராமரே. ஆகையால், அவருடைய பாதாரவிந்தத்திலே விழுந்து சேவித்தாலல்லது என் துயரம் தீராது!'' என்று நடக்க, கைகேசி, "அப்பா, அவன் தன் மனைவியுடனும் தம்பியுடனும் ஆரணியத்துக்குப் போனான்,'' என்று சொல்லினள். பரதர் அவ்வார்த்தை செவியில் விழவே, நெருப்பை விழுங்கினவர்போலத் துடித்து " இன்னம் யாது கேட்க இருக்கிறேனோ! இதைப்பார்க்கிலும் என்ன துன்பந்தான் இருக்கப்போகிறது!'' என்று சோர்ந்து, ஏங்கி விம்மிக்கொண்டு, "அவர் ஆரணியத்துக்குப் போனது ஏன்? அது தெய்விகமாய் நடந்ததா, விதியினால் வந்ததா? ஸ்ரீராமர் பொல்லாத காரியம் செய்கிறவரல்லரே! தகப்பனார் மடிந்து போன பிறகு ஆரணியத்துக்குப் போனாரோ, பிராணனுடனிருக்கும் போதே போனாரோ? சொல்லம்மா!'' என்று பரதர் கேட்க, "அப்படி யாதொன்றினாலும் போகவில்லை. ராஜா சுகமாயிருக்கும் போதேதான் ஆரணியத்துக்குப் போனான்,'' என்று கைகேசி சொன்னாள். அதற்குப் பரதர் " குற்றமில்லாமலும், கோபத்தினால் ஒருவரொன்று சொல்லா

மலும், தெய்வத்தினுலொன்று நேரிடாமலும், பெற்ற தகப்பனுர் இருக்கும் போதே அவர் ஆரணியத்துக்குப் போகக் காரணமென்ன?'' என்று கேட்கக் கைகேசி சொல்லுகிருள் :

"அப்பா, பூர்வத்திலே எனக்கு இரண்டு வரம் கொடுப்பதாக ராஜா சொல்லியிருந்தார். அவற்றுளொன்ருல் உனக்குப் பட்டாபிஷேகம் செய்யவும், மற்ருென்ருல் அவர் மகன் ஆரணியத்துக்குப் போகவும் வேண்டிப் பெற்றுக்கொண்டேன். அது சகிக்காமல் அரசர் பிராணனை விட்டார்,'' என்று சொல்லினள்.

அப்போது பரதர் கும்பிட்டபடி தலைமேலே வைத்திருந்த கரங்களாலே காதுகளை மூடிக்கொண்டு, புருவங்கள் துடிக்க, மயிர்த்துவாரந்தோறும் நெருப்புப்பொறியும் புகையும் பிறக்க, அதரங்களை மடித்துக் கடித்துக்கொண்டு, இரண்டு கரங்களினுலும் இடி விழுந்தது போலப் பூமியை அடித்து, மிகுந்த கோபாவேசத்துடனே அக்கினி போலக் கொதித்து, தாய் பொல்லாதவளென்றெண்ணினுல் தமையனுர் கோபம்கொள்வாரென்று பயந்து நின்று, "உன்னுடைய வாய் மொழியினுலே ராஜாவும் மாண்டு, தமையனுரும் ஆரணியத்துக்குப் போயிருக்க, அதைக் கேட்டு உன் வாயைக் கிழிக்காமல் எப்போது சும்மா இருந்தேனே, அப்போது அது சுயராஜ்யத்தை ஆசையுடனுண்டதற்குச் சமானம்! நீயும் இன்னம் சுகமாயிருக்கிருய்! நானும் எதிரே நிற்கிறேன்! ஒரு கணத்திலுன்னைக் கொன்று போடுவேன்! ஏன் கொல்லவில்லையெனில், என் தமையனுர் கோபிப்பாரென்று பயந்திருக்கிறேனல்லாமல், தாயென்றல்ல. ஆ! கொடும்பாவி! 'வஞ்சகியான தாய் வார்த்தையைக் கேட்டு மகா கீர்த்தியுடனே வருகிற சூரிய குலத்தினுடைய சன்மார்க்கத்தைப் பரதன் கெடுத்துவிட்டான்!' என்கிற பழியைச் சம்பாதித்துக் கொண்ட எனக்கு வேறென்ன வேண்டும்? 'சத்தியத்துக்கு மாண்டு போகிறதற்கு ஒரு ராஜா இருக்க, அவர் பேச்சைத் தள்ளலாகாதென்று ஒரு சவுரியவந்தர் ஆரணியத்துக்குப்

போனவ்ருமிருக்க, ராஜ்யமாளுகிறதற்குப் பரதனும் இருக்கிருன்!' என்ற விசேஷம் ராஜ்யத்திலுண்டானுல், அதைப் பார்க்கிலும் அதரும வழி வேறென்ன இருக்கின்றது! உன்னே மகத்தான பாக்கியத்துடனே வீட்டிலே வைத்திருந்த ராஜாவை வேரறுத்து இந்த வரம் வாங்கின நீ, இன்னமென்ன செய்வாயோ தெரியாது! கொஞ்சமாகிலும் உன் மனத்திலே கிலேசத்தைக் காணவில்லேயே! உன் புருஷரது பிராணனேத் தின்றுவிட்டாயே! பாவி! நீ பேயுமல்லே. நீ இன்னும் ஜீவனுடன் இருக்கின்ருயே! சாகலாகாதா! ஒரு நாளும் விலகாத பழியைக் கொடுத்தாயே! புருஷரை வாயினுலே ஜீவனுடனே தின்றுவிட்டு, தீராத பழியைச் சம்பாதித்துக்கொண்டு, பாக்கியத்துடன் வாழ்கிறதற்கு ஆசைப் பட்டாயே! இந்தப் பிரபஞ்சத்து மக்களெல்லாம் தாயை இழந்த கன்று போலத் தடுமாறி அழுகிறதைப் பார்த்தும், இன்னம் நீ பிராணனுடனிருக்கிருயே! தகப்பஞர் இறந்து போவாரென்கிறதையுமெண்ணுமல், 'இப்படி இராச்சியத்தைப் பறித்துக்கொள்ளுகிற உபாயத்துக்குப் பரதன் கூட உடந்தைதான்; அவன் அரசை ஆளுவான்!' என்று எண்ணி அல்லவா இந்த ராஜரீகத்துக்குக் கர்த்தரானவர் திரும்பாமல் போய்விட்டார்? மகத்தான சாஸ்திரங்களே ஓதிக் கற்றும், சாத்துவிகக்குணம் பிரசன்னமாயிருந்தும், மகா உத்தமராயிருந்தும் என் தமையஞர் மனத்தில் இப்படி நினேத்தால் அது எனக்குப் போதாதா? என் தாய் எனக்குச் சம்பாதித்துக் கொடுத்ததை என்னவென்று சொல்லப் போகிறேன்! என்னுடன் பிறந்த தமையஞரை இலேயும் காயும் புசிக்கும்படி ஆரணியத்துக்கனுப்பி, நல்ல திவ்வியான்னங்களே அமுதத்துக்குச் சமானமாய்ச் சாப்பிட்டுக்கொண்டிருக்க நானிங்கு நின்றிருந்தால், என்னேப் பெரியோர்கள் என்ன நினேப்பார்கள்?

"விஷம்போலிருக்கிற இந்த மகா பாவியைக் கொல்லாமல், நானும் சாகாமல், மிகுந்த பழியைச் சம்பாதித்துக்

கொண்டு, அன்புள்ளவன் போல அழுகிறேன்! இராச்சியத்து ஜனங்களுக்கு இக்காரியம் சம்மதமாய் இராது. நானே, பிராணனை வைத்துக்கொண்டு இந்தப் பழி பூண்டுகொள்ள மாட்டேன். இது மாத்திரமா? இப்பட்டணத்திலேயும் இலட்சுமி இராள். இப்படியிருக்க, நீ யாரோடு யோசனை செய்து இந்த விதமாக வரம் வாங்கி வேரோடே குடிகெட்டுப் போகும்படி உபாயம் பண்ணினாய்? என் தகப்பனாரைக் கொன்றவன் யார்? நான்தான்! அது மாத்திரமா! இராச்சியத்துக்கு அதிபதியானவரைக் காட்டிலே துரத்திவிட்டு இராச்சியம் ஆளுகிறதற்கும் சம்மதித்திருந்தேன்! உன்னால் தப்பென்ன? பழிதானென்ன இருக்கின்றது? இப்பழியை என்றைக்காகிலும் தீர்த்துக்கொள்ளுதற்கு இடம் உண்டா? வீண் பழி பூண்டுகொண்டேன்! உண்ணாமல் விஷம் கொல்லாதென்கிறதை நினைத்தல்லவோ இன்னம் சீவனுடனிருக்கின்றேன்? பாவியான உன் கும்பி வயிற்றிலிருந்து வந்து தீராத பாதகத்தைச் சம்பாதித்துக்கொண்டேன்! தரும சாட்சியாய், மூன்று லோகமும் அறிய, நானே தவஞ்செய்யப்போகிறேன்! இப்போது நீ பிராணனை விட்டுவிடுவாயாகில், உலகத்துக்கு நல்லவளாயிருப்பாய்! இது தவிர, உனக்கு வேறு கதியில்லை,'' என்று பலவாறு சொல்லி, ''இந்தப் பாவியின் முகத்திலே விழித்துக்கொண்டு எதிரே இருக்க மாட்டேன்!'' என்று திரும்பினார். ''இந்தத் துயரம் தீரக் கௌசலை அன்னையினிடத்திற்குப் போய்ச் சேவிக்க வேண்டும்,'' என்று எழுந்திருந்து, கௌசலையின் சமீபத்தில் போய் விழுந்து, அவளுடைய பாதாரவிந்தத்தைத் தம் கரத்தினால் பிடித்துப் புலம்பிக்கொண்டு, ''அம்மா, எங்கள் தகப்பனார் எங்கே இருக்கிறார்? என் தமையனார் எங்கே? நான் ஓடி வந்தது இந்தத் துயரங்களைப் பார்க்கிறதற்காகவா? என் சஞ்சலத்தைத் தீரும்!'' என்று தேவர்களும் அழுது சோரத் துயரத்துடன் அழுதுகொண்டு, ''அவருடைய பாதத்தைக் காணேன்! அவர் ராஜ்யத்தை விட்டுப் போகிறவரா? போகாமல் பிடித்து

வைத்துக்கொண்டிருந்தீர்களா? என்ன குற்றம் செய்தீர்கள்!'' என்று உடம்பில் புழுதியடையப் பூமியில் புரண்டு, சிந்தாக்கிரந்தராய், “இந்தப் பாவி வயிற்றில் பிறந்த நான் என்ன செய்யப்போகிறேன்! என் துயரம் தீர என் பிராணனை விட்டு விடுகிறேன்! சூரியனைப்போல் கீர்த்தி வாய்ந்து வருகிற சூரிய குலத்தில் ஒரு பரதன் தோன்றிப் பழி உண்டாயிற்றல்லவா? இராச்சியபாரஞ் செய்கிற அரசர் தெய்வலோகம் போக, அவருடைய திருமகனார் காட்டுக்குப்போக, கண்ணிழந்து உழலுகிற ஜீவனைப்போல இந்த இராச்சியத்திலே நான் துக்கத்துடன் இருக்கவேண்டுமா?'' என்று புலம்புகிற பரதருடைய துக்கத்தையும் அன்பையும் கௌசலை கண்டு, “அப்பா, குழந்தாய், கேகய ராஜாவின் குமாரத்தி செய்த காரியத்தை நீ அறியாயா?'' என்று கேட்க, பரதர், அதிக துக்கத்துடனே, “அம்மா, இந்தச் சமாசாரம் நான் சிறிதும் அறியேன். அறிந்து நடந்திருப்பேனாகில், தருமம் தப்பி நடந்தவன், கிருபையில்லாத மனத்தையுடையவன், ஒரு ஸ்திரீயை அபகரித்தவன், சகலரையுஞ் சீறி வைகிறவன், துறந்த பெரியோர்களுக்குத் துக்கமுண்டாக்குகிறவன், ஸ்திரீ ஹத்தி செய்தவன், ராஜத் துரோகம் செய்தவன், எதிரிக்கு முதுகு காட்டி ஓடினவன், ஸ்மிருதி முதலிய சாத்துவிக நூல்கள் நிச்சயித்திருக்கிற ஸ்ரீமந்நாராயணனைப் பரத்துவம் அல்லவென்று சொன்னவன், பிரமரிஷிகளுக்கு அபசாரம் செய்தவன், வேதங்களைத் தூஷித்தவன், தாய் பசித்திருக்கத் தன் பாழ் வயிற்றை நிரப்பிக்கொண்டவன், எஜமானன் இரணக்களத்திலே விழுந்துபோகத் தான் பிழைத்து வந்தவன், அடைக்கலமென்று வந்தவர்கட்கு ஓர் உபத்திரவம் வர அதற்கு அவர்களைக் காட்டிக் கொடுத்துத் தூர நிற்கிறவன், கள் குடியன், பொய்ச் சாட்சி சொன்னவன், அடைக்கலப் பொருளை அபகரித்தவன், இளைத்த வேளையிலே உபத்திரவம் செய்தவன், அக்கிரகாரங்களை அழித்தவன், பிள்ளைகளைக் கொன்றவன், ஓரவழக்குச் சொன்னவன், தேவர்களை இகழ்ச்சி பண்ணின

வன், கன்றுக்குப் பால் விடாமல் கறந்தவன், ஒருவருடைமையை அபகரித்தவன், செய்த நன்றி மறந்தவன், வழியிலே வந்த ஸ்திரீகளைக் கள்ளர் வந்து வழிமறிக்கத் தன் பிராணனைத் தப்பவைத்துக்கொண்டு ஓடினவன், பசியுடன் பதைத்துக் கொண்டிருக்கிறவர்களைப் பார்த்துத் தான் சாப்பிட்டவன், பகைவர்களுடனே போர் செய்யப் பயந்து அவர்களை வசப்படுத்திக்கொண்டு வஞ்சனை செய்து கொன்று அவர்கள் திரவியத்தை அபகரித்துக்கொண்டவன் இவர்கள் விழுகிற நரகத்திலே விழக்கடவேன்! நல்ல வமிசத்திலே பிறந்து அக்கிரமமான காரியங்களைச் செய்து தருமத்தை மறந்து பூமி சம்பாதிக்கிறவன், கன்னிகையைக் கற்பழித்தவன், குரு பத்தினியை இச்சித்தவன், கள்ளன் ஒரு தேசத்தில் வந்து சேர அவனுக்கு அஞ்சி ஓடிப்போன குடிகளுடைய பொருளைக் கைக்கொண்டவன், குற்றமில்லாத குலங்களுக்குக் குற்றமுண்டாக்குகிறவன், ஏழைகளுடைய ஆகாரத்தைக் கெடுத்தவன், புதுமையான பொருள்களைக் கிட்ட இருக்கிறவர்களுடைய நாவில் நீர் ஊறும்படி சாப்பிட்டவன், சாப்பிடுகிறதற்கு யோக்கியமல்லாத வஸ்துக்களை நாய் போலத் தின்கிறவன், நாணமில்லாதவன், நரகமுண்டென்று சொன்னால் அது கேளாதவன், பிறருடைய பழிகளைச் சொல்லிக்கொண்டே திரிகிறவன், தன்னை ஒரு பொருள் கேட்பவர்களுக்கு உண்டு இல்லையென்று சொல்லாமல் பல நாள் அலையச் செய்தவன் இவர்கள் விழும் நரகத்திலே விழக்கடவேன்!'' என்று சொல்ல, கௌசலை ஆரணியத்துக்குப் போன மைந்தர் மீண்டு வந்தது போல உருக்கத்துடனே அவரைக் கட்டிக்கொண்டு அழுது, அரசரது செய்தியும் தாய் செய்த காரியமும் தெரியச் சொல்லி, "அப்பா, உன் குலத்திலே முன் பிறந்தவருள் உனக்குச் சமானமானவர் யாரிருக்கிறார்? மகனே, உங்கள் தகப்பனார் இறந்து ஏழு நாட்களாயின! பிள்ளை செய்யவேண்டிய கடமை யாதோ அதை நீ செய்,'' என்று சொன்னாள். பரதர் அதைக்கேட்டு அழுதுகொண்டிருக்க, வசிஷ்ட மாமுனி

வர் அவ்விடத்துக்கு வந்தார். பரதர் அவரைச் சேவித்து, “சுவாமி, நீங்கள் கட்டளையிட வேண்டும்,” என்று அழுதார். அப்போது வசிஷ்டர் பரதரை மார்பில் அணைத்துக்கொண்டு, தாமும் அங்கலாய்த்து, “நடக்க வேண்டிய காரியம் நடந்தது! இனி அங்கலாய்த்து ஆகவேண்டுவதென்ன?” என்று தேறுதல் சொன்னார்.

அப்போது பரதர் தாய் சொன்ன வார்த்தைப்படி வசிஷ்ட மாமுனிவருடனே போய், தகப்பனாருடைய சரீரத்தைக் கண்டார்; உடனே பூமியில் விழுந்து அலறிக் கட்டிக்கொண்டு அழுதார். அப்போது வேதவேதியர்கள், மந்திரிகள், பிரதானிகள் முதலிய யாவரும் வந்து கண்டு, பரதர் தம் கரங்களினாலே தழுவிக்கொண்டிருக்கிற ராஜாவினுடைய சரீரத்தை வாங்கி, நடக்க வேண்டிய காரியங்களெல்லாம் செய்து, மேளவாத்தியங்கள் முழங்கப் பொன் விமானத்திலேற்றி, சுமந்திரர் முதலான சகலரும் புடைசூழ, பட்டணத்து ஜனங்களெல்லாம் தலையிலே கையை வைத்துக்கொண்டு அழுது இரைந்துகொண்டு சூழ்ந்து வர, தேர், குதிரை, யானை, முதலியவை முன்னே நடக்க, அறுபதினாயிரம் ஸ்திரீகளும் கூட வர, சரயு நதிக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அவ்விடத்திலே நடக்க வேண்டிய காரியங்களைச் சாத்திரப்படி பிராமணர்கள் செய்து முடித்து, பரதரைப்பார்த்து, “தகப்பனாருக்குச் செய்ய வேண்டிய காரியம் செய்யும்,” என்று சொன்னார்கள். அது கேட்ட பரதர் எழுந்திருக்க, வசிஷ்டர், “அப்பா, பரதா, உன் தாய் செய்த பொல்லாங்கினாலே உன்னைப் பிள்ளையல்லவென்றும், நீ பிறந்து தங்கள் குலதருமம் தப்பிப்போயிற்றென்றும், அதனால் முன்னமே உன்னைத் துறந்ததாகவும் அரசர் சொன்னார்,” என்று சொல்லினர். அவ்வார்த்தையைப் பரதாழ்வார் கேட்டுப் பெருமூச்சு விட்டு, “நன்றாயிருந்தது! நன்றாயிருந்தது!” என்று நகைத்து இடி விழுந்த பாம்பு பதைப்பது போலப் பதைத்து, “ஐயோ! சூரியகுலத்து ராஜாக்களில் என்னைப்போல யாரிருக்கிறார்?

பெற்ற தகப்பனுக்குப் பிரேத பூசை செய்வதற்குக்கூடயோக்கியமில்லாமற்போன நான், ராஜரீகஞ் செய்வதற்கு மாத்திரம் முதற்பட்சமானேன்! மனு மாந்தாதா முதலாக இவ்வமிசத்திற் பிறந்தவர்களெல்லாம் தருமநீதியுடன் நடந்து தேவர்களானுர்கள். அந்த வமிசத்தில் நான் பிள்ளையாய்ப் பிறந்து தென்னங்குலையிலே தோன்றின ஊமைத்தேங்காய் போலானேன்! என்னைப் பெற்று வளர்த்த தாய் எனக்குச் செய்து வைத்தது நன்ருயிருந்தது!'' என்று சொல்லி, துக்கசாகரத்தில் மூழ்கியிருந்தார்.

அப்போது வசிஷ்டர் சத்துருக்கருடைய கரங்களினுலே செய்ய வேண்டிய கிரியைகளெல்லாம் செய்வித்தார். அறுபதினுயிரம் ஸ்திரீகளும் ஆபரணங்களோடும் வஸ்திரங்களோடும் அக்கினியிலே மூழ்கினுர்கள். வசிஷ்ட மாமுனிவர் முதலிய யாவரும் அவ்விடத்திற் செய்யவேண்டிய காரியங்களெல்லாம் செய்து முடித்து, அரண்மனைக்கு வந்து சேர்ந்தனர். இப்படிப் பத்து நாளும் ஊழிக்காலமாகத் துக்கத்தோடேயிருந்து, பத்தாவது நாள் செய்ய வேண்டிய காரியங்களும் செய்து முடித்தார்கள். பின்னர்ச் சுமந்திரர் முதலான மந்திரிகளும் சிற்றரசர்களும் பரதரிடத்தில் வந்து சூழ்ந்திருந்தார்கள்.

## 10. ஆறு செல் படலம்

சுமந்திரர் பரதருடைய மனத்தை அறிந்து, வசிஷ்ட மாமுனிவர் முகத்தைப் பார்த்தார். அக்குறிப்பை வசிஷ்டர் தெரிந்து, பரதரைப் பார்த்து, "பரதா, நீதியையும் தருமத்தையும் நிலை நிறுத்த நீ பட்டாபிஷேகம் செய்துகொள். அது இகபரமிரண்டையும் கொடுக்கும். நீ எல்லாம் தெரிந்தவன். அரசனில்லாமலிருக்கும் நாடு, சூரியனில்லாத பகல் போலவும், சந்திரனில்லாத இரவு போலவும், ஜீவனில்லாத சரீரம் போலவும் இருக்கின்றது. தேவலோகத்திலும் அசுரலோகத்

லும் மற்ற எவ்விடங்களிலும் அரசனில்லாமல் யாதொரு காரியமும் நடவாது. உன் பிதா இறந்து போனர். தமையனும் இராச்சியத்தைத் துறந்துவிட்டான். தாய் பெற்ற வரத்தினலே இராச்சியம் உனக்கு உரியதாயிருக்கின்றது,'' என்று சொல்லினர்.

அதைக்கேட்ட பரதர் விஷத்தைச் சாப்பிடச் சொன்னல் எப்படி நடுங்குவார்களோ அதிலும் அதிகமாய் நடுநடுங்கி, அயர்ந்து, கண்களிலே நீரொழுக, நாக்குழறி, ஸ்திரீகள் போல அழுது, உயிர் போகிற சரீரம் போலச் சோர்ந்து, அறிவானது கைகொடுக்க ஒருவாறு தெளிந்து, தம் மனத்திலே இருக்கிறதை அந்த ராஜசபைக்குத் தெரியும்படி சொல்லுகிருர்:

"மூன்று உலகத்திற்கும் நாயகராயும், எனக்கு முன் பிறந்தவராயுமுள்ள ஸ்ரீராமரிருக்க, என்னை முடிசூட்டிக்கொள்ளும்படி, பெரியோர்களாயிருக்கிற நீங்களே சொன்னல், என்னை ஈன்றவள்மேல் குற்றமில்லையே! என் தாய் பேச்சையே நிலை நிறுத்திச் சகலமும் அறிந்த நீங்கள் இது நல்ல காரியமென்று சொல்லுவதற்கு உரியகாலத்திற்கு இன்னம் இடையில் இரண்டு யுகங்கள் இருக்கின்றனவே! கலிகாலமா இது? சகலரும் கேளுங்கள்: முன் பிறந்தவன் இருக்க இளையவன் ராஜ்யபாரம் செய்கிறதில்லை. என் தமையனர் போயிருக்கிற இடத்துக்கு நான் போய் அவரை அழைத்துக் கொண்டு வந்து, அவருக்குப் பட்டாபிஷேகம் செய்து வைக்கிறேன். அதையும் நீங்களே பார்க்கப் போகிறீர்கள்! ஒருவேளை என் தமையனர் வர மறுத்தால், நானும் அவருடனிருந்து தவம் செய்வேன்! அதற்கும் அவர் சம்மதியாவிட்டால், என் பிராணனைப் போக்கிக்கொள்வேன்! இது யாவர் மனத்திலும் கெட்டியாயிருக்கட்டும்!'' என்று சொல்ல, அதைக் கேட்ட அந்தச் சபையிலிருந்தவர்களெல்லாம் சந்தோஷித்து, "ஐயா, அரசரோ, இறந்தார். தமையனர் கொடுத்துப்போன ராஜ்யமிருக்கிறது. நீர் பட்டாபிஷேகஞ்

செய்துகொள்ளாமல், இப்படி மறுத்துச் சொன்னால், உம்மை விட அரசேற்கயாரிருக்கிறார்? நீர் ராஜ்ய பரிபாலனஞ்செய்து கீர்த்தி சம்பாதிக்க வேண்டாவா?'' என, பரதாழ்வார், தம் தம்பியாரை அழைத்து, "அப்பா, இந்தப் பட்டணத்து அரசரை அழைத்து வருவதற்குப் பட்டணத்தில் இருக்கிற யாவரும் புறப்படப்பேரிகை அடிக்கச் சொல்லித் திட்டஞ்செய்,'' என்றார். அந்த உத்தரவின்படி வள்ளுவன் பேரிகை முழக்கினான். ஜீவன் போய்விட்ட சரீரம் போலிருந்த அந்நகர மக்கள் இதைக் கேள்விப்பட, அமிர்தம் காதில் விழுந்து பிழைத்தவர்கள் போலச் சந்தோஷத்துடன் புறப்பட்டார்கள். யானை குதிரை இரதம் முதலியவை பூமியெங்கும் நிறைந்தன. சகலரும் ஸ்ரீராமரைப் பார்க்கலாமென்கிற ஆசையினால் இரைந்துகொண்டு புறப்பாட்டார்கள். அன்றைய தினம் புறப்பட்ட சேனை சமுத்திரத்தைத் தாங்கிக்கொண்டிருந்த பூமி தேவியை மெல்லியலென்று சொல்லுவது தெரியாத்தனமென்றே சொல்ல வேண்டும்!

யாவரும் அயோத்தியாபுரிப் பட்டணத்தை விட்டுப் புறப்பட்டபடியால், அது அகத்தியர் சமுத்திரத்தைச் சாப்பிட்ட போது எப்படியிருந்ததோ, அப்படியிருந்தது. இப்படிச் சேனை சமுத்திரம் நடக்கப் பரதர் மரவுரியும் சடை முடியும் தரித்துக்கொண்டு தம்பியாருடனே மிகுந்த துன்பத்தோடு தேர் ஏறிச் சென்றார். அப்போது தாய்மாரும், ரிஷிகளும், மந்திரிகளும், பந்து ஜனங்களும், பிராமணோத்தமரும் தொடர்ந்துவரக் கோட்டை வாயிலிலே வந்தார். அப்போது மந்தரையென்கிற கூனியும் வழி நடக்கிறவர்களுடனே கூடி நடந்தாள். அவளைச் சத்துருக்கர் கண்டு மிகுந்த கோபத்தோடே அவளைப் பிடித்துத் தூக்கி அறைந்து போட வேண்டுமென்று முயன்றார். அது கண்ட பரதர், "அப்பா, தம்பி, இந்தப் பாவி பேச்சைக் கேட்டுத்தான் இப்படிப்பட்ட காரியங்கள் சம்பவித்தன! இப்பாவியை நான் சின்னபின்னமாய் வெட்டிக் கோபந் தீரேனோ? தமையனார் கோபித்துக்கொண்டு

நம்மைத் துறந்துவிடுவாரேயென்று பயந்து கொல்லாமலிருந் தேனே அல்லாமல் வேறன்று. இவள் வார்த்தையைக் கேட்டுக் கெட்ட என் தாயைத்தான் தாயென்று ஏதாயினும் பார்த்திருப்பேனு? இக்கூனியின்மேல் கோபித்துக்கொள்வ தும் அவர் மனத்துக்குச் சம்மதப்படாது,'' என்று விலக்கி நடந்தார்.

சேனு சமுத்திரத்தோடே ஸ்ரீராமர் முன்னுல் இறங்கின சோலையில் அனைவரும் அன்றையதினம் இறங்கினர். ஸ்ரீராமர் இறங்கியிருந்த இடங்களெல்லாம் பரதாழ்வார் பார்த்து, கண் களில் நீர் அருவி போல ஒழுக, காய் கனி கிழங்குகளைக் கூடச் சாப்பிடாமல், ஸ்ரீராமர் படுத்திருந்த புல் மெத்தையி னருகில் கீழே புழுதியில் தாமும் படுத்திருந்து, அவ்விடத்தி லிருந்து புறப்பட்டு, ஸ்ரீராமர் கால் நடையாய் நடந்துபோனு ரென்பது தெரிந்து, அவர் நடந்த வழியே இரதகஜ துரக பதாதிகளுடனே தாமும் கால் நடையாய் நடந்து போனுர்.

## 11. குகப் படலம்

பரதாழ்வார் நாடுகளையெல்லாம் கடந்து, கங்காநதி தீரத் தில் வந்து சேர்ந்தார். அக்கங்கையிலே எண்ணிறந்த யானைக ளிறங்கினதில் அவைகளுடைய மதங்கள் மிதமில்லாமல் ஒழுகியபடியால், அந்நீர் பானத்திற்கும் போக்கியப்படாமல் இருந்தது. அனேகம் குதிரைகள் தண்ணீர் குடித்தும், நீந்தி யும், நின்றும், மணலிலே புரண்டும் களித்தன. சமுத்திரா காரமான அக்கங்கை, இச்சேனு சமுத்திராகாரமாய் இருந் தது. அன்றைய தினம் பரதர் பிறகே வந்த சேனு சமுத்திரம் அறுபதினுயிரம் அக்குரோணி.

அது அக்கங்கா நதி தீரத்தில் வரவே, அங்கேயிருந்த குகன் ஸ்ரீராமர்மேலே யாரோ படையெடுத்து வந்தார் என் றெண்ணி, அச்சேனு சமுத்திரத்தைப் பார்த்துக் கோபத் தோடே நகைத்து, கண்களில் நெருப்புப் பொறி பறக்க,

புருவங்கள் வளைந்து நிமிர, கூற்றுவனைப்போலக் கொக்கரித்துக்கொண்டு, தன் சேனு சமுத்திரத்தைக் கூட்டி, கையிலே வில்லேந்தி, அரையிலே சுரிகை கட்டி, பற்களை நறநற வென்று கடித்துக்கொண்டு, துடிகள் முழங்க, கொம்புகள் ஊத, "இச்சேனு சமுத்திரமெல்லாம் எலிகள்! நானொரு பாம்பு!" என்று சொல்லிக்கொண்டு தன்னுடைய சேனைகளெல்லாம் புலிகள் போலச் சூழ்ந்து நிற்க, அக்கங்காநதியின் தென்கரையில் இருந்து அட்டகாசஞ்செய்து, தன் சேனையைப் பார்த்து, "வீரர்களே, இதோ வருகிற இச்சேனையைச் சங்கரித்து என் தமையனுரான ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகம் செய்து வைக்க இருக்கின்றேன்! நீங்களும் சித்தமாய் இருங்கள். ஒருவரும் ஓடங்கள் விடவேண்டா. கரையோரமாய் வருபவர்களைப் பிடித்தடியுங்கள்! நீலமேகரூபரான என் நாயகர் ஆளுவதற்கு இல்லாமல், வஞ்சனையினுலே அரசைச் சம்பாதித்த இராசாவும் வந்தானல்லவா? என் பாணம் இராசாக்கள் மேல் தைக்கமாட்டாவா? இவர்களைப் பிராணனுடனே விட்டேனுல், என்னை நாயென்று சொல்லார்களா? எவ்விதத்தில் இவர்கள் ஆறு தாண்டிப் போகப்போகின்ருர்கள்? யானையும் சேனையும் கண்டு நான் பயப்படுகிறவனு? என்னைத் தோழனென்று அவர் சொன்னது ஒரு சொல்லல்லவா? 'ஏழை வேடன் பிராணனை விடலாகாதா?' என்று உலகத்தாரென்னை ஏசார்களா? தமையனென்றும் பாராமல் இப்படி யுத்தத்திற்குப் புறப்பட்டவன், நடுவே அவருடைய தம்பியாகிய நானிருக்கின்றேனென்பதைக் கேட்டிரானு? இவன் சாமர்த்தியமெல்லாம் இவ்வெல்லையைக் கடந்து போயல்லவா காட்ட வேண்டும்? பாவமும் பழியும் பகையும் குற்றமும் இராசாக்கள் எண்ணிப் பார்க்கிறதில்லையா? என் தோழர் மேலே இவன் யுத்தத்துக்குப் போவது என் சேனையும் நானும் மாண்ட பிறகல்லவா? என் தமையனுர் ஆரணியம் போய்த் தவஞ்செய்ய, இவன் இராச்சியமாளுகின்றதா? என் சீவன் எனக்கு மருந்தா? கீர்த்தி சம்பாதித்துப் பிராணனை விடு

கிறேன்! அவர் பிறகே நான் போகாமல் இருந்தது நல்ல தாயிற்று! என்னுடைய கடனை இன்றைக்குக் கழிக்கிறேன்! இந்த யானையும் குதிரையும் இராசாக்களும் இக்கங்கையைத் தாண்டியல்லவோ போக வேண்டும்? அவர்களுடனே தேவர் கள் கூடி வந்தாலும், அஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்து, சேனைகளையெல்லாம் துண்டம் துண்டமாய் அறுத்து, என் சினேகிதருக்கு மரவுரி கொடுத்தவள் மகனை என் பாணத் தினாலே கொன்று போட்டு, அப்பிரேதங்களாலே கங்கை யைத் தூர்த்துப்போடேனா? ஒருவேடன் இராச்சியம் வாங்கிக் கொடுத்தானென்ற கீர்த்தி சம்பாதித்து, இப்பரதனுக்கு மேலுலகைக் கொடுக்கிறேன்! ஆரணியத்துக்குப் போன என் தமையனார் கோபஞ்செய்வாரென்று பார்த்தேன்! அது பாராமல் அடித்தேனானால், இச்சேனை பஞ்சுபஞ்சாயல்லவா பறந்து போகும்!'' என்று பல பல விதமாய்ச் சொல்லி, இரும்பு போன்ற சரீரங்களையுடைய வீரருடனே வில்லைப் பிடித்துக்கொண்டு நின்றான்.

அது கண்ட சுமந்திரர், பரதரை நோக்கி, "சுவாமி, அதோ நிற்கிறவன் இக்கங்காநதியின் இரு கரைக்கும் அதி காரி; அனேக ஓடங்களுக்கு நாயகன்; உங்கள் குலத்திற்கு நாயகமாய் அவதரித்திருக்கிற ஸ்ரீராமருக்குப் பிராண சினே கிதன்; சிங்கத்திற்குச் சமானமான பலத்தையுடையவன்; அனேக வில் வீரர் சமுத்திரம் போலச் சூழ இருக்கின்றவன்; குகனென்கிற பெயரையுடையவன்; கல்லைப் போன்ற சரீர பலத்தையுடையவன். உங்களைக் காண வேண்டுமென்கிற அபேட்சையினாலே எதிரே வந்து அக்கரையிலே நிற்கின் றான்,'' என்று சொன்னார்.

உடனே பரதர், "என் தமையனாருக்குச் சினேகிதனானால் நான் முன்னே போய்க் காண்கின்றேன்!'' என்று எழுந்து, தம்பியாருடனே விரைவாய் நடந்து கரையின் ஓரத்தில் போய் நின்றார். அப்படி நின்ற பரதாழ்வாரைக் குகன் தன் கண்களால் தரிசித்து, அவருடைய இளைத்த திருமேனியை

யும் சடையையும் மரவுரியையும் கண்களில் கலங்கும் நீரை யும் கண்டு திடுக்கிட்டு, கையிலிருக்கிற வில் நழுவி விழ விம்மி, அழுது நின்றுவிட்டான். "இவரைப் பார்த்தால் அந்த ஸ்ரீராம ரைப் பார்ப்பதுபோல இருக்கின்றது! உடன் வந்தவரோ, அவர் தம்பியாரைப்போலவேயிருக்கின்றார்! இவர் தவவேடம் தரித் திருக்கின்றார்! இவர் துன்பத்திற்கு ஒரு முடிவுமில்லை! திக்கு நோக்கித் தொழுதுகொண்டேயிருக்கின்றார். எம்பெருமானுன ஸ்ரீராமருடன் பிறந்தவர்கள், தப்பி நடப்பார்களா?" என்று சொல்லித் தன் வீரர்களையழைத்து, "இவர் என் தமையனார் கொண்ட வேடமே கொண்டுவந்திருக்கின்றார். மிகுந்த அன் புடையவர்போலக் காண்கின்றார்! அக்குறிப்பெல்லாம் நான் நன்றாய்க் கண்டறிந்து வருகிறேன். நீங்களிருக்கின்ற இடத் திலேயே ஜாக்கிரதையாய் வழிகட்டிக்கொண்டிருங்கள்," என்று திட்டம் செய்து, தானொருவனாய் ஓடத்திலேறிக் கொண்டு வந்து அவரைத் தொழுதான். பரதரும் குகனை வணங்கினார். வணங்கின பரதரைக் குகன் சாஷ்டாங்கமாகச் சேவித்தான். அப்படிச் சேவித்த குகனைப் பரதர் சந்தோஷத் தோடே மார்பிலே தழுவிக்கொண்டார். அப்படித் தழுவிக் கொண்ட பரதரைக் குகனும் தழுவிக்கொண்டு, "நீரேன் இப்போது புறப்பட்டீர்?" என்று கேட்டான். அதற்குப் பரதாழ்வார், "ராஜ்யமெல்லாம் ஒரு குடைக்கீழ் ஆளுகிற தகப்பனார் சுவர்க்க லோகம் போய்ச் சேர்ந்தார்! அவ்விராஜ் யத்தை ஆளும் யோக்கியதையுடைய என் தமையனார் இவ் விடத்திற்கு வந்துவிட்டார். அவரை அழைத்துக்கொண்டு போகவே நான் வந்தேன்," என்று சொன்னார்.

அவ்வார்த்தையைக் கேட்ட குகன் பூமியில் விழுந்து விம்மியழுது, தெளிந்து, சந்தோஷத்தோடு எழுந்திருந்து, "ஐயா, நீர் தாயார் வார்த்தையைக் கேட்டுத் தகப்பனார் கொடுத்த ராஜ்யத்தைப் பொல்லாததென்று தள்ளி உமது மனத்து இயல்பின்படி நடந்துகொள்ளுகின்றபடியினால், ஆயிரம் இராமரானாலும் உமக்குச் சமானமாவரா? உம்

முடைய கீர்த்தியை ஏழை வேடனை அடியேன் என்ன சொல்லிப் புகழப்போகிறேன் ! சூரியன் தன் கிரணத்தினலே மற்றப் பிரகாசத்தையெல்லாம் மழுங்கச்செய்து தன்னுடைய பிரகாசமே பிரகாசிக்கச் செய்கின்றது போல, நீர் உம் குலத்தாருடைய கீர்த்தியையெல்லாம் உம் கீர்த்தியாக்கிக்கொண்டீர் !'' என்று இனிய வார்த்தைகள் சொல்லி, அவருக்கு மிகுந்த அன்பு பிறக்கும்படி நடந்துகொண்டான்.

பரதர் அப்படி நடந்துகொண்ட குகனைப் பார்த்து, தெற்குத் திசையை நோக்கிக் கும்பிட்டு, "தமையனர் இங்கு வந்த போது எவ்விடத்தில் எழுந்தருளியிருந்தார்?'' என்று கேட்டனர். "அவர் இருந்தவிடம் நானே காட்டுகிறேன்,'' என்று குகன் அழைத்துக்கொண்டு போய், கல்லின்மேல் ஒரு புல் மெத்தையில் ஸ்ரீராமர் படுத்திருந்த இடத்தைக் காட்டினன். அதைப்பார்த்த பரதாழ்வார் பதைத்துப் பூமியிலே விழுந்து, துக்க சாகரத்தில் முழுகி, "சுவாமி, என்னல் உமக்கு இத்தனை துன்பமும் நேரிட்டன. நீர் கிழங்கும் காயும் தின்று, புல்லின்மேல் படுத்திருந்தீரென்று கேட்டும் நான் இன்னம் என் பிராணனை விடாமலிருக்கிறேன் !'' என்று சொல்லி அழுது, பின்னையும் குகனைப் பார்த்து, "ஐயா, அவருடன் வந்த தம்பியார் எங்கேயிருந்து பொழுது போக்கினர்?'' என்று கேட்கக் குகன், "ஸ்ரீராமரும் பிராட்டியாரும் புல் மெத்தையில் நித்திரை பண்ணிக்கொண்டிருந்தனர். தம்பியார் வில்லை ஊன்றிக்கொண்டு நின்றபடியே பெருமூச்சு விட்டுக்கொண்டு, கண்களிலே நீர் சோரப் பொழுது விடிகிற மட்டும் கண்ணிமையாமல் இவ்விடத்தில் இருந்தார்,'' என்று காட்டினன். அது கண்டு பரதாழ்வார் மனமுருகி அழுது, "அவருடைய தம்பிமாருள் நான் தீராத துன்பத்தைக் கொடுக்கிறதற்கு ஏதுவானேன். அதைத் தீர்க்கிறதற்கு இலக்குமணரிருந்தார் !'' என்று சொல்லித் துக்கித்து, அன்றிராத்திரி அப்புழுதியில் கிடந்து, விடிந்தவுடனே குகனைப் பார்த்து, "இந்தக் கங்கையைத் தாண்டி அக்கரை

போய்ச் சேரும்படி செய்தால், இந்தத் துக்க சமுத்திரத்தைக் கடந்ததுபோலாகும்,'' என்று சொல்லினர். "அப்படியே செய்கிறேன்,'' என்று குகன் தன் ஆட்களை அழைத்து ஓடங்களைக் கொண்டு வர ஆககியாபித்தான். அப்படியே அவர்களும் அனேக ஓடங்களைக் கொண்டு வந்தார்கள்.

குகன் பரதரைப்பார்த்து, "ஐயா, ஓடங்கள் வந்தன. நீங்கள் எப்படிச் சொல்லுகிறீர்களோ, அப்படி நடந்து கொள்ளுகிறேன்!'' என்று சொல்லினன்.

பரதர் சுமந்திரரைப்பார்த்து, "ஐயா, இந்தச் சேனையை யெல்லாம் ஓடங்களிலேற்றி அக்கரை சேரும்,'' என்று ஆக்கியாபித்தார். சுமந்திரர் அப்படியே செய்தார். ஸ்திரீகளேறிப்போன ஓடங்கள் ஒன்றோடொன்று தட்டுப்பட அவர்கள் பயந்து மிரண்டார்கள். ஓடம் துழாவுகிற துடுப்புகளினால் தண்ணீர் தெறித்து ஸ்திரீகளுடைய வஸ்திரங்கள் நனைந்தன. வசிஷ்டர் முதலான ரிஷிகள், ஓடத்திலேருதவர்களாதலால், தவமகிமையினாலே கேசரி மார்க்கமாகப் போய், அக்கரை சேர்ந்தார்கள். பரதர் குகனுடனே தம் தாய்மார் இருந்த ஓடத்திலேறினர். அப்போது கௌசலையைக் குகன் பார்த்து, "இந்தம்மாள் யார்?'' என்று வினவ, "ராஜாக்களெல்லாம் நிறைந்திருக்கிற ஆசாரவாயிலையுடைய மகாராஜாவினுடைய முதல் தேவியார் இவர்; மூன்று உலகத்தையும் பெற்ற அந்த ஸ்ரீராமரென்னும் புருஷோத்தமரைப் பெற்று, சகல பாக்கியமுண்டாயிருந்தும் நான் பிறந்ததனாலே அதைத் துறந்த என் தாயார்,'' என்று பரதர் சொன்னார். அது கேட்ட குகன், அந்த அம்மாளைச் சாஷ்டாங்கமாகச் சேவித்துக்கொண்டான். அவனைக் கௌசலை பார்த்து, "இவனாரப்பா?'' என்று பரதரைக் கேட்க, "அம்மா, இவர் ஸ்ரீராமருக்கிளையவர்; எனக்கும் இலட்சுமணருக்கும் சத்துருக்கனுக்கும் மூத்தவர்; குகன் என்கிற பெயரையுடையவர்,'' என்று ப்ரதர் சொல்ல, கௌசலை குகனைப் பார்த்து, "அப்பா, மகனே, நாட்டை விட்டு அவர்கள் காட்டுக்கு வந்தது நலமே

ஆயிற்றல்லவா? இந்தத் தம்பியுடனே கூடக் கலந்து நீங்கள் ஐந்து பேரும் ஒருவரைப் போலவேயிருந்து நெடுங்காலம் ராஜ்யத்தை ஆளுங்கள்,'' என்று வாழ்த்தினாள். குகன் அவளுக்கடுத்தாற்போலிருக்கிற சுமித்திரையைப் பார்த்து, "இந்தம்மாள் யார்?'' என்று கேட்க, பரதர், "இவர் பிராணன் போனாலும் பேச்சுத் தப்பலாகாதென்றிறந்து போன மகா ராஜாவின் மனைவியார். ஸ்ரீராமரோடு பிறந்தவர்களுமுண் டென்று சொல்லும்படி அவரைப் பிரியாமல் உடன் போன இலட்சுமணரைப் பெற்ற பாக்கியவதி,'' என்று சொன்னார். அது கேட்டுக் குகன் அந்த அம்மாளையும் சேவித்துக்கொண் டான். அப்பால், புருஷர் மயானம் போக, மைந்தர் துயர மென்கிற சமுத்திரத்திலே மூழ்க, ஸ்ரீராமர் ஆரணியத்துக் குப் போக, இந்த உலகமெல்லாம் தான் ஆள நினைத்துத் தன் கொடுமையைப் பூமியெல்லாம் நிறையச் செய்த கைகேசியைப் பார்த்து, "இந்தம்மாள் யார்?'' என்று குகன் கேட்க, பரதர், "இவள் மிகுந்த அபகீர்த்தியைச் சம்பாதித் துப் பழியை வளர்த்து உலகத்து ஜீவகோடிகளெல்லாம் உயிரிழந்து போகும் சரீரம் போலப் பதைக்கச் செய்த பாவி! இவள் வயிற்றிலே நெடுங்காலம் கிடந்த எனக்கும் உயிர் தேயும்படி துயரத்தைக் கொடுத்தவள்! பூலோகத்தில் கொடு மையில் இவளுக்குச் சமானமானவர் இல்லை. முகத்திலே கொஞ்சமாகிலும் விசனமென்பது இல்லாமலிருக்கிறாளே! அதனாலாகிலும் உனக்குத் தெரியவில்லையா?'' என்று சொன் னார். இப்படிச் சொல்லக் கேட்ட குகன், கைகேசியையும் தாயைப் போல எண்ணி நமஸ்காரஞ் செய்தான்.

ஓடங்கள் பெண் அன்னம் நடக்கிறது போல மிதந்து அக்கரை சேர்ந்தன. அறுபதினாயிரம் அக்குரோணிச் சேனை யும் பட்டணத்து ஜனங்களும் பால விருத்தர்களும் ஸ்திரீ களும் அக்கரை போய்ச் சேர்ந்தார்கள். தாய்மார்கள் ஓடம் விட்டிறங்கிச் சிவிகைகளில் ஏறிக்கொண்டு வர, அழுத கண் ணீருடனே பரதர் நடந்து போனார். குகனும் தனித்திருக்க

மனந்தாளாமல், பரதருடனே நடந்து போனர். அவர்கள் நெடுந்தூரம் நடந்து பாரத்துவாச மாமுனிவர் ஆச்சிரமத்துக்குச் சமீபத்தில் போனர்கள். அந்த மாமுனிவர் அனேக ரிஷீஸ்வரர்களுடனே அவர்களுக்கு எதிரே வந்தார்.

## 12. கிளை கண்டு நீங்கு படலம்

அப்படி வந்த பாரத்துவாசரைப் பரதர் தம் பிதாவாகவே எண்ணிச் சேவித்தார். சிவனுக்குச் சமானமான அந்த மகரிஷியும், மிகுந்த சந்தோஷத்தோடு ஆசிகள் கூறி, "அப்பா, உனக்கு வந்த இராச்சியத்தை அங்கீகரித்துப் பரிபாலனஞ்செய்யாமல், சடை முடியும் மரவுரியுமாய் வர வேண்டிய காரணமென்ன?" என்று கேட்டனர். பரதர் மிகுந்த கோபத்துடனே அவரை நமஸ்கரித்து, "பெரியோர்கள் எனக்குப் பொருத்தமான காரியஞ்செய்யவில்லையென்று நான் இப்படி வந்தால், தேவரீர் இப்படிக் கேட்கிறது உத்தமமா? சுவாமி, அந்த வேதநாயகரான ஸ்ரீராமருக்கு நான் இளையவனல்லவா? அப்படியிருக்க, நான் முடி சூட்டிக் கொள்ளலாமா? ஆதலால், இந்தச் சமாசாரம் அவருக்குச் சொல்லி அழைத்து வரப் போகிறேன். அதற்கு அவர் சம்மதித்து வாராவிட்டால், நானும் ஆரணியத்திலே வாசஞ் செய்கிறேன்," என்று சொன்னர்.

அந்த வார்த்தையைப் பாரத்துவாசர் முதலான ரிஷிகளெல்லாம் கேட்டுப் புளகாங்கிதரானர்கள். பின்பு பாரத்துவாசர் பரதரைத் தம்முடைய பர்னசாலைக்கு அழைத்துப்போய், சேனை சமுத்திரத்துக்கெல்லாம் விருந்து செய்து வைக்க ஓமகுண்டத்திலே மந்திர பூர்வமாய் ஆகுதி பண்ணினர். அப்போது தேவலோகத்துச் சம்பத்துகளெல்லாம் அவ்விடத்தில் வந்தன. அவற்றைக் கண்ட சகலரும், பிறந்து வேறே ஒரு லோகஞ் சேர்ந்தவர்கள் போலக் களித்தார்கள். தேவரம்பைகள் மிகுந்த அன்புடனே அனைவருக்கும் உணவு பரி

மாறினுர்கள். அனைவரும் சாப்பிட்ட பின்பு நித்திரை செய்தார்கள். ஸ்திரீகள் யாவரும் தங்களுக்குத் தெய்வ கன்னிகைகள் தாதிமாரைப்போல ஏவலும் உபசாரமுஞ் செய்யத் திருத்தியடைந்தார்கள். இப்படிச் சகலரும் இந்திரபோகம் அனுபவித்து இருந்தார்கள். பரதர் காயும் கிழங்குமே சாப்பிட்டு புழுதியிலே படுத்து, அன்றிராப்பொழுதைப் போக்கினுர். பொழுது விடியவே, சகலரும் கனவு கண்டவர்போல எழுந்திருந்தனர். தரும சிந்தையில்லாதவன் பாக்கியம் போல எல்லாப் பாக்கியங்களும் போய்விட்டன. அதற்கவர்கள் மனம் வருந்தாமல், புதிய பிறவியடைந்தவர்கள் போன்று வழி நடந்து, பாலை நிலம் போய்ச் சேர்ந்தார்கள். குடைகள் கொடிகள் முதலானவை ஆகாசமெல்லாம் பந்தல் போலக் கவிந்திருக்க, அந்தப் பாலை நிலத்தையும் சுமுகமாகக் கடந்து போனுர்கள். ராஜ்யமெல்லாம் ஆளென்று கொடுத்த தாயைக் கோபித்துக்கொண்டு வருகிற பரதரைக்கண்டு, அங்குள்ள கல்லும் கரைந்து உருகிற்று; பட்டுப்போன மரங்களெல்லாம் தளிர் விட்டன. அந்தப் பாலை நிலம் மருதநிலம் போலக் குளிர்ச்சியடைந்தது. அவர்கள் அப்பால் சித்திரகூட பர்வதம் போய்ச்சேர்ந்தார்கள்.

ஏதோ சேனை வருகின்றதென்பதை இலட்சுமணர் அறிந்து, அதிசீக்கிரமாய் ஒரு குன்றின்மேலேறிச் சமுத்திரம் போல வருகிற சேனையைப் பார்த்தார்; "இந்தப் பரதன் சேனு சமுத்திரத்தைக் கூட்டிக்கொண்டு ஸ்ரீராமர்மேல் யுத்தத்துக்கு வருகிருன்!" என்று எண்ணி, மிகுந்த கோபத்துடனே குன்றிலிருந்து பூமியிலே குதித்து, ஸ்ரீராமரிடம் அதிசீக்கிரம் வந்து, "சுவாமி, சிறிதாகிலும் நினையாமல் உம் மேலே போருக்குச் சேனு சமுத்திரத்துடனே பரதன் வந்தான்!" என்று சொல்லி, அதிசீக்கிரம் அரையிலே வாள் கட்டி, தோளில் அம்பருத்தூணி தரித்து, கையிலே வில்லை எடுத்துக்கொண்டு, ஸ்ரீராமருடைய பாதத்தைத் தொட்டு வணங்கி, "சுவாமி, இகபரமிழந்த அந்தப் பரதனுடைய புஜ

பலமும், சேனையினுடைய பெருமையும், உம் தம்பியான என் ஒருமையும், இன்றைக்குப் பார்த்துச் சந்தோஷப்படுங்கள்! வருகிற யானைக்கூட்டங்களை எல்லாம் உருட்டி, தேர்களை எல்லாம் இழுத்து, இரத்த ஆறு பெருகிச் சமுத்திரத்தில் போய்க் கலக்கிறதைப் பார்த்துக்கொண்டிரும்! ஆயுதங்களேந்தி வரும் அவர்கள் கைகளிலும், கவசம் பூண்ட அவர்கள் மார்புகளிலும், என்னுடைய பாணங்கள் உருவி, அவர்கள் உயிரைக் குடித்து, இரத்தத்திலே தோய்ந்து, திரிவதைப் பார்த்துக்கொண்டிரும்! ஒரு பிள்ளைக்குரிய ராஜ்யத்தை மற்றொரு பிள்ளையாகிய பரதனுக்கு ராஜா கொடுத்தாரே! அதை ஆளாமல் இன்றைக்கே என் பாணத்தினாலே நரக பூமியை அவன் ஆளப்போவதைப் பாரும்! உமக்கு ஆரணிய வாசத்தைக் கொடுத்து, அங்கலாய்க்கிற உம் தாயாருடைய துயரத்தைப் பார்த்துச் சந்தோஷித்துக்கொண்டிருக்கிற கைகேசி, இனிப் பூமியில் விழுந்து புரண்டு அழப் போகிறதைப் பாரும்!'' என்று சொன்னார்.

ஸ்ரீராமர், "இலட்சுமணா, நீ பதினான்கு உலகத்தையும் கலக்க நினைத்தால் அதை ஒருவராலே விலக்கக் கூடுமா? அது அருமைதான்! அதைக் குறித்துச் சொல்லவும் வேண்டுமோ? நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேள்: அப்பா, நம் குலத்தில் பிறந்தவர் யார் தருமம் தப்பி நடந்தார்? பரதனுடைய அந்தரங்க பத்தியை ஒருவராலே சொல்லக் கூடுமா? அது உனக்குத் தெரிந்திருந்தும், நீ என்னிடத்தில் வைத்திருக்கிற ஆசையினாலே அதை உணரவில்லை. பரதன் வருகிறானென்றால், ராஜா அனுப்பியிருக்கலாம்; அல்லது அன்பினால் வந்திருக்கலாம்; அல்லது ராஜ்யத்தை நம் வசம் ஒப்புவிக்க வரலாம். இப்படி நாம் யோசனை செய்யவேண்டுமே அல்லாமல், சேனைகளைக் கூட்டிக்கொண்டு என்னுடன் யுத்தம் செய்வதற்கு வருகிறானென்று சொல்லலாமா? தருமத்துக்கு ஓர் அறிவாகவும், நன்மைக்கு ஓர் வயிர ஆணியாகவும் உள்ள பரதனை, நீ இப்படிச் சொல்லலாகாது. அவன் வரு

வது என்னைப் பார்ப்பதற்கல்லாமல் வேறன்று; அதுவும் நீ பார்க்கப்போகிருய்?'' என்று தம்பியாருக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்.

அப்போது பரதரும் சேனுசமுத்திரத்தையெல்லாம் பின் வரும்படி உத்தரவு செய்து, பிரியாத தம்பியாரோடு தாம் முன்னுக நடந்து வந்தார்; இரண்டு கரமும் சிரசின்மேல் வைத்துக்கொண்டு சேவித்தபடியே மிகவும் துக்கித்துக் கொண்டு, துயரமென்பதே ஓர் உருவமெடுத்து வந்தது போல நெருங்கி வந்தார். இப்படி வந்த பரதரை ஸ்ரீராமர் பார்த்து, "இலட்சுமணு, பரதன் யுத்தத்துக்கு வருகிற வேஷத்தை நன்ருய்ப் பார்!'' என்று காட்டினுர். அப்போது இலட்சுமணர் அவரைப் பார்த்து, கோபத்தை விட்டு, புத்தி சோர்ந்து, கையிலிருந்த வில்லும் கண்களிலிருந்த நீரும் பூமி யிலே விழ, மிகுந்த துயரத்துடனே நின்ருர். அப்போது ஸ்ரீராமரைப் பிரிந்த மகாலட்சுமியானவள் மிகவும் வேதனே அடைந்து, அனுப்பின தூதன் போலப் பரதர் தொழுது கொண்டே, "சுவாமி, தருமத்தையும் நினையாமல், கிருபை யையும் விட்டு, நீதியையும் துறந்து, இப்படி வந்துவிட லாமா?'' என்று சொல்லிக்கொண்டே இறந்து போன பிதா வைக் கண்டவர் போல அன்போடு ஓடி வந்து ஸ்ரீராமர் பாதாரவிந்தத்திலே விழுந்தார். ஸ்ரீராமர் பரதருடைய வேஷத் தையும் துயரத்தையும் கண்டு உருகி, அவரை இரு கரங் களாலும் வாரியெடுத்து, தயை என்பது தருமத்தைத் தழுவிக்கொண்டது போலத் தமது அகன்ற மார்புடனே தழு விக்கொண்டு, தம் கமல நேத்திரங்களில் பெருகுகிற நீரி ஞலே பரதருடைய சடை முடியை நனேத்து, "அப்பா, நீ மிகுந்த கிலேசத்திலே முழுகியிருக்கிருயே! என்ன கார ணம்?'' என்று கேட்க, பரதர், "சுவாமி, நீர் பிரிந்தீரென்கிற மனுேவியாதியினுலும் என்னைப் பெற்றவளுடைய வரமென் கிற கூற்றுவனுலும், சத்தியத்தைப் பூமியிலே நிலே நாட்ட வேண்டுமென்னும் கருத்தாலும் தந்தையார் தேவலோகம்

போய்ச் சேர்ந்தார் !'' என்று சொல்லினர். அவ்வார்த்தை யைக் கேட்டதும் ஸ்ரீராமர் புண்ணில் வேலிட்டது போல மனம் நொந்து, கண்ணும் மனமும் கறங்கு போலச் சுழல, பூமியின்மேல் விழுந்து, சுவாசமில்லாமல், இடி விழுந்த நாகம் போல உணர்வு தப்பிச் சிறிது நேரம் ஸ்தம்பித்திருந்து, பிறகு ஒருவாறு தேறி, ''சூரியகுலத்துக்குத் தீபமே, பூலோகத்தா ருக்குத் தகப்பனே, தருமத்துக்குத் தாயே, தயைக்கு ஓர் இருப்பிடமே, பகைவர்களுக்குச் சிங்கமே, நீர் இறந்து போனீரோ ? இனி, உலகத்துக்கும் சத்தியத்துக்கும் ஆதர வாக யாரிருக்கிருர் ? அருமையான யாகஞ்செய்து என்னைப் பெற்றது உம்முடைய உயிர் இப்படிப் போகிறதற்காகவா ? 'ராஜ்யத்திலிருக்கிற சகல ஜீவராசிகளையும் இரட்சிக்கிற பாரம் நான் சுமக்கமாட்டேன்,' என்று கூறி அந்தப் பாரத்தை இறக்கிவிட்டுத் தவஞ்செய்ய நினைத்தது இதற்காகத்தானே? ஆ ! உம் உயிருக்குக் கூற்றுவனுகவா நான் ராஜ்யமாளுகிற தற்குச் சம்மதித்தேன் ? இந்தச் சரீரத்துடனே பதினலு வரு ஷமும் கழித்துத் திரும்பி வருகிற போது நான் யார் முகத் தைப் பார்ப்பேன் ! அடியேன் காட்டுககுப் போனேன் என்று கேட்டவுடனே நீர் மாண்டு போனீர் என்பது கேட்டும் என் பிராணன் போகாமல் வாழ்வை இச்சித்து இன்னமிருக்கின் றதே! சம்பராசுரன் முதலான பகையாளிகளை ஜயித்து, சந்தி ரனைப்பார்க்கிலும் மிகுந்த குளிர்ச்சியுடைய ஒரு குடையின் கீழ் ராஜ்ய பரிபாலனம் பண்ணின மகாராஜாவே, வண்மை யும், மானமும், பலமும், நீதியும், மெய்யும் உடன் கொண்டு போய்விட்டீரோ? ஐயோ !'' என்று பலவாறு பிரலாபித்தனர்.

அப்படிப் பிரலாபிக்கின்ற ஸ்ரீராமரைத் தம்பிமாரும், மற்றவர்களும் எடுத்துத் தாங்கினுர்கள். வசிஷ்ட மாமுனி வரும் தேற்றினுர். அவர்களைக்கண்டு பின்னும் பிரலாபிக்கிற ஸ்ரீராமரை வசிஷ்ட மாமுனிவர் பார்த்து, ''ஸ்ரீராமா, சகலத் தையும் துறந்துவிடுகிறதும், தருமம் செய்கிறதும் தவிர வேறேயொன்றும் நில்லாது. ஜீவனுக்குப் பிறக்கிறதும்

இறக்கிறதும் சுபாவம். இதை நீ மறந்துபோனுயா? அனேக போக பாக்கியத்துடனே அறுபதினுயிர வருஷகாலம் இராச்சியபாரஞ்செய்து வாழ்ந்தவர் இறந்தால், அவருக்காக அங்கலாய்க்கலாமா? ஸ்ரீராமா, கேள்: பிரமா விஷ்ணு உருத்திரர் என்கிற திரிமூர்த்திகளாலும் காலமென்கிற வலையைத் தாண்டிப் போகக்கூடுமா? புண்ணியமென்கிற நெய்யிலே காலமென்கிற திரியைப் போட்டு, விதியென்கிற சோதியைப் பிரகாசிப்பித்திருக்கின்ற தீபமானது தனக்கு அமைந்துள்ள நெய்யும் திரியும் மாண்டுபோனுல் நின்று போகிறதற்குக் கேட்க வேண்டுமா? உன் பிதாவாகிய மகாராஜர் விஷ்ணுலோகம் போய்ச் சேர்ந்திருக்கின்ருர். அதைப்பார்க்கிலும் நீ அவருக்கு வேறு உதவி செய்ய வேண்டுமா? நீ இப்படி நீர்க்குமிழிபோலத் தோன்றி மறைகிற சரீரத்துக்காக அங்கலாய்க்கிறது சரியன்று. இப்போது நீ செய்ய வேண்டிய கடனை உன் திருக்கரங்களினுலே செய்து முடி,'' என்று சொல்லிக் கண்களைத் துடைத்துத் தேறுதல் செய்தார். பின்பு அனைவரும் தடாகத்துக்குப் போய்ச் சேர்ந்தனர். ஸ்ரீராமர் ஸ்நானஞ்செய்து வசிஷ்ட மாமுனிவர் சடங்கு காட்டச் சாத்திரப்படி யாவும் முடித்து, தம் தகப்பனுருக்கு மூன்று கை ஜலம் விட்டார்; பின்னையும் செய்யவேண்டிய காரியங்களெல்லாம் செய்து, தம்பிமார் படைத்தலைவர் முதலானவர் சூழ ஜானகியிருக்கின்ற பர்னசாலைக்குப் போனுர். அவ்விடத்திற் சீதை தனியே இருக்கிறதைப் பரதர் கண்டு, கரங்களினுலே தம் கண்களில் மோதிக்கொண்டு, சீதையின் பாதாரவிந்தத்தில் விழுந்து அழுதார். அவர் அழுகிறதைக் கண்டு ஒன்றும் அறியாத சீதையும் விம்மி விம்மி அழ, ஸ்ரீராமர் பரதரைத் தாங்கியெடுத்துச் சீதையைப் பார்த்து, ''சீதாய், அரசர் நாம் பிரிந்து வந்ததனுல் இறந்துபோனுர்!'' என்று சொன்னுர். அந்த வார்த்தையைச் சீதா பிராட்டி கேட்டு, மனந்திடுக்கிட்டு, கண்களிலே நீர் ஒழுகப் பூமியின் மேல் கையை வைத்துக்கொண்டு, கதறியழுதாள். அப்

போது ரிஷி பத்தினிகள் சீதையைத் தழுவித் தாங்கிக் கொண்டுபோய் ஸ்நானம் செய்து வைத்து, தேறுதல் சொல்லித் தேற்றி, ஸ்ரீராமர் சமீபத்தில் கொண்டுவந்து சேர்த்தார்கள். பின்பு ஸ்ரீராமர் தாய்மார்களைக் கண்டு, அவர்கள் பாதாம் புயத்தில் விழுந்து பிரலாபித்தார். அவர்கள் மிகுந்த துயரத்தோடே அலறி ஏங்கி, அவரைத் தழுவிக்கொண்டு அழுதார்கள். பின் வந்த சேனை சமுத்திரமும் நெருப்பிலே விழுந்த மெழுகுபோல உருகி, தேம்பித் தேம்பி அழுதது. தாய்மார்களும் மாதர்களும் சீதையைக் கட்டிக்கொண்டு துக்க சமுத்திரத்திலே அழுந்தினார்கள். அத்தருணத்தில் சூரியன் ஸ்ரீராமர் தன் குலத்தில் பிறந்த நாயகரானபடியினாலே, இறந்துபோன மகாராஜாவுக்குத் தானும் நீர்க்கடன் செய்கிறவன் போல மேற்சமுத்திரத்தில் மூழ்கினான்.

மறுநாள் மகரிஷிகளும், பந்து ஜனங்களும், தம்பிமாரும் சூழ ஸ்ரீராமர் வீற்றிருந்தார். அப்போது ஸ்ரீராமர் பரதரைப் பார்த்து, "தம்பி, தகப்பனார் இறந்துபோயிருக்க, அவருடைய ஆக்கினையினாலே ராஜ்யமும் உன்னதாயிருக்க, முடி சூட்டிக் கொள்ளாமல் விரதமாய் மரவுரியும் ஜடையும் தரித்துக் கொண்டது ஏன்?" என்று மிகுந்த அன்புடனே வினவினார். அவ்வார்த்தையைப் பரதர் கேட்டு, மனம் பதைத்து, எழுந்து கரம் கூப்பித் தொழுது நின்று, "சுவாமி, தருமவழி நடப்பதற்கு உங்களையல்லாமல் வேறு யாரிருக்கிறார்கள்? அப்படியிருக்க, நீங்கள் தருமம் மாறுபடச் சொல்லலாமா? இல்லறத்திற்கு யோக்கியமில்லாதவளும், வரத்தினாலே உம்மையும் காட்டுக்கனுப்பி, யோக்கியமில்லாத காரியத்தைச் செய்வித்த மகாராஜாவையும் கொன்று லோகமுள்ளவரைக்கும் மறைக்கக்கூடாத இழிவான பழியைப்பூண்டவளுமாகிய கொடியவள் மகனான அடியேன், தவத்திற்கும் யோக்கியனாவேனோ? அதுவுமாக மாட்டேன். இந்த லோகத்தையெல்லாம் நோகப் பண்ணின பாவி வயிற்றிலே பிறந்த நான், இறந்து போக மாட்டாமல் இருக்கிறேன்! தவமும் செய்யாமற்போனால் இங்

தப் பாவம் எப்படித்தான் ஒழியும்? உம்முடன் பிறந்த அடியேன், நீர் பிரிந்து தருமம் தப்பித் துறந்துவிட்டுத் தவம் செய்யத் தொடங்கினீரென்றால், அதை மறந்து நீதி தப்பி நடக்கின்றவனைப் போலத் தருமத்தைக் கொன்று தின்று அந்த அரசை ஆள்வேனா? உம்மிடத்திலிருந்த அன்பினாலே ராஜா இறந்து போக நீர் கடூரமான ஆரணியத்தில் வந்து சேர, இதுதான் சமயமென்று ராஜ்யம் ஆளுகிறதற்கு நானென்ன பகையாளியா? தேவரீர் பட்டணத்திற்கு எழுந்தருளி வந்து ராஜ்யபாரஞ் செய்யவேண்டும்,'' என்று தம் மனோபாவம் நன்றாய்த் தோன்றச் சொன்னார்.

ஸ்ரீராமர், “ தம்பி, நானொன்று சொல்லுகிறேன்; அதை உற்றுக்கேள்: பெரியவர்கள் யாரென்று நன்றாய் யோசனை செய்து பார்த்தால், தாயும் தகப்பனுமேயல்லாமல் வேறில்லை. அப்படிப்பட்ட தாய் வரம் வாங்கிக்கொள்ளத் தகப்பனார் ஆக்கியாபித்தபடி நம் குலதருமம் தப்பாமல் நான் ஆரணியத்திற்கு வந்தேன். இவ்வாறு வந்த நான், நீ வருந்திச் சொல்கிறாயென்று திரும்பி அந்தத் தருமங்களை விட்டு வந்துவிடுவது உத்தமமா? நம் தகப்பனார் இகத்திலே பொய் சொன்னாரென்று பழியுண்டாகாமல், அவர் கொடுத்த வரத்தினாலே ராஜ்யம் உன்னதானபடியினால், நீ போய்ப் பட்டாபிஷேகம் செய்துகொண்டு இராச்சியபாரஞ் செய்யவேண்டும்,'' என்று சொல்ல, பரதர், “சுவாமி, நீர் முன்னே பிறந்தவர். ஆதலால். அரசு உம்மதே. நீர் இராச்சியத்தை என்னதென்று சொல்லுகிறீர். அப்படியே என்னதானாலும், நான் இன்றைக்கு உமக்குக் கொடுத்தேன். நீர் வந்து மகுடம் சூட்டிக்கொள்ளும். இராச்சியமெல்லாம் வருந்தித் துக்க சாகரத்திலே விழுந்து கிடக்க, நீர் உம்முடைய மனத்தின்படி செய்வது உத்தமமா? இராச்சியம் வருந்திக் கலங்கிப் போகாமல் காத்து இரட்சியும்!'' என்று சாஷ்டாங்கமாய்ச் சேவித்து, வேண்டிக்கொண்டார். ஸ்ரீராமர், “அப்பா, என்னிடத்திலே உனக்குண்டான பத்தி விசுவாசத்தினாலே இராச்சியத்தை

என் வசம் செய்வது உத்தமமா? நியாயமா? அபவாதத்திற்குப் பயப்பட்டுப் பிராணனை விட்ட நம் தகப்பனர் சொன்னபடி பதினன்கு வருடமும் இன்றேடாய்விட்டனவா? இல்லையே! அப்படியிருக்க, அவர் சொன்னபடி பதினன்கு வருடமும் ஆரணியத்திலே வாசஞ்செய்து நான் வருகிறேன். அதுவரைக்கும் நீ நான் சொன்னபடி இராச்சியபாரம் செய்துகொண்டிரு. என் வார்த்தையை மறுக்காமல் நான் சொன்னபடியே செய்; துயரப்படாதே!'' என்றுசொல்லினர்.

அப்போது வசிஷ்ட மாமுனிவர் பரதரைப் பார்த்து, "நீ சும்மா இரு,'' என்று கையமர்த்திப் புருஷோத்தமரான ஸ்ரீராமரைப் பார்த்து, "இராமா, பிரளயகாலத்திலே சமுத்திரம் பொங்கிப் பிரபஞ்சமெல்லாம் மூழ்கிப் போகும் போது, ஸ்ரீமந்நாராயணர் ஆதிவராக ரூபமெடுத்து இந்தப் பூமியைத் தம் கொம்பினல் இளம்பிறையிலே களங்கமிருக்கிறது போலத் தாங்கினர். அப்போது ஐந்து பூதமும் மறைந்து சகல ஜீவராசிகளும் போய்விட்டன. பின்பு மறுபடி சிருஷ்டிக்கவேண்டுமென்று உந்திக் கமலத்திலே பிரமாவை உண்டாக்கினர். அந்தப் பிரமா பிரபஞ்சம் முதலிய சராசரங்களையெல்லாம் சிருஷ்டிக்குமுன்னே உன் குலத்து ராசாக்களில் மனு மாந்தாதா முதலானவரைச் சிருஷ்டித்தார். அவர்கள் முதல் வந்த ராஜாக்களுள் இது வரை முறை தப்பி நடந்தவர் இல்லை. ஆதலால், உனக்கு நான் ஒன்று சொல்லுகிறேன், கேள்: இம்மை மறுமை இரண்டையும் கொடுக்கிறது வித்தை. அந்த வித்தையைக் கற்பித்தவனே பெரியவனென்று சொல்லுவார்கள். நான் உனக்குச் சகல வித்தையும் கற்பித்திருக்கிறேன். ஆதலால், என் பேச்சை நீ தள்ளலாகாது. ராஜ்யம் உனதுதான். நீ வந்துராஜ்யத்தை ஆள வேண்டும்,'' என்று சொன்னர்.

ஸ்ரீராமர் வசிஷ்ட மாமுனிவரைத் தொழுது, "சுவாமி, அடியேன் ஒரு விண்ணப்பம் பண்ணிக்கொள்ளுகிறேன். அதைக் கேட்டருள வேண்டும்: சர்வஞ்ஞரான பெரியோர்க

ளாகட்டும், பொய்யன் புலையன் முதலான சிறியோராகட்டும், 'இன்னது செய்கிறேன்,' என்று வாக்கினாலே சொன்ன பிறகு அந்த வாக்கை மறுத்து நடக்கிறது உத்தமமல்லவே? தாயார் சந்தோஷத்தோடே ஆக்கியாபித்துத் தகப்பனார் அப்படியே செய்யென்று ஏவினதற்குச் சம்மதித்து, அந்த வார்த்தையைச் சிரசாக வகித்துக்கொள்ளாத புலையனைப்பார்க்கிலும், கிரமந்தெரியாத நாய் நல்லதல்லவா? முன்னே தாய் தகப்பனுடைய வார்த்தையை நான் ஏற்றுக்கொண்டு, அப்படியே செய்கிறேனென்று வெளி வந்துவிட்டேன். இப்போது தேவரீர் இப்படிச் சொன்னால், இந்த இரண்டில் நானெந்தக் காரியத்தைச் செய்யலாம்? தேவரீரே யோசனை செய்து அடியேனுக்குக் கட்டளையிடுங்கள்," என்று சொல்லினர். அந்த வார்த்தையைக் கேட்ட வசிஷ்டர், "இனி நாம் என்ன சொல்லப்போகின்றோம்! இனி வேறே சொல்லுகிறதற்கு இடமில்லை," என்று சும்மா இருந்தார்.

அப்போது பரதர், "ராஜ்யம் யாராகிலும் ஆளட்டும். அடியேன் ஆரணியத்திற்கு உடன் வருகிறது நிச்சயம்!" என்று சொன்னார். அதைத் தேவர்கள் கேட்டு, "இப்படிப் பரதன் ஒரே பிடிவாதங்கொண்டு ஸ்ரீராமனைத் திரும்ப அயோத்திக்குக் கொண்டுபோனால், நம்முடைய காரியங்கள் கைகூடி வாரா," என்றெண்ணி, அசரீரியாய், "ஸ்ரீராமன் தகப்பன் பேச்சைத் தள்ளாமல் பதினான்கு வருஷம் ஆரணியத்தில் வாசம் செய்ய வேண்டும். பரதனே ராஜ்யமாள வேண்டும்," என்று சொல்லவே, ஸ்ரீராமர் பரதரைப் பார்த்து, அவர் கைகளைச் சேரப் பிடித்துக்கொண்டு, "அப்பா, தேவர்கள் சொன்ன அசரீரி வாக்கியம் தள்ளலாகாது. ஆகவே, நான் சொன்னபடி பதினான்கு வருடமும் நீயே ராஜ்யபாரம் பண்ணும்படி உன்னை நான் இரந்து கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு நீ தடை சொல்லாதே!" என்று சொல்ல, பரதர் துக்கித்து அழுது, "சுவாமி, இந்தப் பதினான்கு வருடமும் கழிந்தவுடனே நீர் அயோத்தியாபுரிக்கு வந்து இராச்சியபாரம் பண்ணமற்

போனுல், உம்முடைய ஆணைப்படி நான் அக்கினியிலே விழுந்து பிராணனை விடக்கடவேன்!'' என்று துணிந்து சொன்னுர். ஸ்ரீராமர் அப்படிச் சொன்ன பரதரை மார்பிலே அணைத்துக்கொண்டு, அன்புடனே பார்த்து, மனமுருகி, "அப்படியே ஆகட்டும்,'' என்று சொன்னுர்.

அப்போது பரதர் விம்மியழுது, வேறே ஒன்றுஞ் செய்வதற்கு இல்லாதபடியினுலே, 'எப்படிப் பிரிந்திருப்போம்!' என்றெண்ணி ஏங்கி, "சுவாமி, உம்முடைய திருப்பாதுகையைக் கொடும்,'' என்று கேட்டார். ஸ்ரீராமர் அப்படியே இரண்டு பாதுகைகளையும் கொடுத்தார். அவற்றை வாங்கிப் பரதர் அழுத கண்ணுடனே, "இவைகளே எனக்குக் கிரீடம்!'' என்று சிரசிலே வைத்துக்கொண்டு, தாம் வந்த வழியே திரும்பினுர். மகரிஷிகளும், தாய்மார் முதலிய யாவரும் பட்டணத்தில் வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீராமர் விடை கொடுக்கக் குகனும் நடந்தான்.

பரதர் பாதுகைகளைச் சிரசிலே வைத்துக்கொண்டு கங்கையைத் தாண்டி, அயோத்தியாபுரி போகாமல், இராத்திரி நித்திரை விட்டு, நந்திக்கிராமத்திலே போயிருந்து கொண்டு, ஐம்புலாதிகளையுமொடுக்கி, "இந்தப் பாதுகைகளே இந்த இராச்சியத்திற்கு அதிகாரி,'' என்று எண்ணிக் கொண்டு, இராத்திரி பகல்ஓயாமல் கண்களிலே நீர் பெருகத் தெற்குத் திசையைப் பார்த்துக்கொண்டேயிருந்தார்.

சித்திர கூடத்திலேயிருந்த ஸ்ரீராமர் "இவ்விடத்திலிருந்தால் ஜனங்கள் இன்னம் வந்து நலிவு செய்வார்கள்,'' என்றெண்ணித் தம்பியாரும் தாமும் சீதையுமாகத் தெற்குத் திசையை நோக்கி நடந்தார்.

அயோத்தியா காண்டம் முற்றிற்று

# ங. ஆரணிய காண்டம்

## 1. விராதன் வதைப் படலம்

பேதி யாதுநிமிர் பேதவுரு வம்பிறழ்கிலா
ஓதி யோதியுண ருந்தொறுமு ணர்ச்சியுதவும்
வேதம் வேதியர்வி ரிஞ்சன்முத லோர்தெரிகிலா
ஆதி தேவரவ ரெம்மறிவி னுக்கறிவரோ.

பூலோகமெங்கும் துதிக்கும் சித்திரகூட பர்வதத்தினின்றும் நித்திலம் நிகர்த்த புன்முறுவலும் வாசனை வீசுகின்ற தாமரை மலரை நிகர்த்த பாதங்களையுமுடைய சீதாலட்சுமியுடன் கோதண்ட பாணிகளாகிய ஸ்ரீராம லட்சுமணர்கள் பெருந்தவத்தவரெல்லாம் வாழ்கின்ற தண்டகாரணியத்தை அடைந்து, காமாதிகளை வென்று யாதொரு பற்றில்லாமல் பரமமுத்தி சாதகராகிய *அத்திரிமகரிஷி* வாசஞ்செய்யுமிடத்திற்சென்று, அவரை வணங்கி நின்றார்கள். அவர் மிக்க மகிழ்ச்சியுடன் அவர்களுக்குப் பல ஆசிகள் கூறி, "மகோத்தமர்களாகிய நீங்கள் எமக்குச் சேவை தர இவ்விடம் வந்த காரணமென்ன? இதென்ன வைபவம்? இவ்விதம் நீங்களெல்லாம் இவ்விடம் விஜயஞ் செய்தது எங்கள் முன்னோர்கள் செய்த தவப்பேற்றினலோ?" என்று கூறிக்களிப்புற்று இருந்தார். ஸ்ரீராமலட்சுமணரும் சீதா பிராட்டியும் அன்று முழுமையும் அந்த மகரிஷியின் வனத்திலிருந்தார்கள். முனிவரின் மனைவியாகிய *அநசூயை* என்பவள் ஜானகிக்கு ஆபரணங்களும் கந்த கதம்ப மலர்களும் அன்புடன் கொடுக்க, பிராட்டி ஸ்ரீராமர் கட்டளைப்படி அவைகளையெல்லாம் பெற்று அணிந்துகொண்டாள்.

மறு நாள் சூரியோதயத்துக்கு முன் அவர்கள் அவ் வனத்தை நோக்கி நடந்தார்கள். இவ்விதம் அந்தத் தண்ட காரணியத்திற்செல்லுகையில் ஒரு ராக்ஷதனுனவன் மகா உக்கிரத்துடன் நடந்து வந்தான். அவன் கலிகாலத்தைப் போலக் கன்னங்கரேலென்ற உடலுடன், கொடிய புலித் தோலாலே தட்டிச் சல்லடமும் யானைத் தோலாலே உத்த ரீயமும் உடுத்தி, சலஞ்சலம் முதலான சங்கங்களைக் கோத் துக் கையிலே கங்கணமாகத் தரித்துக்கொண்டு, பூமியிலே சஞ்சரித்துக்கொண்டிருக்கிறவனுயிருந்தாலும், தேவலோகத் திலே இருக்கிற தேவர்களுடைய கண்களிலும் மனத்திலும் எந்நேரமும் பயப்பிராந்தியை உண்டாக்கிக்கொண்டிருக்கிற சாமர்த்தியன்; பஞ்சபூதங்களும் ஒரு ரூபமெடுத்தது போன்ற பலமும், பிரளயகாலத்து இடிபோன்ற குரலும் உடையவனுய் அவ்விடத்திலே இருக்கிற பர்வதங்களும் விருட்சங்களும் நடுங்கிச் சிதறும்படி நடந்து வந்தான். அவன் விராதன் என்கிற பெயரையுடையவன். அவன் மலைக்குகை போன்ற தன் வாயைத் திறந்து, "நில்லுங்கள்! நில்லுங்கள்!" என்று சொல்லிக்கொண்டு ஓடி வந்து, சீதையை ஒரு கையாலே தூக்கிக்கொண்டு ஆகாச மார்க்கமாய்ப் போனுன். இதனை ஸ்ரீராம லட்சுமணர்கள் கண்டு கோபமுற்று, தோள்களிலிருக் கிற விற்களை இடக்கையிலே வாங்கிக்கொண்டு, "ஆரடா நீ? எங்கே போகிருய்? திரும்பு! திரும்பு!" என்று அதட்டிச் சொல்லித் தொடர்ந்தார்கள். அது கண்ட விராதன், "நீங் கள் வெகுசாமர்த்தியமாய்த் தொடர்ந்து வருகிறீர்கள்! நான் பிரமாவினிடம் வரம் பெற்றவன்; ஒருவராலேயும் சாகிற வனல்லேன். எந்த ஆயுதமானுலும் என்னை ஒன்றும் செய்ய மாட்டாது! உலகத்திலுள்ள யாவரும் கூடி வந்தாலும் நான் நிமிஷத்திலே சங்கரித்துப் போடுவேன்! என்னுலாகாதது ஒன்றுமில்லை. இந்த ஸ்திரீயை நீங்கள் கொண்டு வந்த உப காரத்தை எண்ணி, உங்களைத் தின்னுமல் பிராணனேடு விட்டுவிட்டேன்! தப்பிப் போய்விடுங்கள்!" என்று சொன்

னன். அந்த வார்த்தையைக் கேட்டு ஸ்ரீராமர் நகைத்து; வில்லை வளைத்துக் குணத்தொனி செய்தார். அப்போது பூனை வாயிலகப்பட்ட கிளிபோலக் கதறி அழுகிற சீதாலட்சுமியை விராதன் பூமியிலே விட்டு, பயந்தவனைப் போலத் திடுக்கிட்டு, சில நாழிகை திகைத்து நின்று, ஸ்ரீராமரெதிரே வந்து கோபாக்கினி மண்டியெரியக் கையிலிருந்த சூலாயுதத்தை ஸ்ரீராமர்மேல் பிரயோகம் செய்தான். அப்போது ஸ்ரீராமர்தம் கோதண்டத்திலே ஓர் அஸ்திரத்தைத் தொடுத்து விட்டார். அது அந்தச் சூலாயுதத்தை இரண்டு துண்டமாகக் கண்டித்தது. அந்தத் துண்டங்கள் இராட்சத குலமெல்லாம் அற்றுப்போகிற விபரீத காலத்துக்குப் பகலிலே எரிந்து விழுகிற நட்சத்திரம் போலப் பிரகாசத்துடனே பூமியிலே விழுந்தது. அப்போது விராதன் தேவர்களை ஜயித்த அந்தச் சூலாயுதம் அற்றுப்போயிற்றென்று சிறிதாகிலும் சலியாமல், அதிக கோபத்துடனே மனம் புழுங்கி, அங்கேயிருந்த மரங்களையெல்லாம் வேரோடே பிடுங்கி, சுழற்றி வீசினன். ஸ்ரீராமர் வயிரக்கட்டினுல் அமைந்த:பாணங்களைப் பிரயோகம் செய்ய, அந்தப் பாணங்கள் அந்த மரங்களைத் தள்ளிக்கொண்டே போய் அவனுடைய சரீரமெல்லாம் புண்களாகும்படி அவன் மேலேயே விழுந்தது. அப்பால் விராதன் ஒரு மராமரத்தை வேரோடே பிடுங்கிக்கொண்டு அதனுலடித்துப் போட ஓடி வந்தான். ஸ்ரீராமர் நாலு பாணம் விட்டு அந்த மரத்தை அறுத்து, பன்னிரண்டு பாணத்தை அவன் மார்பிலேயும் தோளிலேயும் அழுந்தும்படி பிரயோகம் பண்ணினர். அந்தப் பாணங்கள் அவன் சரீரத்தில் சன்னல் பின்னலாகத் தைத்துக்கொள்ளவே, அவன் அவைகளை முள்ளம்பன்றி முட்களை உதறுகிறது போல உதறிவிட்டு நின்றான். பின்னும் ஸ்ரீராமர் அக்கினியாஸ்திரம் விட்டார். அந்தப் பாணம் அவன் சரீரத்தில் தைத்து, அருவி பாய்கிற பர்வதம் போல இரத்தப் பிரவாகம் சொரிய, அவன் மூர்ச்சையாயினன். அப்போது ஸ்ரீராமர், “ இவன் மிகுந்த வரம் பெற்றவன் !

ஆயுதங்களினுல் சாகிறவனல்லன்!'' என்று தம்பியாருடனே வாளை உருவிக்கொண்டு, அவனுடைய இரண்டு தோள்களை யும் வெட்டித் துணித்துவிடுவோமென்று அதிசீக்கிரம் அவன் சமீபத்திற்போனுர். அவனுடைய உயர்ந்த இரண்டு தோள் களின்மேல் இருவரும் ஏறிக்கொண்டனர். அவன் மூர்ச்சை தெளிந்து தோளின்மேலிருக்கிற இருவரையும் பார்த்து, கைகளினுலே சேர்த்துப் பிடித்துக்கொண்டு, முன் போலவே அண்ட கடாகமட்டும் எழும்பிக் குதித்து, இரத்த வெள்ளம் பெருகப் பூமியெல்லாம் சாரியாய்த் திரிந்தான். அப்போது ஸ்ரீராமலட்சுமணர்கள் மகா மேருவைப் பிரதட்சிணம் வரு கிற சந்திர சூரியரைப்போல விளங்கினுர்கள். அந்த இராட் சதன் ஸ்ரீமகாவிஷ்ணுவைப் பிரமாவுடனே தாங்கிக்கொண்டு வருகிற கருடனுக்குச் சமானமானுன். சீதாதேவி தன் பிராண நாயகரான ஸ்ரீராமரும் மைத்துனரான இலட்சுமணரும் இராட் சதன் கையில் அகப்பட்டுக்கொண்டதைக் கண்டு கிலே சித்து, முறிந்து விழுந்த பாரிஜாத புஷ்பக் கொம்பு போல வும் பிடியுண்ட சேவலைப்பிரிந்த பெண்ணன்னம் போலவும், பூமியிலே விழுந்து, மிகுந்த துயரத்துடனே எழுந்து, சீக்கிரமாகப் பூமியிலே தொடர்ந்து நடந்து, "இராட்சதா, சகல ஜீவனிடத்திலும் தாய் போல அன்பு வைத்திருக் கிற அவர்களை விட்டு, என்னை எடுத்து விழுங்கிவிடு!'' என்று சொல்லிக்கொண்டு, அழுது, வாய் குழறி, ஸ்தம்பித்து நின்ருள். இப்படி நின்ற சீதையை இலட்சுமணர் கண்டு, தமையனுரைப்பார்த்து, "சுவாமி, தேவியார் மிகவும் துயரப் பட நீர் விளையாடுகிறது நல்லதா?'' என்று சொல்லினர். ஸ்ரீராமர், "இலட்சுமணு, இந்த இராட்சதன் இந்த எல்லை கடந்து அப்பாலே போகிறதற்கு இருக்கிருன்,'' என்று சொல்லித் தம்முடைய பாதாரவிந்தத்தினுலே அவனை உந்தித் தள்ளினுர். உடனே அவன் பூமியிலே விழுந்தான். விழுகிற தற்கு முன்னமே இரண்டு தோள்களையும் இருவரும் வாளி னுலே வெட்டித் துணித்துப் பூமியிலே குதித்தார்கள். அறு

பட்ட தோள்களிலிருந்து பெருகிய இரத்தப்பிரவாகம் பூமி யெல்லாம் பெருகிற்று. அப்போது ஸ்ரீராமர் ஆகாய மார்க் கம் போகிற எண்ணத்தை விட்டுப் பூமியிலே விழுந்த விரா தனைக்கண்டு, "இலட்சுமணா, இவனைப் பூமியிலே புதைக்க வேண்டும்," என்று சொல்லினர். அப்படியே இலட்சுமணர் பூமியிலே ஆழமாகக் குழி வெட்டினர். அன்புடனே நினைத்த பத்தருக்குப் பரமபதம் உதவுகிற ஸ்ரீராமர், தமது திருவடி யினாலே அவனுடைய சரீரத்தை உதைத்து அந்தப் பள்ளத் திலே தள்ளினர். அந்தத் திருவடி பட்ட மாத்திரத்தில் பூர்வத்திலே அவனுக்கு வந்திருந்த சாபம் விட்டுவிட, அந்தக் கடையான சரீரம் போய், அவன் பிரமாவைப் போலப் பிரகாசித்து, அண்டத்தையுண்டாக்கித் தாமும் அதிலே வந்து பிறந்திருக்கிற ஸ்ரீராமரைப் பூர்வக்கியான வாசனையி னாலே ஸ்தோத்திரம் பண்ணுகிறன்.:

"வேதங்களாலே சொல்லப்பட்ட பிரமமே, உலகமெல் லாம் உமது திருவடி விரிந்து நிறைந்ததென்றால், உம்முடைய சொரூபம் இப்படிப்பட்டதென்று சொல்லக்கூடுமா? நீர் பஞ்சபூதங்களிலும் நிறைந்திருக்கிறதானால், அவை உம் மைப் பொறுக்குமா? கொடிதாகிய முதலையானது யானை யைப் பிடித்துக்கொள்ள, யானை தன் துதிக்கையை உயர்த் திக்கொண்டு, மெய் கலங்கி, திசைகளெல்லாம் கேட்க, 'ஆதி மூலமே, என்னை இரட்சியும்,' என்று ஓலமிடுங்கால் நீரல்லவா அன்றைக்கு அதன் எதிரே வந்து நின்று இரட்சித் தீர்? அகத்திலும் புறத்திலும் முகத்தினுடைய அருள் நோக்கம் காணத்தக்க தாமரைக் கண்ணையுடைய எம்பெரு மானே, நீர்தாமா தருமத்தை இரட்சிக்கிறதற்கு இப்படிக் கறங்கு போலத் திரிந்து வருந்துகிறது? இது உமக்குக் கடனே? பிறவி வேண்டாவென்று துறந்து உம்மை நினைந் தால் அவர்களுக்குப் பிறவியில்லாமற் செய்து பரமபதத் தைக் கொடுக்கிற நீர், பிறந்து இருக்கிற விளையாட்டை இன்பமாக இச்சித்தீரல்லவா? பிறவியென்கிற சமுத்திரத்

தைக் கடக்க அந்தந்தச் சமயவாதிகள் அந்தந்தச் சமய நூலின்படி அனுஷ்டித்து நன்றென்று சொல்லத்தக்க ஒப்பற்ற பரம்பொருளாய் நீர் இருந்தால், முதல் தேவராய் இதுவரையிலிருந்தவர்கள் எதைக்கொண்டு அவர்கள் பிறவியை நீக்குவார்கள்? பிரமன் முதலிய யாவர்க்கும், தேவர்க்கும், மன்னுயிர்க்கும், முதற்பிதாவாய் நீரிருந்தால், உம்மைக் கிரமமாய் ஈன்றெடுத்த தாய் யார்? தரும சொரூபியே, ஆதியாகிய பரப்பிரமமே, உலகங்கள் உம்முடையவை. சமயங்களும் உம்முடையனவே. பொல்லாதவர் போல ஒளித்துக்கொண்டிருக்கிற நீர் வெளியில் வந்து நின்ருல், உமக்குப் பொல்லாங்கு உண்டோ? உமக்கு மாய்கையென்ற விளையாட்டும் வேண்டுமா? உலகத்திலே தாயை அறியாத கன்றுகளில்லை. கன்றுகளைத் தாயும் அவ்வாறே அறியும். அப்படியிருக்க, சகல உயிர்களையும் பெற்ற நீர் அவைகளை அறிகின்றீர். அவைகள் உம்முடைய நிலையையறியாத மாயம் யாது? வாராதது போல வந்த வஸ்துவே, பிரமன் முதலிய தேவர்களுக்கும் நீர் அல்லாமல் வேறே தெய்வமில்லாமலிருக்கிறதைத் தத்துவ நெறியிலே நிற்கிறவர்கள் நினையார்களா? சமயங்களிலே சொல்லுகிற தேவர்களெல்லாம் வினையுள்ளவர்கள் போலத் தவம் செய்கிருர்கள். நீர் ஒரு வினையும் இல்லாமல் திருப்பாற்கடலிலே யோக நித்திரை செய்கிறீர். இந்தப் பூமியை நீர் அனந்தனுகிச் சுமக்கிறீர்; ஆதிவராக ரூபமாய் ஒரு கொம்பினுல் ஏந்துகிறீர்; ஒரு வாயினுல் விழுங்குகிறீர்; ஓரடியினுல் இப்பூமியை மறைக்கிறீர். இப்படியெல்லாம் நீர் பூமி தேவிக்கு உபகாரஞ்செய்தால், உம் மார்பிலிருக்கிற ஸ்ரீ மகாலட்சுமி கோபஞ் செய்யாளா? நீருண்டாக்கிய ஜீவகோடிகள் உண்மையையுறிந்து பிழைத்தலாகாதா? அதனுலுமக்குக் குறைவுண்டா?. நீரெவ்வாறு மறைந்திருந்த போதிலும், முன்னே நீர் சிவனுக்குப் பிச்சையிட்டதால் அவன் கையிலிருந்த பிரம கபாலம் விட்டு நீங்கினதால், தேவலோகத்தாரிலும் பூலோகத்தாரிலும் பலர் சந்தே

கந்தெளிந்து உம்மை அறிந்திருக்கிறுர்கள். நீர் முன்பு அன்னரூபமாய் வேதங்களைப் பிரமாவுக்கு உபதேசம் செய்தீரே! அவ்வேதங்களை உமக்கு முன்னே சொல்லிக் கொடுத்தவர் யார்? அவர்கள் எல்லாரும் செத்துப் போனுர்களா? நீர் ஒரு ரூபமாயிருந்தும், சகல ரூபங்களிலேயும் நிறைந்து, பிரிந்தும் பிரியாமல் இருக்கின்றீர். இது என்ன மாயம்? நான் பூர்வ காலத்திற் செய்த பாவத்தினுலே இந்த இராட்சத தேகமெடுத்திருந்தேன். என் தபோ பலத்தினுல் உம்முடைய திருவடி என் சரீரத்தில் பட்டது! இப்போது நான் என் பிறவிச் சாகரத்தைக் கடந்தேன்! இனிப் பிறக்கிறதில்லை! நல்வினை தீவினை இரண்டும் என்னை விட்டு ஒழிந்தன,'' என்று சொல்லி நிற்கிற விராதனை ஸ்ரீராமர் நோக்கி, ''நீ யார்? உன் விருத்தாந்தம் என்ன? சொல்,'' என்று கேட்டனர். அவன் சொல்லுகிறுன்:

''கள்ளமாகிய மாயவேடமென்கிற வாழ்வு எல்லாம் நீக்கி, ஞானத்தைக் கொடுக்கிற திருவடியையுடைய சுவாமி, தெய்வலோகத்தில் வீணை வாசிக்கிற தும்புரு நான். ஒரு நாள் அரம்பை ஆடுகிற போது அவளுக்குப் பிணக்கு வந்து என்னுடனே வாக்கு வாதம் செய்தாள். அந்த அரம்பை நிமித்தமாய்க் காம வியாதியில் அழுந்திய என்னைத் தேவேந்திரன் முதலிய தேவர்கள் சிறிதும் இரக்கமில்லாமல், இப்படி இராட்சதனுகும்படி சபித்தார்கள். அப்படியே தேவலோகத்தை உபத்திரவப்படுத்துகிற **கிலிஞ்சன்** மகனுய்ப் பிறந்தேன். இந்தச் சாபம் உம்முடைய பாதாரவிந்தத்தினுலே தீருமென்று தேவர்கள் எனக்கு அனுக்கிரகம் செய்தார்கள். அன்று முதல் இன்றை வரைக்கும் நல்லது பொல்லது தெரியாமல் திரிந்தேன். இப்போது வேதத்தினுடைய முடிவிலிருக்கின்ற உம்முடைய பாதாரவிந்தம் தீண்டவே, என்னுடைய சாபம் விமோசனமாகிப் பூர்வக்கியானமும் பெற்றேன்! கடைத்தேறினேன்! அஞ்ஞானத்தினுலே தேவரீரைப் பலவாறு வைதேன்! ஆதலால், அவைகளைப்

பொறுத்து இரட்சியும்!'' என்று சொல்லிக்கொண்டே போய் விட்டான்.

அப்பால் ஸ்ரீராமர் சீதாப்பிராட்டியுடனே இலட்சுமணரையும் அழைத்துக்கொண்டு, பெரியோர்கள் வேதாத்தியயனத்துடன் வாசஞ் செய்துகொண்டிருக்கும் ஒரு சோலையிற் போய்ச் சேர்ந்தார். சூரியனும் அஸ்தமித்தான்.

## 2. சரபங்கர் பிறப்பு நீங்கு படலம்

ஸ்ரீ ராம லட்சுமணர்கள் மறு நாள் அந்தச் சோலையை விட்டுச் *சரபங்கரிஷி* தவம் செய்கிற மிகுந்த பரிமளமான வனத்துக்குச் சீதையுடனே நடந்தார்கள். அந்தச் சரபங்கருடைய ஆச்சிரமத்துக்குச் சமீபத்தில் வருகிற போது அவ்விடத்தில் தேவேந்திரன் வந்திருந்தான். அவன் ஆயிரம் செந்தாமரை மலர்ந்தது போலக் கண்கள் பிரகாசிக்க, இரண்டு பக்கத்திலும் மிகுந்த சுந்தரமான ஸ்திரீகள் மின்னல் போலப் பிரகாசிக்கிற வெண்சாமரையை அசுரர்களுடைய கீர்த்தியை வேரோடே பிடுங்கி வீசுகிறதுபோல வீச வீற்றிருப்பவன்; தேவரம்பைகளின் கண்களென்கிற வண்டுகள் படிந்திருக்கிற பாரிஜாத புஷ்பமாலையைத் தரித்திருக்கிற மார்பும், நாரதமகாமுனி வாசிக்கிற யாழ் வீணையின் இசைத்தேன் நுழைந்து படிந்திருக்கிற காதும் பெற்றவன்; தேவர்களுக்கெல்லாம் ராஜன்; பெருமை பொருந்திய நூறு அஸ்வமேதயாகம் செய்து முடித்த மகானுபாவன். மும்மூர்த்திகள் தவிர, மற்றத் தேவர்களெல்லாம் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்கிற போது, அவர்கள் கிரீடங்கள் பட்டுத் துலங்கிப் பிரகாசிக்கிற வீரகண்டையைத் தரித்திருக்கிற பாதாரவிந்தத்தையுடையவன். இப்படிப்பட்ட பிரதாபங்களையுடைய தேவேந்திரன் அந்தச் சரபங்க மகரிஷி ஆச்சிரமத்திற்கு வந்தபடியால் அவர் எதிர்கொண்டு செய்ய வேண்

டிய உபசாரஞ்செய்து, "தேவ ராஜரே, நீரிவ்விடம் வந்த காரணம் என்ன ?" என்று கேட்டனர்.

தேவேந்திரன், "முனிவரே, நீர் செய்த தவத்தைப் பிரமதேவரறிந்து, உம்மைத் தம்மிடத்திற்கு அழைத்து வரச் சொன்னார். இந்த உலகங்களையும் சகல உயிர்களையும் பெற்ற பிரமதேவர் தமது பதவியை உமக்குக் கொடுத்திருக்கிறார். நீர் வந்தால், அவர் உமக்கெதிரே வருவார். சகல லோகத்துக்கும் பிரமலோகமுயர்ந்ததன்றோ? ஆனபடியால், உம்முடைய ஸ்திரீயுடனே நடவும்," என்று சொல்ல, சரபங்கமகரிஷி, "தேவேந்திர மகாராஜரே, நான் நெடுங் காலம் தவம் பண்ணினேன். அதை நீரும் அறிந்திருப்பீர். நான் ஏதாகிலும் ஒரு பிரயோசனத்தை எண்ணித் தவம் செய்தவனல்லேன். நீர் இப்படி அழைக்கிறது உத்தமமன்று. நீர் இவ்விடத்திற்கு வந்தபடியினால் என் தவம் முடிந்தது. சிறுகாமல், பெருகாமல், நிலை பெயராமல், குறுகாமல், நெடுகாமல், குணம் வேறுபடாமல், பஞ்சபூதங்கள் இறந்து போனாலும் திரும்பாமல், தானே தானாயிருக்கிற மோட்ச நெறி எதுவோ, அதைச் சேருவேனேயல்லாமல், வேறொரு பதவியைச் சேரேன் !" என்று சொல்லினர்.

இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கிற சமயத்திலே அந்த ஆச்சிரமத்துக்குச் சமீபத்தில் வந்த ஸ்ரீராமர், "இங்கேஎன்னவோ சத்தமாயிருக்கின்றதே!" என்று யோசனை செய்து, சீதையையும் இலட்சுமணரையும் அவ்விடத்தில் நிறுத்தி, புருஷ சிங்கம்போலத் தனியே அந்த ரிஷியின் ஆச்சிரமத்தில் பிரவேசித்தார். அப்போது தேவேந்திரன் அரவிந்த மலர் போன்ற தன் ஆயிரம் கண்களாலும், சதுர்வேதத்தின் கனியாகிய ஸ்ரீராமரைக் கண்டான். அப்படிக் கண்டமாத்திரத்தில் சதா தான் சேவித்துக்கொண்டிருக்கிற பகவான் இப்படி அவதாரம் செய்து பிரயாசைப்படுகிறாரேஎன்று மனம் நொந்து, சிந்தை கரைந்து, அந்தப் பகவானை அறியாதவன் போல அறிந்ததெல்லாம் சொல்லித் தோத்திரம் செய்கிறான் :

"சகல பொருள்களிலும் இருந்தும் இராமலிருக்கிற பரஞ்சுடரே, பாசம் விட்டவர்களுடைய பந்துவே, கிருபைக் கெல்லாம் இருப்பிடமே, வேதமார்க்கத்தை ஆய்ந்து அறிந்த அறிவுக்கு அறிவே, பூர்வத்திலே அடியேங்கள் இராட்சதர்க ளாலே அலேச்சற்பட்டுத் தோத்திரஞ்செய்ய, அப்போது தேவர் கொடுத்த வரத்துக்காகவா இப்படிப் பூமியிலே பாதார விந்தங்கள் உருத்த நடந்து வந்தீர்? பகை-உறவு, ஒளி-இருள், மேல்-கீழ், இம்மை-மறுமை, ஆதி-அந்தம், முன்-பின் என்னும் இவைகளுளொன்றுமில்லாமலிருக்கிற வஸ்து வான நீர், இப்படிக் கையிலே வில்லேந்திக்கொண்டு பாதங் கள் நோவப் பூமியிலே திரிந்து எங்களேக் காக்காவிட்டால், உமக்குப் பழி வருமோ? சமுத்திரத்திலே வந்து படுத்திருந்த தற்குப் பதிலுபகாரஞ்செய்கிறீரோ? நீர் உந்திக் கமலத் திலே பெற்ற சதுர்முகப் பிரமா அனேக ஊழிக்காலஞ் சொன் ஞலும் சொல்லக்கூடாத கலியாண குணத்தையுடைய புரு ஷோத்தமரே, முன்னுலே பூமி தாழியாக, தண்ணீர் தயிராக, பர்வதம் மத்தாகக்கொண்டு, சமுத்திரத்தைக் கரங்கள் நோவக் கடைந்து எங்களுக்கு அமிர்தத்தைக் கொடுத்தீரே! அந்த அசுரர் உமக்கு அடிமைகளல்லவா? அவர்களுக்குக் கொடாமல் எங்களுக்கு மாத்திரம் கொடுத்ததேன்? ஒன்ருய்ப் பலவாய் உணர்வாய் உயிராய் மற்றுமாய் ஊழிக்காலங்கள் முடிகிற காலத்திலே நிலேயாகி, எல்லாவுலகமும் தானுகி நின்ற ஞானக்கொழுந்தே, எங்கள் குற்றங்களேத் தீர்க்கிற நாயகமே, நீர் நல்வினே செய்கிறவர்களேக் காத்துத் தீவினே செய்கிறவர்களேத் தண்டிக்கிறீர். அந்தத் தீவினேயும் நீர் உண்டாக்கினதல்லவோ? பூர்வத்திலே சகலரும் வரம்பில் லாத மாயத்தில் மயங்கிக்கிடந்து, பின்பு தெளிந்து, இறை வரான ஆதி வஸ்து நீர்தானென்று அறிந்து சத்த ரிஷிகளும் சத்தியமாய் நிச்சயஞ்செய்த போது அவர்கள் மனத்திலிருந்த ஐயங்களெல்லாம் தீர்த்து மெய்யறிவு கொடுத்துத் தெளியப் பண்ணினவரும் நீரல்லவா?" என்று இப்படிப் பலபல வித

மாகத் தோத்திரம் செய்து, பின்பு சரபங்கரைப் பார்த்து, “நீர் பிரமலோகத்துக்கு வருகிறதில்லை என்கிறீரே. நான் போய்வருகிறேன்,” என்று விடை பெற்று ஆகாயமார்க்கமே போனான்.

அப்போது ஸ்ரீராமரைக் கண்டு சரபங்கர் எதிர் கொண்டு வந்தார். அவரை ஸ்ரீராமர் சேவித்துக்கொள்ள, அவரும் மிகுந்த அன்புடனே ஸ்ரீராமரைத் தழுவிக்கொண்டு, தம்பி யாரும் சீதையும் உடன் வரத் தம்முடைய ஆச்சிரமத்திற்கு ஸ்ரீராமரை அழைத்துக்கொண்டு போனார். ஸ்ரீராமர் அந்த ஆச்சிரமத்தைத் திருப்பாற்கடல்போல எண்ணி மகிழ்ந்திருந் தார். அன்று இராத்திரி அவ்விடத்தில் தங்கியிருக்கிற போது, பொழுது விடிகிற நேரத்திலே ஸ்ரீராமருக்கெதிரே சரபங்கர் வந்து, “சுவாமி, நான் அக்கினிப்பிரவேசம் செய்ய வேண்டுமென்று கருதியிருக்கிறேன். நீர் உத்தரவு கொடுக்க வேண்டும்,” என்று கேட்டு, மிகுந்த அக்கினியை உண்டாக் கினார். அப்போது ஸ்ரீராமர் சரபங்கரைப் பார்த்து, “ஐயா, சரபங்கரே, நீர் என்ன செய்கிறீர்?” என்று கேட்க, சரபங் கர், “இலட்சுமிபதியே, நான் இருவினைகளுமற்று மோக்ஷம் அடைய நினைக்கிறேன். கிருபை செய்து அருளும்,” என்று சொல்லினர். ஸ்ரீராமர், “சரபங்கரே, நான் வந்த வேளையில் நீர் இது செய்யவேண்டுவதென்ன?” என்று கேட்க, அவர், “நீர் இவ்விடத்திற்கு எழுந்தருள்வீரென்றெண்ணித் தவம் செய்துகொண்டிருந்தேன். நீர் வந்தீர். உம் தரிசனமாகவே, என் வினை போய்விட்டது! இந்திரர் வந்து, ‘பிரமதேவர் தமது உலகத்தை உமக்குக் கொடுத்திருக்கிறார். வாரும்,’ என்று சொல்லி அழைத்தார். நான் அதற்குச் சம்மதியாமல், ஒரு நாளும் கெடாத பதவியைச் சேரவேண்டுமென்கிற முயற்சி யில் இருந்தேன். அந்தப் பதவியை நீர் எனக்குக் கொடும்,” என்று சொல்லிக்கொண்டே பத்தினியுடனே அக்கினியிலே மூழ்கி, வேதமும் அறிகிறதற்கு அரிதாயிருக்கிற திருமாமணி மண்டபமென்கிற பரமபதம் சேர்ந்தார்.

அண்டம் அகிலமும் ஒரு கவளமாக உண்ட அந்தப் புருஷோத்தமருடைய அனந்த திருநாம சங்கீர்த்தனைகளில் ஒன்ருகிய ராம கீர்த்தனை செய்கிறவர்கள் பெறுகிற பதவி, மரணாந்தத்தில் பிராட்டியுடனே பிரத்தியக்ஷ தரிசனம் செய்த இந்த மகரிஷிக்குக் கிடைக்கிறது அருமையா? ஆதலால், எளிதிலே அவர் அந்தத் திருமாமணி மண்டபம் சேர்ந்தார்.

## 3. அகத்தியப் படலம்

இப்படிச் சரபங்க மகரிஷியும் அவர் பத்தினியும் அக்கினிப் பிரவேசமானதை ஸ்ரீராமலட்சுமணர்கள் கண்டு மனமிரங்கி, அவ்விடம் விட்டுச் சீதையுடனே நடந்து, மலைகளும், நதிகளும், அருவிச்சாரல்களும், நெருங்கிய சோலைகளும், வனங்களும், தடாகங்களும் கடந்து, தண்டகாரணியம் சேர்ந்தார்கள். அவ்விடத்திலே வாலகில்லியர், முண்டர், மோனர் முதலிய ரிஷீஸ்வரர்கள் ஸ்ரீராமரைக் கண்டு கண்களும் மனமும் களித்து, கோபாக்கினியில் மிகுந்த இராட்சதர்கள் உபத்திரவத்தினுல் தாங்கள் வேருெரு காரியம் செய்கிறதற்கு இயலாமல் வெதும்பிக்கொண்டிருந்தவர்களாதலால், அவரைக் கண்ட மாத்திரத்தில் அக்கினியினுலே வெந்து கருகின மரத்துக்கு அமிர்தம் சொரியத் தளிர் விட்டது போலச் சந்தோஷித்தார்கள். வேண்டினதை வேண்டியவர்களுக்குக் கொடுக்கிற தவத்தை உடையவர்களாயிருந்தும், இராட்சதர்களாலே கோபமும் போகாமல் பொறுமையும் வாராமலிருந்தவர்கள், மிகுந்த ஆனந்தத்துடனே எழுந்திருந்து, நீலமேக சாமள ரூபரான ஸ்ரீராமரை அதிக அன்புடனே வந்து சூழ்ந்து கொண்டு, அவர் சேவிக்கிற போதெல்லாம் ஆசீர்வாதம் செய்து, மனேல்லாசமாயிருக்கிற ஒரு சோலையிலே அழைத்துப்போய், அதிலிருக்கச் சொல்லி, தங்கள் ஜாகைகளிலே தாங்கள் போய்ச் சேர்ந்து, மறு நாள் ரிஷிகளெல்லாரையும் அழைத்துக்கொண்டு தங்கள் கிலேசத்தைச் சொல்லிக்

கொள்ள ஸ்ரீராமர் எழுந்தருளியிருக்கிற சோலைக்கு வந்து சேர்ந்தார்கள்.

அப்படி வந்த ரிஷிகளை ஸ்ரீராமர் சேவித்து, தோத்திரம் செய்து, "அனைவரும் இருந்தருளுங்கள்," என்று கூறித் தாமும் இருந்தருளினர். அப்போது ரிஷிகள் ஸ்ரீராமரைப் பார்த்து, "சக்கரவர்த்தி மைந்தரே, நாங்கள் வந்த காரியத்தைக் கேளும்: தரும சிந்தையும் இரக்கமுமில்லாத இராட்சதர்கள் இவ்விடத்திலிருந்துகொண்டு எங்களை உபத்திரவப் படுத்துகிறார்கள். அதனால், தவம் செய்கிற மார்க்கத்தை விட்டுவிட்டோம்; புலிக்கூட்டங்கள் சஞ்சரிக்கின்ற இவ் வாரணியத்திலே மான்கள் போல இரவும் பகலும் நொந்து இரங்கிப் பயந்து நடுங்கியிருக்கிறோம். எங்களுக்கு மோட்சம் கிடைக்குமா? தவம் நடக்கவில்லை. நாங்கள் வேத சாஸ்திரங்களை ஓதுகிறதில்லை; வாசிக்கத்தக்கவர்களுக்குச் சொல்லிக்கொடுக்கிறதில்லை; ஓமாக்கினி வளர்க்கிறதில்லை. இனி யார் எங்கள் வருத்தத்தை நீக்குகிறவர்கள்? நாங்கள் பூர்வத்திலே செய்திருந்த தபோ பலத்தினாலே நீர் வந்தீர்; துயரமென்கிற இருட்டில் அலைகிற எங்களுக்குச் சூரியனாய்த் தோன்றினீர். நாங்கள் உமக்கடைக்கலம்," என்று மிகவும் வருந்திச் சொன்னார்கள்.

அவ்வார்த்தையை ஸ்ரீராமர் கேட்டு, "நீங்கள் ஒன்றுக்கும் அஞ்ச வேண்டா. இந்த அண்டத்துக்குள்ளும் வெளியிலும் அந்த இராட்சதர்களிருந்தால், என்னுடைய பாணங்களினாலே மடிந்து விழுவார்கள். இராசா இறந்துபோகவும், தாயார் கிலேசப்படவும், என் தம்பி வருந்தவும், பட்டணத்து ஜனங்கள் துயரப்படவும் நான் ஆரணியத்துக்கு வந்தது என் புண்ணிய பலத்தினாலே அல்லவா? தருமம் தப்பாமல் நடக்கிற அந்தணர்களான உங்களுடைய மகிமையும் பெருமையும் தெரியாமல் உபத்திரவம் செய்கிற அந்தப் புத்தியீனரான இராட்சதர்களைச் சங்கரியாமல் விடுகிறதில்லை. அந்த இராட்சதர்களாலே என் சரீரம் போனாலும் உத்தமமே.

நான் பிறந்து பெறுகிற பாக்கியம் இதைப்பார்க்கிலும் வேறில்லை. வில்லும் அம்பருத்தூணியும் சுமந்த என் தோள் களின் பாரமும் தீரும். பசுவுக்காகவும் பிராமணருக்காகவும் ஏழைகளுக்காகவும் சகாயமாய்ப் பிராணனை விடுகிறவர்கள், தேவர்க்கும் தேவராவார்கள். சூரசங்கார சுப்பிரமணியரும், திரிபுராந்தகரான உருத்திரமூர்த்தியும், அந்த இராட்சதரை வந்து காத்தாலும், தருமவழி நடவாத அந்த இராட்சதர்களை வேரறுத்து உங்களை இரட்சிக்கிறேன்!" என்று சொல்ல, ரிஷிகள் சந்தோஷித்து, "தாயார் ஆசையுடனே திட்டம் செய்து அனுப்பினபடி உரிய காலமெல்லாம் இவ்விடத்தி லேயே எங்கள் மனக்குறையைத் தீர்த்துக்கொண்டிரும்," என்று சொல்ல, ஸ்ரீராமர் அவர்களிஷ்டப்படி அவ்விடத்தி லேயே வாசமாயிருந்தார். அவர்களும் பத்து வருஷம் வருத்த மில்லாமல் சுகமாயிருந்தார்கள்.

அந்த மகரிஷிகள் ஒரு நாள் ஸ்ரீராமரைப் பார்த்து, "அகஸ்திய முனிவர் ஆச்சிரமத்துக்கு நீங்கள் போய் அவ ரைத் தரிசனம் செய்து வரவேண்டும்," என்று சொன்னார் கள். அப்படியே சீதாபிராட்டியுடனே ஸ்ரீராம லட்சுமணர்கள் நடந்தார்கள்.

அவர்கள் விருட்சங்களும் மூங்கில்களும் நெருங்கிய அந்தக் காட்டின் பாதையை மெள்ளமெள்ள நடந்து கடந்து, வழியில் ஜோதிப்பிரகாசமான **சுதீட்சண மாமுனிவர்** வாசமா யிருக்கிற சோலையிலே போய்ச் சேர்ந்து, அந்த முனிவரைச் சேவித்தார்கள்; அவர் ஆசி கூறி அவ்விடத்திலிருக்கச் சொல்லி உபசாரம் செய்ய, அப்படியே அந்தச் சோலையி லிருந்தார்கள். மகரிஷி அவர்களுக்குச் செய்ய வேண்டிய உபசாரங்கள் யாவும் செய்து, "நீங்கள் இவ்விடத்துக்கு வர நான் என்ன தவஞ்செய்தேன்!" என்று சொன்னார். ஸ்ரீராமர், "சுவாமி, தவமகிமையினாலே உமக்குச் சமான மானவர் யாரிருக்கின்றார்?" என்று மிகுந்த அன்புடனே சொல்ல, சுதீட்சண மாமுனிவர், அவரைப் பார்த்து, "தச

ரத ராமரே, தவமெல்லாம் நீர் விருந்தாக வாங்கிக்கொள்ளும்,'' என்று அன்புடனே சொல்லினர். இப்படிச் சொல்லிய முனிவரை ஸ்ரீராமர் நமஸ்கரித்து, " சுவாமி, எனக்குச் சகல தவமகிமையும் கொடுத்தேயிருக்கிறீர். அகஸ்திய மாமுனிவரைச் சேவிக்க வேண்டும்,'' என்று சொல்ல, "நல்ல காரியமே நினைத்தீர். நானும் அது சொல்ல வேண்டுமென்றுதானிருந்தேன். நீர் அவ்விடத்திலே போய்ச் சேர்ந்தால், உமக்குச் சகல நலமும் உண்டாகும். நீர் தண்டகாரணியத்தில் வந்திருக்கிற சமாசாரம் கேட்டு, நீர் வருவீரென்று அவர் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிருர். சீக்கிரம் அவரிடத்தில் போய்ச் சேர்தல் மிகவும் நல்லது. அது தேவர்களுக்கும் நல்லது,'' என்று வழியுஞ்சொல்லி, ஆசீர்வாதஞ் செய்தார்.

ஸ்ரீராமர் நடந்து அருவிச்சாரலையுடைய அந்தச் சோலைக்குச் சீக்கிரத்தில் போய்ச் சேர்ந்தார். அகஸ்திய மாமுனிவர் மிகவும் சந்தோஷமெய்தி, எதிர்கொண்டு வந்தார். அவர் என்றுமுள தென்றமிழ் இயம்பி இசை கொண்டவர்; அசுரர்கள் சமுத்திரத்திலே மூழ்க, அவர்கள் அதிலிருக்கிற மட்டுக்கும் சாகிறதில்லையென்று தேவர்கள் வந்து தம்மிடத்திலே முறையிட, சமுத்திர நீரை ஒரு கையால் வாரிச் சாப்பிட்டவர் ; திரும்பவும் உமிழச் சொன்னுல் உமிழ்ந்தவர். வாதாபியென்கிறவன் சகலரையும் வஞ்சனைச் சூதினுலே கொன்று தின்றுகொண்டிருந்தான். அவன் சரீரத்தை அவர் உண்டு ஜீரணம் பண்ணி உலகத்தினுடைய துயரங்களைத் தீர்த்தவர்; விந்தியகிரி பர்வதத்தைப் பாதாளத்திலழுத்தினவர். வட பாரிசத்திலே நாகாபரணரான சிவபிரானிருக்கிறது போலத் தென்பாரிசத்திலே மலய மலையிலே தாமிருந்து பூமியைச் சமானமாக இருக்கச் செய்தவர். நான்கு வேதத்திலும், தர்க்க சாஸ்திரத்திலும், அறிவிலும் மிகுந்தவர் ; ஸ்ரீமந்நாராயணரே பரவஸ்துவென்று தெரிந்து நம்பிச் சந்தோஷித்திருக்கிற சிந்தையையுடையவர். அவர் ஸ்ரீராமர் வந்தாரென்கிற அதிக

சந்தோஷத்துடனே வந்து கண்டு, நேத்திரங்களிலே ஆனந்த பாஷ்பம் பொழிய நின்ருர்.

எட்டுத்திசையும், சத்தலோகங்களும், சகல பிராணிகளும் பிழைக்கும்படி கமண்டலத்திலே காவேரியைக் கொண்டு வந்த அகஸ்திய மகரிஷியை ஸ்ரீராமர் சேவித்தார். அன்புடனே அவரும் இவரைத் தழுவிக்கொண்டு, "நீர் வந்தது நல்லது!" என்று பலபல உபாசாரங்கள் சொல்லி, அதிக சந்தோஷத்துடனே தம்முடைய சோலைக்கு அழைத்துக்கொண்டு போனுர்; அவ்விடத்தில் ஸ்ரீராமருக்கு விருந்து முதலானவை செய்வித்து, "ஸ்ரீராமரே, என் குடிலுக்கு நீர் வந்து என்னுடைய தவத்தை முடித்தீர்," என்று சொல்ல, ஸ்ரீராமர், "தேவர்களும் ரிஷீஸ்வரர்களும் உம் கிருபையினுலல்லவா பெருமை பெற்ருர்கள்? உம் கிருபை எனக்கு இன்றைக்குக் கிடைத்தது. இனி எனக்கு என்ன குறை? சகல லோகத்தையும் ஜயங்கொண்டவனுனேன்!" என்று சொன்னுர்.

அது கேட்ட அகஸ்திய மாமுனிவர், "ஸ்ரீராமரே, நீர் தண்டகாரணியத்திலே வந்திருக்கிறீரென்ற செய்தி கேட்டேன்; எப்படியும் இவ்விடம் வருவீரென்று சந்தோஷித்திருந்தேன். அப்படியே குணநிதியான நீர் வந்து தரிசனம் கொடுத்தீர். இனி நீர் இவ்விடத்திலேயே வாசமாயிருந்தீராஞல், செய்ய வேண்டிய தவமும் செய்யலாம். இராட்சதர்கள் வந்தால், அவர்களை ஜயித்து, எங்கள் மனக்கிலேசங்களையும் தீர்ப்பீர். அதனுலே, வேதமும், நீதியும், தருமமும் வாழ்ந்து விருத்தியாகும். தேவர்கள் உயர்வார்கள். அசுரர்கள் தாழ்வார்கள்," என்று சொன்னுர்.

ஸ்ரீராமர், "சுவாமி, தீமை செய்கிற இராட்சதர்களை எல்லாம் கொல்லத் தீர்மானித்திருக்கிறேன். நான் இவ்விடத்திலிருக்கிறதைப்பார்க்கிலும் அந்தப் பாவிகள் வருகிற வழியிலே இன்னம் சற்றே தெற்கே போயிருக்கிறது நலமென்று எனக்குத் தோன்றுகின்றது," என்று சொல்ல, "நல்ல காரி

யம் சொன்னீர்! அப்படியே போயிருக்கிறது உத்தமம்,'' என்று சொல்லி, "இந்த வில்லும் அம்பருத்தூணியும் பூர்வத்திலே சிவ பரம்பொருள் என்னிடத்திலே வைத்திருந்தார். நீர் இவற்றைவைத்துக்கொள்ளும்,'' என்றுகொடுத்து, "கோதாவரி தீரத்திலே மரங்களும், மலைகளும், மணல் குன்றுகளும், புஷ்பச் சோலைகளும் சூழ்ந்து மிகுந்த அழகாயிருக்கிற ஒரு பர்வதச்சாரலிலே, **பஞ்சவடி** என்று ஓர் இடமிருக்கின்றது. அவ்விடத்திலே வாழைப்பழம், செங்நெல், தேன் முதலானவை இருக்கின்றன. அவ்விடத்திலே போய் வாசம் பண்ணிக்கொண்டிருங்கள்,'' என்று அகஸ்திய மாமுனிவர் சொல்லினர்.

ஸ்ரீராமர் அவரைச் சேவித்து விடை பெற்றுக்கொண்டு, சீதையும் தம்பியாரும் உடன் வர, அகஸ்திய முனிவரின் மனமும் தொடர்ந்து வர, அவ்விடத்தை விட்டுச் சென்றார்.

## 4. சடாயு காண் படலம்

அவர்கள் நடந்து போகிற போது, வழியில் கழுகுகளுக்கெல்லாம் ராஜாவாகிய சடாயுவைக் கண்டார்கள். சடாயு சகல சாஸ்திரங்களைக் கற்ற கேள்வியும், வாய்மையும், புத்திக் கூர்மையும், அறிவும், யோசனையும் நிறைந்தவர்; அதிக கீர்த்தியையுடைய அருணனுடைய புத்திரர்; அனேக கற்ப காலங்கள் கண்டவர். அவரை இராமலக்குமணர்கள் கண்டு ஐயமுற்று, "இவன் இராட்சதனே!'' என்று நினைத்தார்கள். அவரும் அவர்களைப் பார்த்து ஐயமுற்று, "இவர்கள் ரிஷிகளோ? கையில் வில் வைத்திருக்கின்றார்களே! ஆகையால், ரிஷிகள் அல்ல. சடை முடி தரித்திருக்கின்றார்கள். தேவர்களோ? ஸ்ரீமகாலட்சுமிக்குச் சமானமான இந்த ஸ்திரீயுடனே வந்த இந்த வீரர்கள் யாரோ தெரியவில்லையே! இவர்கள் சாயலைப் பார்த்தால் நம்முடைய பிராண நேசரான

தசரத மகாராஜாவைப் போலக் காண்கின்றது!'' என்று நினைத்து, அன்புடனே, "நீங்கள் யார்?'' என்று கேட்டார்.

அப்போது அவர்கள், "நாங்கள் தசரத மன்னரின் புத்திரர்கள்,'' என்றார்கள். சடாயு உடனே சமீபத்திலே வந்து, "ராஜா சுகமாயிருக்கின்றாரா?'' என்று கேட்டார். ஸ்ரீராமர், "அவர் தம்முடைய சத்தியத்தை நிலை நிறுத்திச் சுவர்க்கம் போய்ச் சேர்ந்தார்,'' என்று சொல்லினர். அது கேட்ட சடாயு தம் உயிரே போனதுபோலப் பதைத்துத் துடித்து ஏங்கிப் புத்தி கலங்கி, சோர்ந்து பூமியிலே விழுந்துவிட்டார். அப்படி விழுந்தவரை ஸ்ரீராமலட்சுமணர் இருவரும் தழுவி யெடுத்துத் தங்கள் கண்களில் வருகின்ற நீராலே அவர் முகத்தைக் கழுவினார்கள். சடாயு அழிந்த நெஞ்சுடனே பிரலாபிக்கத் தொடங்கி, "ஐயோ! கொடைக்கும் பொறுமைக்கும் இருப்பிடமாய், பொய்க்குப் பகையாய், மெய்க்கு ஆபரணமாய், கீர்த்திக்கு உறைவிடமாயிருந்த நீர், தரித்திரர்களும் தருமமும் நானும் எப்படிப் போவோமென்று விட்டுப் போய்விட்டீர்! சக்கரவர்த்தியாய் ராஜ்யபாரம் செய்வதை விட்டு, என்னுடைய சினேகிதத்தைச் சோதித்துப் பார்ப்பதற்குத்தான் போய்வீட்டீரோ? நான் உம்முடைய மரணம் கேட்டும் இன்னம் என் பிராணனை விடாமல் வைத்துக்கொண்டிருக்கிறேனே! சம்பராசுரனுடன் யுத்தஞ்செய்து ஜயங்கொண்ட சௌரியவந்தரே, இந்தப் பூமியில் இருப்பவர்கள் அறிய, 'நான் சரீரம்; நீர் என் உயிர்,' என்று சொல்லியிருந்தீரே! அந்தச் சத்திய வசனப்படி உயிர் பூமியிலே கிடக்க புத்தியில்லாத கூற்றுவன் உடலைக் கொண்டு போனானே?'' என்று கூறி, ஸ்ரீராம லட்சுமணர்களைப் பார்த்து, "பிள்ளைகளே, கேளுங்கள்: பூர்வத்திலே தட்சப் பிரஜாபதிக்கு ஐம்பது பெண்கள் பிறந்தார்கள். அவர்களுள் பதின்மூன்று பெண்களைக் காசிப மகரிஷி கலியாணம் பண்ணிக்கொண்டார். அதிதி என்பவள், முப்பத்து முக்கோடித் தேவர்களையும் வாமனாவதாரியான விஷ்ணுவையும் பெற்றாள். திதி என்பவள்,

அறுபத்தாறுகோடி அசுரர்களைப் பெற்ருள். தனு என்பவள், தானவர் முதலானவர்களைப் பெற்ருள். மதி என்பவள், மனிதரையும் அவர்கட்கு இயல்பான வருஷ முதலியவைகளையும் பெற்ருள். சுரபி என்பவள், பசுக்களையும் சராசரங்களையும் பெற்ருள். குரோதவசை என்பவள், கழுதை, கடம்பை ஒட்டகம் முதலியவைகளைப் பெற்ருள். வினதை என்பவள், காற்று, இடி, மின்னல், அருணன், கருடன், கூகை, பருந்து, பட்சி முதலியவைகளைப் பெற்ருள். தாம்பிரை என்பவள், ஊர்க்குருவி, கௌதாரி, காடை முதலியவைகளைப் பெற்ருள். கழை என்பவள், கொடிகளையும் செடிகளையும் பெற்ருள். கத்துருவை என்பவள், பலபல சிரசுகளையுடைய சர்ப்பங்களைப் பெற்ருள். சுதை என்பவள், ஒருதலைப்பாம்பு முதலியவைகளைப்பெற்ருள். அரிஷ்டை என்பவள், ஓணன், உடும்பு, அணில் முதலியவைகளைப் பெற்ருள். இழை என்பவள், ஜலசரம் முதலியவைகளைப் பெற்ருள். இப்படி அந்தப் பதின்மூன்று ஸ்திரீகளாலே ஆதியில் உலகமுண்டாயிற்று. அவர்களிலே வினதை புத்திரஞன அருணன், அரம்பையைச் சேர்ந்தான். அவனுக்குச் **சம்பாதி**யும் நானும் பிறந்தோம். என் பிதாவான அருணன் சஞ்சரிக்கின்ற இடமெல்லாம் நானும் கூடத் திரிவேன். அப்போதே நான் தசரத சக்கரவர்த்திக்கு இன்னுயிர்த் துணைவனுயிருந்தவன். வருணச்சிரமம் விதிக்கும் போதே பிறந்தவன் நான். கழுகுக் கூட்டங்களுக்கெல்லாம் ராஜாவான சடாயு என்னும் பேருடையவன் நானே,'' என்று சொன்னுர்.

அதைக் கேட்டு, ஸ்ரீராமலட்சுமணர் அஞ்சலியஸ்தராய், தேவலோகம் போன தம் பிதா திரும்பி வரக்கண்டவர் போல சடாயுவிடத்தில் அதிக அன்புடையவராயினர். சடாயு அவ்விருவரையும் தம் சிறகினுலே தழுவிக்கொண்டு, "மக்களே, எனக்குச் செய்ய வேண்டிய கடன்களைச் செய்யுங்கள். தசரதர் பிரிந்து போயும் நான் சரீரம் வைத்துக்கொண்டிருக்கலாமா? அக்கினியில் விழுந்திறந்து அந்தத் துயரம்

தீருகிறேன் !'' என்று சொல்ல, ஸ்ரீராமர், "ஐயா, உம் தமையனர் தேவலோகம் போயினர். நீரும் எங்களை விட்டுப் போய்விடலாமா? எங்களை இரட்சிக்கிறவர்கள் யாரிருக்கிறார்கள்? நாங்கள் இந்த ஆரணியத்திற்கு வந்த துயரமெல்லாம் உம்மைக் கண்டு பேசின பின்பு நீங்கினேம்! நீரும் எங்களை நீங்கலாமா? தரும சொரூபரே,'' என்று சொல்லி மிகவும் துயரத்துடனே நின்றார்.

சடாயு ஸ்ரீராமலட்சுமணர்களைப் பார்த்து, "நல்லது! பிள்ளைகளே, அப்படியானல் நீங்கள் அயோத்திக்குப் போய்ச் சேர்ந்த பிறகு நானும் தெய்வலோகம் போய்ச் சேருகிறேன்,'' ராஜா தெய்வலோகம் சென்றால் நீங்களிருந்து ராஜ்ய பரிபாலனஞ் செய்ய வேண்டும். அதை விட்டு இப்படி ஆரணியத்திற்கு வரவேண்டியதென்ன?'' என, ஸ்ரீராமர், தம்பியைப் பார்த்தார். அதை அறிந்த இலட்சுமணர் சிறிய தாயாலே வந்த காரியம் எல்லாம் அவருக்குச் சொன்னர்.

சடாயு மிகுந்த சந்தோஷமுடையவராய், "தகப்பனரைச் சத்தியவந்தராக்கி, சிறிய தாயார் சொன்ன வார்த்தையை ஏற்றுக்கொண்டு ராஜ்யத்தைத் தம்பிக்குக் கொடுத்து வந்த மகனே, இந்தக் காரியம் நீ தவிரப் பின்னையார் செய்யப்போகிறார்? மகனே, நீ சத்தியவந்தன். இந்தப் பெண் யார்?'' என்று கேட்டனர். அப்போது, இலட்சுமணர் தாடகை சங்காரம் முதலாக, வில்லிறுத்தது நடுவாக, ஆரணியத்துக்கு வந்தது முடிவாக, நடந்த செய்திகளெல்லாம் தெரியச்சொன்னர். அது கேட்ட சடாயு, "நீங்கள் ராஜ்யத்திற்குப் போகிற மட்டும் இவ்விடத்திலேயே இருங்கள். நான் உங்களைக் காக்கிறேன்,'' என்று சொல்லினர். அதைக் கேட்ட இராமர், "ஐயா, அகத்திய மாமுனிவர் கோதாவரி தீரத்துள்ள பஞ்சவடியில் வாசம் செய்யச் சொல்லி ஆக்கியாபித்திருக்கிறார்,'' என்று சொல்ல, அது கேட்டு, "மிகவும் நல்லதாயிற்று! அந்தப் பஞ்சவடித் தீரத்திலேயே இருங்கள். அதை உங்களுக்குக் காண்பிக்கிறேன். வாருங்கள்,'' என்று எழுந்து,

அவர்களுக்கு நிழலுண்டாகும்படி ஆகாயத்தில் வட்டமிட்டுப் பறந்து அழைத்துக்கொண்டு போய்ப் பஞ்சவடித் தீரத்தைக்காட்டி, "மக்களே, இராட்சதர்கள் இவ்விடத்திலே வேறு ரூபமெடுத்துக்கொண்டு வருவார்கள். நீங்கள் ஜாக்கிரதையாயிருங்கள்!" என்று சொல்லி, சடாயு தம் இருப்பிடம் போய்த் தன் குஞ்சுகளைக் கவனிக்கின்ற பறவையைப் போல அவர்களைக்கவனித்துக்கொண்டிருந்தார்.

## 5. சூர்ப்பணகைப் படலம்

பூமிக்கு ஆபரணம் போல அழகாய்ச் சகலருக்கும் ஞானப் பொருளைக் கொடுத்து மகிமை பொருந்தித் தெளிந்து குளிர்ந்து மதுரமாய் ஒழுக்கத்தைத் தழுவியிருக்கிற மகா கவிஞர் சொல்லிய பாடல் போல அதிக சிங்காரமாய் வருகிற கோதாவிரி நதியை ஸ்ரீராமலட்சுமணர்கள் பிராட்டியுடனே சென்று கண்டார்கள். சீதை மணற்குன்றங்களைப் பார்த்து, ஸ்ரீராமருடைய திருத்தோள்களையும் பார்த்தாள். ஸ்ரீராமர் அன்னங்கள் ஒதுங்கிப் போவதைப் பார்த்து, சீதையினுடைய நடையையும் பார்த்து நகைத்தார். சீதை அந்த நதியிலே நீர் அருந்தித் திரும்பி நடக்கும் மதயானையைப் பார்த்து, ஸ்ரீராமருடைய நடையையும் பார்த்து நகைத்தாள். அந்த நதி ஓரத்திலே அனேக பூங்கொடிகள் துவளுவதை ஸ்ரீராமர் பார்த்துச் சீதையினுடைய இடையையும் பார்த்தார். சீதை நீலோற்பல மலர்கள் நெருங்கிப் பூத்திருப்பதற்கு இடையிலே செந்தாமரை மலர்கள் மலர்ந்திருப்பதைக் கண்டு ஸ்ரீராமருடைய நேத்திரங்களையும் பார்த்தாள். இப்படி அந்த நதியினுடைய சிங்காரத்தைப் பார்த்துக்கொண்டே அதற்குச் சமீபத்திலிருக்கும் பஞ்சவடி என்னும் குளிர்ந்த சோலையிற் சேர்ந்து, தம்பியாராலே செய்யப்பட்ட பர்னசாலையிலே சீதையுடனே ஸ்ரீராமர் எழுந்தருளியிருந்தார்.

## சூர்ப்பணகையின் சூழ்ச்சி

இராட்சதர்களுக்கெல்லாம் அரசனுன இராவணனை வேரோடு முடித்துப் போடுவதற்கு, உயிரோடே கூட வியாதி உற்பத்தியாவது போல, ஒரு தாய் வயிற்றிலே அவனுடன் பிறந்த தங்கை ஒருத்தி. அவள் பெயர் சூர்ப்பணகை. அவள் செம்பராகம் போன்ற செம்பட்ட மயிர் உடையவள்; தேவர் களுக்கும் இருடிகளுக்கும் பூலோகத்தாருக்கும் துன்பத்தைக் கொடுப்பவள்; இடைவிடாமல் அந்த ஆரணியத்திலே வாசம் செய்துகொண்டு ஒரு கணப்பொழுதில் எங்தெந்த லோகத் திற்குப் போகவேண்டுமோ அவ்விடங்களுக்கெல்லாம் போய் வந்துகொண்டிருப்பவள். அவள் ஸ்ரீராமரைக் கண்டாள்; கண்டு, "இவர் யார்? மன்மதனே! அவனுக்கு ரூபமில்லையே! தேவேந்திரனே! ஆயிரம் கண்கள் இல்லையே! சிவனே! மூன்று கண்களில்லையே! விஷ்ணுவோ! சதுர்ப்புஜம் இல்லையே! ஆ! இதென்ன ஆச்சரியம்! சிவன் கண்ணினு லெரிந்து அரூபமான மன்மதன் அன்று முதல் இன்றை வரைக்கும் தவம் செய்து, தபோ பலத்தினுலே முன்னிருந்த தன் சொரூபத்திலேயும் அதிக சுந்தரனுனனே! நீலகிரி போன்ற புஜங்களும், திக்கஜத்தினுடைய தும்பிக்கைபோன்ற கைகளும், கண்ணிற்கடங்காத அழகும், அகன்றிருக்கும் மார்பும், பூரணச் சந்திரனைப் பழிக்கும் திருமுக மண்டலமு முடைய இந்த மகாபுருஷர், இன்னமெதற்குத் தவஞ்செய் கிறுர்? இவருடைய அதரத்திற்குச் சமானம் பவழமென்று உலகத்தார் சொல்லும்படி அந்தப் பவழம் செய்த பாக்கியம் யார் செய்திருக்கிறுர்! இவர் தரித்திருக்கும் மரவுரி செய்த தவம் பீதாம்பரமும் செய்யவில்லை! சகல இலட்சணத்துடனே இந்த மகாபுருஷரைச் சிருஷ்டித்த பிரமதேவன் நாணமடைந் திருப்பானல்லவா?" என்று இப்படி நினைத்து நினைத்து, மிகுந்த ஆசையுடனே திரவியத்தைச் சம்பாதித்து ஒருவருக் கும் ஈயாமல் காத்துக்கொண்டிருப்பவனுடைய கீர்த்தி தேய்

வது போல, தன் கற்புத் தேய்ந்தவளாகி, ஆகாயத்தில் ஒரு சித்திரமெழுதினது போலத் திகைத்து நின்று, நெஞ்சம் புழுங்கி, ஸ்ரீராமருடைய திருத்தோள்களின்மேல் பதித்த தன் பார்வையை வாங்கமாட்டாதவளாய்ப் பார்த்தபடியே நின்று கொண்டு, "இவருடைய மார்பிலே சேர்ந்தால் என் பிராண னிருக்கும்! அல்லாவிடில், பிராணன் போய்விடும்!" என்று அவரெதிரே போய் நிற்கத் தனக்குள் யோசனை செய்து, "இந்த ரூபத்துடனே போய் நின்றால், 'கோர தந்தங்களையும், சகல உயிர்களையும் தின்கிற வயிறுமுடையவளிவள்,' என்று தள்ளிவிடுவார். ஆகையால், நல்ல சுந்தரமான ரூபமெடுக்க வேண்டும்," என்று நினைத்து, தனக்குக் கைவல்யமாயிருக்கும் மந்திரத்தை ஜபித்து, பூரணச் சந்திரனைப்போன்ற முகமும், மாந்தளிருக்குச் சமானமான சிவந்த மேனியுமுடைய ஒரு ஸ்திரீ வடிவங்கொண்டு, மயில் போலவும், அன்னம் போலவும், வஞ்சிக்கொடி போலவும் நடந்து வந்தாள். அவள் காற்சிலம்பும் மேகலாபரணமும் சத்திப்பது கேட்ட ஸ்ரீராமர், "யாரோ ஒரு ஸ்திரீ இங்கே வருகிறாள் போலக் காண்கிறது!" என்று எண்ணித் திரும்பிப் பார்த்தார்; அவளை நன்றாய்ப் பார்த்து, மூன்று உலகத்திலும் இப்படிப் பட்ட சுந்தரியான ஸ்திரீ இல்லையே!" என்று ஆச்சரியப் பட்டார்.

அப்போது அந்த இராட்சசி, ஸ்ரீராமருக்குத் தன்மேல் ஆசையுண்டாகும்படி அவர் சமீபத்தில் வந்து, அவரது முகத் தைப் பார்த்து, கைகளைக் குவித்து வணங்கி, கண்ணென் கிற வேலை வீசி, மான் போல ஒதுங்கி, நாணமுடையவள் போல அப்புறம் நின்றாள். அப்படி நின்றவளை ஸ்ரீராமர் நோக்கி, "நீ யார்? உன் ஊர் எது? பேரென்ன? உனக்கார் உறவு?" என்று கேட்க, அவள், "நான் கமலவாசனான பிரமதேவன் பேரனுடைய குமாரத்தி; திரிபுராந்தகனான சிவ னுக்குத் தோழனான குபேரனுக்காக அஷ்ட கஜங்களை ஜயித் துக் கைலாச பருவதத்தையெடுத்த திரிலோக கண்டகனான

இராவணேசுவரனுக்குத் தங்கை. என் பேர் *காமவல்லி*,'' என்று சொல்லினள்.

இதைக் கேட்ட ஸ்ரீராமர் ஐயங்கொண்டு, "இந்த ரூபம் இவளுக்கு இயற்கை ரூபமன்று. இவள் குணத்தை முழுது மறிவோம்!'' என்று எண்ணி, "பெண்ணே, இராவணன் தங்கை என்று நீ சொன்னது மெய்யானல், இந்த ரூபம் உனக்கு வந்த காரணமென்ன ?'' என்று கேட்டார். அவள், "நான் அந்த மாய இராட்சதர்களோடே கூடியிருக்கின்ற வாழ்வை இச்சிப்பதில்லை ; விவேகமுடையவளாய், தருமவழியில் நடப்பவள் ; தேவர்கள் வரப்பிரசாதத்தால் இந்த ரூபம் பெற்றேன்,'' என்று சொன்னுள்.

ஸ்ரீராமர், "துணை இல்லாமல் நீ தனியே வரக் காரணம் என்ன ?'' என்று கேட்டனர். அதற்கு ஒரு நாளும் மெய் யென்பதே அறியாத அந்த இராட்சசி, "சுவாமி, நான் நல்லவர்களிடத்தில் சேர்ந்திருப்பதேயல்லாமல், பாவிகளிடத்தில் சேருவதேயில்லை; தேவர்களிடத்திலேயும் இருடிகளிடத்திலேயும் வாசமாயிருப்பேன்; இவ்விடத்தில் உம்மைக் கானவேண்டி வந்தேன்,'' என்று சொன்னுள்.

ஸ்ரீராமர், "பெண்ணே, நீ எங்களிடத்தில் என்ன காரியத்தை இச்சித்து வந்தாய் ?'' என, அவள், "ஐயா, குல ஸ்திரீக்குத் தன் மனக்கருத்தைச் சொல்லுவது அடாது. ஆயினும், சொல்கிறேன் : நான் காமத்தினலே வருந்துகிறேன் ! அதை அனுபவிப்பதற்கு உம்மையன்றி வேறெருருவரில்லை; காமன் செய்யும் கலாபனையை நீர் நீக்கியருள வேண்டும் !'' என்று சொல்லிச் சில குறிப்புகளைச் செய்து நின்ருள்.

ஸ்ரீராமர், "இவள் நல்லவளல்லள். இவளுக்கு வெட் கமுமில்லை,'' என்று எண்ணிப் பேசாமல் இருந்தார். அப் போது அவள் ஆசை மிகுதியினலே மனம் ஊசலாட, "அதி சுந்தரபுருஷரே, நீர் இவ்விடத்தில் வந்திருப்பதறியாமல் நான் ரிஷியினிடத்தில் ஏவல் செய்து, என் அழகையும் இளமையையும் வீணய்க் கழித்தேன் !'' என்று சொன்னுள்.

ஸ்ரீராமர் "சுந்தரி, நீ பிராமண ஸ்திரீ. நானோ, அரசன். இப்படியிருக்க, நீ இவ்விதம் சொல்லுவது உத்தமமா?" என்றார். அவள், "சுவாமி, எங்கள் தகப்பனார் பிராமணர். எங்கள் தாய் அருந்ததிக்குச் சமானமானவள். அவள் இராட்சதராஜன் மகள். இதை எண்ணி என்னையும் இராட்சசியென்று நீர் பராமுகமாய் எனக்குத் தயை செய்யாமற் போனால், என் பிராணன் போய்விடும்!" என்று சொன்னாள். ஸ்ரீராமர், நகைத்து, "நீ இராட்சதகணம். நான் மனுஷகணம். ஆகையால், பொருத்தம் இல்லையே!" என்று சொன்னார். அதற்கு அவள், "நான் இராவணன் தங்கையென்று சொன்னது, என் தப்பிதம். அந்தப் பாவப் பிறவித் தோஷத்தைத் தேவர் அனுக்கிரகத்தினாலே தீர்த்துக்கொண்டேன்; நீர் என்னைச் சேர்ந்து இரட்சிக்க வேண்டும்!" என்று சொல்ல, ஸ்ரீராமர், "பெண்ணே, உன் தமையன்மாருள் ஒருவன் திரிலோகத்துக்கும் அதிபதி. மற்றொருவன் குபேரன். இப்படிப்பட்டவர்களுடன் பிறந்திருக்கிற உன்னை அவர்கள் கொடுக்க வாங்கிக்கொள்ள வேண்டுமேயல்லாமல், இப்படித் தனியே பேசுவது தகாது," என, அவள், "சுவாமி, காந்தருவ மணம் ஸ்திரீயும் புருஷனும் முன்னே சேர்ந்து அனுபவிக்கிறதென்று வேதமே சொல்லுகிறபடியினால், நீரும் நானும் விரும்பிக் கூடிக்கலந்திருப்போமாகில், அது என் சகோதரர்களுக்கும் சந்தோஷமாகவே இருக்கும். அதுவுமல்லாமல், முன்னமே என் தமையன் ரிஷிகளுடனே பகையாயிருக்கிறவன். நீரோ, தனியே வந்திருக்கின்றீர். ஆதலால், அவனுடன் உறவு செய்கிறதற்கு உமக்கிது தவிர வேறே தருணமில்லை. தெய்வ லோகாதிபத்தியம் உமக்கு வரப் பட்டாபிஷேகம் செய்து வைக்கிறேன். அந்தத் தேவர்களும் வந்து உமக்கேவல் செய்துகொண்டிருப்பார்கள்," என்று சொன்னாள். அது கேட்ட ஸ்ரீராமர், "பெண்ணே, எனக்கு உன் தமையனான இராட்சதனுடைய கிருபையும் உண்டாயிற்று! உன் சேர்க்கையும் கிடைத்தது! உன்னுடன் நெடுங்கால

மிருந்து வாழவும் வாய்ப்புண்டாயிற்று! அது மாத்திரமா! பட்டணம் விட்டு வந்த தவமும் சித்தியாயிற்று!'' என்று சொல்லி நகைத்தார்.

அப்போது சீதை, தானிருக்கும் பர்னசாலேயை விட்டு ஸ்ரீராமரிடம் வர, அந்த இராட்சசி கண்டு திடுக்கிட்டு, அவளேப் பார்த்த கண்களேப் பெயர்க்கமாட்டாமல், பெருமூச்செறிந்து, "இங்கு இத்தகைய ரூபமும் உண்டோ!'' பெண்ணுய்ப் பிறந்த எனக்கே இந்த ரூபம் இவ்வளவு விகாரத்தைக் கொடுக்குமானல், மற்றவர்களுக்கு எப்படி இருக்கும்!'' என்று எண்ணி, ஸ்ரீராமரையும் சீதையையும் பார்த்து, "இந்த மகாபுருஷருக்கு இப்படிப்பட்டவள் மனேவியாய் இருந்தால், இவர் இவளே ஆரணியத்துக்குக் கொண்டு வாரார். இவள் யார்? எனக்குத் தெரியவில்லேயே!'' என்று மனம் புகைந்து, "காயாம்பூ வண்ணரான இந்த மகாபுருஷர் இந்த ஸ்திரீயைச் சேர்ந்தவரல்லர். இவளும் இவரிடத்தில் நம்மைப் போல ஆசை கொண்டு இவரைச் சேரவேண்டுமென்று அபேட்சித்து வருகிருள். இவள் வந்து இவருடனே பேசுகிறதற்கு முன்னமே இவளிடத்தில் இவருக்கு இகழ்ச்சி தோன்றும்படி செய்வோம்!'' என்று நினேத்து, ஸ்ரீராமரைப் பார்த்து, "சுவாமி, இதோ வருகிருளே, இவள் மாயம் செய்கிறதில் கெட்டிக்காரி; வஞ்சனேயிலே மிகவும் சமர்த்தி; இராட்சசி. இவள் மனத்தை அறிய இயலாது. இவள் வார்த்தையை மெய்யென்று தேறலாகாது. இவள் உருவமும் மெய்யான உருவமன்று. இவள் பலருடைய மாமிசங்களேத் தின்று வாழ்கிறவள். என்னவோ யோசனேயாய் வருகிருள். இவளேப் பார்க்கிறபோது எனக்குப் பயமாயிருக்கின்றது! இவள் சமீபத்தில் வருமுன்னமே விலகிவிடும்,'' என்று சொன்னுள். இவ்வார்த்தையை ஸ்ரீராமர் கேட்டு நகைத்தார். அந்தச் சமயத்தில் ஜானகி ஸ்ரீராமர் சமீபத்தில் வந்தாள். சூர்ப்பணகை, "நீ யார்? கொஞ்சமாகிலும் பயம் இல்லாமல் வருகிருயா?'' என்று நெருப்புச் சுவாலே போலக் கோபித்து

அதட்டினுள். அவ்வார்த்தையைக் கேட்டு, அவளேயும் கண்களாலே பார்த்து, சீதை மிகவும் பயந்து, துரிதமாய் நடந்து, நீலமேகத்தைப் பவழக்கொடி சூழ்ந்துகொண்டது போல ஸ்ரீராமருடைய தோளேத் தழுவிக்கொண்டாள். ஸ்ரீராமர், "இராட்சதருடன் விளேயாட்டாகப் பேசிக்கொண்டிருந்தாலுந் தீமையே விளேயும்," என்றறிந்து, அந்த இராட்சசியைப் பார்த்து, "நீ இப்படிப்பட்ட காரியங்கள் செய்து கொண்டு இங்கே இராதே! என் தம்பி அறிந்தால் கோபம் கொள்வான்! சீக்கிரம் போய்விடு!" என்று சொன்னுர்.

சூர்ப்பணகை, "பூலோகத்திலிருக்கிற ரிஷீஸ்வரர்களும், மன்மதனும், தேவர்களும் என்னே இச்சித்து இன்னம் தவம் செய்கிருர்கள்! அப்படியிருக்க, நீர் யாரோ ஒரு கன்னியைக் கண்டு என்னே இகழ வந்தது நன்ருய் இருக்கின்றது!" என்றனள்.

ஸ்ரீராமர், "இவளுக்கு என்ன சொன்னுலும் இவள் தன் குணத்தை விடாமல் ஏதேதோ பிதற்றிக்கொண்டிருக்கிருள்," என்று திருவுளத்தில் எண்ணி, மின்னலோடு பூமியில் நடந்து போகிற மேகம் போல மைதிலியுடனே தம் பர்னசாலேக்குப் போய்ச் சேர்ந்தார்.

சூர்ப்பணகை தன் பிராணன் போனது போல மூர்ச்சித்து, "நான் என்ன சொன்னுலும் கேளாமல் அந்த ஸ்திரீயினிடத்தில் அன்பு வைத்து அழைத்துக்கொண்டு போனுரே! இவரைச் சேராமற்போனுல் என் பிராணன் போய்விடும்!" என்றெண்ணி, ஒரு குளிர்ந்த குகையிலுள்ள பாறையிற் போய்ச் சேர்ந்தாள். சூரியனும் மேற்குச் சமுத்திரம் போய்ச் சேர்ந்தான்.

ஸ்ரீராமரைச் சேர்ந்து அனுபவிக்க வேண்டும் என்கிற அவாவையுடைய சூர்ப்பணகை மாலேப்பொழுதும் செவ்வானமும் வரவே, மிகவும் உருகி, மனமழிந்து, சோர்ந்து, காமாக்கினி மேலுமேலும் மூள, மிக மயங்கினுள். சந்திர கிரணம், சமுத்திர இரைச்சல், மந்தமாருதம் முதலியவை

களால் மிகவும் நொந்து புழுங்கி, "சரீரம் வெதும்பக் காய்கிற சந்திரனைக் கறியாக வைத்துக்கொண்டு புஷ்ப பாணம் பிரயோகிக்கிற மன்மதனை இதோ தின்றுவிடுகின்றேன்!" என்று நினைத்து எழுந்திருக்க, அப்போது மலையமாருதம் என்கிற வேலாயுதம் மார்பிலே ஊன்ற, மாய்ந்து போனவள் போலானாள்; சேவலோடே கூடியிருக்கிற சிவந்த தலையை யுடைய அன்றில் பட்சியானது கூவவே, பயந்து நடுங்கி ஒடுங்கினாள். அப்போது அவள் தனங்களிலே மாருதம் வந்து மோதவே, கலங்கிப் புழுங்கினாள்; குளிர்ந்த சுனை நீரிலே விழுந்தாள். அதுவும் கொதிப்புள்ளதாயிருந்தது. "கடூர மனத்தையுடைய மன்மதன் எய்கிற பாணத்துக்கு எங்கே பதுங்கி ஒளிக்கலாம்!" என்று திகைத்து, சந்திரனும் மாருதமும் மன்மதனும் தன்னைக் கண்டறியாதபடி குகையிலே புகுந்திருந்தாள். அத்தருணத்தில் ஸ்ரீராமருடைய திருமேனியை உருவெளியாகக் கண்டு, மகிழ்ந்து, பின்பு அது மறையச் சோர்ந்து வெட்கினாள். இப்படி அவள் தனது மோகத்துக்கு ஒரு முடிவில்லாமல், பிரளய காலாக்கினியிலே விழுந்தவள் போல வெந்து பதைத்து நொந்தாள். ஆனால், "ஸ்ரீராமரை என்ன உபாயமாவது செய்து சேரலாம்," என்கிற ஆசையினாலே அவள் பிராணன் போகாமல் இருந்தது.

சூரியன் உதயமாயினான். பொழுது விடியவே, சூர்ப்பணகை யோசனை செய்து, "அந்த ஸ்திரீ இவரிடத்திலிருக்கிற மட்டும் இவர் நம்மைக் கண்ணாலும் பாரார்! ஆகையால், சீக்கிரமாயோடி அவளை எடுத்துச் சாப்பிட்டு, இந்தச் சுந்தர புருஷருடனே கூடி வாழ்கிறதே நமக்குப் புத்தி," என்றெண்ணி, அதிசீக்கிரம் சீதையிருக்கிற பர்னசாலையை நோக்கி ஓடி வந்தாள்.

அப்போது, ஸ்ரீராமர் ஒரு தடாகத்திலே ஸ்நானம் செய்துகொண்டிருந்தார். அவள் அதைக் கண்டு, "இதுதான் சமயம்!" என்று பர்னசாலையருகே வந்தாள். இப்படி வந்துகொண்டிருக்கிறவள், அப்பர்னசாலையை அடுத்த வாசனை

பொருந்திய ஓர் இருண்ட சோலையிலிருந்து சீதையைக் காத்துக்கொண்டிருக்கிற இளையபெருமாளைப் பாராமல், "நாமெண்ணி வந்ததற்குச் சரியாய் அந்த ஸ்திரீ தனியே அகப்பட்டாள்! இனித் தாமதம் செய்யலாகாது!" என்று சீதையின் சமீபத்திலே நெருங்கினாள். அதை இலட்சுமணர் கண்டு, "யாரடி அங்குப் போகிறவள்? நில்லடி!" என்று அதட்டிக்கொண்டு சீக்கிரத்தில் நடந்து வந்து, அக்கினிக் கொழுந்துபோலிருக்கிற அவள் தலை மயிரை ஒரு கையால் பிடித்து, அரையிலிருந்த வாளையுருவினார். அப்போதவள், அவரைத் தூக்கிக்கொண்டு ஆகாய மார்க்கத்திலெழும்ப நினைத்தாள். அதை அவரறிந்து, தமது வாளினாலே அவளுடைய மூக்கும் காதும் முலைக்காம்பும் அரிந்து கோபம் தீர்ந்து, தம் கையிற்பிடித்திருந்த தலை மயிரை விட்டார். அவள் வாயைத்திறந்து அழுதவோசை அஷ்டதிக்குகளிலுமடைய, தேவர்களுடைய செவிகளும் செவிடுபட்டன. மூக்கறுபட்ட மோழையிலிருந்து வருகிற இரத்தப்பிரவாகம் பூமியெல்லாம் பெருகிற்று. இலட்சுமணர் அவளுடைய மூக்கும் முலையும் அறுத்தது, இனி இராவணனுடைய தலைகளை அறுக்கிறதற்கு நாள் வைத்தது போல இருந்தது. இப்படி அறுபட்ட சூர்ப்பணகை துள்ளித் துடித்துப் பூமியிலே விழுந்து புரண்டு துக்கித்து மூர்ச்சையாகி, எழுந்திருந்து, "நான் பெண்ணாய்ப் பிறந்து பட்ட பாடு நன்றாயிருந்தது!" என்று சொல்லி மிகவும் துக்கித்து அழுதாள். ஒரு நாளும் துயரமும் பயமுமறியாத குடியிலே பிறந்த அந்தச் சூர்ப்பணகை பெருமூச்சு விட்டு, கைகளாலே பூமியை அறைந்து, மயக்கத்தினாலே ஓடித்திரிந்து, யமனும் பயந்து நடுங்கும்படி தன்னுடைய உறவின் முறையார் பெயரையெல்லாம் நினைத்து நினைத்து ஒப்பாரியிட்டு அழத் தலைப்பட்டாள்:

"ஐயோ! அண்ணா, இந்தப் பூலோகத்திலே நீயுமிருக்க, ரிஷிகள் கையில் வில்லெடுத்துக்கொண்டு திரிவது உனக்குச் சின்னத்தனமல்லவா? தேவர்களெல்லாம் உன்னைத்

தலையெடுத்துப் பார்க்கிறதற்கும் பயந்து கிடப்பார்களே! சிவனுடைய மலையெடுத்த பெருமலையே, அண்ணாவே, அண்ணாவே, 'புலியானது அப்பாலிருந்தாலும் அதன் குட்டியை ஒருவரும் உபத்திரவம் செய்யார்,' என்று உலகத்தார் சொல்லுகிற வார்த்தையும் பொய்யாய்ப் போயிற்றே! ஊழிக் காலத்திலும் அசைவில்லாத மும்மூர்த்திகளுக்கும் தேவர்களுக்கும் தானவர்களுக்குமுண்டாகிய பலத்தைப் பார்க்கிலும் அதிக பலத்தையுடைய இராவணேஸ்வரா, நான் பட்ட பாடு பார்க்கிறதற்கு வாராயோ? காற்றையும் ஜலத்தையும் நெருப்பையும் கூற்றுவனையும் ஆகாயத்தையும் நவக்கிரகங்களையும் அடக்கி, அவர்களை வேலை வாங்குகிற நீ, இந்த இரண்டு மனிதருக்குத் தோற்று உன் பலத்தை விட்டுவிட்டாயோ? தேவர்களையும் நடுங்கச்செய்யும் இராவணேஸ்வரா, உனக்கும் தம்பிமாருக்கும் ஆகாரத்துக்கு யோக்கியமான மனிதர்களிடத்திலே அந்தப் பலங்களெல்லாம் ஒடுங்கிப் போயினவோ? தேவர் மூவரையும் ஜயிக்கத்தக்க பலத்தையுடைய கரனே, என் காட்சியைப் பார்க்க வாராயோ? இந்திரனும் பிரமாவும் தேவர்களும் ஏவல் கேட்க, சுந்தரமான தேவரம்பைகள் பல்லாண்டு இசைக்க, சகல லோகத்தாரும் வணங்கித் தோத்திரம் செய்ய, பூரணச் சந்திரன் போன்ற குடை பிரகாசிக்க, நீ கொலு வீற்றிருக்கிற சபையிலே நான் வந்து எப்படி முகத்தைக் காட்டுவேன்? ஒரு மனிதன் என் மூக்கையறுத்து, இன்னம் ஜீவனுடனேயிருந்து தன் தோளைப் பார்த்துக்கொண்டு மகிழ்ச்சியாயிருக்க, நான் இப்படிக் கிடந்து புலம்புகிறதா? இது கரனிருக்கிற ஆரணியமல்லவா? நான் இப்படிப் படலாமா? அண்ணா, இராவணேஸ்வரா, கரதூஷணர் முதலான இராட்சதரெல்லாரும் கும்பகர்ணனைப் போலவே தூங்குகிறார்களோ? நீயும் தூங்குகிறாயோ? ஐயோ! பாவிகளே, தேவர்களையெல்லாம் ஜயித்து, தேவேந்திரனுடைய காலிலே தளை பூட்டி, தேவர்களையெல்லாம் ஏவல் கொண்ட மருமகனே, ஒரு வில்லினாலே திசையிலிருக்கிறவர்

களை ஜயித்து இந்திரனைச் சிறையிலே போட்ட மருமகனே, இந்த மனிதர்களுடைய பலத்தைப் பார்க்க வாராயோ?'' என்று சொல்லிச் சொல்லி அழைத்துப் பூமியிலே கிடந்து புரண்டாள்.

அப்போது, ஸ்ரீராமர் சந்தியாவந்தனம் முதலானவை களை முடித்துக்கொண்டு வந்தார். சூர்ப்பணகை அவரைப் பார்த்து, வயிற்றிலே அறைந்துகொண்டு, கண்ணீராலும் மூக்குப் புண்ணீராலும் பூமியெல்லாம் சேருக்கி, "ஐயா, உம் திருமேனிக்கு அன்பு வைத்த பிழையினலே நான் பட்ட பாடு பாரும்!'' என்று திருவடிகளிலே விழுந்தாள். ஸ்ரீராமர், "இந்த இராட்சசி ஏதோ பொல்லாத காரியம் செய்தாள். இவளைத் தம்பிதான் இப்படிச் செய்திருப்பான்,'' என்று தெரிந்துகொண்டு, அவளைப் பார்த்து, "நீ யார்?'' என்று கேட்டார். அவள், "ஆ! என்னை நீரறியீரா? நான் இந்த மூன்று லோகமுமாளுகிற இராவணேஸ்வரனுக்குத் தங்கை யல்லவா? காமவியாதிக்கு மருந்து போலும் சுந்தரத்தை யுடைய புருஷரத்தினமே, நேற்று நான் வரவில்லையா?'' என்ருள், "நேற்று இலட்சுமிக்குச் சமானமான ரூபத்தோடு வந்தவளா நீ?'' என்று ஸ்ரீராமர் கேட்க, "ஆம் ஐயா! யாருக் காளுலும் காதுகளையும் மூக்கையும் அறுத்துவிட்டால், அழகு கெட்டுப் போகாதா?'' என்று சொன்னுள். அது கேட்டு ஸ்ரீராமர் நகைத்து, தம்பியாரைப் பார்த்து, "அப்பா, இவளை இவ்வாறு செய்கிறதற்கு இவளென்ன அபராதம் செய்தாள்?'' என்று வினவ, இலட்சுமணர் தமையனுரை வணங்கி, "சுவாமி, இவள் நினைத்து வந்தது அடியேன் அறி யேன்! ஆனுல், கண்களில் நெருப்புப் பறக்க வெகு கோபத் துடனே பிராட்டியாரை எடுக்க ஓடி வந்தாள்!'' என்று சொல்ல, அதைக் கேட்ட சூர்ப்பணகை, "அது சரி ஐயா, முன்னே நான் கோரிய நாயகர் சமீபத்திலிருக்க, எனக்குப் பின்னே வந்து தன் வசம் செய்துகொண்ட சக்களத்தியைக் கண்டால் எனக்குக் கோபம் வாராதா? நான் எடுத்துப்

போகாமல் விட்டுவிடுவேனே?'' என்றாள். அது கேட்ட ஸ்ரீராமர் கோபங்கொண்டு, "அடி இராட்சசி, நாங்கள் உன் குலத்தையெல்லாம் சங்காரம் செய்ய வந்திருக்கிறோம்! நீ இப்படிப் பிதற்றி மாண்டு போகாதே! இந்த ஆரணியத்தை விட்டு ஓடிப்போ!'' என்று சொன்னார்.

அதுகேட்ட சூர்ப்பணகை, "ஐயா, உங்களுக்கு உறுதியான வார்த்தை ஒன்று சொல்லுகிறேன்; அதை நன்றாய்க் கேளுங்கள்: பத்து முகங்களையுடைய இராவணேஸ்வரன் தங்கை நான். நீங்களோ, என்மூக்கை அறுத்ததால் உங்கள் குலத்தை வேரோடே அறுத்துப் போட்டவர்களானீர்கள். இனி உங்கள் பிராணன் நிற்கமாட்டாது! அழகையெல்லாம் வீணாய்ப் புல்லிலே கொட்டினீர்கள்! உங்களை யார் இரட்சிக்கப்போகிறார்கள்? நான் காத்தால் காப்பேன். என்னை நீங்கள் விரகத்தினாலே பிராணன் போகாமல் காக்கிறதானால், இராவணன் முதலிய இராட்சதக் கூட்டங்களால் துன்பம் வாராதபடி உங்களை நான் காத்துக்கொள்ளுவேன். நல்ல குடியிலே பிறந்து பதிவிரதையாயிருக்கிறவள் தன் சிறப்பைத் தானே சொல்லிக்கொள்ளலாகாது. ஆயினும், உம்மிடத்திலிருக்கிற மிகுந்த அன்பினாலே சொல்லுகிறேன்: தேவர்களைப்பார்க்கிலும் மிகுந்த பலம் பொருந்திய இராவணனுடைய தங்கையென்றால், உங்களுக்குப் போதுமே! போர்களிலே கூட நான் பின் பலமாய் இருப்பேன்; உங்களை வாகனமாய்ச் சுமந்துகொண்டு ஆகாயமட்டும் போவேன்; சுவையான பதார்த்தங்களையும் கொண்டு வந்து கொடுப்பேன். எதை நினைத்தாலும் அதை உடனே கொடுக்கத் தக்கவள் நான். இவைகளெல்லாம் உம்மிடத்திலேயிருக்கின்ற பூப்போன்ற சரீரத்தையுடைய அந்த ஸ்திரீயாலே ஆகுமா? குலத்திலேயும், நலத்திலேயும், பலத்திலேயும், புத்தியிலேயும், அழகிலேயும் எனக்குச் சமானமானவள் எந்த உலகத்திலேயிருக்கிறாள்? நீங்கள் யாரையாவது அறிந்ததுண்டானால், சொல்லுங்கள் பார்ப்போம்! 'மூக்கை

அறுத்துவிட்டோமே! இனி இவளுக்கு அழகில்லை!' என்று நினைக்க வேண்டா. ஒரு கணப்போதிலே அழகு உண்டாகும் படி செய்துகொள்ளுவேன்! மனம் மாத்திரம் ஒத்தால், என் பிராணன் உங்களுடையதல்லவா? பிறர் பார்த்து ஆசைப் படத்தக்க அழகிருக்கிறதே விஷமல்லவா? கொண்டவன் பார்த்துச் சந்தோஷிக்கிற ரூபமிருந்தால் போதாதா? சகல புவனங்களையும் நான் ஜயிப்பேன்! ஆனால், ஒரு மன்மத னுக்கு மாத்திரந் தோற்றுக் கிடக்கின்றேன்! ஆதலால், நீங்கள் அவனை மாத்திரம் ஜயித்து என்னை உயிருடனே வையுங்கள். என்னிடத்திலே தப்பில்லாமல் இருக்கையில் என் மூக்கையறுத்த உபாயம் நான் அறிந்துகொண்டேன். அதாவது, 'இவளை யாராயினும் பார்த்து ஆசைப்படாமல் இருந்தால் நம்மிடத்திலேயே இருந்துவிடுவாள்,' என்றல்லவா அப்படிச் செய்தீர்கள்? நீங்கள் என்ன தப்பிதமா செய்தீர் கள்? அது அறிந்துதான் முன்னைக்கிரட்டிப்பாய் ஆசை கொண்டேன். நானென்ன புத்தி இல்லாதவளா? எனக்கு இவ்வளவு தெரியாதா? இப்படி நீங்கள் எண்ணிச் செய்ததை இராட்சதர்கள் அறிந்தால், உலகங்களையே அழித்துவிடுவார் கள்! நீங்கள் நல்ல குலத்திலே பிறந்தவர்கள். ஆதலால், உங்களாலே உலகம் அழிந்ததென்று பழி வாராமல் நன்றாய் யோசனை செய்து பார்த்து, என்னுடன் கூடிச் சுகமாயிருந் தருளுங்கள்,'' என்று கூறி வணங்கினாள்.

அப்போது ஸ்ரீராமர், "அடி இராட்சசி, முன்பு ராஜ்யத் தையெல்லாம் உபத்திரவம் செய்துகொண்டிருந்த உன் பாட்டியான தாடகையின் பிராணனை வாங்கின அஸ்திரம் எம்மிடத்தில் இருக்கின்றது. அதுவுமல்லாமல், நாங்கள் இராட்சத குலத்தை வேரறுக்க விரதம் பூண்டு புறப்பட்டிருக் கின்றோம். நாங்கள் தசரத சக்கரவர்த்தியார் குமாரர்கள். தாயின் வார்த்தை தப்பாமல் ஆரணியத்திற்கு வந்தவிடத் திலே, பிராமணர்களும் ரிஷீஸ்வரர்களும் தாங்கள் படுகின்ற துன்பத்தை வந்து சொல்லிக்கொள்ள, அவர்களுக்கு,

'இராட்சதக் கூட்டங்களையெல்லாம் சங்கரித்த பிற்பாடு அயோத்தி போய்ச் சேருகின்றோம்!' என்று வாக்குக் கொடுத்தோம். அப்படிச் செய்வது நிச்சயம்! 'தேவர்களையெல்லாம் அடித்துத் துரத்திவிட்ட இராட்சதர்களை இந்த இரண்டு மனிதர்கள் என்ன செய்யப் போகிறார்கள்?' என்று எண்ணாதே! இராட்சதர் இயக்கர் முதலாக நீ யாரைப் பலசாலியென்றெண்ணியிருக்கின்றாயோ, அவர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு வா. உன்னெதிரிலேயே அவர்களைக் கொல்லுகிறோம்!'' என்று சொன்னார்.

"அதற்கென்ன? கொல்லலாம்; மாயங்களையெல்லாம் குறித்தறியலாம்; ஜயிக்கலாம்; அவர்கள் செய்கின்ற மாயங்களையெல்லாம் கடக்கலாம்; அவர்களுக்கும் உபத்திரவங்களைக் கொடுக்கலாம்; என்னை இராட்சசியென்று இகழ்ந்து விடாமல் கிருபை செய்தீரானால், எதுதான் செய்யப் போகாது? அந்த ஸ்திரீயைக் கைவிடலாகாதென்று எண்ணியிருந்தாலும், நானும் கூட இருக்கலாகாதா? இராட்சதர்களோடே யுத்தம் செய்கிற போது அவர்கள் மாயங்களையெல்லாம் தெரியச் செய்வேன். 'பாம்பின் கால் பாம்புக்குத் தெரியும்,' என்கிற பழமொழியாயினும் கேட்டதில்லையா? உமக்குத்தான் ஒருத்தியிருக்கின்றாளே! உம் தம்பியுடன் என்னைச் சேர்த்து வையுமே! உங்கள் பட்டணத்திற்குப் போகும்போது எந்த ரூபம் வேண்டுமோ, அந்த ரூபம் எடுக்கின்றேன்,'' என்று சூர்ப்பணகை சொல்ல, அக்கொடிய வார்த்தைகளைக் கேட்ட இலட்சுமணர் கோபமாகி, "சுவாமி, இவளை உடனே கொல்லாவிட்டால், இன்னம் அபரிமிதமாய்ப் பிதற்றிக்கொண்டேயிருப்பாள்! இவளிடத்திலே கிருபை ஏன்?'' என்று சொல்ல, ஸ்ரீராமர், "இன்னம் போகாமலிருந்தாளாயின், அப்படியே படுகின்றாள்,'' என்று சொல்ல, அந்த வார்த்தையை இராட்சசி கேட்டு, "இவர்கள் ஒன்றிற்கும் இரங்குவதில்லை. இனி நின்றால் பிராணன் போய்விடும்!'' என்று எண்ணிக்கொண்டு, "காற்றைப்பார்க்கிலும் நெருப்

யைப்பார்க்கிலும் கடூரனுன கரனென்னும் உங்கள் கூற்று வனே இதோ கொண்டு வருகின்றேன்!'' என்று சொல்லி ஓடினுள்.

## 6. கரன் வதைப் படலம்

இப்படி ஓடின சூர்ப்பணகை கரனிருக்கின்ற சபையிலே போய், அவன் கால்களின்மேல் தன் மூக்கின் இரத்தம் சொரிய விழுந்தாள்; இடி விழுந்த நாகம் போலப் புழுங்கிப் புரண்டாள். அது கண்ட கரன் கண்களிலே நெருப்புப் பொறி பறக்கப் பார்த்து, அவள் மூக்கின் அறுவாயிலிருந்து சொரி கிற இரத்தத்தைக் கண்டு, "உன்னே இப்படிச் செய்து போனவர் யார்?'' என்று கேட்டான். "இரு மானிடர்; தவசிகள்; கையிலே வில் தரித்திருக்கின்ருர்கள்; மன்மத சொரூபிகள்; தசரத மகாராஜாவினுடைய பிள்ளேகள்; யுத்தத்திற்கு வருகிற இராட்சதர்களேத் தேடிக்கொண்டிருக் கின்ருர்கள்; உன் பலத்தைக் கொஞ்சமாகிலும் எண்ணிப் பார்க்கவில்லே; 'தருமத்தை நிலே நிறுத்த இராட்சதப் பூண்டு பூமியிலே இராமல் வேர றக் கொல்லுகிருேம்!' என்று விரதம் பூண்டு இருக்கின்ருர்கள். அவர்களுடன் ஒரு ஸ்திரீ வந்திருக்கின்ருள். அவளுடைய அழகுக்குச் சமானமான ஸ்திரீ மூன்று உலகத்திலேயும் இல்லே. அந்தப் பெண்ணே நான் பார்த்து மயங்கி, ஆச்சரியம் கொண்டு, 'இந்த ஸ்திரீ நம் தமையனுக்காவள்,' என்று ஆசையுடன் எடுக்க ஓடி னேன். அது கண்டு அவர்கள் கோபித்து, என் மூக்கு முதலியவைகளேயறுத்தார்கள்!'' என்று அழுதுகொண்டே சொல்ல, பிரளய காலாக்கினி போலக் கோபங்கொண்டு, "அப்படியா! ஆகட்டும்! அந்த மனிதர்களே எப்படியுங் கொன்று போடுகிருேம்! அவர்கள் மாண்டுபோன பிற்பாடும் நமக்கு வந்த அபவர்தம் போகப்போகின்றதா?'' என்று

சொல்லி மனம் புழுங்கிக் கோபாவேசத்துடன், "தேர் கொண்டு வாருங்களடா!" என்று சொன்னான்.

அச்சபையிலிருந்த இராட்சதர்களுள் பதினான்கு பேர் இந்த லோகத்தையெல்லாம் ஒரு கையினால் ஏந்தத்தக்க பலத்தையுடையவர்கள்; சூலம், மழு, தோமரம், சக்கரம், காலபாசம், கதை முதலிய ஆயுதங்களைத்தரிக்கின்றவர்கள்; தேவர்களும் கண்டு நடுங்கத்தக்க ஆலகால விஷம்போன்ற சரீரங்களையுடையவர்கள்; வடவாமுகாக்கினிக்குச் சமான மான கோபத்தையுடையவர்கள். அந்தப் பதினான்கு பேர் களும் பதினான்கு பர்வதம் போன்றெழுந்து நின்று, "சுவாமி, இந்தக் காரியத்தை எங்களுக்குக் கொடுங்கள்! நாங்கள் இருக்கின்ற போது நீங்கள் இப்படிப் புறப்பட்டால், எங்கள் அடிமைத்தொழில் என்னாகும்! தேவர்களே எதிர்த்து வந் தாலும் அவர்கள்மேல் நீங்கள் யுத்தத்திற்குப் போகலாமா?" என்று சொல்ல, "மெய்தான்! அந்த வெட்கமில்லாத பயல் கள்மேல் யுத்தத்திற்குப் போனால், தேவர்கள் சிரிப்பார்கள்! நீங்கள் சீக்கிரத்திற்போய் அவர்களைக் கொன்று, அவர் ளுடன் வந்திருக்கின்ற பெண்ணைப் பிடித்திழுத்துக்கொண்டு வாருங்கள்," என்று சொன்னான் கரன். இப்படிச் சொல் லவே, அவர்கள் மிக்க சந்தோஷத்துடனே அவனைச் சேவித்து, எமதூதர்கள் போல இராமலட்சுமணர்கள் இருக் கின்ற இடத்தில் வந்து சேர்ந்தார்கள். கூட வந்த சூர்ப்ப ணகை அந்த இராட்சதர்களுக்கு, "என் மனத்தில் நீங்கா மல் இருக்கின்ற ஸ்ரீராமன் இவன்தான்," என்று கையினாற் காட்டினாள். காட்டவே, அந்த இராட்சதர்கள் பர்வதங்கள் சுற்றிக்கொண்டதுபோலப் பர்னசாலையைச் சுற்றிக்கொண் டார்கள். ஸ்ரீராமர் அவர்களைக் கண்டு, தம்பியாரைப் பார்த்து, "அப்பா, நீ சீதையைக் காத்துக்கொண்டிரு," என்று ஆக் கியாபித்து, வில்லைக் கையிலேந்தி, வாளும் அம்பருத்தூணி யும் தரித்துக்கொண்டு, பர்னசாலையை விட்டு வெளியிலே வந்து, "இங்கே வாருங்களடா!" என்று யுத்தசன்னத்த

ராஞர்; மழுவும் வாளும் சூலமும் பிடித்து வந்த இராட்சதர்களுடைய கைகள் இருபத்தெட்டையும் பாணங்களால்அறுத்துப் பூமியிலே தள்ளிஞர்; மரங்கள் போன்ற கைகளற்று விழ நின்றவர்கள் மேலே அஸ்திரப்பிரயோகம் பண்ணிஞர்; அவர்கள் தலைகளும் அறுபட்டுப் பூமியிலே விழுந்தன. உடன்வந்த மதயானைகள் மடிந்து போகவே, தும்பிக்கையைத் தலைமேல் வைத்துக்கொண்டோடுகிற பெண் யானை போலக் கதறிக்கொண்டு சூர்ப்பணகை ஓட்டமெடுத்தாள்.

அவள் ஓடி இராட்சதர்கள் மடிந்த செய்தியைக் கரனுக்குச் சொல்லவே, அவன் கோபாவேசம் மிகுந்து, தன் சேஞ சமுத்திரத்தையெல்லாம் கூட்டச் சொல்லிப் பேரிகை அடிப்பித்தான். அந்தப் பேரிகைச் சத்தம் கேட்கவே, மேகங்கள் வந்து கூடுகின்றது போல, அனேக இராட்சதர்கள் வந்து சேர்ந்தார்கள். அந்த இராட்சத சேனைக்கு அதிபதிகளாகப் பதினுன்கு பேர் புறப்பட்டனர். அந்தப்பதினுன்கு பேரும் ஒருவனைப்போல வீரகண்டையும், கவசமும், ஆபரணமும், யுத்தத்தின்மேல் ஆசையும் உடையவராயிருப்பவர்; பகைவர் அகப்படாததனுலே தோள்களெல்லாம் தினவு கொண்டிப்ருப்பவர். அந்தப் பதினுன்கு படைத்தலைவரும் மழு, வாள், சூலம், வில் முதலான ஆயுதமும், உதட்டுக்கு மேலே பிரகாசிக்கின்ற பல்லும், மகாமேரு பர்வதத்தை வேரோடே பறிக்கத்தக்க பலமுமுடையவராய் இரதாரூடராய்ச் சூழ்ந்து வந்தனர். தூஷணன் திரிசிரனென்று சொல்லப்பட்ட கரனுடைய இரண்டு தம்பிமாரும், மகன் முதலான பந்து ஜனமும் மகாமேருவைச் சூழ்ந்த சமுத்திரம் போலச் சூழ்ந்து வர, நடுவே பெரிய தேரின்மேலேறிக்கொண்டு சகலரும் அஞ்சும்படி பெரு வீரஞன கரன் புறப்பட்டான்.

உயிரை யமன் கையில் கொடுக்கின்ற வியாதியைப் போலச் சூர்ப்பணகை முன்னே வர, சேனை ஸ்ரீராமருடைய பர்னசாலை சமீபத்தில் வந்தது. இலட்சுமணர் அச்சேனையைக்கண்டு, அம்பறுத்தூணியைக் கட்டி, கையில் வில்லை

யெடுத்து, கவசம் தரித்து, வாளை இழுத்துக் கட்டிக்கொண்டு மிகுந்த கோபத்துடனே நின்று, “ சுவாமி, இன்றைக்கு இந்த இராட்சதர்களை நான் செய்கிற சித்திரவதையை நீங்கள் பார்த்துக்கொண்டிருங்கள் !” என்று கூறிப் புறப்பட்டார். பெரிய பெருமாள் இளைய பெருமாளைப் பார்த்து, “ தம்பி, இராட்சதர்களை நானே கொல்லுகிறேனென்று முனிவர்களுக்குச் சொல்லியிருந்த வார்த்தைக்குப் பழுது வாராமல், நீ இங்கேயிருந்து சீதையைக் காத்துக்கொண்டிரு. இச்சேனைகளையெல்லாம் நானே கொன்று தீர்க்கிறேன் !” என்று சொல்ல, அவருடைய பலத்தையும் சௌரியத்தையும் நன்ருய் அறிந்துகொண்டு, அவருடைய ஆக்கினைக்கு மீறி உத்தரஞ் சொல்லாதவரான இலட்சுமணர், கைகூப்பித் தொழுது, சீதா பிராட்டியினிடத்திலே நின்ருர்.

ஸ்ரீராமர், பர்னசாலையிலிருந்து புறப்பட்டு, இராட்சதர் மேல் இருக்கின்ற கோபத்திஞலே குகையிலிருந்து புறப்பட்ட சிங்கம் போல வெளியிலே வந்து, வருகின்ற இராட்சதர்களுக்கு முன் தனியே நின்ருர். அப்போது, மூங்கிலிலே பிறந்த நெருப்பு அந்த மூங்கிற்காட்டையெல்லாம் தகிப்பது போல, இராட்சதர்கள் காட்டையெல்லாம் தகிப்பதற்காக அக்குலத்திற்பிறந்த சூர்ப்பணகை தன் தமையஞன கரனுக்கு. “ ஸ்ரீராமன் இவன்தான் !” என்று காட்டிஞள்.

கரன் ஸ்ரீராமரைக் கண்டு, “இவன்தாஞ! இவனை இதோ கொல்கிறேன் ! படைவீரர்களே, நீங்கள் இங்கேயே நில்லுங்கள். ‘ஒரு மனிதனை இவ்வாரணியங் கொள்ளாத இராட்சதர்கள் எதிர்த்து யுத்தஞ்செய்தார்கள்!’ என்ருல், என் கீர்த்தி என்னவாகும் ? நீங்களெல்லாம் இவ்விடத்தில் நின்று பார்த்துக்கொண்டிருங்கள். நாஞெருவனே போய் அவன் உயிரைக் குடித்துவிடுகிறேன்,” என்று சொன்ஞன்.

அவ்வார்த்தை கேட்ட *அகம்பன்* என்னும் மந்திரி, கல்வி கேள்விகளில் மிகுந்தவஞனபடியிஞலே, கரனைப் பார்த்து, “ ஐயா, எப்போது ஒருவன் இத்தனை சேனைக்கு

எதிரே வில்லுடன் தனியே வந்து நிற்கிருனே, அப்போது அவனைச் சாமர்த்தியவானென்றெண்ண வேண்டும். அதுவுமல்லாமல், அனேக துர்நிமித்தங்கள் காண்கின்றன: மேகமானது இரத்த மழை பெய்கின்றது. சூரியனைப் பரிவேடஞ் சூழ்ந்திருப்பதைப் பாரும்! உம் கொடியின்மேல் காக்கைகள் ஒன்ருேடொன்று போர் செய்து பூமியில் விழுந்து புரளுகின்றன. அம்பு முதலான ஆயுதங்களின் வாய்களில் ஈக்கள் மொய்க்கின்றன. வீ ர ர ா ன இராட்சதர்களுடைய இடத் தோளும் இடக்கண்ணும் துடிக்கின்றன. குதிரைகளெல்லாம் தூங்கி விழுகின்றன. நாய் நரிகள் ஊளையிட்டழுகின்றன. பிடி யானைகள் மதத்தைப் பொழிகின்றன. மதயானைகளுக்குத் தந்தங்கள் ஒடிந்து போகின்றன. வெள்ளையிடி குமுறி விழுகின்றது. வீரர்கள் தரித்திருக்கின்ற மாலைகள் சுருநாற்றமாய் நாறுகின்றன. இப்படியிருக்கிறபடியால், எதிரே நிற்கிறவன் மானிடனென்றும், ஒருவனென்றும் நினைக்கலாகாது. நீர் தனித்துப் போவதும் சரியன்று என்று எனக்குத் தோன்றுகிறது. நான் சொன்ன வார்த்தையைப் பொறுத்துக்கொள்ளும்!'' என்று வணங்கிச் சொன்னுன்.

இப்படிச் சொன்ன அகம்பன் வார்த்தையைக் கேட்ட கரன், உலகமெல்லாங் குலுங்க நகைத்து, ''தேவர்களையெல்லாம் அரைத்த குழவியான என்தோள்கள் மனிதருக்கெளியனவாய்ப் போயினவோ!'' என்று சொல்லிக்கொண்டிருக்கிற சமயத்தில் சேனை வீரர்கள் மேகங்கள் போல முழங்கிக்கொண்டு சக்கரவர்த்தி திருமகனுரைச் சூழ்ந்துகொண்டார்கள். உடனே, ஸ்ரீராமருடைய வில்லும் வளைந்தது. அந்த யுத்தம் இப்படிப்பட்டதென்று நான் எப்படிச் சொல்லப் போகிறேன்! ஆகிலும், அறிந்தமாத்திரஞ் சொல்லுகிறேன்: ஸ்ரீராமருடைய கோதண்டத்திலிருந்து புறப்பட்ட அஸ்திரங்களால் அனேகங் குதிரைகள் தறிபட்டுப் பூமியிலே விழுந்து புரண்டன. அனேகம் யானைகள் இடி விழுந்த பர்வதம் இடிந்து விழுகிறது போலப் பூமியில் விழுந்தன. சூலங்கள் அற்றுப்

போயின. மழுவாயுதங்கள் அற்றன. வாள்கள் பிடிகளற்று விழுந்தன. தண்டாயுதங்கள் முறிந்து விழுந்தன. பிண்டி பாலங்கள் இற்று விழுந்தன. அஸ்திரங்களற்று வில்லுகள் முறிந்தன. வேல்கள் இற்றன. அனேகம் தோள்கள் வாகுவலையங்களுடன் துணிந்து விழுந்தன. தோமரங்கள் யானைக்கால்கள் தேர் அச்சுகள் கொடிகள் குதிரைகள் இராட்சதருடைய தலைகள் முசலங்கள் இவைகளெல்லாம் துணிந்து விழுந்தன. ஸ்ரீராமபாணம் ஒன்று பத்தாய், பத்து நூறாய், நூறு ஆயிரமாய், ஆயிரம் இலட்சமாய், இலட்சம் கோடியாய்ப் பெருகி, இரதகஜதுரக பதாதிகளென்கிற நால்வகைச் சேனைகளின் தலையறுத்தும், மார்புகளைப் பிளந்தும், கால்களைத் துணித்தும், மலை போலப் பிணக்கும்பல்களை அங்கங்கே குவித்தது. இராட்சத முண்டங்கள் இரதங்களோடு எழும்பிப் பெருநடனஞ் செய்ய, இராமபாணம் அவர்கள் ஜீவனையுந் துரத்திக் கொண்டு போகிறது போல ஆகாயமெல்லாம் ஓடி நிறைந்தது. இப்படி இராட்சதர் சின்னபின்னமாய் மடிந்து போம்படி இராமபாணம் கொடுமை செய்தது. கவந்தங்கள் களித்தாடின. யானைப் பிணங்கள் இரத்தத்திலே ஊறிச் சிவந்தன. பேய்கள் பிணங்களை மிகவுந் தின்று சந்தோஷித்துக் குதித்தாடின. முன்பு கருடனும் பார்த்துப் பயப்படுகிற இராட்சதர்களுடைய கண்களைக் காக்கைகள் குத்திப் பிடுங்கின. ஆகையினாலல்லவா தருமத்தினுடைய அருமையறிந்த பெரியவர்களெல்லாம், ‘தருமத்துக்கு உயர்ந்த பலமுமில்லை, அதனை மறக்கிறதற்கு உயர்ந்த கெடுதியும் இல்லை,’ என்று எந்த வேளையிலுந் தரும சிந்தையுடனிருக்கச் சொல்கிறார்கள்? “இராட்சதர்கள் பூண்டு இன்றோடே ஒழிந்து போகின்றது!” என்று தேவர்கள் சந்தோஷித்து ஆர்ப்பரித்தார்கள். ஸ்ரீராமபாணமானது குபீரென்று புறப்பட்டு, அனேக இரதங்களையும் அவைகளிலிருக்கிற வீரரையும், பல யானைகளையும் அவைகளின்மேலேறி வந்த சூரர்களையும், அனேகம் குதிரைகளையும் அவைகளின்மேல் ஏறி வந்த அதிசூரர்களையும், பதாதிக

ளாய் வந்து வளைத்த அதிக பலசாலிகளான இராட்சதர்களை யும் கணப்போதில் சின்னபின்னமாகச் சித்திரவதை செய்ய, அனைவரும் ஏககாலத்தில் மடிந்தார்கள். அத்தருணத்தில் பெருஞ்சேனையுடனே திரிசிரன் என்கிறவன் வந்து இராமரை எதிர்த்தான்.

அவன் திரிநேத்திரரான உருத்திரமூர்த்தி கையிலேயிருக் கிற சூலத்துக்குச் சமானமான மூன்று தலைகளையுடையவன். அவன் பர்வதம் போன்ற வில்லைக் கையில் கொண்டு ஊழிக் காலச் சமுத்திரம் போலச் சேனைகள் சூழ வந்து ஸ்ரீராமரை எதிர்த்தான். இருவருக்கும் பெரும்போர் நடந்தது. பல்லா யிரம் வீரர்களை இராம பாணம் அழித்தது.

அப்போது திரிசிரன் தன்னைச் சூழ்ந்து வந்த படைக ளெல்லாம் ஒருவர் பாணத்தினால் மடிந்தது கண்டு கோபம் பொங்கி, இராமருக்குச் சமீபத்தில் வந்து தேரை நிறுத்தி, இடிகளுக்குச் சமானமான பாணங்களை மேகம் போலத் தர்ம ஸ்வரூபரான ஸ்ரீராமருடைய திருமேனி மறையப் பொழிந் தான். ஸ்ரீராமர் அச்சரங்களையெல்லாம் அஸ்திரங்களி னாலே கண்டித்து, பதினாலு பாணத்தினால் அவனுடைய மூன்று தலையில் ஒரு தலையை விட்டு, இரண்டு தலைகளை யறுத்து உருட்டினார். அப்போது அவன் தேருமழிந்து, திரி சிரனென்கிற பேருமழிந்து, ஒரு சிரனாகியும், வீரம் குறையா மல் வில்லை வளைத்து அஸ்திரங்களை மழை போலப் பொழிந் தான். ஸ்ரீராமர் தம்முடைய அஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்து, அவனுடைய வில்லையறுத்துக் கீழே தள்ளினார். வில் லும் போய் அவன் முகம் வாடாமல் சொல்லுகிற கடூர வார்த் தைகளும் விடாமல் ஆகாயமட்டுமெழும்பி மாயப் போர் புரிந்தான். இப்படி மாயமாயிருந்து யுத்தஞ்செய்கிற அந்தப் பாவியை ஸ்ரீராமர் இரண்டு பாணத்தினாலே இரண்டு காலையும், இரண்டு பாணத்தினாலே இரண்டு தோள்களையும் அறுத்துத் துணித்தார். அப்போது, அவன் குகைபோலிருக்கிற தனது வாயைத் திறந்துகொண்டு வாயினாலே கவ்வித் தின்றுவிடுவே

னென்று நகர்ந்து வந்தான். ஸ்ரீராமர் அவனுடைய ஒரு தலையையுமறுத்துக் கீழே தள்ளினர். திரிசிரனென்கிற பர்வதம் பூமியிலே விழவே, இராட்சதர்கள் அதைரியம் கொண்டு ஓடத் தலைப்பட்டார்கள். பின்னாலே தூஷணனிருந்து நிறுத்தினாலும் நின்று உத்தரஞ் சொல்லாமல், அஞ்சி நடுங்கி அனைவரும் ஓட்டமெடுத்தனர்.

இப்படி ஓடுகிற இராட்சதர்களை இரதத்தின் மேலேயிருந்த தூஷணன் கண்டு, "பயப்பட வேண்டா! தோற்று ஓடுகிற தேவர்களிடத்தில் நீங்கள் இதைக் கற்றுக்கொண்டீர்களோ? இப்படியா மனம் திகைத்துப் போனீர்கள்? இங்கே ஒரு மனிதனுக்கு இத்தனை வீரருந் தோற்று, உங்கள் குலத்து ராஜாவினுடைய தங்கை மூக்கு இழந்த ஒரு பழியுடனே போகாமல், 'இராட்சதர்கள் முதுகு காட்டி ஓடினார்கள்!' என்ற மற்றுமொரு பழியும் வருகின்றதையும் எண்ணாமல் ஓடுகிறீர்களே!" என்று இப்படிப் பலவிதமாகச் சொல்லி, "நீங்கள் ஒரு க்ஷணமாத்திரந் தூரநின்று பார்த்துக்கொண்டிருங்கள் நான செய்யும் யுத்தத்தை!" என்று தன் சேனையுடனே தேவர்களும் மயங்கி நடுங்கும்படி ஸ்ரீராமரை எதிர்த்தான். அப்போது, ஸ்ரீராமரும் அஸ்திரப்பிரயோகஞ் செய்து கொண்டு எதிரே நடந்தார். ஸ்ரீராமர் தூஷணன் விடுகிற சரங்களைத் துணித்து, மற்ற இராட்சதர்களுடைய ஆயுதங்களையும் அறுத்து, அந்த இராட்சச சமுத்திரத்தை வறண்டு போகச் செய்துவிட்டார். தேவர்கள் சந்தோஷித்து அட்டகாசஞ் செய்துகொண்டெழுந்தார்கள். யுத்தத்தில் எதிர்ப்பட்டவர்கள் எல்லாம் அதிசீக்கிரத்தில் இறந்தபடியினாலே, 'இத்தனை பேர்களுடைய உயிரையும் நான் எப்படிப் பிடித்துக் கொண்டு போகப்போகிறேன்!' என்று யமனும் சோர்ந்தான். அப்போது, தூஷணன் மிகுந்த கோபத்துடனே இரதத்தை ஓட்டி, ஸ்ரீராமருக்கு எதிரே கூற்றுவன் முன்னே வலிய நடந்து போகிற பிராணன் போலப் போனான். அப்படி வந்த தேரையும் பெரிய வில்லுடன் மலை போல நிற்கிற

தூஷணனையும் ஸ்ரீ ராமசந்திரர் பார்த்து, "நீ நல்ல சமர்த்தன் !" என்று சொன்னார். அப்போது அந்தப் பாவி மூன்று பாணம் ஸ்ரீ ராமபத்திரர்மேல் எய்தான். அந்தப் பாணம் ஸ்ரீ ராமர் நெற்றியில் தேவர்கள் நடுங்கும்படி பட்டது. ஸ்ரீராமர் சிறுநகை நகைத்து, அஸ்திரப்பிரயோகஞ் செய்து, அவனுடைய தேரையும், வில்லையும், கவசத்தையும் அறுத்தார்; பின்னும் ஒரு பாணத்தைப் பிரயோகஞ் செய்தார். அந்தப் பாணத்தினாலே கோரதந்தமுடைய தூஷணன் தலையறுப்புண்டு விழுந்தான்.

அப்போது, மகா வீரனான கரன், தம்பி தலையற்றுப் போனதும் ஸ்ரீராமர் சகலரையும் மடித்ததும் அறிந்து, கோபித்து, கூற்றுவனும் பயப்பட இராட்சத சமுத்திரத்துடனே யானைகளும் ரதங்களும் குதிரைகளும் நாலு திக்கிலும் பரவி வரச் சந்திரனை மேகம் வளைத்துக்கொண்டது போல ஸ்ரீ ராமரை வளைத்தான். வீரராகவரும் அஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்தார். ஸ்ரீராமர் அன்றைய தினம் வந்து வளைத்த இராட்சதர்களெல்லாம் விழுந்து மடியும்படி அஸ்திரங்களை விடுத்து, ஒருவன் பலவானாயிருந்து எளியோர்களை வருத்தப்படுத்திக் கிரகித்த பொருள் அவனைக் குலத்துடனே எப்படி நிர்மூலஞ் செய்யுமோ அப்படி நிர்மூலம் செய்தார். இப்படி அனைவரும் அழிந்து போகவே, தனித்தேரில் நின்ற வீராதி வீரனான கரன், மிகுந்த கோபங்கொண்டு, கண்கள் நெருப்பைச் சிந்த எண்ணிறந்த பாணங்களைப் பொழிந்து, வடவாமுகாக்கினி போல எரிந்து, புகைகிற மனத்துடனே கடலில் ஓடுகிற கப்பல் போலத் தேரை விட்டுக்கொண்டு எதிரே வந்தான். கரன் தம் சமீபத்தில் வருமுன்னமே ஸ்ரீ ராமரும் பாணப் பிரயோகம் செய்து எதிர்த்தார். கரன் அக்கினி ஸ்வரூபமாய், வாயு வேகமுடையனவாய், செவ்வையாய் நீண்டு கூர்மையாயிருக்கிற ஆயிரம் பாணங்களை ஒரு க்ஷணநேரத்தில் எய்தான். ஸ்ரீ ராமரும் அப்படிப்பட்ட பாணம் ஆயிரம் எய்து அவைகளை

அறுத்தார். பின்னும் ஸ்ரீராமர் பிரளய காலாக்கினிக்குச் சமானமான ஒன்பது கணைகளைப் பிரயோகஞ் செய்தார். அவைகளைக் கரன் அறுத்துப்பின்னும் மாயத்தினலே யுத்தஞ் செய்து, ஸ்ரீராமருடைய திருமேனியை அம்பினலே மறைத்தான். அதைக்கண்ட தேவர்கள் மனம் திடுக்கிட்டார்கள். ஸ்ரீராமர் கோதண்டத்தில் ஓர் அஸ்திரத்தைப் பூட்டித் தோள் பரியந்தம் வாங்கினர். அப்போது அந்த வில் யுகாந்தப் பேரிடியின் சத்தமும் அடங்கிப் போக அதிக சத்தத்துடனே படீரென்று ஒடிந்தது. அத்தருணத்தில் ஜயங்கோரிக்கொண்டிருந்த தேவர்கள் திடுக்கிட்டு, "வேறு வில் ஸ்ரீராமரிடத்தில் இல்லையே ! ஆகையால் நம்முடைய பலம் போய்விட்டது!" என்று நடுங்கினர்கள். அது கண்ட சக்கரவர்த்தி திருமகனர், "நம் வில் ஒடிந்தது; நாம் தனியேயிருக்கிருேம்," என்று சிந்தை செய்யாமல், தம் திருக்கையைப் பின்புறத்தில் நீட்டினர். சமீபத்திலிருந்து மனத்தை அறிந்து கொடுக்கிறவன் போல வருணனனவன், ஸ்ரீராமர் முன்னுளிலே பரசுராமரிடத்திலே வாங்கித் தன் கையிற் கொடுத்து வைத்த வில்லைக் கொடுத்தான். அதை ஸ்ரீராமர் வாங்கி, இடக் கையிலே பிடித்தார். ஸ்ரீராமர் அந்த வில்லை வாங்கி நாணேற்றி, கூற்றுவனுஞ் சந்தோஷத்துடனே குதித்துக் கூத்தாட, நூறு அஸ்திரம் பிரயோகித்துக் கரனுடைய தேரைப் பொடியாக்கிவிட்டார். உடனே கரன் தேரை விட்டிறங்கி ஆகாயத்தில் எழும்பி ஆர்ப்பரித்து, அனேக அஸ்திரங்களை ஸ்ரீ ராமர் தோள்களாகிய மரகதக் குன்றுகளின் மேல் மழை போலப் பொழிந்தான். அது கண்டு தசரத ராமர் அஸ்திரப் பிரயோகஞ்செய்து, அம்பருத்தூணியிலிருந்து அம்பை வாங்குகிற வலக்கையை அறுத்துப் பூமியிலே விழத்தள்ளினர். கரன் வலக்கை விழவே, இடக்கையினுல் இருப்புலக்கை எடுத்து இடி போல வீசி விட்டான். ஸ்ரீராமர் ஒரு பாணத்தினலே அதை விலக்கினர். அப்போது, கரன் ஒரு மரத்தைப் பிடுங்கிக்கொண்டு சமீபத்திலே வந்

தான். ஸ்ரீராமர் ஓர் அஸ்திரத்தைப் பிரயோகித்தார். அந்த அஸ்திரத்தினுலே அவன் வலக்கை அறுந்து விழுந்தது போலச் சரீரமும் அற்று விழுந்தான். தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். விஜயராகவரும் மூடுபனியை நீக்கிப் பிரகாசிக்கிற சூரியனையொத்துப் பிரகாசித்தார்.

அப்போது ரிஷீஸ்வரர்கள் வந்து சந்தோஷத்துடன் ஆசீர்வாதஞ் செய்து சூழ்ந்து வர, யுத்தத்துக்குத் தன் பிராணன் போயிருக்கச் சரீரமாத்திரம் இருக்கிறது போலச் சீதாபிராட்டியிருக்கிற பர்னசாலைக்கு ஸ்ரீராமர் வந்து சேர்ந் தார். தம்பியாரும் பிராட்டியும் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, ஸ்ரீராமர் திருவடிகளில் அந்த இராட்சதர்களுடைய இரத்தம் தெறித்ததையெல்லாம் தங்கள் கண்ணீரினுல்கழுவி னுர்கள். அதிவீரராகிய ஸ்ரீராமர் வீற்றிருந்தார். இது நிற்க.

இராவணன் தங்கையான சூர்ப்பணகை கைகளினுல் வயிற்றைப்பிசைந்துகொண்டு மார்பிலே அறைந்துகொண்டு அந்தகார ரூபனுன கரனைக் கட்டிக்கொண்டு பெருங்கூச்ச லிட்டு,இரத்தச்சேற்றிலேபுரண்டு,“என்மனத்திலேகொண்ட, ஆசை என் மூக்குடனே போக, நான் இறந்து போகாமல் வாய்ப் பேச்சில் உங்கள் வாழ்வையும் ஆயுளையும் போக்கி னேனே!” என்று பலபல விதமாகச் சொல்லி அழுது, “இந் தச் செய்தியை இராவணனுக்குச் சொல்ல வேண்டும்,” என்று மரக்கலங்களைக் கவிழ்க்கிறதற்குப் போகிற சண்ட மாருதக் காற்றைப்போல அதி சீக்கிரமாய் இலங்கையை நோக்கிப் போனுள்.

## 7. மாரீசன் வதைப் படலம்

சூர்ப்பணகை இப்படிக்கணக்கற்ற இராட்சதர் மடிந்து போனதையும் மறந்தவளாய், ஸ்ரீராமருடைய திருவழகில் மயங்கிக் கிடந்த மனத்தைச் சகிக்க மாட்டாதவளாய், அடிக் கடி எதிரே ஸ்ரீராமருடைய ஸ்வரூபம் தன் மனப்பிரமையி

ஞலே உருவெளியாகத் தோன்றப் பார்த்து மயங்கி நடந்து, "சமுத்திரமே அகழியாகப் பெற்றிருக்கிற இலங்கையிலே சேர்ந்து சீதையின் அழகைச்சொல்லுவோம்," என்று எண்ணி வருகிற போது, இராவணேஸ்வரன், தேவ தச்ச ஞன மயன் நவரத்தின கசிதமாய்ச் செய்திருக்கிற சொர்ன மண்டபம் பிரகாசிக்க, அந்த மண்டபத்திலே, வணங்காத கிரீடங்கள் பத்தும் தகத்தகாயமாய்ப் பிரகாசிக்க, நவரத்தின ஆரங்கள் மார்பிலே பிரகாசிக்க, அஷ்டதிக்கஜங்களின் தந் தங்களையொடித்த தோள்களிருபதும் பூரிக்க, இருபது காதி னுடைய குண்டலங்களும் பிரகாசிக்க, பாதத்திலே வீர கண்டை ஒளி வீச, கின்னரர் ஒரு பக்கத்திலே இருக்க, அவன் வெற்றிகளை வீணைகளிலேற்றித் தும்புரு ஒரு பக்கத் திலே பாடிக்கொண்டிருக்க, வேதத்தைப் பண்ணுடனே மகரயாழில் நாரத மகாமுனிவர் ஒரு பக்கத்திலே பாட, வருணதேவன் பரிமளஜலத்தைக் குறுந்துளிகளாகத் தெளித்துக்கொண்டிருக்க, சபையை எந்நேரமும் துடைத் துச் சுத்தி செய்துகொண்டு வாயு தேவன் நிற்க, பிரகாசம் பொருந்திய பிரம்புகளைக் கையிலே ஏந்திச் சரீரத்திலே கஞ்சு கந் தரித்த பலர் ஓயாமல் பொன்னினுலும் வெள்ளியினுலும் செய்திருக்கிற ஆசனங்களை அங்கங்கே வருகிற இந்திரன் முதலானவர்களுக்குத் தக்கபடியே முறை வழாது கொடுத் துக்கொண்டிருக்க, அக்கினிதேவன் விளக்குகளேற்றி அணை யாமல் பார்த்துக்கொண்டிருக்க, தேவ கன்னிகைகள் மங் கள கீர்த்தனங்கள் பாடி வாழ்த்திக்கொண்டிருக்க, ஊர்வசி முதலான தேவ ஸ்திரீகள் மயில்கள் போலப் பரதசாஸ்திர விதி பிசகாமல் நடனஞ்செய்ய, அதைப் பார்த்துக்கொண்டு அனேக சுந்தரமான ஸ்திரீகளுக்கு நடுவே அதிக சிங்கார மாய் வீற்றிருந்தான்.

இப்படி இருக்கிற போது, தங்கையான சூர்ப்பணகை தலையிலே கையை வைத்துக்கொண்டு மூக்கறுபட்ட வளாய், காதுமில்லாதவளாய், வாயைத் திறந்து அழுது

முறையிட்டுக்கொண்டு, சிவந்து விரிந்த கூந்தலுடனே வடக்கு வாயிலில் பிரவேசித்தாள்.

அப்போது இலங்காபுரியிலிருக்கிற இராட்சத ஸ்திரீகள் சூர்ப்பணகையைக் கண்டு பயந்து, வயிற்றிலே அடித்துக் கொண்டழுது, மிகுந்த துயரத்துடனே அவளைக் கைகளால் தாங்கிக்கொண்டார்கள். சிலர், "கையினலே கைலாச பர்வதத்தையெடுத்த மகானுபாவனுடைய தங்கைக்கு இந் நிலை ஏற்பட வேண்டுமா!" என்று தளர்ந்தழுதனர். ஒரு பர்வதத்தின் அடியிலே வந்து படிகிற காளமேகம் போல இராவணேஸ்வரனுடைய பாதத்திலே சூர்ப்பணகை அலறி அழுதுகொண்டே வந்து விழுந்து புரண்டாள். இராவணன் இருபது கண்களும் காலாக்கினிபோலச் சிவக்க, புருவங்கள் நெற்றி மட்டும் ஏறிப்போக, அதரங்களைப் பல்லினல் அழுந்தக் கடித்து, விழித்துப் பார்த்தான்; மீசைகள் துடிக்க, உக்கிர மான பெரு மூச்சுடனே, உரத்த தொனியுண்டாக அதட்டி, "இது யார் செய்தது?" என்று கேட்டான்.

சூர்ப்பணகை, "அண்ணு, இரண்டு பேர் ஆரணியத் திலே வந்திருக்கின்றனர்; மன்மதனும் சமானமாகமாட்டாத சுந்தர மனிதர். அவர்கள் வாளுருவி என்னை இப்படிச் செய் தார்கள்," என்று சொன்னுள். அதைக் கேட்ட இராவணன் நகைத்து, "அற்ப மனிதர்கள் இப்படிச் செய்ய மாட்டார்களே! பயத்தினலே வாயில் வந்ததைச் சொல்லு கின்ருயோ? பயத்தை விட்டு மெய்யைச் சொல்," என்று கேட்க, "மெய்தான் அண்ணு, மன்மதனுக்குச் சமானமான அழகர்கள்; புஜபலமும் உடையவர்கள். ஏழுலகத்தா ருடைய மதங்களையும் ஒரு கணப்போதிலே வில்லினல் அழித்துவிடுவார்கள்; பூரணச் சந்திரனைப்போன்ற முகமும், தாமரைமலர் போன்ற நேத்திரமும், கரசரணங்களும் உடை யவர்கள். அவர்களுக்குச் சமானமாய் ஆரைச்சொல்லப் போகின்றேன்! மரவுரி பொருந்திய இடையும், வீரகண்டை தரித்த பாதமும், பூணூல் பிரகாசிக்கும் மார்பும் உடையவர்

கள்; உன்னை ஒரு தூசுபோலவும் மதியாதவர்கள்; அம்பருத் தூணி தரித்திருப்பவர்கள்; வீராதிவீரரிலே ஒருவருஞ்சமானம் இல்லாதவர்கள். அவர்களிடத்திலே ரிஷீஸ்வரர்கள் வந்து இராட்சதருக்குப் பயந்தோமென்று தங்கள் வருத்தங்களைச் சொல்லிக்கொள்ள, 'இராட்சத குலத்தை வேரோடே அழிக்கின்றோம்!' என்று சொல்லி அவர்களுடன் உறவு கொண்டிருக்கின்றார்கள். அவர்கள் தசரத மகாராஜாவினுடைய பிள்ளைகள்; அவன் ஆக்கியாபித்தபடி ஆரணியத்திலே வந்திருக்கின்றார்கள். ஒருவன் பேர் **இராமன்** ; ஒருவன் பேர் **இலட்சுமணன்**,'' என்று சொன்னாள்.

அப்படித் தங்கை சொல்லக்கேட்ட இராவணேசுரன், "என்னுடைய அருமந்தத் தங்கை மூக்கை அறுத்தவர் மானிடர். அது அறிந்தும், உயிருடனே வாழும்படி கையிலே வாளும் வைத்துக்கொண்டு இராவணனென நானும் இன்னம் பிராணனுடனேயிருக்கின்றேன் ! என் புஜபல பராக்கிரமத்தினாலே திக்கு விஜயம் செய்து திரிலோகாதிபத்தியம் சம்பாதித்திருக்கின்றேன் ! என்னிடத்தில் இப்படிப்பட்ட பழியைச் செய்தவனும் இருக்கிறானும் ! அவனுக்கு இன்னம் சீவனும் இருக்கின்றதாம் ! என் கையிலே வாளும் இருக்கின்றது! சிவன் கொடுத்த ஆயுதமும் இருக்கின்றது! பல தோள்களும் இருக்கின்றன ! நானுமிருக்கின்றேனல்லவா !'' என்று நினைத்து நகைத்து, இருபது கண்களிலும் நெருப்புப் பொறி பறக்க விழித்து, "அந்த இரண்டு மனிதரையும் வனத்திலிருந்த நம்முடைய கரன் முதலான இராட்சதர்கள் கொல்ல மாட்டாமற்போனார்களா ?'' என்றான்.

சூர்ப்பணகை பின்னையும் அழுது, வயிற்றிலே அறைந்துகொண்டு, பூமியிலே விழுந்து ஏங்கி, தலையிலே கையை வைத்துக்கொண்டு, "நம்முடைய பந்துக்களனைவரும் போய்விட்டார்கள் ! ஐயோ ! அதை என்னவென்று சொல்லுவது! நான் போய்ச் சொன்ன உடனே சேனுசமுத்திரத்துடனே அந்த மனிதர்மேல் யுத்தத்திற்குப் போன

கரன் முதலான வீரர்களெல்லாம் புண்டரீகாட்சனுன அந்த இராமன் என்பவனுடைய ஒரு வில்லினுலே மூன்று நாழிகையிலே தேவலோகம் போய்ச் சேர்ந்தார்கள்!'' என்று சொன்னுள்.

அதைக் கேட்ட இலங்கேசனுன இராவணன் மனம் கொதித்து, "நீ என்ன குற்றஞ்செய்தாய்? உன்னை அவர்கள் காதையும் மூக்கையும் அறுக்கக் காரணமென்ன?'' என்று கேட்க, அவள், "என் குற்றம் என்னவென்ருல், ஒருவராலும் எழுதுகிறதற்குக்கூடாத அதிரூப சௌந்தரியத்தையுடையவளாய் அந்த இராமனுடனே ஒருத்தி வந்திருக்கின்ருள். அவள் பாதம் தீண்டும்படி பூமிக்குப் பாக்கியம் கிடைத்தது. அவள் பேர் சீதை. அதிக மதுரமான பேச்சுப் பேசுகின்ற அந்த ஸ்திரீ ரத்தினமான பெண்ணைத் தேவகன்னிகையாக வைத்து, கமலாசனியான ஸ்ரீ மகாலட்சுமியை அவளுக்குத் தாதியாக வைத்துப் பார்த்தாலும், இலட்சுமி சமானமாகமாட்டாள் என்ருல், அவளழகை நான் சொல்ல முற்படுவது புத்தியில்லாமையே. ஆனுலும், என் புத்தி அறிந்த மட்டும் சொல்லுகின்றேன்: மேகத்திற்குச் சமானமான அளகமும், மழைக்காலுக்குச் சமானமாய் வடிந்திருக்கும் கூந்தலும், செம்பஞ்சூட்டிச் சிவந்து பஞ்சைப்போல மிருதுவான பாதமும், பவளக்கரனைகளைப் போலத் திரண்ட விரல்களும் உடையவள். திருமுகம் கமலத்தினளவாயிருந்தாலும், கண்கள் கடலிலேயும் பெரியவை என்று சொல்லத்தக்கவைகள். மன்மதன் சிவனுடைய நெற்றிக் கண்ணுலே வெந்துபோனுனென்பது லோகாருடமேயல்லாமல்நிச்சயமன்று! வாசனைபொருந்திய அளகபாரத்தையுடைய அந்தச் சீதையைக் கண்டு, அவளைக் கிரகிக்கத் தனக்குச் சாமர்த்தியமில்லாதபடியினுல், அதிக ஆசையென்னும் வியாதி பிடித்து மனமழிந்து சரீரமும் அழிந்து போனுன் மன்மதன். அவள் அவயவங்களினுடைய அழகுகளைத் தனித்தனியே சொல்வதற்கு என்னுலாகவில்லை. நான் உனக்குச்

சொல்ல வேண்டுவது என்ன? நாளைக்கு நீயே பார்க்கப் போகின்றாய். வில்லுக்குச் சமானம் புருவமென்றாலும், வேலுக்குச் சமானம் கண்களென்றாலும், முத்திற்குச் சமானம் பல்லென்றாலும், பவளத்திற்குச் சமானம் இதழென்றாலும் சொல்லுக்குச் சரியாயிருக்குமேயல்லாமல், பொருளுக்குச் சரியாக மாட்டா. இந்திரனுக்கு இந்திராணி கிடைத்தாள். சண்முகனுக்குத் தந்தையான சிவனுக்கு உமையவள் கிடைத்தாள். கமல நேத்திரனான விஷ்ணுவுக்கு இலட்சுமி கிடைத்தாள். பிரமாவுக்குச் சரஸ்வதி கிடைத்தாள். அத்தன்மை போல, சீதை என்பவள் உனக்குக் கிடைத்தால் அப்போது நன்மையெல்லாம் உன்னுடையதேயாகும். அவர்களுக்கு ஒன்றுமில்லை. பெண்ணைப் பாகத்திலே ஒருவன் வைத்துக்கொண்டான். மார்பிலே ஒருவன் வைத்துக்கொண்டான். நாவிலே ஒருவன் வைத்துக்கொண்டான். சீதை உனக்குக் கிடைத்தால், அவளை நீ எங்கே வைத்துக்கொண்டு வாழ்வாய்? பஞ்சவன்னக் கிளிபோலப் பேசும் சீதை எதிர்ப்பட்டால், அவளைக் கண்டும் நீ பிராணனுடன் இருப்பாயா? உன் மிதமற்ற செல்வத்தையெல்லாம் அவளுக்கே கொடுத்துவிடுவாய். உனக்கு நான் நல்லவளானாலும், உன் வீட்டிலிருக்கும் உன்னுடைய ஸ்திரீகளுக்கெல்லாம் கேடு கொண்டுவந்து விட்டவளாகின்றேன். அந்தச் சீதை தேவலோகத்தார் பூலோகத்தார்களில் ஒரு மாதினுடைய வயிற்றிலும் பிறந்தவளல்ல. சமுத்திரம் இலட்சுமியைப் பெற்றது. அந்தச் சமுத்திரத்தை வெல்லும் நிமித்தம் பூமி சீதையைப் பெற்றது. உலகங்களெல்லாம் மன்மதனுக்கு உற்சவஞ் செய்து பூசிக்க, நீ சீதையைக் கொண்டு வந்து வைத்துக்கொண்டு, உன் பலத்தையும் கீர்த்தியையும் லோகத்தாரெல்லாம் கொண்டாடும்படி அந்த இராமனை நான் சேர்ந்திருக்க அவனை எனக்குக் கொடுத்துவிடு! ஐயா, சகலத்தையும் கொடுப்பது விதியாகையால், அதிக தவம் செய்தவர்களுக்கும் வருகின்ற நாளில் வருவது வருமேயல்லாமல் நடுவே வருமா? பத்து முகமும் இருபது

கண்ணும் அதிக சுந்தரமான ஸ்வரூபமும் மார்பும் தோள்க ளிருபதும் படைத்திருப்பதற்கு உரிய பாக்கியம் இனிமேலே தான் நீ அடையப்போகிருய்! அப்படிப்பட்ட சீதையை உன்னிடத்தில் கொண்டுவந்து விடவேண்டுமென்று அவளை யெடுக்கப் போனேன். அந்தச் சமயத்தில் இராமன் தம்பி நடுவே வந்து புகுந்து, வாளினுலே மூக்கையறுத்துவிட் டான். அப்போதே என் வாழ்வு முடிந்து போயிற்று! உடனே பிராணனை விட்டிருப்பேன். அந்தப் பெண் சமாசாரத்தை உனக்குச் சொல்லிப் பிறகு பிராணனை விடத் துணிந்து வந் தேன்!'' என்று சொன்னுள்.

அவ்வார்த்தை கேட்ட இராவணனுக்குக் கோபமும் கடூரமும் மனக்கொதிப்பும் பாவியினுடைய பாக்கியம் போலப் பற்றுவிட்டு, ஒரு தீபம் மற்ருெரு தீபத்திலே கலந்தாற்போலக் காமமும் அதனுலே வந்த மனோ வியாதியும் கூடி அவனுடைய ஜீவனுடன் கலந்துகொண்டன. அப்போது அவன் கரனை யும் மறந்தான்; தங்கையினுடைய மூக்கையறுத்தவர்க ளுடைய பலத்தையும் மறந்தான்; தன் குலத்துக்கு வந்த பழியையும் மறந்தான்; ஈசுவரனையும் ஜயங்கொண்ட காம னுடைய அம்பினுலே, முன்னுள் தான் பெற்ற வரத்தையும் மறந்தான்; காதிலே கேட்ட சீதையை மாத்திரம் மறவாமல் தியானித்தான். அந்தச் சீதையென்னும் பேரும் மனமு மாகிய இரண்டும் ஒன்ருய் நின்றதனுல், ஒன்றை விட்டு ஒன்றை நினைப்பதற்கு வேறேயொரு மனமிருக்கிறதா? அல் லது மறப்பதற்கு வேறே வழிதானிருக்கிறதா? கற்றறிந்த ஞானமில்லாமற்போனுல், காமத்தைக் கடக்கக்கூடுமா? மயிலைப் போன்ற சாயலையுடைய சீதாலட்சுமியை இராவ ணன் வஞ்சனை செய்து கொண்டு வருவதற்கு முன்னமே, தன் இதயமென்னும் சிறையிலே வைத்தான். அதனுலே வீர வேலாயுதத்தையுடைய அதிக சாமர்த்தியமுள்ள இராட்ச சாதிபதியினுடைய மனம், கோடை வெயிலிலே வைத்த வெண்ணெயைப் போல மெல்ல மெல்ல வெம்பிக் கரைந்து

உருகியது. விதியின் பலத்தினாலும், மேல் நடக்க வேண்டிய காரியத்தினாலும், கேடு வந்து குறுகியிருக்கின்றபடியினாலும், அவனுடைய காம வியாதி, புத்தியில்லாதவன் மறைவாகச் செய்த தீமை போல, மேன்மேலும் வளர்ந்தது. சீதை மனத்திலே புகுந்துகொள்ளும்படி கொண்ட மௌட்டியத்தினாலோ, அல்லது அந்த இராட்சதன் தன்னைத்தான் மறந்திருக்கின்றபடியினாலோ, தெரியாது; பயமில்லாமல் மன்மதன் எதிரே நின்று, புட்பபாணங்களைப் பிரயோகித்து வருத்தத்தக்க சாமர்த்தியனானான். உலகத்திலே எவர் பலத்தையும் அழிப்பதற்குக் காமமல்லாமல் வேறே என்ன இருக்கின்றது? இராவணேஸ்வரன் சிங்காதனத்தை விட்டு எழுந்திருந்தான். தவளச் சங்கங்கள் முழங்கின. சபையிலே இருந்தவர்களெல்லாம் எழுந்து போனார்கள். சீதையினுடைய ஆசையினாலே மனமழிந்து துக்காக்கிரந்தனாய், சுவர்னகசிதமான தன் மாளிகை போய்ச் சேர்ந்து, அவ்விடத்திலே நவரத்தினத்தினாலே செய்து புட்பத்தினாலே அலங்கரித்திருக்கின்ற மஞ்சத்திலே தன்னந்தனியனாய் இருந்தான். சூர்ப்பணகை சொற்படி சீதையினுடைய உருவமானது மனத்திலே புகக் காமாக்கினி மெள்ள மெள்ளச் சரீரமெல்லாம் பரந்து நிறைந்தது. அவனுக்குத் தள்ளக்கூடாத அந்த ஆசை மேன்மேலும் வளர்ந்தது. புட்பங்களைப் பரப்பி அதன் மேலே வாசனையான குளிர்ந்த பனி நீரைத் தெளித்திருக்கிற சயனமும் கரிந்து போக, அஷ்டதிக்கஜங்களை வென்ற தோள்கள் காம வியாதியால் மெலிந்து மனம் நைந்து ஆவி வேகின்றவனானான். குளிர்ந்த சந்தனம், தளிர்கள், புட்பங்கள் முதலான சீதளவுபசாரங்கள் செய்வதெல்லாம் அக்கினி ஸ்வரூபமான மருந்தினாலே வேது பிடிப்பதுபோலாகிச் சரீரமெல்லாம் மிகுந்த உஷ்ணமாய் வெந்து நெருப்பூதும் துருத்தி போலப் பெருமுச்சு விட்டு மயங்கினான். ஆசையென்னும் வியாதி தலைக்கொண்டு, "அந்த மாதைக் கண்ணினாலே பார்க்கவேண்டும்!" என்னும் இச்சை மேன்மேலும் மூள, மிகவும் நொந்

தான். மன்மத பாணம் போல மல்லிகைப்பூ வாசனையுடனே தென்றல் வர, அதைக் கோபித்துச் சீறி, அது சகிக்காமல் அங்கேயிருந்தெழுந்து, ஒன்றும் தோன்ருமல், மாதர் பலர் இரு பக்கத்திலும் தீபங்களை வரிசையாய் ஏந்தி வர, ஒரு சிங்காரவனத்திற்போய், அதன் நடுவேயுள்ள சித்திர மண்டபத்திலே பால் போல அமைத்திருக்குஞ் சயனத்திலே சேர்ந்தான். அவன் நிலவை நோக்கி, "சந்திரா, நீ சரீரந்தேய்ந்து வெளுத்திருக்கிருய்; உள்ளங்கறுத்திருக்கிருய்; இருந்த இடத்திலிராமல் திரிந்து எரிந்து காய்ந்துகொண்டிருக்கிருய். என்னைப்போல நீயும் அந்தச் சீதையைக்கண்டு வந்தவர்கள் சொல்லக் கேட்டாயோ? மன்மதபாணத்தைப் பறித்தெறிகிறவர்களில்லாமல் ஓய்ந்திருக்கின்றேனே!" என்று சொல்லி, "இந்தச் சந்திரனை இராத்திரியுடனே கூடத் துரத்திவிட்டு, முன் போலப் பகலையும் சூரியனையும் வரச் சொல்லுங்கள்," என்று ஆக்கியாபிக்க, ஒரு நொடிப்பொழுதிலே சூரியனும் பகலும் வந்தன. நாழிகை முடியச் செல்லாததற்கு முன்னே சூரியன் புறப்பட்டு எங்கும் பிரகாசிக்கவே,வண்டுகளெல்லாம் பகற்காலமானது தெரியாமல் புஷ்பங்கள் நிறைந்திருக்கிற தடாகங்களிலே உறங்கினபடியே கிடந்தன. அன்னப் பட்சிகளுங் கள் குடித்தவர்கள் போல மயங்கி உறங்கிக் கிடந்தன. தீபங்களெல்லாம் புருஷனைப் பிரிந்த ஸ்திரீகள் போலப் பிரகாசம் மழுங்கின. விடியும் நேரத்திலே மலர்கிற புஷ்பங்களெல்லாம் மலராமல், நித்திரை செய்கிற ஸ்திரீகள் கண்கள் போலக் குவிந்தபடியே இருந்தன. இராவணேஸ்வரனுடைய ஆக்கினையினுலே சூரியன் வந்தது தெரியாமல், நாழிகை தெரிந்து மணியடிக்கிறவர்கள் திகைத்ததல்லாமல் கூவுகிற சாமக்கோழிகளும் திகைத்தன.

இப்படி உலகங்களெல்லாம் மயங்க இராவணனுனவன் சூரியனைப் பார்த்து, "மனத்தைக்கூட நெருப்பைப்போலச் சுடுகிறபடியினுலே இது அந்தச் சந்திரன்தான்," என்று சீறினுன். இராவணன் சூர்ப்பணகை வருணித்த நங்கையின்

உருவெளித்தோற்றத்தைக் கண்டு, "இந்தப் பெண்போல் ஒருத்தியை நான் எங்குங் கண்டதில்லை! இவள் என் தங்கை சொன்ன ஸ்திரீ ரத்தினந்தான்!" என்று சொல்லிக்கொண்டு, காம வியாதி சகிக்கமாட்டாதவனாகி, அந்த உருவெளியைக் கண்டு திகைத்து, "கண்ணினாலே கண்டு வந்தவளுக்கு இது நன்றாய்த் தெரியுமாதலால் அவளுக்குக் காண்பிப்போம்," என்றெண்ணி, "தங்கையை அழைத்து வாருங்களடா!" என்றான். உடனே தூதர் போய் அழைக்கவே, அவள் அதி சீக்கிரமாய் ஓடி வந்தாள்.

இராவணன் தங்கையைப் பார்த்து, "இதோ பார்! மையுடனே பிரகாசிக்கிற வாளைப்போன்ற கண்ணும், மயிலைப் போன்ற சாயலுமுடையவளாய் வந்து என்னெதிரே நிற்கிறாள். இவள்தானா நீ சொன்ன சீதை?" என்று கேட்டான். அவள், "செந்தாமரை மலர் போன்ற கண்ணுடனும், கனி போன்ற சிவந்த வாயுடனும், ஆஜானுபாகுவுடனும், விசால மார்புடனும், நீல பருவதம் போல எதிரே நிற்கிற இவன்தான் இராமன்," என்று சொன்னாள். அது கேட்டு இராவணன், "நான் கண்டது ஸ்திரீ ரூபம். நீ பூலோகத்திலே இல்லாத புருஷ ரூபமென்று சொல்லுகிறாய். அனேக மாயைகள் கற்றிருக்கிற நம்மைப் பூலோகத்து மனிதரும் மாயை செய்யலாயிற்றல்லவா?" என்றான். அதற்குச் சூர்ப்பணகை, "மனம் பின்னையொன்றிலும் வியாபியாமல் அவ்விடத்திலேயே நீ ஆசை வைத்திருக்கிறபடியினால், நீ பார்க்கிற இடமெல்லாம் அவள் ரூபமாக உனக்குக் காண்கின்றது. இப்படித்தான் மனத்திலே ஆசை மிகுந்தவர்களுக்குக் காண்கின்றது," என்று சொன்னாள். இராவணன், "நான்தான் அப்படியானால், நீ இராமனை இப்படிக் காண்கிற வயணமென்ன?" என்று கேட்டான். அவள், "என்று அவன் என்னை இப்படிச் செய்தானோ, அன்று முதல் நானும் அவனை மறக்கிறதில்லை," என்று சொன்னாள். "நீ சொல்லுகிறது மெய்தான். அதனாலேதான் என் சரீரமும் பிராணனும் நைந்து வேகின்றன.

இந்தத் துயரத்துக்கு முடிவைக் காணேன்,'' என்ருன் இராவணன். சூர்ப்பணகை, "அண்ணு, மூன்றுலகத்துக்கும் அதிபதியாகிய நீ இப்படிக் கிலேசப்படுவானேன்? சீக்கிரத்திற் போய் அந்தப் பெண்ணை எடுத்து வந்துவிடு,'' என்று சொல்லித் தன்னிடத்துக்குப் போனுள்.

இராவணன் ஒன்றும் உணராதவனுய், மதி மயங்கி, பெருமூச்சு விட்டுச் சோர்ந்து, தேகஸ்மரணையில்லாமல், பிராணுவஸ்தை பட்டான்.

ஆகையால், இராவணன், "உடனே அந்தச் சீதையை நான் கண்ணிஞலேயாகிலும் காணுமற்போனல் கூற்றுவனும் இந்த க்ஷணமே என்னிடத்தில் வருவான். இதற்கேதாகிலும் யோசனை பண்ணவேண்டும். மந்திரிகளை அழையுங்களடா,'' என்ருன். உடனே ஏவலர் ஓடி அழைக்கவே, மந்திரிகள் பயந்தோடி வந்தார்கள். அவன் மந்திரிகளுடனே யோசனை செய்து, மனம் திகைத்து, உடனே ஆகாயமார்க்கமாய்ப் போகிற ஒரு விமானத்தின்மேலேறிக்கொண்டு, பஞ்சேந்திரியங்களையும் அடக்கி *மாரீசன்* தவம் செய்துகொண்டிருக்கிற வனத்துக்குத் தனித்துப் போய்ச் சேர்ந்தான்.

இராவணனை மாரீசன் கண்டு, திடுக்கிட்டெழுந்து, மனத்திலே பயத்துடன் எதிர்கொண்டு வந்து, அவனுக்குச் செய்யவேண்டிய உபசாரங்கள் செய்து, "கற்பக விருக்ஷத்தினிழலிலே தேவாதிபத்தியஞ் செய்கிற தேவேந்திரனுக்கும் எமதர்மராஜனுக்கும் பயப்பிராந்தியுண்டாகும்படி ராஜரீகஞ் செய்கிற நீ, இந்த வனத்திலே புல்லிஞலே கட்டியிருக்கிற என் குடிசைக்கு எளியவன் போல வந்த வயணமென்ன?'' என்று கேட்க, இராவணன், "நான் இப்போது சோர்ந்து போனேன். என் பிரதாபமும் பெருமையும் கீர்த்தியும் போய் விட்டன. அதை என் வாயினுல் உமக்கு என்னவென்று சொல்லப் போகிறேன்! அது தேவர்களுக்கும் நாம் தலை சாய்க்கும்படி நமக்கே வெட்கக்கேடாயிருக்கும். மனுஷருக்குத் தைரியமுண்டாகி அவர்கள் கைவாளினுலே உன் மரு

மகளுக்கு மூக்கும் போயிற்று. அது என் குலத்துக்கும் உன் குலத்துக்கும் இழிவாகுமல்லவா? அது மாத்திரமா! இந்த வார்த்தையைக் கேட்டு அவர்கள் மேல் யுத்தத்துக்குப் போன உன் மருமக்கள்மாரான கரன், தூஷணன், திரிசிரன் மூவரும் அந்த மனிதரை ஜயிக்கமாட்டாமல் ஒருவன் பாணத் தினுலேயே அத்தனை பேரும் ஒரு முகூர்த்தத்திலே மடிந்து போனுர்கள்.

“ஆகையினுலே, என் மனம் வெந்துலர்ந்து போயிற்று. இந்த மானத் தாழ்வுக்குப் பிராணனை விட வேண்டும்! அவர்கள் நமக்குச் சமானமானவர்களல்லாதபடியினுலே போர் செய்கிறதற்கு மனம் சம்மதிக்கவில்லை. அந்த மனிதரிடத்தில் ஒரு ஸ்திரீ இருக்கிருள். அவளை எடுத்துக்கொண்டு வருகிறதற்கு யோசனை செய்து, உன்னைத் துணையாக அழைத்துக்கொண்டு போய் இந்த அபவாதத்தை உன்னுலே தீர்த்துக்கொள்ள நான் இவ்விடத்துக்கு வந்தேன்,” என்று சொன்னுன்.

இந்த வார்த்தையெல்லாம் இராவணன் சொல்லி முடிவதற்கு முன்னமே மாரீசன் கையினுலே தன் காதை மூடிக்கொண்டு, மயங்கி, அச்சத்தை விட்டுக் கோபத்துடனே, “ராஜாவே, நீ உன் வாழ்வை முடித்துக்கொண்டாய்! புத்தி கெட்டுப் போனுய்! இந்த நினைவு உன்னுலே வந்ததன்று. ஊழ் 'வினையினுலே வந்தது என்பதை நன்ருகத் தெரிந்து கொண்டேன்! உன் செவிக்குக் கசப்பாய் இருந்தாலும், உனக்குறுதியாகிய சில வார்த்தைகள் சொல்லுகிறேன், கேள்: பூர்வத்திலே நீ உன் கைகளையும் தலைகளையும் அறுத்தறுத்து அக்கினியிலே இட்டு நெடுங்காலம் பசியுடனேயிருந்து தவம்செய்து இந்தச் சாம்பிராச்சியம் சம்பாதித்தாய். இதை இழந்து போனுல் பின்னும் பெறலாமா? விவேகத்தினுலே நீயே இதை அழிக்கிருய். வேதங்களையெல்லாம் அறிந்து நீ தர்மத்தினுல் சம்பாதித்த பாக்கியத்தைப் பாவத்தினுலே இழந்து போகலாமா? தம்மிடத்தில் அன்பு கொண்

டிருக்கிறவருடைய நாட்டைப் பறித்துக்கொண்டவரும், நீதி தப்பிக் குடிமக்களிடத்தில் இறை வாங்கிக்கொண்டவரும், ஒருவனுடைய ஸ்திரீயை அபகரித்தவரும் என்று சொல்லப் பட்ட இவர்களையெல்லாந் தர்மமே சீறி அழித்துவிடும். கண்டகராயிருந்தவரில் எவர் சுகப்பட்டார்? தேவாதிபதியான இந்திரன் அகலிகையினாலே என்ன பாடு பட்டான்? அவ னைப்போல எத்தனைபேர் என்னென்ன கேடு கெட்டார்கள்? மகா லட்சுமிக்குச் சமானமாகிய எத்தனை ஸ்திரீகள் உன் பாக்கியத்துக்கு ஹானியாய் உன் வீட்டிலிருக்கிறார்கள்? அப்படியிருக்க, இந்த அகிர்த்தியத்தையுஞ் செய்தாயாகில், பாவமும் பழியுமல்லாமல் வேறொன்றும் வாராது! அந்த இராமனென்கிறவனை யாரென்று நீ நினைத்திருக்கின்றாய்? இந்த லோகங்களையெல்லாம் பெற்ற ஸ்ரீ மகா விஷ்ணுவே அவன். அவன் கையிலிருக்கிற பாணங்கள் மஹரிஷிகள் சாபத்துக்குச் சமானமாயிருக்கின்றன. அவைகளினால் உன் தம்பிமாரையும் உங்கள் குலத்தையும் முடித்துவிடு வான்! உன் தம்பி கரன் உன்னிலும் அதிக பலமும் சேனை யுமுள்ளவனாயிருந்தான். அவனையே ஒரு வில்லினால் கொன்றா னென்றால், மற்றவர்களைக் கொல்லுகிறதைக் குறித்து ஒரு வர் சொல்லவேண்டுமா? மகாவீரனான விராதன் முதலான வர்களெல்லாம் அவன் அம்பினாலே மடிந்து போனார்கள்! இனி நம்முடையவர்களிலே யார் பிழைத்திருக்கப் போகிறார் கள்? இதை நினைக்குந்தோறும் வருத்தப்பட்டுக்கொண்டே யிருக்கிறேன்! அப்படியிருக்க, நீ இந்த வார்த்தையைச் சொல்லிப் பின்னும் அதிக துக்கமுண்டாக்கினாய்! மிகுந்த பலசாலிகளெல்லாம் அந்த இராமன் கையினாலே மாண்டு போனார்கள். நீயும் அப்படி மாண்டு போகின்ற காரியம் செய்ய வேண்டா. நான் நூறு தரம் சொன்னதாக எண்ணி, அது செய்ய வேண்டா. செய்தால், பிழைக்க வழியுண்டா காது. தர்மந்தப்பி அரசாண்டவர்களெல்லாம் அதோகதி யாய்ப் போனார்கள். என் தம்பிக்கும் தாய்க்கும் ஒரே அம்பு

விட்ட கோதண்டராமனுக்கும் அவன் தம்பிக்கும் என்னுடைய ஆண்மையடங்கி, என் மனம் இன்னம் நடுங்குகின்றதே! சராசரங்களெல்லாம் நிலையற்று அழிந்து போமென்கிற மெய்ம்மையையறிந்த நீ இப்படிப்பட்ட பொல்லாங்கு ஒன்றும் நினையாமல், என் வார்த்தையைக் கேட்டு, என்றைக்குஞ் சாம்ராச்சியத்துடனே சுகமாயிரு,'' என்று சொன்னன்.

இராவணன், "கங்காதரனுன சிவனைக் கைலாச பருவதத்துடனே ஒரு கையினுல் தூக்கியெடுத்த என்னுடைய தோளாண்மை ஓர் அற்ப மனிதனுக்கு இளக்கிறதாகச் சொன்னுயல்லவா?'' என்று கண்களில் நெருப்புப்பொறி பறக்க, புருவம் நெற்றிமேலேற விழித்துப் பார்த்து, "நீ நடந்த காரியத்தையும் நினைத்துப் பார்க்கவில்லை; என்னுடைய புஜபலத்தையும் பயமில்லாமல் இகழ்ச்சி செய்தாய்! இதற்கு உன்னை ஆக்கினை செய்ய வேண்டும்! ஆயினும், இந்த ஒரு பிழை பொறுத்தேன்!'' என்று சொன்னன்.

இப்படித் தன்னைக் கோபித்துக்கொண்ட கடூரனை மாரீசன் பார்த்துப் பின்னுங் கோபம் கொள்வானென்று அஞ்சாமல், "நீ இந்தக் கோபம் என்மேலே கொண்டதன்று; உன் மேலும் உன் குலத்தின்மேலும் கோபங் கொண்டாய். நீ ஒரு மலையெடுத்ததை அல்லவோ அதிசயமாகச் சொல்லுகிருய்? அதை ஒரு பொருளாக நினைக்க வேண்டா. சிவன் கையிலேயிருந்த வில் அந்த மகாமேரு பர்வதமல்லவோ? அந்தப் பர்வதத்தை ஒடித்த சத்தம் அண்டங்களெல்லாம் கேட்டு நடுங்கிற்று. அது மாத்திரமா? அதிலும் அதிக பலமாயுயர்ந்திருக்கிற வில்லென்ற மலையை, 'நீ இதை வளை!' என்று மகா பராக்கிரம சாலியான பரசுராமன் கொண்டு வந்து கொடுக்க, அந்த மலையையும் வாங்கித் துவளும்படி அவன் வளைக்கவில்லையா? நீ யாதொன்றும் அறியாய்! சொல்வதுங் கேளாய்! இராமன் யுத்தத்தைக் குறித்துத் தும்பை மாலை தரியாததற்கு முன்னே உன்னுயிர் கொள்ளையாய்ப் போகும்! அந்த இராமனுடைய மனைவி சீதையை

ஸ்திரீ சொரூபமென்று எண்ணுதே. அவளே இராட்சதர்கள் செய்த தீவினையென்று அறிந்து பிழை! உன் குலத்தோடே சுகமாயிருப்பாய்! மனத்தில் அந்த ஆசையை வைத்திருந்த போதிலும், இனி நினையாமல் விட்டுவிடு! என்னுடைய உயிர் அஞ்சி நடுங்குகின்றது! எப்படிப்பட்டவனுனாலும், கூட இருக்கிறவன், 'விஷத்தைக் குடிக்கிறேன்,' என்ருல், 'அது நல்லதுதான்! என்று சொல்லுவானு? அப்படிச் சொல்லு கிறதுதான் அவனுக்கு நலமா? ஈசன் முதலான சகல தேவர் களுடைய லோகங்களையும் ஓர் இமைப்பொழுதிலே ஜயிக்கத் தக்கவையாய், விசுவாமித்திரர் கொடுத்த திவ்விய ஆயுதங் கள் மிதமில்லாமல் அந்த இராமனிடத்தில் அவன் சொன்ன படி கேட்டுக்கொண்டிருக்கின்றன. ஆயிரங் கைகளையுடைய அதிசூரபராக்கிரமமுள்ள கார்த்தவீரியனை மழுவாயுதத்தி னலே ஒரு நொடிப்பொழுதிலே பிராணனை வாங்கின பரசுராம னுடைய பலத்தையெல்லாம் வில்லுடனே கிரகித்துக் கொண்ட அந்த இராமனுக்கெதிரே, நாமா நிற்க மாட்டு வோம்? காமவிஷந் தலைக்கேறி, அந்த வேதனையினுலே சரீரமும் புத்தியும் இளைத்து, நீ இந்தக் கெட்ட வார்த்தை சொன்னுய்! இது மிகுந்த பொல்லாங்கு செய்கிற காரியம்! உனக்கு நான் அம்மானும் வயதில் மூத்தவனுமானபடியினுல் இதைச் சொன்னேன். இந்தக் காரியத்தை விட்டுவிடு!'' என்று சொன்னுன்.

இவ்வளவு வார்த்தைகளையும் எவ்வளவோ யோசனை செய்து சொன்ன மாரீசனைப் பார்த்து, இராவணன் அதிக கோபத்துடனே, ''மாமா, உன் தாயைக் கொன்றவனைக் கண்டு நீ பயந்து கிலி பிடித்துப் பேசுகிருய்! இப்படிப்பட்ட பயங்கொள்ளியான நீ யாருக்குத்தான் உதவியாகப் போகி ருய்? திக்கஜங்களைத் தந்தங்கள் முறிந்து ஓடியொளிக்கும் படி வென்று, தேவர்களெல்லாம் தங்கள் தங்கள் நிலை கெட் டுப்போய் எளியவர்களாகச் செய்து, எமலோகத்திலேயும் புகையெழும்பும்படி செய்து, திரிலோகங்களையும் ஆள்கிற

என்னைத் தசரதன் பிள்ளைகள் வெல்லுவார்களென்று சொல்லுகிற உன் புத்தி நல்ல புத்தி! நான் மூன்று லோகத்திற்கும் நாயகமான ஆதிபத்தியம் சம்பாதித்தேன். எனக்குச் சத்துருக்கள் அகப்பட்டால், அதற்கு மிஞ்சின நன்மை வேறேயிருக்கின்றதா? நீ நான் சொன்னபடி நடந்துகொள்ள வேண்டுமேயல்லாமல், எனக்கு மந்திராலோசனைகள் சொல்லத்தக்க யோக்கியதை உனக்குண்டோ? இனி நீ என் சொல்லை மறுத்து உத்தரஞ் சொன்னால், இந்த வாளினாலே வெட்டி எறிந்து, என் மனக்குறையை முடித்துக்கொள்வேனேயல்லாமல், பயந்துவிடமாட்டேன்! நீ இன்னஞ் சில நாள் இந்தப் பூமியிலே ஜீவனுடனேயிருப்பவனானால், எனக்கு வெறுப்புண்டாக்குகிற இவ்வார்த்தையை விட்டு, என் மனத்தின்படி நடந்துகொள்!'' என்று சொன்னான்.

அதைக்கேட்ட மாரீசன் அடங்கி, ''யாராயினும், உலகத்திலே செருக்கிய நெஞ்சுடையவர்கள் உடனே கெட்டுப் போவார்களென்கிறது தத்துவமல்லவோ? ஆகையால், மனச்செருக்கினாலே பிராணனைப் போக்கடித்துக்கொள்ளுகின்றவர்களை எவராலே நிறுத்தக்கூடும்?'' என்று எண்ணிக்கொண்டு, உருக்கிய செம்பு நீர்போலக் கொதிப்பாய், ''ஐயா, உனக்கு உறுதியாக வேண்டுமென்று இத்தனையுஞ் சொன்னேனேயல்லாமல் என் பிராணன் போய்விடுமென்ற பயத்தினாலே சொல்லவில்லை. ஒருவனுக்கு நாசகாலம் நேரிட்டால், அப்போது நல்லது பொல்லாததாய்த்தான் போம்! நீ அற்பகுணத்தையுடையவன். நான் செய்ய வேண்டுவதுதான் என்ன? அதைச் சொல்,'' என்றான்.

இப்படி மாரீசன் சொல்லவே, இராவணன் அவனை மார்புடனே இறுகக் கட்டிக்கொண்டு, சந்தோஷமாகி, ''மாமா, மன்மதனுடைய அக்கினி ஸ்வரூபமான அஸ்திரத்தினாலே சாவதைப்பார்க்கிலும் அந்த இராமனுடைய அம்பினாலே சாவது புகழல்லவா? குளிர்ந்த தென்றற்காற்றையும்

எனக்குப் பகையாக்கிய அந்தச் சீதையை எனக்குக் கொடு,'' என்று சொன்னுன்.

இது கேட்ட மாரீசன், "பூர்வத்தில் இரண்டு இராட்சதர்களுடனே கூடத் தண்டகாரணியத்திலே நான் பிரவேசித்த போது இராமனுடைய சரங்கள் வந்து பாய, கூட வந்த என் தம்பி முதலான துணைவர்கள் உருண்டு போக, அதைக்கண்டு பயந்து என் மானமழிய ஓடி வந்த நான், செய்யுங் காரியம் என்னவிருக்கின்றது?'' என்று கேட்க, "ஐயா, உன்னுடைய தாயின் பிராணனை வாங்கினவனைக் கொல்லுவதற்கு நானிருக்கிறேன்! நீ வஞ்சனையாக ஒரு மாயை செய்தால், அந்தச் சமயத்திலே நான் சீதையை எடுத்து வரலாம்,'' என்று இராவணன் சொன்னுன்.

மாரீசன், அந்த இராமனுடைய தேவியை வஞ்சனை செய்து கொண்டு வருவது நமக்குக் கௌரவக் குறைவாகும். ஆகையால், சேனை சமுத்திரத்துடனே போய் அவனை ஜயித்து எடுத்து வந்தால் உனக்குப் பெருமை உண்டாகும்,'' என்று சொன்னுன்.

அவ்வார்த்தையைக் கேட்ட இராவணன் நகைத்து அதிசயித்து, "மனிதரைக் கொல்லுவதற்குச் சேனையும் வேண்டுமா? அந்த மனிதரைக் கொன்ருல், சீதை தனியாய் இராள்; அவர்களுடனே இறந்து போவாள். ஆகையினுல், மாயஞ்செய்தே அவளைக் கொண்டு வரவேண்டும்,'' என்று சொன்னுன்.

"அந்தச் சீதா தேவியைத் தீண்டாததற்கு முன்னமே இராமனுடைய பாணம் வந்து இவன் தலையை அறுத்துவிடுமென்று இவனுக்குத் தெரியும்படி புத்திசொன்ன எனக்கும் இந்தக்கேடு வந்ததல்லவா? விதியை வென்றவர் யாரிருக்கிருர்கள்? இவன் சொன்னபடியே கேட்டுத் தீர்வோம்,'' என்று மாரீசன் எண்ணிக்கொண்டு, "நான் என்ன மாயஞ் செய்யவேண்டும்? சொன்னுல் அப்படியே செய்கிறேன்,'' என்று சொல்ல, "பொன் மானுக ரூபமெடுத்துப் போய் அச்

சீதைக்கு ஆசையை உண்டாக்கு,'' என்று இராவணன் சொல்ல, "அவ்வண்ணமே செய்கிறேன்,'' என்று சம்மதித்து மாரீசன் போனான். இராவணனும் வேறொரு வழியாய்ப் போனான்.

மாரீசன் தன் சுற்றத்தானாகிய இராவணனுடைய கொடுமையை நினைத்துத் துக்கித்தும், இராம லட்சுமணர்களான வீரர்களுடைய பலத்தைக் குறித்து அஞ்சியும், நஞ்சு கலந்த குளங்களிலேயிருக்கும் மீனைப்போல நெஞ்சு தடுமாறி, இரகு குலோத்தமர் எழுந்தருளியிருக்கும் வனத்திலே போய், தன் சரீரகாந்தியானது பூமியையும் ஆகாசத்தையும் மிகவும் பிரகாசிக்கச் செய்வதான பொன் மானாக ரூபமெடுத்து, சீதாலட்சுமியைத் தேடிக்கொண்டு நடந்தான். அப்போது அந்த மாயமானைக்கண்டு ஆரணியத்திலிருக்கும் கலைமான்களெல்லாம், அதிக ஆசையுடனே வஞ்சனையாய் மனத்திலே நேசமில்லாமலிருக்கும் விலை மாதர்களான தாசிகளிடத்திலே ஆசைவைத்துச் சேருகிறவர்களைப் போல, பொய் மான் என்பதையறியாமல் இனமென்றெண்ணித் தொடர்ந்து வந்தன. இப்படி அதிக அழகுடனே வருகிற பெண் மானை, பூப்பறிக்க வெளியே வந்து வனசிங்காரங்களைப் பார்த்துக் கொண்டிருக்கும் வைதேகியான சீதா பிராட்டி, தன் கண்ணிலே கண்டாள். இப்படிக் காணவே, அது வஞ்சனை மானென்றறியாதவளாய், அதனிடத்திலே மிகுந்த விருப்பம் கொண்டாள். இனி, அது மூலமாக இராவணன் சாகவும், அதனாலே பூமியெல்லாம் தர்ம பரிபாலனமாகவும் இருப்பதனால், ஜானகிக்கு அந்தப் பொன் மான்மேல் ஆசை 'பெருக, அவள் துரிதமாய் நடந்து தன் பிராணநாதரான விஜயராகவர் சமீபத்திலே வந்து, "சுவாமி, பொன் மயமான சரீரமும் மாணிக்க மயமான காதுகளும் கால்களும் உடைய ஒரு மான் வந்திருக்கிறது! நீங்கள் வந்து அதைப் பாருங்கள்!'' என்று அதிக பிரியத்துடனே சொன்னாள். ஸ்ரீராமரும் அந்த மானின் மேல் விருப்பமுடையவரானார். அதையறிந்த இலட்சுமணர்,

"சுவாமி, இத்தகைய மான் எங்கேயாயினும் உண்டா? ஆகவே, இது இராட்சதருடைய மாயமென்று எண்ண வேண்டுமே அல்லாமல், மெய்யான மானென்றெண்ண லாமா? என் மனத்துக்கு ஐயமாயிருக்கிறது!" என்று சொன்னூர்.

ஸ்ரீராமர், "தம்பி, பூலோகத்திலேயிருக்கிற ஜீவஜந்துக் களையெல்லாம் யார் அறிந்திருக்கிருர்கள்? பலகோடி உயிர் கள் பரந்திருக்கிறபடியினுலே, உலகில் இல்லாததில்லை. சரீர மெல்லாம் பொன்மயமான அன்னங்கள் இருந்ததை நீ அறி யாயா?" என்று சொல்ல, அப்போது சீதை, "சுவாமி, நீர் பேசிக்கொண்டிருக்கிறதற்குள்ளே அது எங்கேயாயினும் ஓடி மறைந்து போய்விடும்!" என்று வருந்திச் சொன்னுள். சீதை யின் மனத்தையறிந்த இரகுராமர், "அது எங்கே? காண்பி," என்று நடந்தார். இலட்சுமணர் தம் மனத்திற்குச் சமாதான மில்லாமையால் அவர் பின்னே தொடர்ந்தார். அச்சமயத்தில் தள்ளப்படாத வினை இதுதானென்றெண்ணும்படி பொன் மான் எதிரே வந்தது. அது வந்து நின்று அவர்களைப் பார்த்து மருள மருள விழித்தது. அப்படி விழித்த மானைப் பார்த்து, ஸ்ரீராமர், யோசனை செய்து பாராமலே, "இது மாய மானன்று," என்று சொன்னூர். அவர் திருப்பாற்கடலிலே சேஷசயனத்தைவிட்டு நீங்கி உலகில் அவதாரஞ் செய்தது தேவர்கள் செய்த பாக்கியமல்லவா? அது பழுதாய்ப் போகுமா? ஆகையினுலே, அவர் அந்த மானை நோக்கி மிக வும் மகிழ்ந்து, "தம்பி, இதற்குச் சமானம் எதைச் சொல்ல லாம்? நீயே பார்! இதைக் கண்டால் யார்தான் இச்சைப் படாமல் இருப்பார்?" என்று சொல்ல, இலட்சுமணர், "சுவாமி, எப்படியானுலும் ஆகின்றது. நாம் அதிசயமான பொன் மானைக் கண்டோம். இனி இவ்விடத்தில் நமக்கு என்ன காரியம்? நம் இருப்பிடம் போய்ச் சேருவதே உத்த மம்," என்று சொன்னூர்.

அப்படிச் சொல்லும்போது சீதை ஸ்ரீராமரைப் பார்த்து,

"சுவாமி, இந்த மானை எனக்குப் பிடித்துக்கொடுத்தால் நான் பட்டணத்தில் விட்டு வந்த கிளி முதலானவைகளை மறந்து சந்தோஷமாய் விளையாடிக்கொண்டிருப்பேன்!" என்று சொன்னாள். இவ்விதம் சொல்லவே, ஸ்ரீராமர் அதைப் பிடிப்பதற்குப் பிரயத்தனப்பட்டார். அப்போது தெளிவுண்டான தம்பியார், ஸ்ரீராமரைப் பார்த்து, "சுவாமி, இது இராட்சதர்களுடைய வஞ்சனையேயல்லது வேறன்று. அதுவும் உங்களுக்குப் பின்பு தெரியும்," என்று சொன்னார்.

ஸ்ரீராமர், "தம்பி, இந்தப் பொன் மான் நீ சொல்லுகிறபடி மாயமானானால், நம் பாணத்தாலே மடிந்து போகின்றது! இராட்சதர்களைக் கொல்லுகிறோமென்றுதான் நாம் ஒரு சங்கற்பம் செய்துகொண்டிருக்கிறோமே! அந்தக்கடன் கழித்தவர்களுமாகின்றோம்; மெய்யான மானானால், பிடித்துக் கொள்ளுகிறோம். இப்படி இரண்டு விதமும் நன்மையாயிருக்கப் பொல்லாததென்று ஏன் சொல்லுகிறாய்?" என்று சொல்லவே, இலட்சுமணர், "இந்த மானை முன்னே காட்டிப் பின்னே யாரிருக்கின்றார்களோ! அதுவும் நாம் அறியோம். அறியாத காரியத்திலே நாம் பிரவேசிக்கலாகாது," என்று சொன்னார்.

"இராட்சதர்கள் நம்மிடத்திலே பகையாயிருக்கிறார்களென்றும், அவர்கள் மாயத்தில் மிகுந்தவர்களென்றும் எண்ணிப் பூண்ட விரதத்தை விட்டுவிடுவது அனைவருக்கும் நகைப்பாய் இராதா? ஆதலால், இந்தக் காரியம் செய்வதே உத்தமம்," என்று ஸ்ரீராமர் சொன்னார். "சுவாமி, அனுயாசமான காரியமானாலும் எண்ணிப் பார்த்துச் செய்வது நல்லதல்லவா? அடியேன் இந்த மானின் பிறகே தொடர்ந்து போய் இந்த மானை நமக்கு எதிரே விட்டுப் பின்னேயிருப்பவர் யாரானாலும் என் வில்லில் அஸ்திரங்கள் தொடுத்துச் சங்கரித்து, இந்த மானையுங் கொன்றுவிட்டு வருகிறேன். மெய்யான மானேயானால், பிடித்து வருகிறேன்," என்று சொல்ல, அப்போது சீதா பிராட்டியானவள், "சுவாமி, தேவரீரே தொடர்ந்துபோய்ப் பிடித்துக் கொடுக்க வேண்டும். அப்படிச்

செய்பவில்லையே !'' என்று வருந்திப் பர்னசாலையை நோக்கி நடந்தாள். அப்படிக் கோபத்துடனே நடந்து போகிற சீதையைக் கண்டு, பரமபுருஷர் இலட்சுமணரைப் பார்த்து, "அப்பா, இந்த மானை நானே பிடித்துக்கொண்டு சீக்கிரத்தில் வருகிறேன். நீ சீதையைக் காத்துக்கொண்டு இரு,'' என்று வில்லும் அம்பும் கையில் வாங்கிக்கொண்டு நடக்கத் தொடங்கினுர்.

இலட்சுமணர், "சுவாமி, முன்னுள் விசுவாமித்திரர் யாகத்திலே மாரீசனென்பவன் மடிந்து போகாமல் ஓடிப் போனுனே ! அவன்தான் இவனென்று எனக்குத் தோன்றுகிறது! நல்லது! இன்னமும் பார்க்கப் போகிறீர்கள்! போய் வாருங்கள்,'' என்று இரண்டு கையும் கூப்பி வணங்கித் திரும்பி வந்து, சீதா தேவி இருக்கிற பர்னசாலையைக் காத்துக்கொண்டு ஒரு புறத்திலே நின்ருர்.

ஸ்ரீராமர் மானைத் தொடர்ந்தார். அந்த மானுனது வெறித்துப் பார்த்து, பயந்தது போல உயரக்குதித்து, காதுகளை நெறித்து நீட்டி, கால்களைச் சேரவைத்தெழும்பி, வாயுகதி மனேகதி முதலானகதிகளுக்கெல்லாம் வேறெரு கதி காட்டுகின்றது போலத் துள்ளித் துள்ளித் தாண்டிப் பாய்ந்து பாய்ந்து ஓடிற்று. அந்த மாயமான் பர்வதத்தின்மேல் ஏறும் ; அங்கேயிருந்து மேகக் கூட்டத்தின்மேல் குதிக்கும் ; கிட்டப் போனுல், அப்பால் போய்விடும் ; சற்றே தாமசமாயிருந்தால், கையினுலே தீண்டிப் பிடிக்கலாமென்னும்படி நிற்பது போல இருந்து ஓடிப்போம்; அப்போது ஸ்ரீராமர், "இதனுடைய வடிவமும் செய்கையும் வெவ்வேருய் இருக்கின்றன. ஆதலால், தம்பி இதன் கருத்தை முன்னமே அறிந்து நமக்குச் சொன்னுன். இராட்சதர் செய்த மாயந்தான் இம்மானுய் வந்தது!'' என்று வருத்தத்துடனே திருவுளத்திலே நினைத்தார். அதை அந்த இராட்சதனுகிய மாரீசன் அறிந்து, "இனி இவர் எப்படியுங் கொல்லுவார்,'' என்று நினைத்து, அதிவேகமாய் ஆகாயத்திலே எழும்பினுன். அந்தக்கணத்திலே ஸ்ரீராமர் ஒருபாணத்தை

வில்லிலே அமைத்து, "இவன் எந்த லோகம் போனாலும் இவனுடைய 'பிராணனை வாங்கு!" என்று ஆக்கியாபித்து விட்டுவிட்டார். நீண்ட அலகுடைய இராமபாணம் அந்த மாரீச னுடைய வஞ்சம் நினைத்திருந்த நெஞ்சிலே பட்டு உருவி யது. அந்தச் சமயத்தில் மாரீசன் கோர தந்தங்களையுடைய வாயினாலே, அஷ்டதிக்கிலும் அப்பாலுங் கேட்கும்படி, "இலட்சுமணா!" என்று கூவி அழைத்து, ஒரு பர்வதம் போலே விழுந்தான். பொல்லாத தன் சுய ரூபத்துடனே அந்த இராட்சதன் விழவே, ஸ்ரீராமர் பார்த்து, 'இது மெய்ம் மானல்ல; பொய்ம்மான்,' என்று சொன்ன தம்பியைக் குறித்து, "என்னையன் கெட்டிக்காரன்! என் பிராணனுக் கொத்தவன்! நான் பிழைக்கும்படி வந்தவன்! மிகவும் கெட்டிக்காரன்!" என்று எண்ணிக் கொண்டாடினார்; அல றிக்கொண்டு விழுந்த சண்டாளனுடைய சரீரத்தைப் பார்த்து விஸ்வாமித்திரர் வேள்வியிலே வந்த மாரீசன் அவனே என் பதும் அறிந்தார்; "இந்தப் பாவி பாணம் படவே, மாயை யினாலே நம்முடைய குரல் போலக் கூவி அழைத்தானே! அந்தச் சத்தங் கேட்டுச் சீதை கிலேசிப்பாளே!" என்று திருவுளம் வருந்தினார்; உடனே, "இப்போது மாயையென்று நாம் கண்டறிந்த மாரீசனை முன்னமே தம்பி அறிந்து சொன்னான். ஆனபடியினால், சீதைக்கு மனந்தேறச் சொல் லித் தேற்றுவான்," என்றெண்ணி மனத்தைத் தேற்றிக் கொண்டு, "இந்த மாரீசன் சாவதற்கே துணிந்து வந்தான். இவ்விதம் வரவேண்டிய காரியமும் யோசனையும் வேறேயிருக் கும். அதற்கு லக்ஷியம் இந்தப் பாவி வஞ்சனையாக அழைத் துக்கொண்டு விழுந்ததும் ஒன்று! ஆதலால், நாம் இங்கே தாமசமாய் இருக்கிறது சரியன்று!" என்று சீக்கிரமாய்த் திரும்பினார்.

# 8. சடாயு உயிர் நீத்த படலம்

சீதா பிராட்டி அந்த மாரீசன் குரல் கேட்கவே, ஆலந் தளிர் போன்ற தன் வயிற்றைப் பிசைந்துகொண்டு அழுது மயங்கி, "அந்த மானைப் பிடித்துக்கொடுக்கச் சொல்லிப் புத்தியில்லாத நான் என் வாழ்வை முடித்துக்கொண் டேனே!" என்று ஏங்கித் தூரத்தில் எதிரே நிற்கிற இலட்சு மணரைப் பார்த்து, "என் நாயகர் இராட்சதன் செய்த மாயையினாலே பூமியிலே விழுந்தாரென்று தெரிந்தும், அவ ருடைய தம்பியாராகிய நீர் இவ்விடத்திலேயிருக்கலாமா?" என்று சொன்னாள். அதற்கு இலட்சுமணர், "அம்மா, இந்த லோகத்திலே என் தமையனாருக்கு மிஞ்சின பராக்கிரமசாலி களே இல்லை. என் தமையனாரை யாரென்று எண்ணி இவ் விதமாகக் கிலேசத்தில் மூழ்குகிறீர்? இராட்சதர்களுக்கு இடைந்து தோற்று வருத்தமுற்று ஸ்ரீராமர் இப்படி அழைப் பாரா? மாயமாய் வந்த அரக்கன் தன்மேல் இராமபாணம் பட, பிராணன் போகிற சமயத்திலே இப்படி வஞ்சனையாய் அழைத்தான். இதற்காக அங்கலாய்க்க வேண்டா. நீர் சும்மா இரும்," என்று சொல்ல, பிராட்டி வருத்தப்பட்டுக் கொதிக்கின்ற மனமுடையவளாய்ப் பார்த்து, "இப்படி நின்று கொண்டிருக்கிற உம் யோசனை நல்லதன்று! ஐயா, ஒருவ ருடனே நல்லவர் ஒரு நாள் பழகினாலும் அவருக்கு ஓர் ஆபத்து வந்தால் தம் பிராணனையுங் கொடுக்கிறார்! தமையனார் விழுந்த வார்த்தை கேட்டும், நீர் சிறிதாகிலும் மனத்திலே துக்கமின்றி நின்றபடியேயிருக்கிறீர்! இனி வேறென்ன இருக்கின்றது? நான் அக்கினியில் விழுந்து பிராணனை இழக்கிறேன்!" என்று சொல்ல, அப்போது இலட்சுமணர் சாஷ்டாங்கமாயச் சேவித்து, "அம்மா, நீர் சொன்ன வார்த்தையைக் குறித்து அடியேன் பயப்படுகி றேன்! இனி மறுத்துச் சொல்லுகிறதில்லை! நீர் கிலேசப் படாமல் இவ்விடத்தில் இரும். அடியேன் போகிறேன்.

விதியை வெல்லுகிறதற்கு நம்மாலாகுமா? ஏதோ விபத்து வருகின்றதாயிருக்கின்றது! தமையனார் ஆக்கினையை மறுத்து என்னைப் போகச் சொல்லுகிறீர். நீர் இவ்விடத்திலே வேறு துணையில்லாமல் தனியாய் இருக்கின்றீர்!'' என்று துயரத்தினாலே மனம் வேக, விடை கொண்டவராய், நெஞ்சந் திகைத்து, "ஏதாகிலும் கிலேசம் வந்தால், எங்கள் தந்தையாராகிய சடாயுவுக்குத் தெரியும். அவர் காத்துக்கொள்ளுவார்,'' என்று சீதைக்குத் தெரியச் சொல்லி, தேவர்கள் செய்த தபோ பலத்தின் பயனால் இலட்சுமணர் நடந்தார்.

இப்படி இளைய பெருமாள் போகவே, சமயம் பார்த்துக் கொண்டிருந்த இராவணன் தான் நினைத்து வந்த வஞ்சனையை முடிக்க, ஈஷணாத்திரயங்களை அறுத்துத் திரிதண்டத்தைக் கையிலே தாங்கிய சந்நியாசிகள் போல, ஆகாரமில்லாமல் உலர்ந்து இளைத்திருக்கிற சரீரமும், வெகு தூரத்திலிருந்து நடந்து வந்தது போல இளைப்பும் வருத்தமும், தள்ளாடிய நடையும், கைகால் நடுக்கமுமுண்டாக, ஒரு விருத்தனாகி, தாமரை மணி மாலை துளசி மணி மாலைகள் தரித்த தோளும், வீணையின் கானத்துடனே வேதத்தைப் பாடிக்கொண்டிருக்கிற வாயும், ஆமையைப் போல அடங்கின புலன்களும், வளைந்து கூனாயிருக்கிற முதுகும், முப்புரி நூல் பிரகாசிக்கிற மார்புமுடையவனாய், அருந்ததிக்குச் சமானமான ஜானகியிருந்த பர்னசாலையின் வாயிலில் வந்தான்; வாய் குழறி, "யாரிந்த வீட்டில் இறக்கிறவர்கள்?'' என்று கேட்டான். சீதாபிராட்டி அவனைக் குற்றமற்ற தவசியென்று நினைத்து, 'வாரும்,' என்று உபசாரஞ்சொன்னாள். இராவணன் சரீரமெல்லாம் வேர்க்க, ஆசைமிக, அழகுக்கெல்லாம் அழகாய், கீர்த்திக்கு இருப்பிடமாய், கற்புக்கு அரசியாய் விளங்குகிற சீதையைக் கண்டான்; ஏங்கினான்; "இவள் இன்பச் சமுத்திரத்துக்கு நான் தவம் செய்து சம்பாதித்த மூன்றரைக்கோடி ஆயுளும் போதுமா!'' என்று நினைத்தான்; "தேவர்களும் அசுரர்களும் தங்கள் மனைவியர்களுடனே ஏவல் செய்யும்படி

மூன்று உலகமும் இந்தப்பெண் அரசாட்சி செய்ய, இனி நானிவளுக்கு ஏவல் செய்து பிழைப்பேன்!'' என்று எண்ணினன்; "துபரம் வந்திருக்கிற வேளையிலேயே திருமுகத்தின் தேஜசானது இப்படி அதிக சுந்தரத்துடன் விளங்கிக்கொண்டிருக்குமானல், இன்ப வேளையில் எப்படி இலங்கும்! இப்படிப் பட்ட கன்னிகையை எனக்குக் கொடுத்த என் செல்வத் தங்கைக்கு என் அரசையே கொடுக்கிறேன்!'' என்று எண்ணினன். இவ்விதம் ஆசை மேன்மேலும் மூண்டெழுகின்ற சிந்தையையுடைய முறை கேடனுகிய இராவண சந்நியாசியைச் சீதா பிராட்டி தன்னை வஞ்சிக்க வந்தவனென்று அறியாமல், "இவ்விடத்தில் எழுந்தருளுமையா,'' என்று கூறி ஓர் ஆசனம் கொடுத்தாள். ஊன்றிக்கொண்டு வந்த திரிதண்டத்தை கீழே வைத்து மாயா சந்நியாசியானவன் அந்த இருக்கையிலே இருந்தான். அப்போது மலைகள் மரங்களெல்லாம் நடுங்கின. பட்சிகள் மிருகங்களெல்லாம் பயந்து அடங்கின.

இராவணன் சீதையைப் பார்த்து, "இந்தப் பர்னசாலை யாருடையது? இங்கேயிருக்கிற முனிவர் யார்? நீ யார்?'' என்று கேட்டான். சீதை, "ஐயா, தசரத மகாராஜாவினுடைய சற்புத்திரர் தாயார் வார்த்தையைச் சிரசாக வகித்து, தம்பியாருடன் இவ்விடத்தில் வந்து வாசஞ்செய்கிருர். அவர் பெயரை நீருங் கேட்டிருப்பீர்,'' என்று சொன்னுள். இராவண சந்நியாசி, "நான் கேட்டதுண்டு; அவரைக் கண்டதில்லை. அந்த இராச்சியத்திற்கு நானும் ஒரு தரம் வந்திருக்கிறேன். நீ யார் குமாரத்தி? இந்தக் காட்டிலே பொழுது போக்குகிருயே!'' என்று கேட்டான். சீதை, "நான் காமம் முதலியவற்றைக் கடிந்த பெருந்தவசிகளான உங்களைத் தவிரத் தெய்வம் வேறே இல்லையென்று நினைக்கும் ஜனகமகாராஜாவின் குமாரத்தி. என் பெயர் *ஜானகி*. நான் காகுஸ்தருடைய மனைவி. மிகுந்த முதுமையையுடைய நீர் எங்கிருந்து புறப்பட்டு அதிக வருத்தத்துடனே வழி நடந்து இந்தத் தண்டகா

ரணியத்துக்கு வந்தீர் ?'' என்று கேட்டாள். கபட சந்நியாசி, "தேவேந்திரனுக்குந் தலைவனும், அருமையான சுந்தரனும், பிரம குலத்திலே பிறந்தவனும், சகல லோகமும் ஆள்கின்றவனும், அரிய வேதங்களிற்பழகும் நாவினையுடையவனும், சிவனது கைலாச பருவதத்தை வேரோடும் பறித்த பலவானும், அஷ்டதிக்கஜங்களையும் யுத்தத்திலே தோற்கடித்து அவைகளினுடைய தந்தங்களைப் பொடிப் பொடியாகச் செய்த புஜபல பராக்கிரமமுடையவனும், தேவர்களெல்லாரும் கடைவாயிலிலிருந்து ஏவல் செய்யத்தக்க பிரதாபத்தையுடையவனும், பொன் மயமான இலங்காபுரிக்கு வேந்தனும், பிரமன் கொடுத்த முடிவில்லாத தீர்க்காயுளையுடையவனும், நவக்கிரகங்களையுங் கொண்டு வந்து சிறையிட்டவனும், நல்லொழுக்கத்தையுடையவனும், மன்மதனும் பார்த்து ஆச்சரியமாகி மனம் திகைக்கும்படியான பேரழகுடையவனும், எங்களைப் போன்றவர்களெல்லாம் இறையவர்களென்று எண்ணியிருக்கின்ற அந்த மும்மூர்த்திகளுடைய பெருமையைப்பார்க்கிலும் விசேஷமாகிய பெருமையையுடையவனுமான இராவணன் நிகரற்றவன். அவன் தன் மனத்துக்கு உகந்த ஒரு மங்கையை நாடியிருக்கிறான். நான் அந்த இலங்கையில் சில நாள் போயிருந்தேன். முன்னால் இவ்விடத்தில் நான் இருந்தவனானபடியினால், இங்கே இருக்கிற ரிஷிகளைப் பிரிந்திருக்க மாட்டாமல், திரும்பி வந்தேன்,'' என்று சொன்னான்.

சீதா பிராட்டி, "சகல பிராணிகளையுங் கொன்று தின்று எந்நாளும் பாவமே செய்கிற இராட்சதருடைய பட்டினத்திலா நீர் வாசஞ்செய்தீர்? அப்படி அங்கே வாசம் செய்ததற்குக் காரணமென்ன?'' என்று கேட்டாள்.

இராவணன், "பெண்ணே, இராட்சதர்கள் தேவர்களுக்குப் பொல்லாதவர்களேயல்லாமல், எங்களைப்போன்றவர்களுக்கு நல்லவர்களே,'' என்று சொன்னான். அப்படிச் சொல்லவே, சீதை, "இவன் யாரோ பொல்லாதவன்!''

என்று எண்ணினுள். அதை இராவண சந்நியாசியறிந்து, "மூன்று உலகமும் இராட்சதர் வாசமாயிருக்கிறபடியினுல் அவர்களை வழிபட்டிருந்து காலத்தைக் கழிக்க வேண்டுமே அல்லாமல், வேறு வழி என்ன இருக்கின்றது?" என்று சொன்னுன். அந்த வார்த்தையைக் கேட்ட சீதை, "ஐயா, என் பிராணநாயகர் எப்போது இந்த ஆரணியத்துக்கு வந்தாரோ, அப்போதே இராட்சதர்களெல்லாம் மடிந்து முடிந்து போனுர்களென்று எண்ணிக்கொள்ளும். இனி உலகத்திற்கு யாதொரு துயருமில்லை," என்று சொன்னுள். அது கேட்ட இராவணன், "இராட்சதர்களை மனிதர்கள் கொல்லுவார்களா? அப்படியானுல், யானைக் கூட்டத்தைச் சிறு முயல் கொல்ல வேண்டுமே!" என்ருன். சீதா பிராட்டி அவனை நோக்கி, "அதிபலவானுகிய விராதனும், மிகுந்த கோபத்துடனே வந்த கரன், தூஷணன், திரிசிரன் முதலான இராட்சதரும் மடிந்து போனதை நீர் கேட்டதில்லை போலும்! தருமத்தைப் பாவம் வெல்லுமா? அது உமக்குத் தெரியாதா?" என்று கேட்டாள். கபட சந்நியாசியாகிய இராவணனுக்கு மானம் மேலிட்டுக் கோபமுண்டாயிற்று. அவன் சீறி, "பலமற்ற ஒரு மனிதன் இராவணேஸ்வரனைக் கொல்வானென்று சொன்னுய்! நானே அவனுடைய இருபது தோளென்கிற சண்டமாருதக் காற்று வருகிற போது இந்த மனிதர்கள் பூளைப்புஷ்பம்போல மடியப் போகிருர்கள்! நீயும் பார்க்கப் போகிருய்! இராவணேஸ்வரனை யார் என்று நினைத்திருக்கிருய்? அவனுக்கு அரிதான காரியம் ஒன்றிருக்கின்றதா?" என்று சொன்னுன்.

சீதை, "ஐயா, தோள்கள் அனேகமாயிருப்பதனுலே சாமர்த்தியம் உண்டாயிருக்குமா? அந்த இராவணனைச் சிறையிலே வைத்த கார்த்தவீரியார்ச்சுனனுடைய வலிமை பொருந்திய ஆயிரந்தோள்களையும் இளமையிலேயே இரண்டு தோளுடைய பரசுராமர் அறுத்துவிடவில்லையா?" என்று சொன்னுள். அதைக் கேட்டதும் இராவணன் கையோடு

கையறைந்து, இடியைப்போலப் பற்களை நறநறவென்று கடித்து, நகைத்துக் கோபம் பொங்கப் பார்த்தான்; அப்போது அந்த மாயவேஷம் நீங்கிப்போக, கோபத்தினாலே சீறிப் படம் விரித்த பாம்பு போலத் தன் நிஜஸ்வரூபியானான். முன்னமே துயரத்துடன் பிரலாபித்துக்கொண்டிருந்த சீதா பிராட்டியின் எதிரே அவனிப்படிக் கோரமான ரூபத்துடன் நிற்கவே, அவள் கூற்றுவன் வந்த போது உயிர் எப்படிப் பதைக்குமோ அப்படிப் பதைத்தாள். இராவணன் சீதையைப் பார்த்து, "பெண்ணே, தேவர்களெல்லாம் ஏவல் செய்யும் என் வீரத்தைப் பார்! மண்ணிலிருக்கிற புழுவுக்குச் சமானமான மனிதரை வல்லவரென்று சொன்னாயே! நீ பெண்பிள்ளையானபடியினால் பிழைத்தாய்! உன்னைப் பிசைந்து தின்றுவிடலாமென்று நினைத்தேன்! அப்படிச் செய்தால் அப்போதே என்னுயிர் நீங்கிவிடும்! அதனாலே தின்னாமல் விட்டேன்! நீ பயப்பட வேண்டா. என்னுடன் வா. எப்படிப்பட்டவர்களையும் வணங்காத என் தலையின்மேலிருக்கிற மகுடம் போல உன்னைத் தாங்குவேன். தேவரம்பைகள் உன் பாதாரவிந்தத்துக்கு ஏவல் செய்யும்படி செய்வேன்," என்று சொன்னான்.

சீதை அந்த வார்த்தை கேட்டு, கைகளினாலே செவிகளை மூடிக்கொண்டு, "என்ன சொன்னாய்! இராட்சதா, புல்லின் நுனியிலே நிற்கிற பனித்துளி போலச் சிறிது நேரத்திலே போய்விடுகிற என் பிராணனை இழக்கப் பயந்து, குடிப்பிறப்பையழிப்பேனா? மின்னலுடனே கூடி இடி வருகிறது போல இராமபாணம் வருவதற்கு முன்னே சீக்கிரத்தில் ஓடி ஒளித்துப் போ!" என்று சொன்னாள்.

இரக்கமில்லாத அரக்கனான இராவணன், "உன் கணவனுடைய அம்பு வந்து அஷ்டதிக்கஜங்களின் தந்தங்களையொடித்த என் மார்பில் உருவுமா? அப்படி வந்தாலும், மலையின்மேல் விட்ட புஷ்ப பாணம் போல நசுங்கித் தெறித்துப் போய்விடும். சுந்தரியே, ஆசையாகிய வியாதி அதிகரிக்க,

அதனாலே நான் சரீரம் உலர்ந்தேன்! எனக்குப் பிராணனைக் கொடுத்துத் தேவரம்பைகளுக்குங் கிடையாத அதிசயமான பாக்கியத்தை நீ கைக்கொள்!'' என்று சொல்லிச் சாஷ்டாங்கமாகச் சேவித்தான்.

இப்படித் தரையில் விழுந்து அவன் வணங்கவே, சீதை, "என் பிராண நாயகரே, இளையவரே, ஓடி வாருங்கள்!'' என்று சொல்லி அழைத்து ஏங்கினாள்.

இராவணன், பூர்வத்திலே பிரமாவினுடைய சாபம் தனக்கு உண்டாயிருக்கிறதை நினைத்துக்கொண்டு, ஜானகியின் திருமேனியைத் தீண்டுதற்கு அச்சப்பட்டவனாகி, பூமியைப் பர்னசாலையோடு கைகளாற் பேர்த்தெடுத்துத் தேரின் மேல் வைத்துக்கொண்டான். அதைச் சீதை கண்டு, பூமியிலே விழுந்த மின்னலைப்போலத் துவண்டு மயங்கினாள். இராவணன் தேரை ஆகாய மார்க்கத்தில் செலுத்தச் சொல்லிச் சாரதிக்கு ஆக்கியாபித்தான். அது கண்ட பிராட்டி, "மலைகளே, மரங்களே, மயில்களே, குயில்களே, கலை மான்களே, பிணை மான்களே, ஆண் யானைகளே, பெண் யானைகளே, நிலையாமற் போகின்ற என்னுயிரே, நீங்களாகிலும் என்னுயகரிருக்கும் இடத்தைத் தேடிப் போய்ச் சொல்லீர்களோ? மேகமே, சோலையே, வனமே, வனதேவதைகளே, என் பிராண நாயகருடைய பராக்கிரமத்தை நீங்களறிவீர்களே! ஆகையால், என்னைப் பயப்படாதேயென்று நீங்கள் ஒரு வார்த்தை சொல்வீர்களாகில், நான் பிழைப்பேன்! நான் பிழைத்தால், உங்களுக்கு வருகிற குறை என்ன? என் பிராண நாதரான வரதரே, இளையவரே, பரதரே, சத்துருக்கரே, இராட்சதர்கள் நிர்மூலமாக, நீருண்ட மேகம் போலச் சரமாரி பொழிகிற நீங்கள் வரலாகாதா? இந்தப் பழியைப் பூண்டுகொள்ளுகிறீர்களோ? கோதாவிரி நதியே, குளிர்ச்சியும் குழைவுமாயிருக்கின்ற தாயைப்போல என் மனத்தை அறிந்த நீயாயினும் போய், சொல்லாமலே அறியத்தக்க இராமலட்சுமணர்களிடம் சொல்லமாட்டாயா! சுனைகளே,

குகையிலேயிருக்குஞ் சிங்கங்களே, என்னைப் பூமியுடனே பேர்த்தெடுத்த இருபது கைகளும், பத்துத் தலைகளும், துண்டம் துண்டமாய் அறுக்கப்பட்டுச் சிந்தி விழக்கண்டு நீங்கள் நகையீர்களா?'' என்று இப்படிப் பல விதமாகப் பன்னி அழுதாள்.

இராவணன், ஜானகியைப் பார்த்து, "மனிதரா போரிலே என்னை ஜயித்து உன்னை மீட்டுக்கொள்ளுகின்றவர்கள்!'' என்று நகைத்தான். சீதை, அவனை நோக்கி, "நீ மாயையினாலே வஞ்சகமான ஒரு மானை உண்டாக்கினாய்; அதனால் உன் பிராணனை உண்கின்ற என் நாயகரான கூற்றுவரை அப்பாலே அனுப்பினாய்; அந்தச் சமயத்திலே வந்து என்னை எடுத்துக்கொண்டு போகிறாய். யுத்தஞ் செய்து உன்னுயிரைக் காத்துக்கொள்ளத் தகுந்தவனானால், நீ தேரை நிறுத்து! நீ வீரனானால், அதிசீக்கிரத்தில் உன் கூட்டங்களையெல்லாம் கொன்று உன் தங்கையின் மூக்கையும் அறுத்து வாட்டின மனிதர் இந்த ஆரணியத்திலே இருக்கிறார்களென்று கேட்டும் இப்படி மாயஞ்செய்வாயா? பயத்தினாலல்லவா இப்படிச் செய்தாய்?'' என்று சொன்னாள்.

அந்த வார்த்தையைக் கேட்டு, "மானமில்லாத அற்ப மனிதருடனே யுத்தம் செய்வதற்கு நானெதிர்த்தால், சிவனது கைலாச பர்வதத்தை எடுத்த என் தோள்களின் கீர்த்திக்குப் பழியுண்டாகுமல்லவா? அதைக்காட்டிலும் வஞ்சனை நல்லதென்றுதான் நினைத்துச் செய்தேன்!'' என்றான். அது கேட்ட சீதை, "குலப்பகையாய் இருப்பவர்களுடனே வாளைக் கொண்டு யுத்தஞ்செய்வது நாணம் போலவும், பதிவிரதையாய் இருக்கும் ஸ்திரீயை வஞ்சனை செய்து எடுத்துப் போவது மகா சாமர்த்தியம் போலவும் இருக்குமானால், இரக்கமில்லாத இராட்சதருக்குப் பழிதான் எது?'' என்று சொன்னாள்.

அந்தச் சமயத்திலே, "எங்கேயடா போகிறாய்? நில்லு! நில்லு!'' என்று அதட்டின வார்த்தையுடனே கண்களில்

நெருப்புப் பொறி பறக்க, மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற வைரமான மூக்கினையுடைய மகாமேரு பர்வதம் ஆகாயத்திலே பறப்பது போலத் தூலசரீரமுடைய சடாயு, "புருஷோத்தமனுடைய தேவியை நிலத்துடனே பேர்த்துத் தேரின்மேல் வைத்துக்கொண்டு எவ்விடம் போவாய்? உன் இரதத்தை அசையவொட்டாமல் தடுக்கிறேன் பார்!" என்று தம் சிறகுகளை விரித்துக்கொண்டு அதிசீக்கிரமாய் முடுகி வந்து, மருமகளைக் கண்டு, "அம்மா, பயப்படாதே!" என்று சொல்லி, அந்தப்பாவி தீண்டவில்லை என்பதும் தெரிந்துகொண்டு, மூண்டெழும்பின கோபத்தை அதிகரிக்காமல் அடக்கிக்கொண்டு, "அடா, இராவணா, நீ கெட்டாய்! உன் பந்து ஜனத்தோடே உன் வாழ்வையெல்லாம் சுட்டாய்! என்ன காரியந் தொடங்கினாய்? நீ பட்டாய் என்றே எண்ணிக்கொள்! இப்போதும் இந்தப் பத்தினியை விட்டால், உன்னை நான் கொல்லுவதில்லை. புத்தியில்லாதவனே, நீ பிழை செய்தாய். இந்த லோகமாதாவை யாரென்று நினைத்தெடுத்தாய்? உனக்கு யார் ஆதரவிருக்கிறார்கள்? இங்கே உன் சுற்றத்தார்களையெல்லாம் இராமசந்திரன் அம்பினாலே சங்கரித்து, அவர்களுடைய உயிரை விருந்து செய்யக் கூற்றுவன் நேற்றுண்ட சமாசாரம் அறியாயா? கொல்லுவதற்கு வந்த மத யானையை உண்டை வில்லினால் அடிக்க விரும்பினாய்! பிராணனைக் கொல்லுமென்பதறியாமல் விடத்தையுண்டு பிழைக்கப் பார்க்கின்றாய்! கோதண்டபாணியான ஸ்ரீராமனை ஜயிப்பவர் யார்? இந்தப் பிறப்பில் உறவின் முறையாருடனே இறந்து அழிந்து போகத்தக்க துஷ்கிருத்தியம் இதைவிட வேறேயில்லை! இது நரகத்திற்கும் ஏதுவாகும்? திரிமூர்த்திகளுக்கும் முதன்மையான அந்த மூலகாரண வஸ்துவே இந்த மனிதரென்று அறி. இவர்களிடத்திலேயா இப்படிப்பட்ட பிழை செய்வார்கள்? நீ யோசனையில்லாத பயித்தியக்காரன். ஆனபடியினாலே நீ இது செய்தாய். நீ சிவன் கிருபையினாலே பெற்ற வரங்களும், உன் கல்வி

யும், மந்திர தந்திரங்களும், உனக்குண்டான சகல பலங்களும் ஸ்ரீராமன் அஸ்திரப்பிரயோகஞ் செய்கிற மட்டுமே இருக்கும். அந்த இராமபாணத்தைக் கண்டால், ஒன்ருயினும் நில்லாது, பஞ்சாய்ப் பறந்துபோம்! இராமபத்திரன் நேரே வந்துவிட்டால் உன்னுலே அவனைத் தடுக்கமுடியாது! சீதையை விட்டுவிடு! நான் கொண்டுபோய் அவ்விடத்திலே சேர்க்கிறேன். நீ சீக்கிரம் போய்விடு!'' என்று சொன்னுர்.

அந்த வார்த்தையை இராவணன் கேட்டுக் கோபாக்கினி மூள, கண்களிலே நெருப்புப்பொறி சிதற, வாயை மடித்துக்கொண்டு, "அட, நீ சொன்னவர்களைக் காட்டடா! என் பாணம் பட்டு உன் மார்பு திறந்துபோய்விடுவதற்கு முன்னே ஓடிப்போய்விடு! காய்த்துத் தோய்த்த இரும்பு உண்ட நீர் மீண்டு வந்தாலும், என்னிடத்தில் வந்த இந்தப் பெண் இரத்தினம் மீளுவதில்லை!'' என்று சொன்னுன்.

அப்படிச் சொன்ன வார்த்தையைச் சீதை கேட்டு, முன்னிலும் அதிக பயமடைந்தவளாய் நடுங்கி அழுவதைச் சடாயுவானவர் கண்டு, "அம்மா, பயப்படாதே! இந்த இராட்சதனுடைய சரீரம் இந்தக் கணத்திலே சின்னபின்னமாய்ப் போகும்! சக்கரவர்த்தி திருமகன் இன்னம் வரவில்லையே என்று வருந்தித் தளர வேண்டா. இவனுடைய பத்துத் தலைகளையும் பனங்காய்க் கொத்துப்போல அறுத்து, இந்தப் பத்துத் திசைக்குப் பலி கொடுப்பதற்கு நானிருக்கிறேன்! அதை நீ பார்!'' என்று சொல்லி இடிகளும் அஞ்சச் சிறகுகளை வீசி, அவன் தோள்மேலே பாய்ந்து, அவனுடைய பத்துக் கிரீடத்தையும் கீழேயுருட்டித் தள்ளி, அந்த இரதத்திலே கட்டியிருந்த வீணைக்கொடியை மூக்கினுற்பற்றி ஒடித்தார். தேவர்கள் புட்பமாரி பொழிந்து வாழ்த்தினுர்கள்.

அந்த வேளையில் இராவணன் செவ்வரக்கு உருகுகின்றது போலக் கண்கள் சிவக்க, எந்தக் காலத்திலும் இவ்வளவு அபஜயப்பட்டு அறியாதவனுனபடியினுல், ஏழுலகமும் நடுங்க நகைத்து, கையிலே வில்லையெடுத்து வளைத்து,

சடாயுவின் சரீரத்தின்மேலே சரமாரி பொழிந்தான். சடாயு, இராவணன் பொழிந்த சரமாரியைச் சிறகினலடித்தும், நகங்களினல் ஒடித்தும், எமனுங் கண்டு பயப்படுகிற அலகினலே கடித்தும், கண்டதுண்டங்களாக்கினர்; பின்னும் பல சிரங்களை உடைய ஒரு சர்ப்பத்தின்மேலே பாய்கிற கருடனைப் போல வட்டமிட்டுப் பாய்ந்து, அவன் பத்துத் தலையிலும் மூக்கினலே கொத்தி, இராவணன் வில் வளைப்பதற்கு முன்னே அவன் காதிலே பிரகாசித்துக்கொண்டிருந்த குண்டலங்களைப் பறித்துக்கொண்டு எழும்பினர். அப்படி எழும்பின சடாயுவினுடைய மார்பிலே இராவணன் பதினலு பாணம் உருவும்படி பிரயோகஞ்செய்து, ஆர்ப்பரித்துப் பின்னும் அனேக அஸ்திரங்களைப் பொழிந்தான். அச்சமயத்திலே, சடாயு விழுந்தாரென்று அஞ்சி, தேவர்கள் பெருமூச்சு விட்டார்கள். அந்தப் பாணங்கள் வந்து தைக்கச் சரீரத்திலே இரத்தம் தாரைதாரையாய் வடிய, ஆகாசத்திலே பறக்கிற பட்சி ராஜரான சடாயுவானவர், முன்பு மடிந்த கரன் முதலான இராட்சதர்களுடைய இரத்தப்பிரவாகத்தைச் சமுத்திரமென்றெண்ணி உண்ட மேகம் பின்பு அந்த இரத்தத்தைக் கக்கி வெள்ளை மேகமாய் நிற்பது போல விளங்கினர். அவர் பெருமூச்சு விட்டு, மறுபடியும் அவனுடைய இருபது தோள்களிலும் பாய்ந்து மூக்கினலே கொத்தி, நகங்களினலே குடைந்து, சிறகினலடித்து, முத்தாரத்தையணிந்த அவன் மார்பில் தரித்திருக்கும் கவசத்தின் பூட்டுகளைச் சின்னபின்னமாக்கினர். இராவணன் ஜடாயுவின் மேல் நூறு பாணம் பிரயோகஞ்செய்து சரீரமெல்லாம் அழுத்தினன். அத்தருணத்தில், தேவர்கள் அச்சங்கொண்டு திகைத்தார்கள். சடாயு பாய்ந்து, இராவணனுடைய வில்லை மூக்கினலே பறித்துக்கொண்டார். அது கண்டு தேவர்கள் சந்தோஷித்தார்கள். சடாயுவினுடைய புஜபலத்தைச் சொல்லத்தக்கவர் யார்? அவர் வில்லை வாயிலிருந்து வாங்கித் தம் காலால் ஒடித்தார்.

தன்னெதிரே தன் வில் ஒடிப்புண்டது கண்ட இராவணன், மிகுந்த கோபாவேசனுகி, திரிபுரங்களைத் தகனஞ் செய்த சிவபிரானுடைய அம்புக்குச் சமானமான ஒரு சூலாயுதத்தை எடுத்து, அட்டகாசஞ் செய்து, சடாயுவின்மேல் எறிந்தான். சடாயு, "அடா இராவணு, 'இதை இவன் சகிக்கமாட்டான்,' என்று நீ எண்ண வேண்டுவதில்லை. என் பலத்தைப் பார்!" என்று அதிக விரைவாய் வருகிற சூலத்தை மார்பிலேற்றுக்கொண்டார். அது கண்டு தேவர்கள் தங்கள் தோள்களைக் கொட்டி ஆர்ப்பரித்தார்கள். அந்தச் சூலம், வேசியரிடத்தில் ஆசை வைத்த தரித்திரர் போலவும், மாதர்களில்லாத வீட்டுக்கு வந்த விருந்தினர் போலவும், தத்துவ ஞானிகளாகிய யோகீசுவரர்கள்மேல் பாய்ந்த மாதர்களுடைய கண் பார்வை போலவும் பிரயோசனப்படாமற்போய் விட்டது. இராவணன் வேறே ஆயுதமெடுப்பதற்கு முன்னே, சடாயு இரதத்திலே பாய்ந்து, தேர்ப்பாகன் தலையைக் கிள்ளி இராவணன் முகத்திலே எறிந்தார். இராவணன், அதிக கோபத்துடனே ஒரு பெரிய தண்டாயுதமெடுத்து, சடாயுவை ஓங்கி அடித்தான். அந்த அடிபடவே, சடாயு பர்வதம் போலப் பூமியிலே விழுந்தார். சடாயு விழவே, இராவணன் தேரைச் சீக்கிரமாய் ஆகாயத்திலெழும்ப முடுக்கினுன். அது கண்ட சீதை மனம் நொந்து, சரீரம் பதைத்துத் துடித்துப் புரண்டழுதாள். அப்படி அழுததைச் சடாயு கண்டு, "அம்மா, நீ பயப்பட்டு அங்கலாய்க்காதே!" என்று சொல்லிக்கொண்டெழுந்து, "எங்கேயடா போகின்ருய்?" என்று இராவணனை அதட்டி, அவன் தேரின்மேல் போய் விழுந்தார்; அவன் கையிலிருந்த தண்டாயுதத்தைப் பறித்து எறிந்துவிட்டு, அந்தத் தேரிலே கட்டியிருந்த பதினுறு குதிரைகளையும் மூக்கினுலே கொத்திக் கொன்ருர். அது கண்ட யமனும் பயந்து கை விதிர்த்தான்: இவ்வண்ணம் தேரையுமழித்து வில்லையுமொடித்த சடாயுவானவர், பின்பு தானஞ்செய்யாத லோபிகளுடைய பொக்கிஷம் போலச்

செலவழியாமல் இருக்கும் அம்புகளையுடைய தூணியையும் பறித்துச் சிதற எறிந்தார்; பின்னும் இராவணனுடைய மார்பையும் தோளையும் நகங்களாலும் மூக்கினாலும் கொத்திக் கிழித்துச் சிறகினாலே புடைத்தார். அப்போது இராவணன் மூர்ச்சித்து முடி சாய்ந்திருந்தான். அது கண்ட சடாயு, "அடா அரக்கனே, இவ்வளவுதானா உன் ஆண்மை! நீ அடைந்த தபோ பலம் போய்விட்டது!" என்றார். இராவணன் அதிக கோபமாகி, "என்ன சாமர்த்தியம் ஒரு பட்சிக்கு!" என்று நினைத்து, தன் வாளையுருவிச் சடாயுவின் சிறகை வெட்டினான். அது தெய்விக வாளானபடியினாலே, தப்பாமற்பட்டது. அந்தக் காலத்திலும் சடாயு பலம் தோற்கவில்லை; ஒருவராலும் தடுக்கப்படாத அந்தத் தெய்வ வாளினாலே சடாயு ஆயுள் முடியவேண்டியிருந்தபடியினால், தம் சிறகு முறிந்து, இந்திரனுடைய வச்சிராயுதம் பட்டுச் சிறகற்ற மலை போலப் பூமியிலே விழுந்தார். சடாயு விழுந்தது கண்டு சீதை பதைத்துச் சோர்ந்து நொந்து, பெருமூச்சு விட்டு, ஒரு துணையுங் காணாதவளாய்க் கொழுகொம்பொடிந்து போன பூங்கொடி போல விழுந்து, "இவர்களுக்குத் துணையும் உண்டென்று எண்ணும்படி வந்து எதிர்த்த சடாயுவான என் மாமனாரும் விழுந்து போனார்! இனியென்ன கதி!" என்று எண்ணிச் சேவலாகிய துணை பிரிந்த பெட்டை அன்றில் போலக் கிலேசித்தாள்; "ஆபத்துண்டாகித் துயரத்தினாலே அழும் என்னை வந்து 'பயப்படாதே!' என்று ஆதரித்த இந்த உத்தமர் தோற்பதும், நரகத்துக்கு ஏதுவான பாவி வெல்வதுமாயிற்றல்லவா? பாவம் எங்கேயாயினும் வெல்லுமா? வேதம் பொய்க்குமா? தருமமில்லையா?" என்று அலறினாள்; "நாணமில்லாத என் வார்த்தையைக் கேட்டு நடந்த இராச குமாரர்களே, தருமவழியில் நிற்பவர்களுக்கெல்லாம் ஒரு நிலை பேருயிருந்த உங்கள் தகப்பனாருக்கு உரிய பிராண சினேகிதரைப் பார்ப்பதற்காயினும் வாருங்கள்," என்று சொல்லிக் கலங்கி அழுதாள்; பின்னும், சடாயுவை

நோக்கி, "தேவலோகத்திலே போயிருக்கிற சக்கரவர்த்தியார் முன்னுளிலே சொல்லியிருந்த தோழமைக்கடனை இவ்விடத்திலே கழித்துவிட்டு, அவ்விடத்தில் அவருடன் இருக்கப் போனீரோ?" என்று சொல்லித் துக்கித்தாள்; "கற்பழியாமலிருப்பது என் கடனுனலும், அதிக பராக்கிரமத்தைப் பொருந்திய என் பிராண நாயகருடைய வில்லுக்குப் பழி உண்டாயிற்றே! அதுவுமல்லாமல், தீவினையுடைய நான் பிறந்த குடிக்கும் பழியுண்டாயிற்றே!" என்று சொல்லி ஏங்கினுள்.

இப்படிச் சீதை ஏங்கியழுவதையும், சிறகிழந்து விழுந்த சடாயுவினுடைய நிலையையும் இராவணன் அறிந்து, "இனி நிற்கலாகாது!" என்று தேரிலே வைத்திருந்த மண்ணுடனே சீதையையெடுத்துத் தோளின்மேல் வைத்துக்கொண்டு ஆகாய மார்க்கமே போனுன். அப்படி அந்தப் பாவி போவதையறிந்து கண்ணும் மனமுஞ்சுழல, பதிவிரதையான சீதை பிரஞ்ஞை தப்பி, ஒன்றும் தெரியாமல், அம்மண்ணிலே தன்னை மறந்து சோர்ந்தாள்.

சடாயுவானவர் கொஞ்சம் மூர்ச்சை தெளிந்து ஆகாயத்தைப் பார்த்தார். அதி சீக்கிரமாய் இராட்சதன் போவதைக் கண்டு மனம் புலந்து, மிகுந்த துயரத்துடனே, "என் சற்புத்திரரான இராமலட்சுமணர் இன்னம் வரவில்லையே! மருமகளுக்கு வந்த கிலேசத்தை நான் தீர்த்தேனென்னும் கீர்த்தியை எனக்குக் கொடாமற்போன விதியானது, தருமவேலியை முறித்துவிட்டதே! இனிமேல் என்ன நடக்குமோ! வீரர்களான அவ்விராமலட்சுமணர்கள் சமீபத்திலிருந்தால், சீதைக்கு இவ்விதமான ஆபத்து வருமா? அவர்கள் போன விடத்தில் நடந்த சமாசாரமும் இன்னதென்று தெரியவில்லையே! சிறிய தாய் செய்த வஞ்சனைப்படிதான் முடிய வந்ததோ? சேஷசாயியான ஸ்ரீமந்நாராயணனே ஸ்ரீராமனுகையால், இவ்விராட்சதனுலே அவன் ஜயிக்கப்படுவானு? இராவணன் ஏதோ கபடமான மாயையினுலே வஞ்சனை செய்தான்.

எவ்விதமும் இராட்சதர்களை என் மகன் வேரறக்கொன்று இப்பழியைத் தீர்த்துக்கொள்ளுவான்! இந்தப்பாவி பிரம சாபத்தினாலே ஸ்ரீராமனுடைய தேவியைத் தீண்டமாட்டான்! என் சிறகு அற்றாலும், சீதையினுடைய கற்பென்னும் காவல் அறாது!'' என்று எண்ணி, துக்கம் நீங்கினவராகி, தம் சிறகி லிருந்து இரத்தம் ஆறு போலப் பெருகி வழிய, பிரஞ்ஞை தப்பியிருந்தார்.

இராவணன் சீக்கிரமாய் இலங்கை போய்ச் சேர்ந்து, சீதையின் திருமேனியைத் தீண்டுவதற்குப் பயந்து, விஷத் திற்குச் சமானமான பொல்லாத இராட்சத ஸ்திரீகளுள் அனேகரைக் காவலாக வைத்து, அசோக வனத்திலே அவர்களுக்கு நடுவே சீதா பிராட்டியைச் சிறைவைத்தான். இது நிற்க.

பொன் மான் பின்னே போன தன் பிராண நாயக ருடைய செய்கையை அறிந்துவர ஜானகி அனுப்பிய இலட்சு மணர், சீதா பிராட்டி தனியே இருப்பதை நினைத்து மனம் பதைக்க, முன்னாளிலே சித்திரகூட பருவதத்திலிருந்து ஸ்ரீராமரைப் பிரிய மாட்டாமல் அயோத்தியா புரிக்குத் துய ரத்துடனே போன பரதரைப்போல, கிலேசத்துடனே, அதி வேகமாய்ப் போய், ஸ்ரீராமபிரானைக் கண்டார்; கண்ணும் மனமும் களித்தார். "மாரீசன் குரலைக் கேட்டுச் சீதை மிக வும் துயரமடைவாள்,'' என்று அதிக சஞ்சலங் கொண்டு திரும்பி வருகின்ற ஸ்ரீராமர், தம்பியாரைக் கண்டார்; அவரைத் திருமார்பில் அழுந்தத் தழுவிக்கொண்டு, "அப்பா, நீ ஏன் வந்தாய்?'' என்று கேட்க, அவர், "உலகத்தில் கேளாத சத்தம் காதில் விழவே, பிராட்டியார் மிகவும் வருந்தினார். 'அது இராட்சசன் குரல் அம்மா! நீர் கிலேசிக்க வேண்டா,' என்று அடியேன் எத்தனை சொன்னாலும் கேளாமல், மன முருகி, 'இவ்விடத்தில் நில்லாதீர்! நீர் போகாமல் இங்கேயிருந் தால் நான் நெருப்பிலே விழுந்து சாவேன்!' என்று கூறிய தால், நான் பயந்து வந்தேன்,'' என்று சொன்னார். ஸ்ரீராமர்,

தம்பியாரைப் பார்த்து, "அப்பா, நீ வந்துவிட்டது உன் குற்றமன்று. சீதை கிலேசத்தினுலே சொன்ன சொல்லால் வந்தாய். அவள் மாத்திரமென்ன? நான் முன்பு நீ சொல்லித் தடுத்தும், அது கேளாமல் அந்த மானைப் பிடிக்கிறேனென்று தானே வந்தேன்? என்னுலல்லவா காரியக் கேடானது?" என்று சொல்லி, மனம் கரைந்து, தம்பியாருடன் கடுகி நடந்து, சீதையிருந்த சோலையிலே வந்து சேர்ந்தார். அவர்கள் பர்னசாலையில்லாத சோலையைப் பார்த்துச் சீதையைக் காணுமல், சரீரத்தை விட்டுப் பிரிந்துபோன ஜீவன் திரும்பி வந்து தன் சரீரத்தைக் காணுமல் திகைத்து நின்றது போல நின்ருர்கள்; அவ்விடத்தில் பூமியிலே தேர் ஓடின குறியைக் கண்டார்கள்; சீதையை எடுத்துப்போக வந்தவன், அவளைத் தீண்டுகிறதற்குப் பயப்பட்டு, பூமியுடனே பேர்த்தெடுததுக் கொண்டு போனதும் அறிந்தார்கள். "இவ்விடத்திலே நின்று யோசனை செய்கிறதில் பிரயோஜனமென்ன? அந்தப் பாவி தூரத்திலே போய்விடுவதற்கு முன்னமே போய்ப் பிடிப்போம்!" என்று இளைய பெருமாள் சொன்ஞர். "ஆம்! அதுவே உத்தமம்," என்று ஸ்ரீராமர் தம்பியாருடன் இராவணனுடைய தேர்ச் சக்கரச் சுவட்டின் வழியே துரிதமாய்ப் போஞர். அவன் பூமியில் தேர்விட்டுக்கொண்டுபோன தூரம் வரையிற்போய், அவன் ஆகாயமார்க்கமாய் எழும்பச் சுவடு விட்டிருந்த படியினுலே, வெந்த புண்ணிலே வேல் நுழைந்தது போல மனம் புழுங்கி, "இனி யோசனை செய்து நாம் என்ன செய்கிறது தம்பி?" என்று ஸ்ரீராமர் கேட்க, "சுவாமி, இரதம் தெற்கு நோக்கிப் போயிருக்கின்றது நன்ருகத் தெரிந்தது. ஆயினும், அந்தத்தேர் ஆகாயமார்க்கத்திலே போயிருக்கின்றது. வீணுக விம்மி இவ்விடத்திலே நிற்கிறதில் பிரயோசனமென்ன? தென்திசை போவோம்," என்று இலட்சுமணர் சொல்லவே, "மெய்தான். அதுவே சரி," என்று இருவரும் தெற்குத் திசையை நோக்கி இரண்டு யோசனைத் தூரம் போயினர்; அவ்விடத்திலே வீணை எழுதியிருக்கின்ற கொடி

யொன்று கிடந்ததைப் பார்த்தனர். உடனே, "சீதை நிமித் தம் தேவர் யாரோ வந்து அந்தப் பாவியுடன் யுத்தஞ் செய் திருக்கிருர்," என்று நினைத்து அந்தக் கொடியை உற்றுப் பார்க்க, அது பட்சியின் அலகினுல் ஒடிக்கப்பட்ட குறிப்பை அறிந்து, இலட்சுமணர், "சுவாமி, சடாயுவே அதி சீக்கிர மாய் வந்து யுத்தஞ் செய்தார். அவர் அலகினுலேதான் இது ஒடிந்திருக்கின்றது, அப்பால் என்ன நடந்ததோ, தெரிய வில்லை! அவர் விருத்தரானபடியினுல் நாம் சீக்கிரமாகப் போய்ச் சேரவேண்டும். அவர் நாம் வந்து கூடுகிற மட்டுந் தடுத்துக்கொண்டிருப்பாரேயல்லாமல், கொஞ்சத்தில் விடு கிறவரல்லர்! ஒரு வேளை ஜயித்துப் பிராட்டியாரை மீட்டிருந் தாலும் மீட்டிருக்கலாம். கால தாமதம் செய்கிறதில் பிரயோ னம் இல்லை," என்று சொல்ல, இருவரும் அதி வேகமாய்ப் போய் வழியில் ஒரு பெரிய வில் முறிந்து கிடந்தது கண்டனர். ஸ்ரீராமர், "இலட்சுமணு, இதோ வில் கிடக்கிறது!" என்று சொல்ல, இளையபெருமாள் அவ்விடத்தில் நின்று அதைப் பார்த்தார். பின்பு இருவரும் வெகுதூரம் நடந்து, அப்பால் ஒரு பெரிய சூலமும் அம்பருத்தூணியும் கிடக்கிறதைக் கண்டு அதிசயங்கொண்டனர்; பின்னும் நடக்கிற போது, ஜொலித்துக்கொண்டிருக்கிற ஒரு கவசத்தைக் கண்டனர்; அப்பால் குதிரைகளும் சாரதியும் மாண்டு விழுந்து கிடந்த இடம் போய்ச் சேர்ந்தனர்; அப்பால் இரத்தம் செவ்வானம் போலப் பரவிக் கிடக்கிறதைக் கண்டனர். கண்டு ஆச்சரியப் பட்டு அப்பால் நடக்கிற போது, பல கிரீடங்களும் பல ஆபரணங்களும் கிடககிறதைக் கண்டு, "தம்பி, வாகு வல யங்களும் கிரீடங்களும் விழுந்து கிடக்கின்றன. ஆகையால், நம் தகப்பனுருடனே பலபேர் யுத்தஞ் செய்திருக்கின்றனர்," என்று ஸ்ரீராமர் சொல்ல, இலட்சுமணர், "அப்படியானுல் பல தலையும் பல தோளுமுடைய இராவணனொருவனே யுத் தஞ் செய்து நம் தகப்பனுரை இவ்வளவு தூரங் கொண்டு போயிருக்க வேண்டும்," என்று சொன்னுர். ஸ்ரீராமர் அது

கேட்டுக் கண்களிலே நெருப்புப்பொறி பறக்கப் பார்த்து, அப்பால் அதிசீக்கிரமாக நடக்கிற போது, இரத்த சமுத்திரத்திலே மந்தரகிரி போல விழுந்து கிடக்கின்ற சடாயுவைக் கண்டார்கள். காணவே, கண்களிலிருந்து நீர் சொரிய, சடாயுவின் திருமேனியின்மேல் ஸ்ரீராமர் விழுந்து, ஒரு நாழிகை மட்டும் சுவாசமில்லாமல் பிரஞ்ஞை தப்பியிருக்க, இலட்சுமணர் பயந்து, கைகளாலெடுத்து, குளிர்ந்த அருவி நீரைத் தெளித்து உபசாரஞ் செய்தார். அப்போது ஸ்ரீராமர் கமல நேத்திரங்களை விழித்துப் பார்த்துத் துக்கிக்கத் தலைப் பட்டார்.

"ஐயா, தங்கள் பிதாக்களைக் கொன்ற பிள்ளைகள் பூர்வத்தில் யாரிருந்தார்கள்? முன்னொருவர் மடிந்து போனார். இப்போதெனக்காக நீரும் இறந்து போனீர்! நான் உங்களுக்கு எமனாக வந்து வாய்த்தேனே? பின் வரும் காரியம் அறியாமல் மனைவி வார்த்தையைக் கேட்டு இப்படித் துயரத்தை அனுபவிக்கின்ற நான் தனியே இருப்பதை நினையாமல், நீரும் உறவு தீர்ந்து போனீரோ? ஐயோ! நான் ரிஷீஸ்வரர்களுடைய குறைகளைத் தீர்க்க ஒரு விரதம் பூண்டு கொண்டேன். அதனால், உயிரைச் சுமந்துகொண்டு ஒரு மரம் போல நிற்கின்றேன்! நான் இந்த மாயா சம்பந்தமாகிய பிறவியை இனி வேண்டேன்! என் மனையாட்டி ஒருவர் கையிலே பிடியுண்ண அது நிமித்தம் எதிர்த்து யுத்தஞ் செய்த தர்மஸ்வரூபரான உம்மைக் கொன்றவனும் ஜீவனுடன் இருக்கிறான்! அவன் கையினாலே கொல்லப்பட்டுநீரும் விழுந்து கிடக்கிறீர்! பெரிய வில்லையும் ஏந்திக்கொண்டு அனேக பாணங்களையும் சுமந்துகொண்டிருக்கிற நானும் ஒரு பெரிய மரம் போலிருக்கிறேன்! கீர்த்தி சம்பாதித்தவர்களில் என்னைப்போல யாரிருக்கிறார்! நான் பலசாலியல்லவோ!" என்று இப்படிப் பலபல விதமாகச் சொல்லி அழுது மயங்க, தம்பியாரும் அப்படியே பிரலாபித்தார்.

அந்தச் சமயத்திலே சடாயுவானவர் சிறிது மூர்ச்சை

தெளிந்து, கண்ணை விழித்து இருவரையும் பார்த்தார். நடந்த சமாசாரந் தெரியாமல் உயிர் நடுங்கப் பெருமூச்சு விட்டு, பிள்ளைகளைக் கண்டதனால் மனம் குளிர்ந்து, அற்ற சிறகும் பிராணனும் பெற்றது போலச் சந்தோஷித்து, "இனி என் பழி தீர்த்துக்கொண்டேன்! நான் செய்த பாக்கியத்தினாலே என் பயனில்லாத சரீரத்தை இன்றையதினம் போக்கிவிடுகிறேன்! இந்தத் தருணத்தில் எனக்கு உங்கள் தரிசனம் கிடைத்தது! புண்ணிய புருஷர்களே, வாருங்கள். இந்தக் காரியம் வஞ்சனையினாலே நேர்ந்ததென்று முன்னமே எண்ணினேன். அருந்ததிக்கு ஒப்பாகிய சீதாபிராட்டியை விட்டு இருவரும் நீங்கிப் போனீர்களோ?'' என்று கேட்டார். இலட்சுமணர் மாயமான் வந்தது முதலாக நடந்த சமாசாரமெல்லாம் ஒன்றுவது விடாமல் சொன்னார். அவைகளையெல்லாங் கேட்ட பின் சடாயுவானவர், "என் குமாரர்களே, கேளுங்கள்: இன்பதுன்பங்கள் விதிப்படியே நடக்கும். ஆகிலும், நாம் மதியின் வலிமை கொண்டு அந்த விதியை வெல்ல மாட்டுவோமா? சுகமும் துக்கமும் வருங்காலத்தில் அவைகளை வாராமல் தடுப்போமென்பது உண்மையாகுமா? முப்புரங்களையெரித்த சிவன் தன் கையிலே தலையோட்டை ஏந்திக்கொண்டு இரந்தது கேட்டறியீர்களா? சூரியனைச் சர்ப்பம் விழுங்கிவிடுகிறதும், சந்திரன் வளர்ந்து தேய்கிறதும் திருஷ்டாந்தமாய் இருக்கின்றனவே! தேவேந்திரன் தேவகுருவின் வார்த்தையினாலே பட்டது சொல்லி முடியுமா? அத்தேவேந்திரன் சம்பராசுரனாலே பட்ட துன்பமோ, மிதமில்லை. அந்த அசுரனை உங்கள் தகப்பனார் கொன்றல்லவோ அந்தத் துன்பத்தைத் தீர்த்தார்? சீதையை நீங்கள் பிரிந்ததற்குக் காரணம் என்னவென்றால், தர்மமும் தேவர்கள் படுகின்ற துயரமும் செய்த செய்கையே. போர் செய்கின்ற இராட்சதர்களைக் களைந்து நெடுங்காலம் வாழுங்கள்! சீதையை இராவணன் தீண்டப் பயப்பட்டுப் பூமியுடனே எடுத்துக் கொண்டுபோகிற போது, நான் கண்டு தடுத்து, எதிர்த்து,

என்னுலே ஆனமட்டும் போர் செய்தேன். அவன் தவத்தினுலே தனக்குக் கிடைத்த வாள்கொண்டு வெட்டினுன். நான் இங்கே விழுந்தேன். இதுதான் இன்றையதினம் நடந்த சமாசாரம்,'' என்று சொன்னுர்.

அவர் வார்த்தை காதிலே விழுவதற்குமுன்னமே இரகுநாதர் கண்கள் உதிரம் போலச்சிவந்தன. அவர் பெருமூச்சு விட்டார். அவர் புருவங்கள் நெரிந்து வளேந்தன. ஸ்ரீராமர் நகைத்து, “ தனியே இருந்த ஒரு பெண்ணேப் பேதையான இராட்சதன் கொண்டு போகவும், நீரிப்படிப்பட்ட உபத்திரவத்தையடையவும், நான் சும்மா விடுவேனே!'' என்று கடுங்கோபம் கொள்ள, அது கண்ட சடாயு, “ அப்பா, கோபியாதே! தேவர்களும் முனிவர்களும் உன்னுலே பிழைக்கலாமென்று பார்த்துக்கொண்டிருக்கின்ருர்கள். சீதை ஆரணியத்திலே தனியாயிருக்க, நீங்கள் மானின் பின்னே போய்க் குலப்பழி பூண்டீர்கள்! ஸ்ரீராமா, நன்ருக ஆராயும் போது உங்களிடத்திலேயே பிழையுள்ளதல்லாமல், உலகத்தார்மேல் பிழை உண்டா? ஆகையினுல், மகனே, நீ கோபஞ்செய்ய வேண்டா. கற்புக்கு இருப்பிடமாகிய சீதையினுடைய கிலேசத்தை நீக்கி, தேவர்களுடைய எண்ணத்தையும் நிறைவேற்றி, வேதசாஸ்திரத்தின் கிரமப்படி நீதிகளே நிலே நிறுத்தி, பொல்லாங்குகளேயெல்லாந் தீர்த்துச் சுகமாய் வாழுங்கள்!'' என்று சொன்னுர். ஸ்ரீராமர், “ இந்த வார்த்தை தசரத மகாராஜாவினுடைய ஆக்கினேயே,'' என்று சிந்தையிலே கொண்டு, “ அந்நியரைக் கோபித்து ஆக வேண்டுவதென்ன? இனி ராக்ஷதவர்க்கங்களேக் கொல்லுகிற யோசனேயே செய்ய வேண்டும்,'' என்றெண்ணி, கோபந் தீர்ந்து, சடாயுவைப் பார்த்து, “ ஐயா, தேவரீர் அந்தச் சக்கரவர்த்தியேயாகையால், என்னேக் கோபிக்க வேண்டாவென்று ஆக்கியாபித்தீர். நான் அதை மறுத்து வேருெரு காரியஞ்செய்வேனே? செய்ய மாட்டேன்! அந்த இராட்சதன் சீதையை எங்கே கொண்டு போனுன்? சொல்லும்,'' எனறு கேட்டார். அப்

போது சடாயுவானவர் அறிவு அடங்கினவராய் உத்தரவு ஒன்றுஞ் சொல்லவில்லை; உயிரும் போய்விட்டது! ஸ்ரீராம பத்திரருடைய திருவடிகளை மரணந்தத்திலே தரிசனஞ் செய்தபடியினலே, கழுகு ராஜர் பஞ்சபூதங்கள் அழிந்து போகிற காலங்களிலேயும் அழியாத ஸ்ரீ விஷ்ணு லோகம் போய்ச் சேர்ந்தார். ஸ்ரீராமர், "மாபாதகனுன இராட்சதனுல் என் பலன் போயிற்று! சகலத்தையுந் துறந்து வந்த நான் இப்போது சீதையையுந் துறந்திருக்கிறேன்! என் பிராணனே போகாமலிருக்கின்றது! இதற்கு என்ன செய்வேன்? இலட்சுமணு; சொல்," என்று அதிக துன்பத்துடனே பிரலாபித்தார்.

அது கேட்ட இலட்சுமணர் தமையனுரை நமஸ்கரித்து, "சுவாமி, விதியினலே நமக்கு வந்து விளைந்த ஆபத்து ஒன்றல்ல; அனேகம். அதைக் குறித்து இனிப் பல விதமாக நினைத்துப் பயனில்லை. இவரை இவ்வண்ணம் செய்த அந்த இராட்சத வர்க்கத்தைக் கொன்று பின்பல்லவோ துயரப்பட வேண்டும்? எளியவர் போல நீர் தேவியைப் பிரிந்த துக்கந் தீர்ந்து பொறுத்திருந்தீராஞலும், உம்முடைய தகப்பனுரை இப்படிக் கொன்றுவிட்டுப் போனவனைப் பதிலுக்குப் பிராணனை வாங்காமல் விடலாமா?" என்று சொல்ல, ஸ்ரீராமர் சோகம் நீங்கி, "இப்படி நாம் யோசனை செய்கிறது ஏழைமை தான்," என்று எண்ணிக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "இறந்து போன தகப்பனுருக்கு நான் பிள்ளையாய் உரிமைக் கடன் செய்கிறேன்," என்று சொன்னுர். அப்போது அகிற்கட்டைகளையும் சந்தனக் கட்டைகளையும் குவித்து, தர்ப்பையும் பூவும் தண்ணீரும் சேகரித்துக் கொண்டு, காஷ்டங் கடைந்து நெருப்புண்டாக்கிக்கொண்டு, தகப்பனுரை இரண்டு கையினுலும் ஏந்தியெடுத்து மயானத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து, சந்தனம் புஷ்பம் ஜலம் முதலானவைகளைச் சொரிந்து, தலை மாட்டிலே அக்கினியும் வைத்து மூட்டி, பின்னுஞ் செய்ய வேண்டிய கடன்களை

யெல்லாம் சிறிதாகிலும் பிசகாமல் செய்து முடித்தார்; தாமரைப் புஷ்பங்கள் போல இருக்கின்ற நேத்திரங்களிலே நீர் வெள்ளமாய் வர, நதியிலே ஸ்நானஞ் செய்து, கைகளால் நீரை அள்ளி விடுத்துத் திலதர்ப்பணமுஞ் செய்தார். அப்போது தன்னுடைய வமிசத்தில் வந்து அவதாரஞ் செய்தருளிய பகவானாகிய ஸ்ரீராமர் துயரப்பட்டுத் தகப்பனருக்குக் கடன் கழித்ததைப் பார்த்துக்கொண்டிருந்த சூரியன், அந்த வமிசத்தானனபடியினாலே தானும் அப்படித் துக்கப்பட்டு ஸ்நானஞ்செய்து உரிமைக்கடன் கழிக்கப் போனவன்போல மேற்குச் சமுத்திரத்திற்போய் மூழ்கினான்.

## 9. அயோமுகிப் படலம்

அந்திப்பொழுது வரவே இராமலட்சுமணர்கள் அவ்விடம் விட்டு நீங்கி, அக்கினி மூண்டெரிகின்ற ஆரணியத்திலே ஒரு மலையினிடத்திலே போய்ச் சேர்ந்தார்கள். அப்பொழுது தேவேந்திரனுக்கு அடங்காத ராக்ஷதர்களெல்லாம் நெருங்கி வந்தது போல, துக்கத்துக்குப் பின்னும் உறுதி வரச்செய்கின்ற இருள் வந்து எங்கும் நிறைந்தது. அந்த இருளிலே ஆரணியத்திலும் மலைகளிலும் இருக்கின்ற பலவித விருட்சங்களின் புஷ்பங்களில் தேன் துளிக்கின்றது, ஸ்ரீராம லட்சுமணர்களுடைய கிலேசத்தைக் கண்டு கண்ணீர் விடுகிறது போல இருந்தது. சீதையைப் பிரிந்த அவமானமும், அது பற்றி வந்த கோபமும், பிதாவின் மரணமும் ஒன்றாகக்கூடி, அவர்களுடைய ஞானசிந்தையை நலியச்செய்தன. மெய்யறிவு இல்லாதவனுடைய கொடுவினையினாலே மேன்மேலும் அதிகரிக்கின்ற பிறவி போல, தீராத இருளானது தசரத குமாரர்களுக்கு நெய்யைச் சொரிந்த நெருப்பைப்போல விசனத்தை விருத்தியாகும்படி செய்யவே, அவர்கள் பெருமூச்சு விட்டு வருத்தப்பட்டார்கள். அன்று இராத்திரி சீதை பிரிந்த துக்கத்தினாலே இரகு குலோத்தமருடைய கண்களும், தம்பி

யார் கண் போலவே இமையாமல் விழித்தபடியே இருந்தன. அப்பொழுது தென்றற்காற்றுச் சஞ்சரிக்கின்ற மலேச்சார லிலே சீதையின் முகத்தைப்போலச் சந்திரன் உதயமாயிற்று. அறிவு மயங்கிச் சீதையை நினைத்துக்கொண்டே மயங்கித் திகைக்கின்ற இராகவர் பின்னும் அதிகமாக வருந்தி, பெரு மூச்செறிந்து, "இராவணன் கையிலே சிக்கிய சீதை எங்களை, 'இராட்சதருக்குப் பயந்து பின்தொடர்ந்து வாராம லிருக்கின்றார்களோ!' என்று நினைத்தாளோ? இராச்சிய பாரஞ் செய்து அனேக ஜீவனை இரட்சிக்கிறதற்குச் சம்ம தித்த நான், மனைவியை இரட்சிக்கிறதற்கு வகையில்லாமற் போனேனே! என் பலம் நன்றாயிருந்தது!" என்று சொல்லி நாணிப்புலம்பி, ஆயிரங் கற்பகாலத்தைக் கடக்கிறதுபோல அந்த இராத்திரிக்குக் கரை காணுமல், தம்பியாரைப் பார்த்து, "அப்பா, இது வரைக்கும் ஒரு தன்மையாயிருந்த இராத்திரி, இன்றைக்கு மிகவும் நீண்டு தொலேயாமலிருக்கிறதற்கு ஏது வென்ன?" என்றுகேட்டார்; சந்திரனைப் பார்த்து, "நாளுக்கு நாள் தேய்ந்து தேய்ந்து வெட்கிக்கிடக்கின்ற நீ, சீதையின் முகம் மறைந்ததனுலே மிகவும் ஒளி வீசுகிருயோ? அந்த இராட்சதன் அருணனுடனே சூரியனையும் அருஞ்சிறையிட் டானே? அல்லது தன் குலத்துக்கு இவ்விதமாகிய பழி வந் ததேயென்று நாணி, இந்த உலகத்தை விட்டுச்சூரியன் ஓடிப் போனனே? தர்மந்தப்ப நடந்து, ரிஷீஸ்வரர்களை உபத்திரவப் படுத்தி, உலகத்து உயிர்களைக் கொன்று பாவமே செய்கிற வர்கள் இப்படி வாழ்ந்தால், இனித் தர்மத்தினுல் ஆக வேண்டு வது என்ன இருக்கிறது!" என்ருர். இப்படி வருந்திக்கொண் டிருக்கையில் சூரியன் உதயமானுன். பொழுது விடியவே, ஸ்ரீராமர் மயிலும் பேடும், கலேயும் மானும், களிறும் பிடியும் சோடு சோடாய்ப் பிரியாமல் புறப்பட்டுத் திரிகிறதைப் பார்த் தார்; மனம் அழிந்து மிகவுங் கிலேசித்தார்.

இளையபெருமாள் தமையனுரைச் சேவித்து, "சுவாமி, பிராட்டியாரைத் தேடாமல் இவ்விடத்தில் இருக்கிறது நன்

மையா ?'' அந்த இராட்சதன் இருக்கிற இடத்தைத் தேடிப் போவோம்,'' என்று சொல்ல, இருவரும் மலை நெருங்கியிருக்கின்ற ஆரணியத்தில் நடந்தனர்; பல பர்வதங்களும் காட்டு நதிகளும் தாண்டிப் பதினெட்டு யோசனைத் தூரம் நடந்து போய், ஒரு குளிர்ந்த பூஞ்சோலையில் சேர்ந்தனர். அவர்களுடைய மனக்கிலேசத்தைச் சூரியன் அறிந்து, லோக மாதாவைத் தானுந் தேடித்தேடி உலகமெல்லாம் உழன்று பார்த்துங் காணாதவனாகி, "மேரு பர்வதத்திலாவது பார்ப்போம்,'' என்று சீக்கிரமாய் ஓடி மறைபவன் போல மறைந்தான். அப்போது தெளிந்த அறிவில்லாத மூடருடைய சிந்தை போல இருள் வந்து மூடிக்கொண்டது. முருக்க மரங்கள் சூழ, நடுவே களங்கத்துடனே கூடிப் பிரகாசிக்கின்ற சந்திரனைப்போல ஒரு பளிங்குக் கற்பாறை இருக்கக் கண்டு,அதிலே இராத்திரிக்குத் தங்கியிருக்க வேண்டுமென்று அவர்கள் இருந்தார்கள்.

ஸ்ரீராமர் தம்பியாரைப் பார்த்து, "அப்பா, தாகத்துக்குத் தீர்த்தங்கொண்டு வரவேண்டும்,'' என்று சொல்லினர். உடனே ராமாநுஜர் கைவில்லுடனே தனியே நடந்து போனார். அவ்விடத்திலே எங்குந் தேடித் தண்ணீர் அகப்படாமல் ஒரு சிங்கம் போல அந்த இராத்திரியிலே திரிந்து தேடிக்கொண்டிருக்கிற இலட்சுமணரை அயோமுகி என்கிற இராட்சசி அதிக ஆசையுடனே கண்டாள்; உடனே ஓடி வந்து, அவருடைய திருவழகைக் கண்டு, "இவன் மன்மதன்தான்,'' என்று நினைத்து, காம வியாதி தலைக்கொண்டு, "இவனை என் ஆசை தீரும்படி தழுவியணைய வேண்டுமேயல்லாமல், கொல்லலாகாது,'' என்று யோசனை செய்து, "இவனை நல்ல வார்த்தையாகக் கேட்டுப்பார்ப்போம். சம்மதித்தாலாயிற்று. அல்லாவிட்டால், பலாத்காரமாய் எடுத்துச்சென்று இஷ்டப்படி சேருவோம்,'' என்று துணிந்து, அவரை நெருங்கினாள்.

அந்த அயோமுகி நெருப்புப்போன்ற சுவாசமும், முறம் போன்ற பற்களும், மலைப் பாம்பாகிய ஆபரணமும், குழிந்த

கண்ணும், கடூரமான முகமும், குகையைப் போன்ற பெரிய வாயும், நெருப்பைப் போலச் சிவந்த கொண்டையும், இரண்டு பிறைச் சந்திரனைப் போன்ற கோரதந்தங்களும், பூமி நடு நடுங்கத் தகுந்த நடையும் உடையவள்; குடல் மாலைகளும், ஆசையினாலே அக்கினி போல எரிந்த பெரிய கண்களும் உடையவள்.

அவளை இலட்சுமணர் கண்டார்; அவளும் ஓர் இராட்சசி என்பதை அறிந்தார்; அவளைப் பார்த்து, "இந்த இருட்டிலே வந்த நீ யாரடி? சீக்கிரம் சொல்!" என்று கேட்டார். அவள் அச்சப்பட்டு, "உமக்கு என்னிடத்திலே அன்பில்லாமற் போனாலும், நான் உம்மிடத்தில் ஆசை கூர்ந்து வந்தேன். என் பெயர் அயோமுகி. அதிரூப சுந்தரத்தையுடைய வீராதி வீரரே, நான் உம்முடைய மார்பை இச்சித்து வந்தேன். தயவு செய்து என்னைச் சேர்ந்து, என்னுடைய பிராணனை எனக்குக் கொடும்!" என்று சொன்னாள்.

இலட்சுமணர் கோபித்துக் கண்கள் சிவந்து, "பாவி, இனி இந்தப் பேச்சுப் பேசினால் உன் சரீரத்தைப் பாணத்தினாலே பிளந்துவிடுவேன்!" என்று சொன்னார். அவள் கோபியாமல், இரண்டு கைகளையும் தலையின்மேல் குவித்துக் கும்பிட்டு, "என்னாயகரே, நீர் வந்து என் பிராணனைக் கைக்கொண்டால் அது நான் செய்த புண்ணியமாகும்! நீர் தண்ணீர் தேடுகிறீரே! என்னைக் கூடுவதானால், நான் இந்த க்ஷணமே போய்க் கங்கை நீரைக் கொண்டு வருகிறேன்," என்றாள். அப்படிச் சொல்லவே, இலட்சுமணர், மனம் பொறுமல், "உன் காதும் மூக்கும் அற்றுப்போகிறதற்குமுன்னே அப்பாலே ஓடிப்போ!" என்று கோபத்துடனே சொன்னார். இந்த வார்த்தையைக் கேட்கவே, அவள் மிகவும் துன்புற்று, "இவனை எடுத்துக்கொண்டுபோய் நம்குகையிலே அடைத்துவைத்துக் கொண்டால், இவன் வீரம் அடங்கி, நாம் சொன்னபடி கேட்பான்," என்று நினைத்து, மேகமாய் மாறி, இலட்சுமணரை எடுத்துக்கொண்டு ஆகாயமார்க்கத்திலெழும்பிப்போனாள்.

“ தண்ணீர் கொண்டுவரப்போன தம்பி இன்னம் வர வில்லையே!” என்று ஸ்ரீராமசந்திரர் மிகுந்த கிலேசத்து டனே, “ தம்பிக்குக் காட்டிலே இன்னந் தண்ணீர் அகப்பட வில்லையா, வேறே ஏதாகிலும் நடந்ததா! இந்நேர மட்டும் வாராததனாலே என்ன இடர் வந்ததோ ! நீர் கொண்டு வந்து எனக்குக் கொடாததனால் அவன் சீதையை எடுத்துப்போன வனைக் கண்டு அவனுடன் போர் செய்கிறானோ! அல் லது அந்த இராவணன் வந்து அவனையும் எடுத்துக்கொண்டு போய்விட்டானோ ! ‘நம் தமையன் நாம் சொன்னபடி கேளா மல் மானின் பின்னே போய்ச் சீதையைப் பிரிந்து இத்தனை கிலேசம் வரப் பண்ணினானே!’ என்று என்மேல் சலிப்பாய்ப் பிராணத்தியாகம் பண்ணிக்கொண்டானோ! இந்த இருட்டிலே நான் எங்கே போய்த் தேடிக் கண்டுபிடிப்பேன்! அப்பா, இலட்சுமணா, நீ நல்ல விவேகியாயிற்றே ! நீ இப்படிச் செய்ய லாமா ? நீ என்னை எப்படி வெறுத்துப்போய்விட்டாயோ ! நீ இத்தனை நாழிகை என்றாகிலும் பிரிந்திருந்ததுண்டோ ? என் உயிர் போகாமல் இருப்பது உன்னைப் பிரியாமல் இருக்கிற தைரியத்தினாலே அல்லவா ? நான் இறந்துபோகின்றேன் !” என்று சொல்லி எழுந்து, பூமியிலே விழுந்து, சிறிது நேரம் பேசாமலிருந்து, உணர்வழிந்து, பெருமூச்சு விட்டு, எழுந்து பலவிடங்களிலுந்தேடி, மனம் வாடி, மயங்கிச் சோர்ந் தார்.

அயோமுகி கையில் அகப்பட்டுக்கொண்ட இலட்சு மணர் அவள் மாயையை அறிந்து, வாளினாலே அவளுடைய மூக்கைஅறுத்தார். அதனால், அவள் பெருங்கூச்சலிட்டாள். அந்தக் கூச்சல் ஸ்ரீராமருக்குக் கேட்டது. “இது இராட்சசி யின் அழுகுரல்,” என்று ஸ்ரீராமர் தெரிந்து, அக்கினி அஸ் திரத்தை எடுத்துச் சுழற்றினார். அதனால், இரவு பகல் போலப் பிரகாசித்தது. அந்த அக்கினி அஸ்திரத்தின் வெளிச்சத்திலே ஸ்ரீராமர் அதி வேகமாய் நடந்தார். தம்மைத் தேடி வருகிற தமையனாரைத் தம்பியார் கண்டு, “சுவாமி, வருந்த வேண்டா!

அடியேன் வந்தேன்! வந்தேன்!'' என்று சொல்லிக்கொண்டே வந்தார்.

ஸ்ரீராமர் கண்களிலே ஊற்றுப்போல நீரொழுக நின்று, அவரைத் தழுவிக்கொண்டு, "அப்பா, இங்கே நடந்ததென்ன? சொல்,'' என்று கேட்க, இலட்சுமணர் நடந்ததையெல்லாம் சொன்னார். ஸ்ரீராமர் அது கேட்டுத் துக்கமும் சந்தோஷமும் அடைந்தார்; "திரிமூர்த்திகளும் எனக்குப் பகையானாலும், நீயொருவன் இருக்கும் போது என்னை ஜயிக்கிறவர் யாரிருக்கிறார்? வருகின்ற துக்கமெல்லாம் வரட்டும். தம்பி, இங்கே வந்த இராட்சசியை என்ன செய்தாய்? சொல்,'' என்று கேட்டார். இலட்சுமணர், " சுவாமி, அவள் மூக்கை அறுத்துவிட்டேன். அவள் கூச்சலிட்டுக்கொண்டு ஓடினாள்,' என்று சொல்லி இரண்டு கைகளையுங் கூப்பித் தொழுதார். ஸ்ரீராமர், "அப்பா, முன்னாளிலே விசுவாமித்திரர் பின்னே போயிருந்த போது தாடகை வந்தாள். அவளைக் கொல்லென்று அவர் சொல்ல, பாணப்பிரயோகஞ்செய்து நான் கொன்றேன். நீ நேற்று வந்தசூர்ப்பணகையையும் இன்று வந்த அயோமுகியையும் கொல்லாமல் தண்டித்துத் துரத்திவிட்டாய். பெண்ணைக் கொல்லலாகாதென்ற தர்மம் நான் பாராமற்போனேன். உன் விவேகத்துக்கு நானென்ன சொல்லப்போகிறேன்!'' என்று சொன்னார்.

பின்பு இருவரும், "பொழுது விடிந்தல்லவோ அப்பாலே போகவேண்டும்?'' என்று அந்த மலையிலேயே தங்கினர். அவ்விடத்திலே இலட்சுமணர் புஷ்பமுந் தளிருங் கொண்டு வந்து படுக்கை செய்ய, அதன்மேலே சக்கரவர்த்தி திருமகனார் பள்ளிகொண்டிருந்தார். பிராட்டியை மறவாமல் நினைத்திருக்கிறதனாலோ, இராட்சதர்களுடைய மாயையினாலோ, அவருக்கு வனத்தினிடமெல்லாம் சீதையின் உருவமாகக் காணத் தலைப்பட்டது. அத்தருணத்தில் ஸ்ரீராமர், "ஜானகி இதோ என் பக்கத்தில் வந்திருக்கின்றாள்! இவளை நான் தழுவிக்கொள்ளுகிறேன்!'' என்று எழுந்திருந்து உரு

வெளியைத் தழுவ, ஸ்பரிசம்படாமையால், "என்னண்டையி லிருந்த சீதையைத் தழுவியும் அவள் கையில் அகப்பட வில்லையே! இது கனவாயிருக்கும் என்று நினைத்தாலும், நித்திரையில்லாமல் கனவுண்டாகுமோ?" என்று சொல்லிக் கிலேசித்தார். இப்படித் துயரப்படுகிற சக்கரவர்த்தி திரு மகனுரைக் கண்டு பயந்து அதிசீக்கிரம் வருபவன் போலச் சூரியன் உதயமானுன்.

## 10. கவந்தப் படலம்

பூமியைப் போன்ற பொறுமையும், அநசூயையைப் போன்ற கற்பும் உடைய சீதையைத் தேடிக் காணுமல் அழு வது போல, ஆரணியத்திலிருக்கின்ற பட்சிகள் எல்லாம் இரைய, விடியும் நேரத்திலே ஸ்ரீராம லட்சுமணர்கள் புறப் பட்டு, நடந்து, ஐம்பது யோசனைத் தூரம் தேடினுர்கள். அப் பொழுது சூரியன் உச்சியை அடைந்தான். அந்த வேளை யிலே வில் வீரரான இருவரும் நடந்து போகையிலே, சகல ஜீவராசிகளையும் வாரி வயிற்றில் அடக்கிக்கொள்ளுகிற **கவந்தன்** என்பவனுடைய வனத்தைக் கண்டார்கள். கவந் தன் அவர்களைக் கண்டு சக்கரவாளகிரி நெருங்கி வருவது போல வர, அவன் கையாகிய மதிலுக்குள்ளே இருவரும் அகப்பட்டுக்கொண்டனர். அப்போது ஸ்ரீராமர் இளைய பெரு மாளைப் பார்த்து, " அப்பா, இலட்சுமணு, இராட்சதச் சேனை வந்து வளைத்ததாய்க் காண்கின்றது! நமக்கு இத்தனை கிலே சம் வரும்படி வஞ்சனை செய்து ஜானகியை எடுத்துப்போன இராவணனுடைய பட்டணமும் சமீபத்திலேயே இருக்கு மாகில், நம் துயரம் தீரும்," என்று சொன்னுர். இலட்சு மணர், " சுவாமி, இராட்சதச் சேனையானுல், முரசு அறை கின்ற சத்தமும், சங்கநாதம் முதலானவைகளும் இருக் குமே! அவையில்லையே! ஆகையால், இது ஒரு பூதமா யிருக்க வேண்டும்," என்று சொன்னுர். அங்கே

ஒரு பருவதத்தில் இரண்டு சூரியர்களைப் பதித்துவைத் தாற் போல எரிந்து புகைந்து சிவந்து கொதிக்கின்ற கண்க ளும், பல்லுக்குப்பல் நடுவே இரண்டு யோசனை அகன்ற வெளியும், வயிற்றிலே ஒரு சமுத்திரம் இருப்பது போன்ற வாயும், தேவர்களும் அசுரர்களும் கடலைக் கடைகிறதற்காக மந்திரகிரியிலே சுற்றித் தொங்கவிட்ட வாசுகியைப் போல இரண்டு பக்கத்திலும் நீண்டிருக்கிற இரண்டு கைகளும், கருமான் உலைக்களத்திலே எழும்பும் புகை போலப் புகை யெழும்புகின்ற மூக்கும், சமுத்திரத்தைச் சுவற இழுத்துக் கொண்டு இருக்கிற வடவாமுகாக்கினிக் கொழுந்து போல வெளியிலே தெரிகின்ற நாக்கும், இராகுவென்கிற கரும்பாம் பின் எதிரே வரப் பயந்து ஒரு மலைக்குகையில் நுழைகிற சந் திரனை இரண்டு கூருக வெட்டினது போலப் பிரகாசிக்கின்ற இரண்டு கோரதந்தமும், சூரியசந்திரர்களை விழுங்குகின்ற இராகு கேதுவாகிய சர்ப்பங்கள் வேலை இல்லாத போது உறங்கிக்கிடக்கின்ற செவிகள் போன்ற இரண்டு காது களும், பொய் சொல்லியும் பாவங்களைச் செய்தும் பூமியிலே திரிகின்றவர்கள் சேர்கிற நரகத்தைப்போன்ற வயிறும், பஞ்சபாதகமும் திரண்டு ஒரு ரூபமெடுத்தது போன்ற சரீரமும், சகல பிராணிகளும் பதைபதைத்து நடுக் கத்துடனே நுழைகின்ற எமனுடைய வாசலைப் போன்ற பெரிய வாயும், ஆலகால விஷம்போல மிகவும் கறுத்திருக் கின்ற முகமும், பூர்வத்திலே ஸ்ரீ மகாவிஷ்ணு சக்கரப்பிர யோகஞ் செய்ய அதனுலே தலையிழந்த காலநேமியைப் போன்ற கவந்தரூபமும், மகாமேரு பருவதத்தைப் போன்ற பருமனும் உயர்ச்சியுமாய் இருந்த கவந்தனைக் கண் டார்கள். அவனுடைய வாயைக்கண்டு, "தேவர்களும் போகமாட்டாமல் நடுங்குகின்ற இராட்சதருடைய கோட்டை வாயிற்படியே இது," என்று நினைத்தார்கள்.

அப்போது இலட்சுமணர் கூர்ந்து பார்த்து சுவாமி, ஒரு பெரிய பூதம் எல்லாரையும் கையினுலே வளைத்துத் தன்

வாயிலிட்டுக்கொள்ளுகின்றது. நாமும் அதற்குள்ளேதான் அகப்பட்டுக்கொண்டிருக்கிறோம்! இதற்கு என்ன செய்வோம்!'' என்றார்.

அது கேட்ட ஸ்ரீராமர், "தம்பி, நானொரு வார்த்தை சொல்லுகிறேன், கேள்: என் மனைவியும் பிரிந்து போனாள். அவள் நிமித்தம் சடாயுவான தந்தையாரும் இறந்து போனார். மனம் வேகப் பழி சுமந்து உழன்று திரிகிறதற்கு எனக்குச் சம்மதமில்லை. ஆகையால், நான் இப்பூதத்தினுடைய வாயிலே புகுந்து வயிற்றிலே போய்விடுகிறேன். நீ திரும்பி நம்முடைய பட்டணம் போய்ச்சேர்,'' என்று சொல்லினர்.

தம்பியார், "சுவாமி, உம்மிடத்திலே அன்புற்றவன் போலக் கூட வந்து ஆபத்து வந்த வேளையிலே பிராணனைக் கொடாமல் திரும்பிப் போய்விட்டேனானால் என் செய்கையும் குணமும் நன்றாயிருக்கும்! இடர் வந்த வேளையில் அதை ஜயித்துச் சகித்தவனல்லவோ சௌரியவந்தன்? அடியேனுடைய தாய் தேவரீர் முன்னிலையில் எனக்கு ஆக்கியாபித்த பணிவிடையெல்லாம் வீணாய்ப்போகும்படி இவ்விதம் ஆக்கியாபித்தால் நான் என்ன சொல்லப்போகிறேன்! அந்த வார்த்தையைத் தள்ளி நடந்தால் நான் சத்தியசந்தனாவேனோ? ஆகையினாலே, இந்தப் பூதத்தினுடைய பிலத்துவாரத்திற்கு ஒத்த பெரியவாயையும் எல்லா உயிரையும் வளைத்துக்கொண்டு வருகிற கைகளையும் அடியேன் துணிக்கிறதைப் பார்த்துக்கொண்டிரும்! துயரங் கொள்ள வேண்டா,'' என்று சொல்லி முன்னே நடக்க, அதைக் கண்டு, தேவர்களும் துயரம் அடைந்து அழுதார்கள்.

இருவரும் சமீபத்தில் வருவதைக் கவந்தன் கண்டு, "நீங்கள் யார்?'' என்று அதிக கோபத்தோடே கேட்டான். அவர்கள் சும்மா நின்றார்கள். அவன், "இவ்விருவரையும் விழுங்கிவிடுவோம்!'' என்று எழும்பினான். அப்போது ஸ்ரீராம லட்சுமணர் இருவரும் வாளையுருவிக்கொண்டு, அவனைக்காட்டிலும் அதிக உயரமாக ஆகாயத்திலெழும்பி,

பர்வதங்கள் போன்று இருக்கின்ற அவனுடைய இரண்டு தோளையும் வெட்டித் தள்ளினார்கள். அடியேனை ஆட்கொண்ட நாயகர் தம்முடைய திருக்கைகளினால் தீண்டி வெட்டவே, அவன் தன்னுடைய பூர்வசாபம் தீர்ந்து, அந்தச் சரீரத்தை விட்டு, "பரமபுருஷரான ஸ்ரீமந்நாராயணரே இவர்," என்று அறிந்து, அவருடைய அனந்த கலியாண குணங்களை வாயினாலே தோத்திரஞ் செய்யத் தொடங்கினான் :

"சுவாமி, நீர் சகல வஸ்துவையும் படைத்தவரோ? அளவில்லாத தர்மத்துக்குச் சொரூபமாயிருக்கின்றவரோ? தேவர்களுடைய ஒப்பற்ற தபோ பலமோ? மும்மூர்த்திகளென்கின்ற மூன்று கிளையுடனே முளைத்தெழுந்த மூல வஸ்துவோ? எவராலும் நீக்குதற்கரிய தீவினையுடைய அடியேனெதிரே வந்து என் சாபத்துயரைத் தீர்த்தீரே! முதல்வரே, நீர் செய்கின்ற காரியம் யாராலும் அறியக்கூடாமையால், நீர் ஆலோ, ஆலிலையோ, அதிலேயிருந்த பாலகனோ, சமுத்திரமோ? வேதங்கள் உம்முடைய ஒழுக்கத்தையே சொல்லினவோ? அவை சொன்னபடியேதான் நீர் நடந்து கொள்கின்றீரோ? நானொன்றும் அறியமாட்டேன்! பரிபூரணமான செல்வம் பெற்றிருக்கின்ற பகவானே, காண்கின்றவர்களும், காணப்படுகின்ற பொருள்களும் ஆகி, நீர் சகலத்திலேயும் வியாபித்திருக்கிறவரைப் போல நிற்கின்றீர்! உலகத்தைத் திருவயிற்றிலொளித்துப் பின்பு வெளிப்படுத்துகின்றீர்! நீர் ஆணோ, பெண்ணோ, அலியோ? தெரியவில்லையே! பிரமாவும் நீர்! ஆதிப்பரமரும் நீர்! அகண்டாகார ஸ்வரூபரே, மகாபிரளயத்திலே உற்பத்தியான நீர்க்குமிழி போல முகுளித்திருக்கின்ற பல்லாயிரங்கோடி அண்டங்களும் உம்மிடத்திலே தோன்றியொளிக்கின்ற விதம் ஒருவராலே அறிவதற்கு எளியதாயிருக்கின்றதா? மாயமான பிறவி மயக்கத்தை நீக்கிக் களங்கமில்லாத திவ்விய தேகத்தைக் கொடுத்து, துயரக் கடலின் கரையேற்றி, பேயையொத்த பேதைமையான பிணக்கை அறுத்து, இவ்விதம் துல்லியனாகும்படி

செய்வித்த எம்பெருமானே, நாய்க்குச் சமானமான மகா பாவியான நான் உம் விஷயத்தில் என்ன நன்மையைச் செய்தேன்? ஆதிநாராயணரே, வேள்வியும் வேள்வி செய்கின்றவரும், அவிசுகளும் அவிசுகள் உண்கிறவரும், உண்பதும் ஊட்டுகிறவரும் நீரே என்பதை யார் அறிவார்?'' என்று துதி செய்தான்.

அவனை ஸ்ரீராமர் கண்டு, இளைய பெருமாளைப் பார்த்து, "தம்பி, இப்போது தோள்கள் அறுபட்டவனோ இவன்? யாரென்று விசாரி,'' என்று சொல்ல, இலக்குமணர் அவனைப் ப்ார்த்து, "நீ யார்?'' என்று கேட்டார். அவன், "சுவாமி, அடியேன் தனு என்னும் பெயருடையவன். ஒரு கந்தர்வனுடைய சாபத்தாலே இந்த ஈனப் பிறப்பை அடைந்திருந்தேன்; நீங்கள் வந்து உங்கள் திருக்கைகளினாலே தீண்டின மகிமையால், அந்தச் சாபம் விமோசனமாகிப் பூர்வ ரூபம் பெற்றேன். என்னை ஆள வந்தவர்களே, அடியேன் ஒரு விண்ணப்பம் பண்ணிக்கொள்ளுகிறேன்; அதைக் கேட்டருள வேண்டும்: வில் வீரர்களான உங்களைக் காக்கத்தக்க சாமர்த்தியர் ஒருவருமில்லை; காக்க வேண்டுவதுமில்லை. ஆனாலும், தனக்கொருவரும் நிகரில்லாத ஸ்ரீ மகாலட்சுமியைத் தேடுவதற்கு உங்களிடத்தில் மனிதரிருக்க வேண்டும். அதுவுமல்லாமல், கடலைக் கடக்கிறதற்காகக் கட்டு மரம் வேண்டியிருப்பது போல, பகைவர்களை வெல்லுதற்குத் துணையிருக்க வேண்டும். உலகத்திலே பிரமாவினாலே சிருஷ்டிக்கப்பட்ட ஜீவ கோடிகளையெல்லாம் அழிக்கின்ற தொழிலையுடைய ஒருவனான அந்த ருத்திரமூர்த்தியும், அனேக பூத கணங்களைச் சேர்த்துக்கொண்டிருக்கின்றதை அறிவீர்களே! அந்தப்படித் துணையுடனே கூடியிருந்து செய்வதே தர்மம். பொல்லாத பாவிகளைச் சேர்க்காமல், நன்றாய் அறிந்து பார்த்துச் சகல ஜீவனுக்கும் தாய் போல அன்புடையவளான *சவரி* என்பவளிருக்கிறாள். அவளிடத்திலே போய் அவளைக் கண்டு பேசினால், அவள் வழி சொல்லுவாள். அவ்வண்ணம்

ரிசியமுக பருவதத்திற்குப் போய், அதன் மேலேறி, அவ்விடத்தில் இருக்கின்ற சூரியனுடைய புத்திரனுன சுக்கிரீவனென்பவனைச் சினேகித்து, அவனைக் கொண்டு அதிசீக்கிரத்தில் ஸ்ரீ மகாலட்சுமியைத் தேடுகின்ற காரியத்தைப் பாருங்கள் !'' என்று சொன்னுன்.

அவ்வார்த்தையைக் கேட்டு இருவரும் அப்படியே செய்வோம்; என்று சம்மதித்தனர். பின்பு அந்தத் தனுவென்பவன் நமஸ்காரஞ் செய்து வாழ்த்தி ஆகாயமார்க்கமாய்ப் போனுன். தசரதமகாராஜாவின் புத்திரர் இருவரும் அப்படியே நடந்து ஆரணியமும் மலைகளும் தாண்டிச் சாயுங்கால வேளையிலே ***மதங்காச்சிரமம்*** போய்ச் சேர்ந்தார்கள்.

## 11. சவரி பிறப்பு நீங்கு படலம்

மதங்காச்சிரமம் தேவர்கள் வாழ்கின்ற சுவர்க்கலோகத்திற்குச் சமானமாய் இருந்தது. அப்படிப்பட்ட ஸ்தானத்தில் தம்மையே நினைத்து அளவிறந்த காலமாகத் தவஞ்செய்து வழி பார்த்துக்கொண்டிருக்கும் சவரியை ஸ்ரீராமர் கண்டு, "நீ சுகமாய் இருக்கின்ருயா ?'' என்று கேட்டார். அவள் அன்பினுல் எதிரே வந்து மனமுருகி அழுது, "அனேக காலம் நான் செய்த தபோ பலத்தினுல் நீங்கள் வந்து எனக்குத் தரிசனம் கொடுக்க என்னுடைய மாயா பாசமும், ஜன்மமும் போய்விட்டன !'' என்று சந்தோஷித்து, தான் இருக்கும் இடத்திற்கு அழைத்துக்கொண்டு போனுள். ஸ்ரீராமர், அந்தத் தவத்தரசான சவரியைப் பார்த்து, "அம்மா, உன்னிடத்திலே வந்து எங்களுடைய மனவருத்தம் தீர்ந்தது !'' என்று சொன்னுர். அச்சமயத்தில், சவரி, "சுவாமி, பழவர்க்கங்களில் தேவரீர் உண்ணத்தக்கவை எவையென்று அடியேன் சாப்பிட்டறிந்து, நல்ல மதுரமான கனிகளை உமக்கென்று அன்புடனே வைத்திருக்கின்றேன். அமுது செய்தருளும்,'' என்று சொன்னுள். ஸ்ரீராமர் அப்படியே அமுது

செய்து திருவுளம் மகிழ்ந்து, இளையபெருமாளுடன் அன்றைய தினம் அவ்விடத்திலேயே இருந்தார்.

பின்பு சவரி சூரிய புத்திரனான சுக்கிரீவனிருக்கும் பர்வதத்திற்கு நடந்து போகும் வழியெல்லாம் நன்றுயெண்ணிப் பார்த்து, மோட்சத்தையடையும் மெய்ம்மார்க்கத்தைச் சுலபமாக வெளியிட்டுச் சொல்லும் பரமயோகிகளைப் போல, அவர்களுக்குச் சொன்னாள். அவைகளையெல்லாம் ஸ்ரீராமர் வேறொரு தியானமில்லாமல் கேட்டருளினர். பின்பு அந்தச் சவரியானவள் நெடுநாளாக அனுசரித்திருந்த யோக முயற்சியின் பலத்தினாலே தனது சரீரத்தை விட்டுப்போய் முத்தியை அடைந்தாள்.

அது கண்டு மிகுந்த அதிசயமடைந்த இராமலட்சுமணர்கள் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, சவரி சொன்ன வழியின் குறிப்பைப் பார்த்துக்கொண்டே நடந்து, அனேக கானகமும் மலைகளும் நதிகளும் கடந்து, உலகத்தாருடைய பாவங்களை யெல்லாம் விமோசனஞ்செய்கின்ற புண்ணிய தீர்த்தமான பம்பைப்பொய்கையின் பக்கத்திற்போய்ச் சேர்ந்தார்கள்.

ஆரணிய காண்டம் முற்றிற்று.

# இந்த நூல்

'கம்ப நாடன் கவிதையிற்போல் கற்ளுேர்க்கு இதயம் களியாதே' என்பது காவிய நலம் சுவைத்த நல்லறிஞர் கூறிய தீர்ப்பு. கம்பர் கவி நலம் கண்டு மகிழ விரும்புவார்க்கு இந்நூல் நல்லதொரு வழிகாட்டியாய்த் திகழ்வது. கம்பர் கருத்தைப் பெரிதும் தழுவி இயற்றப்பட்டுள்ள இவ்வசன காவியம் பலர்க்கும் பயன்படுதல் வேண்டுமென்னுங் கருத்தால் குறைந்த விலேயில் வெளிவரும் இந்நூற் பகுதிகளுள் இது முதற் பகுதி. தமிழ் நாடு பெற்றுப் பயனடைவதாக!

ஏனைய மூன்று பகுதிகளும்
தொடர்ந்து வெளிவரும்

